அனைத்திந்திய நூல் வரிசை

# தன் வெளிப்பாடு

**சுநீல் கங்கோபாத்தியாய்**

வங்காளியிலிருந்து தமிழில்
**சு. கிருஷ்ணமூர்த்தி**



**நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா**

# முன்னுரை

இரண்டாம் உலகப் போர்க்காலத்திலும் அதற்குச் சற்றுப் பின்னும் வங்காளி நடுத்தர வர்க்கத்தின் நெடுங்கால வாழ்க்கை முறைக்கு நாலா பக்கங்களிலிருந்தும் பெருத்த அதிர்ச்சி ஏற்பட்டது. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்து மூன்றாம் ஆண்டின் பஞ்சத்திற்கு மௌன சாட்சியாக அந்த வர்க்கம் இருக்க நேர்ந்தது. அது நியாயமாக ஒரு குற்ற உணர்வால் தாக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால் அது தன்னைக் காத்துக் கொள்ளும் முயற்சியில் இந்தக் குற்ற உணர்வுக்கு இடங் கொடுக்கவில்லை. முக்கியமாக வங்காளி நாடகங்களிலும் சிறுகதைகளிலும், ஓரளவு நாவல்களிலும் இதற்கான சான்றைக் காணலாம். அதன்பிறகு பயங்கரமான, இரத்தம் பெருக்கிய மதக் கலகங்கள் பல பழைய முழக்கங் களுக்குக் குழி தோண்டிவிட்டன. நாட்டைத் துண்டாக்கிக் கொண்டு விடுதலை வந்தது. இருப்பிடங்களிலிருந்து விரட்டப்பட்ட எண்ணற்ற வங்காளிகளுக்கு விடுதலைக் கொண்டாட்டம் பொருளற்றதாகிவிட்டது. சில சுதேசி வங்கிகள் மூடப்பட்டன. பல கனவுகள், பல நம்பிக்கைகள் உடைந்தன. மக்களின் நன்முயற்சி, அன்பு, தூய இலட்சியம் இவற்றில் உலகப் போருக்கு முன்பே காலத்தின் தாக்கத்தால் நுழைந்துவிட்ட புழு—உலகப் போரின் இருட்டடிப்பு இரவில், மதக்கலகத்தில் சகோதரர் களின் பரஸ்பரக் கொலையில், பஞ்ச காலத்து அன்னதானச் சாவடியில், வீடிழந்த மக்களின் பிச்சைத் தொழிலில்—இவற்றை முழுமையாக விழுங்கி விட்டது. இலட்சியங்களாகிய பல மண் சிலைகளின் பூச்சும் அணிகளும் அழிந்து போய்விட்டன. பிரபோத் குமார் சன்யாலின் **(1905-1983)** போர்க் காலத்துக் கதை 'அங்கார்'-இன் கடைசிப்பத்தி, சந்தோஷ் குமார் கோஷின் 'இனு கோயாலார் கலி', ஜோதிரிந்திர நந்தியின் 'மீரார் தூபுர்' ஆகியவை 'நம்முடைய பல சொத்துக்கள் கரைந்து போய்விட்டன' என்ற கருத்தையே பலவிதமாகத் தெரிவிக்கின்றன.

இதற்கு சுமார் ஒரு நூற்றாண்டுக்கு முன் பத்தொன்பதாம் நூற்றாண்டின் அறுபதுகளில் வங்காளி நாவல் தன் பயணத்தைத் தொடங் கிற்று. அந்த சமயத்தில் நாவலின் கருப்பொருளாயிருந்த வங்காளி நடுத்தர வர்க்கம் தன் சுகத்தையும் பாதுகாப்பையும் கருதி, தற்கால இந்திய வரலாற்றின் முதல் ஆட்டமாகிய சிப்பாய் கலகத்தைப் புறக்கணித்தது. வங்காளி இலக்கியத்தின் முதல் நாவலான 'ஆலாலேர் கரேர் துலால்'-இல் **(1858)** விக்டோரியா காலத்து வங்காளி நடுத்தர வர்க்கம் மேற்கத்தியக்

கல்வி போதித்த ஒழுக்க நிலையையே இலட்சியமாகக் கொண்டது. எப்படி நடந்து கொண்டால் 'கண்ணியமான மனிதனாக' இருக்கலாம் என்பதே அதன் கவலையெல்லாம். ஆயினும் இந்தக் குறுகிய வரையறைக்குள்ளும் 'ஆலாலேர் கரேர் துலால்' சிறப்புப் பெற்றுள்ளதற்கு அது முதல் வங்காளி நாவல் என்பது மட்டும் காரணமல்ல, வேறு இரு காரணங்களும் உண்டு. ஒரு காரணம், அதன் நேரடியான வசன நடை-அது வாழ்க்கையின் சராசரி உண்மை நிலைக்கு, மரபு வழிப் பாத்திரத்துக்கு உருவமளித்தது. இரண்டாவது காரணம், இந்த நாவல் நமது நாவலின் கருப்பொருள் நமக்கு நாலா பக்கத்திலும் இருக்கிறது என்பதை முதன்முதலில் உணர்த்தியது.

பங்கிம் சந்திரர் (1838-1898) இன்னும் ஆழமான பிரச்சினைகளுக்கும் வாழ்க்கை விளக்கத்துக்கும் முக்கியத்துவம் அளித்தார். இவ்விஷயத்தில் அவரது கூர்மையான அறிவும் உட்பார்வையும் அவருக்கு உதவி செய்தன. இவற்றுக்குக் 'கற்பனை'யென்றும் பெயரிடலாம். விக்டோரியா காலத்து மற்ற வங்காளிகளைப்போல் பங்கிம் சந்திரரும் புதிதாக உருவாகிய நடுத்தர வர்க்கத்தின் சிறந்த பாதுகாப்பாளர் என்பது உண்மையே. அவர் படைத்த புரட்சிக்காரர்கள் பின்னால் தங்கள் ஆயுதங்களைப் போட்டு விட்டதற்காகப் பிற்காலத்தினர் அவரை விமர்சித்தார்கள். 'ஆனந்த மடம்' (1884), 'சந்திர சேகர்' (1875) ஆகிய நாவல்கள் இந்த விமர்சனத்துக்கு உள்ளாயின. ஆயினும் அவருடைய உறுதியற்ற, தயக்கம் நிறைந்த, 'கண்ணியமான' ஆண்பாத்திரங்களுக்கு மாறாக அவர் படைத்த, உயிர்த் துடிப்பு மிக்க பெண்பாத்திரங்கள் விதிக்கு சவால் விடுபவர்களாக இருக் கிறார்கள் என்பதையும் மறுக்க இயலாது. சைவலினி தன் கணவனிடம் பிரதாப்புக்கும் தனக்கும் இடையேயுள்ள தொடர்பை விளக்கி, "நாங்கள் ஒரு காட்டில் ஒரு காம்பில் இரண்டு மலர்களாக மலர்ந்தோம், நீங்கள் ஏன் எங்களைப் பிரித்தீர்கள்?" என்று வினவும் போதும், வருந்தத்தக்க சாவுக்கு முன் நின்று கொண்டு ரோகிணி ('கிருஷ்ண காந்தன் உயில்'—1878), "நான் ஏன் சாக வேண்டும்?" என்று கேட்கும் போதும் பங்கிம் சந்திரரின் கதாநாயகிகள், ஒரு மரபு, அல்லது சட்டம் அல்லது நம்பிக்கைக்குத் தங்கள் வாழ்க்கையைப் பலி கொடுக்கத் தயாராயில்லை என்பது தெரிகிறது. அவர்கள் தங்கள் உடலாலும் மனத்தாலும்-இரத்தத்திலும் தசையிலும் காதலிலும் காமத்திலும்-வாழ்க்கையைப் புரிந்து கொள்ள விரும்புகிறார்கள். இந்தக் கூற்று சைவலினி (ரோகிணிக்கு மட்டுமல்ல, பத்மாவதி ('கபால குண்டலா'-1866), குந்தா ('விஷ விருட்சம்'-1873) ஆகியோருக்கும், இந்திரா ('இந்திரா'-1873) வுக்குங்கூடப் பொருந்தும். துன்பியல் படைப்புகளாகட்டும், இன்பியல் படைப்புகளாகட்டும், பங்கிம் சந்திரரின் கதாநாயகிகள் ஒரே மாதிரி வீரியமும் உயிர்த்துடிப்பும் உடையவர்கள். அவருடைய 'கண்ணிய'க் கதாநாயகர்களிடையே அமர்நாத் ('ரஜனி'-1877) ஒருவன்தான் மரபு வழித் துன்பியல் படைப்புப் பாணியில் புனையப்படாதவன். அன்னியப்பட்ட தன்மையில், சோகத்தில், பொறுப்பில் அவன் தற்காலக் கதாநாயகனின் முன்னோடி. அவன் இறுதிவரை எதனுடனும் தன்னைப் பொருத்திக் கொள்ள இயலாதவனாக இருக்கிறான். 'கிருஷ்ண காந்தனின் உயில்'-ன் கோவிந்தலால் தன் தோல்வியுற்ற வாழ்க்கையின் முடிவில் துறவு மேற்

கொண்டு கடவுளைத் தேட முற்படுகிறான்; அமர்நாத் காஷ்மீர் செல்கிறான். இவ்விருவருடைய இப்பயணங்களிடையே உள்ள வேற்றுமையும் சிந்தனைக்குரியது.

பங்கிம் சந்திரர் ஓர் உயர்தர நாவலாசிரியர். எந்த நாவலாசிரியரைவும் அவரது நாடு, காலம் இவற்றின் பின்னணியில் மதிப்பிட வேண்டும். நாவலாசிரியர் தன் தனிப்பட்ட வாழ்க்கையில் எதிர்கொள்ளும் பிரச்சினை அவரது நாவலிலும் இடம்பெறும். அமர்நாத் போன்ற பாத்திரத்தின் பிரச்சினையை 'ரஜனீ'யின் பிரத்தியேகமான பாணியில்தான் வெளிப்படுத்த இயலும். ரவீந்திரரின் நாவல்களில் பாத்திரத்தின் முழுமையான ஆளுமைக்கு ஏற்படும் ஆபத்தே முக்கிய பிரச்சினையாக ஆகிவிடுவதைப் பார்க்கிறோம். விநோதினி ('சோக்கேர் பாலி', 1903) பாத்திரம் நமக்கு நினைவு வருகிறது. பெண்ணை ஒரு சொத்து என்றே கருதும், முடமாகிவிட்ட சுய நல சமூகத்தில் ஒரு பெண்மணி தன் தூய்மையின் ஊற்றுக் கண்ணை எப்படித் தேடிக் கண்டுபிடிக்கிறாள் என்பதே விநோதினியின் கதை. பங்கிம் சந்திரர், ரவீந்திரர் இந்த இருவரில் ஒருவர் பெரியவர் மற்றவர் சிறியவர் என்று சொல்ல முடியாது. ஆனால் ரவீந்திரருக்கு வரலாற்றின் ஒரு வசதி கிடைத்தது. கர்ஸான் பிரபுவின் அடக்குமுறைக்கு எதிராக வங்காளத்தில் பீறிட்டெழுந்த இயக்கத்தில் நேரடிப் பங்கு கொண்டார் ரவீந்திரர். இதன் விளைவாக அவர் பெற்ற அனுபவத்தைப் பங்கிம் சந்திரர் கற்பனை மூலமே உணர நேர்ந்ததால் அது அவருடைய நாவல்களில் தெளிவாக உருப்பெறவில்லை. ரவீந்திரர் பெருங்காவியம் போன்ற தம் 'கோரா' (1910) நாவலில் ஆங்கிலம் கற்ற இந்திய நடுத்தர வர்க்கத்தின் இக்கட்டான நிலையையும் அதன் நோக்கங்களிலுள்ள முரண்பாட்டையும் முதன் முதலாகச் சுட்டிக்காட்டுகிறார். ஆனால் அவர் இந்தக் காரியத்தைக் 'கோரா'வுக்கு முற்பட்ட 'மேக் ஓ ரௌத்ர' (1894) என்ற உருக்கமான சிறு கதையிலேயே தொடக்கிவிட்டார். இந்தியத் தன்மை என்பது இந்துத் தன்மை அல்லது பிராமணியம் அல்ல; அது மனிதத்துவத்தின் சுயநிறைவு பெற்ற இந்தியப் பகுதி. கதாநாயகன் கோரா இந்த உண்மையை எப்படி உணர்ந்து கொண்டான் என்பதே இந்த நாவலின் கதை. சுதேசி வாழ்க்கை பற்றிய ரவீந்திரரின் தீவிரக் கவலையே, 'கோரா', 'வீடும் வெளியும்' (1915), 'நான்கு அத்தியாயங்கள்' (1934) இந்த மூன்று நாவல் களுக்கும் பின்புலமாக அமைந்தது. ரவீந்திரர் 'வீடும் வெளியும்' நாவலை எழுதும்போதுதான் 'சதுரங்கம்' நாவலையும் எழுதினார். 'சதுரங்கம்' புனையப்பட்ட முறை அசாதாரணமானது என்பதில் ஐயமில்லை. எனினும் இந்த நாவலின் முக்கியத்துவத்துக்குக் காரணம்—அது வலியுறுத்தும் கருத்துத்தான். சதீஷ், உருவற்ற தெய்வீக அனுபவத்துக்காக விழைகிறான். தாமினியோ வாழ்க்கை யனுபவத்துக்காக ஏங்குகிறாள். இணைகோடுகளாக முன்னேறிச் செல்லும் இவ்விருவரின் பயணத்தைச் சித்திரிப்பதன் மூலம் ரவீந்திரர் கூற விரும்பும் கருத்து-இலட்சியம் எதுவாயிருந்தாலும், அதை அடையச் செய்யப் படும் முயற்சியே முக்கியமானது என்பதுதான். தாமினி ஓர் அதிசயப் பாத்திரம்—வாடைக்காற்றுக்குச் சற்றும் பணியவில்லை அவள். ரவீந்திரரின் கதாநாயகிகள்—அவள் விநோதினியாயிருக்கட்டும் அல்லது 'ஜோகாஜோக்'

(1929) நாவலின் குழுவாயிருக்கட்டும்—வேறுபட்ட சூழ்நிலைகளில் தங்களுக்கேயுரிய முறைகளில் தங்கள் ஆளுமையின் தூய்மையைத் தேடியலைகிறார்கள். 'வீடும் வெளியும்' நாவலின் விமலாவின் இந்தத் தேடல் அவளைத் துன்பம் நிறைந்த பாதையில் இட்டுச் செல்கிறது. எனினும் இந்த நாவலில் அவளைவிட உயிர்த் துடிப்பு மிக்க பாத்திரம் வேறு யார் இருக்கிறார்கள்?

நாவலாசிரியர் ரவீந்திரர் தம் புகழின் உச்ச நிலையில் இருந்தபோது வங்காளி இலக்கியத்தில் சரத் சந்திரர் தோன்றினார். அவரது நாவல்களில் பங்கிம் சந்திரர் அல்லது ரவீந்திரரின் நாவல்களிலுள்ள தத்துவ அல்லது சிந்தனை உள்ளடக்கம் இல்லை. இத்தகைய உள்ளடக்கம் இடம்பெற முயன்றது 'சேஷ் பிரச்ன' (1937) நாவலில் மட்டுமே. இம்முயற்சியும் தோல்வியடைந்துவிட்டது. தத்துவ உள்ளடக்கம் சரத்சந்திரரின் சிறப்பு அல்ல. ஆனால் மனிதனின் இதயம் என்ற வியப்பை வெளிப்படுத்துவதில் சரத்சந்திரர் பெற்ற வெற்றி கேள்விக்கப்பாற்பட்டது. அவருடைய நாவல்களின் கதைக்கரு சாதாரணமானது. கதைப் பாத்திரங்கள் கிராமத்தின் நடுத்தர வர்க்க மக்கள். அவர்களது மனப்பண்பும் அவர்களது சூழ்நிலைக் கேற்றதுதான். ஆனால் சரத்சந்திரரின் 'நிஷ்கிருதி' (1917) நாவலைத் திலீப்குமார் ராய் `Deliverance' என்ற தலைப்பில் ஆங்கிலத்தில் பெயர்த்த போது அந்த மொழிபெயர்ப்புக்குத் தாம் அளித்த முன்னுரையில் ரவீந்திரரின் கூற்று முற்றிலும் உண்மை:-

> "சரத்சந்திரர் நம் மொழிக்கு ஒரு புதிய சக்தியை அளித்திருக்கிறார்; நமக்கு மிகவும் பரிச்சயமான வங்காளி இதயமாகிய பகுதியின் மேல் தன் கதைகளின் மூலம் ஒரு புதிய ஒளியைப் பாய்ச்சி யிருக்கிறார். இதன் விளைவாக மனிதனின் ஆளுமையின் இதுவரை புலப்படாத சில்லறை விஷயங்கள்கூட உயிர்த்துடிப்புள்ளவையாக முக்கியத்துவம் பெற்று விடுகின்றன."

சரத்சந்திரர் படைத்த ஸ்ரீகாந்தன்-இந்திரநாத்-ஜீவானந்தன், ராஜலட்சமி-அன்னதா-கிரண்மயி-நாராயணி ஆகியோர் வங்காளியின் இதயத்துக்குள் இடம் பெற்று விட்டனர். 'மனித வாழ்க்கையின் சாரம் அவனது அன்பே' என்ற கருத்தை சரத்சந்திரர் தம் படைப்புகளில் மனங் கவரும் முறையில் வெளியிட்டுள்ளார்.

முதல் உலகப் போருக்குப் பின் எழுதப்பட்ட சரத்சந்திரரின் 'ஸ்ரீகாந்த' (1917-1933) நாவலும், ரவீந்திரரின் 'சேஷேர் கவிதா' (1929)வும் ஒரு விஷயத்தை நமக்குச் சுட்டிக்காட்டுகின்றன. இவற்றின் கதாநாயர்கள் ஸ்ரீகாந்தனும் அமித்தும், கோராவின் தரத்துக்குரிய பாத்திரங்கள் அல்லர். அவர்களுக்கென்று ஒரு குறிப்பிடத்தக்க பின்புலம் இல்லை. அமித்ராயின் பின்புலம் ஷில்லாங் குன்று-ரவீந்திரருக்குப் பிடித்தமான சமநிலமல்ல, வங்க நிலமுமல்ல. ஸ்ரீகாந்தன் நாடோடியாகத் திரிபவன். அவனுக்கு நிலையான இருப்பிடம் இல்லை, நிலையான வேலையும் இல்லை. வெற்றியின் பெருமையும் அவனிடம் இல்லை, துன்பியல் தோல்வியில் சிறப்பும் இல்லை. 'சேஷேர் கவிதா'வின் அமித்ராயும் ஏறக்குறைய அவன் போன்றவனே. எதிலும் ஈடுபாடற்ற, விட்டேற்றியான அமித்தின் நாகரிக

ஒளியில் ஒரு வெறுமையான இலட்சியமின்மையே இடம் பெற்றுள்ளது. அவன் தன்னையே நேசிக்கிறான், அந்த நேசத்தில் மயங்கியிருக்கிறான். அவனுடைய பேச்சு நாணய சாலையிலிருந்து அப்போதுதான் வெளிப் பட்டுள்ள காசு போல் பளபளக்கிறது. ஆனால் அதன் மிகையான ஒலி ஐயமூட்டுகிறது. இலட்சியவாதி கோரா எங்கே, வாய்ப்பந்தல்போடும்அமித் எங்கே! வங்காளி 'பத்ரலோக்' (Gentlemen)கின் போலித்தன்மை வாய்ந்த வர்க்கக் கனவு, முதல் உலகப் போருக்குப்பின் ஏற்பட்ட உலகளாவிய பொருளாதார மந்தத்தில் முடங்கிப் போய்விட்டது. இந்தக் காலத்தின் விளைவுதான் 'கல்லோல்' (1923) பத்திரிகை. அதன் புரட்சி லீலையில் சாரமில்லைதான். எனினும் அதன் முக்கிய எழுத்தாளர்கள் நடுத் தர வர்க்கத்தின் சிதைவையும் பரிதாப நிலையையும் உணர்ந்திருந்தார்கள். சமூகத் தலைமை நடுத்தர வர்க்கத்தின் கையில் வந்துவிட்டது என்று பங்கிம் சந்திரர் 1884ம் ஆண்டு 'பிரசார்' பத்திரிகையில் மகிழ்ச்சி தெரிவித்து நாற்பத்து மூன்று ஆண்டுகளாகிவிட்டன. முதல் உலகப் போர் தொடங்கி முடிந்துவிட்டது. 1927ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 'கல்லோல்' இதழில் சித்திரிக்கப்படும் நடுத்தர வர்க்கச் சித்திரம், பங்கிம் சந்திரரின் மகிழ்ச்சிக்கான காரணம் எப்போதோ மறைந்துவிட்ட தென்பதை உணர்த்து கிறது. நடுத்தர வர்க்கத்தின் குடும்பச்சிதைவும் மாற்றமும் ஒரே சமயத்தில் தொடங்கிவிட்டன. விதியின் சவாலை எதிர்கொள்ளும் வலிமை வாய்ந்த கதாநாயகன் அப்போது இல்லை. நுட் ஹாம்சுன் அல்லது மாக்சிம் கோர்க்கியின் தாக்கம் ஒரு சில எழுத்தாளர்களிடம் தென்பட்டாலும் அது ஒரு புதிய ஃபேஷனைப் பின்பற்றும் முயற்சியாகவே இருந்தது. பிரேமேந்திர மித்ரா (1904-1988)வின் அசாதாரணமான சிறுகதைகளில்தான் நடுத்தர வர்க்க உள்ளத்தின் எதிர்கால வெறுமையும் இருண்மையும் ஒப்புக் கொள்ளப்பெற்றன. இதைத்தவிர, நாவல் இலக்கியத்தில் இந்தக் குறிப்பிட்ட காலத்தைப் பிரதிபலிப்பது மாணிக் பந்த்யோபாத்தியாய் (1908-1956)-இன் 'புதுல் நாச்சேர் இதிகதா' (1936) ஆகும். சசி என்ன முயற்சி செய்தும் அவனால் தன் காதலையும் தன் முழுமையான இருப்பையும் சூழ்நிலை, தனிமனிதத் தளைகள் ஆகியவற்றின் கட்டுப்பாடுகளை மீறிக் கொண்டு செல்ல இயலவில்லை. தீவிர வேட்கை என்னும் தீயை மூட்டியும், அந்தச் சூட்டால் தங்களிடம் உறைந்துகிடக்கும் பனியை உருக்க இயலாத இளைஞர் வர்க்கத்தின் பிரதிநிதி சசி. இந்தச் சமயத்தில்தான் விபூதி பூஷண் பந்த்யோ பாத்தியாய் (1884-1950) அவர்களின் 'பத்தேர் பாஞ்சாலி' (1923) எழுதப் பட்டது. வியப்புக்குரிய விஷயம் என்னவென்றால், சசி வாழ்க்கையின் சிக்கலான தன்மையைப் புரிந்து கொண்டு தன் விருப்பங்களைப் பற்றற்ற காலத்தின் பெருக்கில் நழுவ விட்டது போல், 'பத்தேர் பாஞ்சாலி'யின் கதாநாயகன் அப்புவும் மண்ணின் பரிவிலும் மனிதனின் அன்பிலும் முடிவற்ற ஏதோ ஒன்றின் அடையாளத்தைக் கண்டான். மாணிக் விஞ்ஞானி, விபூதி பூஷண் தத்துவ வாதி. மறுபுறம் தாராசங்கர் பந்த்யோபாத்தியாய் (1898-1971) சமூகத்துக்கும் மனித வாழ்க்கைக்கும் இடையேயுள்ள முரண்பாடுகள் நிறைந்த உறவைப்புரிந்து கொள்ள விரும்பினார். அசாதாரண சிந்தனைச் செறிவுள்ள சமூக நாவல்களான 'கணதேவதா'

(1942), 'பஞ்சகிராம்' (1943) ஆகியவற்றுக்கும், அவரது முக்கிய வட்டார நாவலான 'ஹான்சுலிபாங்க்'கேர் உபகதா' (1947)வுக்கும் இந்தக் கூற்று பொருந்தும். தாராசங்கரின் 'கவி' (1942) என்ற நாவலில், ஒரு தனிமனிதனின் பரிணாம (becoming) வளர்ச்சி சிறப்பாக வெளிப்படுகிறது. இன்னொரு விஷயத்தை இங்கு சொல்ல வேண்டும். மேலே குறிப்பிடப்பட்ட நாவல் களுடன் வேறு சில நாவல்களையும் சேர்த்துக் கொள்ளலாம். இவற்றின் கதைக்கருவோ பாத்திரங்களோ நகரத்துடன் தொடர்பு கொண்டவையல்ல. தாராசங்கர் கல்கத்தாவைப் களனாகவும் நகரத்து நடுத்தர வர்க்கத்தினரைப் பாத்திரங்களாகவும் கொண்டு நாவல்கள் எழுதாமலில்லை. ஆனால் அவற்றை அவரால் இயல்பாக எழுத இயலவில்லை. தாராசங்கரின் வலிமை மிக்க இலக்கிய வாரிசான சதீநாத் பாதுரிக்கும் இக்கூற்று பொருந்தும். அவரது எந்த நாவலும் கல்கத்தாவையோ அல்லது வேறொரு பெரிய நகரத்தையோ களமாகக் கொள்ளவில்லை. அவர் ஒரு சிறு நகரின் நடுத்தரவர்க்கக் குடும்பத்தைக் கருவாக வைத்து ஓர் அசாதாரண நாவல் எழுதினார்— 'திக்பிராந்த' (1966). 'டோடாயி சரித் மானஸ்' (1949), 'ஜாகரி' (1946) ஆகிய நாவல்களின் வெற்றி கூட, குடும்ப உறவின் சிக்கல்களைச் சித்திரிக்கும் 'திக்பிராந்த'வின் சிறப்பை மங்கச் செய்து விடவில்லை. இக்காலத்தைச் சேர்ந்த இன்னொரு முக்கிய நாவலாசிரியரான அமியபூஷண் மஜும்தாரும் கல்கத்தா அல்லது வேறு கலப்பற்ற நகரத்தைக் களமாகக் கொண்டு நாவல் இயற்றவில்லை. இந்த உண்மை நம்மைச் சிந்திக்கத் தூண்டுகிறது. முக்கியமான வங்காளி நாவலாசிரியர்களில் ரவீந்திரர் ஒருவரின் நாவல்கள்தான் நகர வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டவை. பங்கிம் சந்திரரின் ஐந்து சமூக-குடும்ப நாவல்களில் 'ரஜனி' ஒன்றுதான் கல்கத்தாவைக் களமாகக் கொண்டது. மற்றவற்றின் களம் சிறு ஊர்களே. 'கல்லோல்' எழுத்தாளர்களில் அந்நிய நாட்டுத் தாக்கமாகிய அலையில் மிதந்து செல்லத் துடித்தவர்களுக்குக் கல்கத்தாவைக் களனாகக் கொள்வது தவிர வேறு வழியில்லாமல் போய்விட்டது. மாணிக் பந்த்யோபாத்தியாய் மட்டுமே தம் அறிவுத்திறன், தாம் சொல்ல விரும்பிய கருத்து இவற்றின் உந்துதலால் கிராமத்தைவிட்டுக் கல்கத்தாவுக்கு வர நேர்ந்தது. அவருடைய பாத்திரங்களின் சிக்கல்களுக்குக் கல்கத்தாவின் பின்புலம் தேவைப்பட்டது. இதற்கு உதாரணம் 'சஹர்தலி' என்ற அவரது நாவல்.

இரண்டாவது உலகப் போருக்குப் பின் கல்கத்தா நடுத்தர வர்க்கத்தின் வாழ்க்கையில் பல சோகங்கள், பல நம்பிக்கையிழப்புகள் நேர்ந்தன. அது கண்ட கனவுகள் சிதறிப் போயின. உடைந்த களவுக் கண்ணாடித் துண்டுகள் காலைக் கிழித்தன. வலியை வளர்த்தன. இந்த நிலையில் உண்மை நிலையிலிருந்து பார்வையைத் திருப்பி, சற்று முன்னால் அல்லது வெகு காலத்துக்கு முன்னால் கடந்த காலத்தின் வரலாற்றுக்குப் புதுமைச் சாயம் தீட்டி அதை ரசித்தால் என்ன தவறு? பல வலிமைமிக்க எழுத்தாளர்கள் இத்தகைய முயற்சியில் இறங்கினர். தாராசங்கர் 'ராதா', 'கன்னா பேகம்' நாவல்களை எழுதினார்; விபூதி பூஷண் எழுதினார் 'இச்சாமதி'; பிரமத நாத் பிஷி (1901-1985) 'கேரி சாகேபேர் முன்ஷி'

எழுதினார்; விமல் மித்ரா 'பேகம் மேரி பிஸ்வாஸ்' எழுதினார். எனினும் நாவலாசிரியரால் கல்கத்தா மண்ணின் சவாலைப் புறக்கணிக்க இயல வில்லை. 'ஹே ஹ்ருதய், மூல் மேலோ விதீர்ண பாஷாணே'— (இதயமே, பாறையின் பிளவுகளில் உன் வேரைத்தேடு). இது ஒரு தற்காலக் கவியின் கூற்று மட்டுமல்ல, நாவலாசிரியனின் உச்சரிக்கப்படாத கூற்றுமாகும். தாராசங்கர் எழுதினார், 'ஜட் ஓ ஜரா பாத்தா' (புயலும் சருகும்); மாணிக் எழுதினார், 'சின்ன' (அடையாளம்). 1946ம் ஆண்டுக் கல்கத்தாவின் தீயுமிழும் பின்புலத்தில். ஆனால் இந்த ஒளி ஆகஸ்ட் 16ம் தேதியின் பயங்கரப் புகை மண்டலத்தில் தன் பிரகாசத்தை இழந்துவிட்டது. இழப்பு களிலேயே மிகவும் வேதனை அளிப்பது கனவுகளை இழப்பதுதான். இந்த நூற்றாண்டின் நாற்பதுகளிலும் ஐம்பதுகளிலும் நாவல் எழுதியவர்கள் நடுத்தர வர்க்கத்தின் ஊசலாட்டத்தின் நடுவிலும் ஏதோ ஒன்றைத் தேடினார்கள். இவர்கள் யாவரும் சிறந்த உரைநடை வல்லுநர்கள். இவர் களுடைய அனுபவமும் இரண்டாம் உலகப் போர்க்காலத்தின் அல்லது அதற்குச் சற்றுப் பிற்பட்ட காலத்தின் கல்கத்தாவின் அனுபவந்தான். விமல்கரின் 'தேவால்', அசீம்ராயின் 'ஏகாலேர் கதா', நரேந்திர நாத் மித்ரா (1917-1975)வின் 'சேனா மகல்', சந்தோஷ் குமார் கோஷின் (1920-1985) 'கினு கோயாலார் கலி', ஜோதிரிந்திர நந்தியின் 'பாரோகர் ஏக் உட்டோன்' முதலிய நாவல்களின் பாத்திரங்கள் குறிப்பிடத்தக்கவர்களாக இருப் பதற்குக் காரணம்—அவர்கள் தங்கள் முந்தைய நூற்றாண்டின் முன்னோர் களின் பரம்பரைச் சொத்தைக் கட்டிக் காக்கக் கடமைப்பட்டிருக்கவில்லை என்பதுதான். வரலாறு தன் இயல்புக்கேற்ப அவர்கள் கையில் ஒரு காலிப் பையைத்தான் கொடுத்திருந்தது. அந்தப் பையில் எஞ்சியிருந்த நாணயங்கள் செலாவணியற்றவை.

'ஆத்மப்ரகாஷ்' ('தன் வெளிப்பாடு'-நவம்பர், 1966) சுநீல் கங்கோ பாத்தியாய் அவர்களின் முதலில் பிரசுரமான நாவல். ஆனால் அவர் 1959ம் ஆண்டிலேயே 'ஜீவதீரா' என்ற நாவலை எழுதத் தொடங்கிவிட்டார். ஆகவே 'ஆத்மப்ரகாஷ்' முதலில் பிரசுரமான அவரது நாவலாயினும், அவரது முதல் நாவல் அல்ல. 1965ம் ஆண்டில் சமரேஷ் பாசுவின் 'பிபர்' வெளிவந்தது. அதைத் தொடர்ந்து வங்காளி இலக்கிய உலகில் பெருத்த சர்ச்சை தொடங்கியது. இதற்கு அடுத்த ஆண்டில் 'ஆத்மப்ரகாஷ்' வெளியாயிற்று. இந்த இரு நாவல்களுக்குமிடையே நிறைய வேறுபாடுகள் உண்டு. ஆனால் ஒன்று-இந்த இரு நாவல்களின் நாயகர்களும் வாழ்க்கையின் தீர்வுகாண முடியாத சிக்கலில் சிக்கிக் கொண்டவர்கள். 'பிபர்' நாவலின் கதாநாயகன் புகைந்தெழும் கோபத்தில் எல்லாவற்றையும் உடைத்தெறிய விரும்புகிறான். இந்தக் கோபத்துக்குக் காரணம் அவன் சமூகத்தில் எதிலும் நம்பிக்கை வைக்க இயலாமைதான். இந்தத் தீவிரக் கோபத்தின் விளைவாக அவன் ஒழுக்கம்-கண்ணியம்-ரசனை போன்ற கட்டுப்பாடு களைத் தகர்த்தெறிய விழைகிறான். இவ்வாறு செய்வதே சுதந்திரம் என்று அவன் நினைக்கிறான். ஆனால் 'ஆத்மப்ரகாஷ்' நாவலின் கதாநாயகன் அவனைப் போல் தன் பின்புலத்திலிருந்து பிரிந்துவிடவில்லை. சுநீல்-சேகர்-அவிநாஷ்-சுவிமல் ஆகியோர் இன்பத்திலும் துன்பத்திலும் ஒருவரை

யொருவர் சார்ந்து நிற்கிறார்கள். அவர்களது பின்புலம் கல்கத்தா, அதன் பெரிய ரஸ்தாக்கள், தங்களை மறந்திருக்கும் சந்து பொந்துகள், அதன் போதை வெறிகொண்ட இரவுகள், வெறுமையான பகல்கள். இங்கே முப்பது வயது கடந்த ஓர் இளைஞன் வந்து சேருகிறான். அவன் மனத் தளவில் தனிமையானவன். பெற்றோரின் பாசம், அக்காமார்களின் அலட்சியம் இவற்றைக் கடந்து கல்கத்தாவுக்கு வந்திருக்கிறான். இதற்குமுன் அவன் கல்கத்தாவில் இருந்தபோது உறவினர்களின் பரிவை அனுபவித்திருக்கிறான். ஆனால் திடீர் சாவுகள் அவனுடைய வாழ்க்கையில் தடுமாற்றம் விளைவித்து விட்டன.

இந்த சமயத்தில்தான் அசல் கல்கத்தாவுடன் அவனது அறிமுகம் தொடங்கியது. பல வகையான கௌரவமான-இழிவான அம்சங்களுடைய ஆழ்ந்த அனுபவம் ஏற்பட்டது அவனுக்கு. வாழ்க்கையை முழுமையாக உணர்ந்து கொள்ள வேண்டுமானால் அதன் ஒளிமிக்க பகுதிகளை மட்டு மல்ல, இருண்ட பகுதிகளையும் புரிந்து கொள்ள வேண்டும் என்பது அவனுடைய கொள்கை. இவ்விதமாகத்தான் பிரஜேஷ்வர் பாபு, பரீட்சித், சேகர், அவிநாஷ், சுவிமல், நூருல் போன்ற ஆண்களும் மனீஷா, வீணா, யமுனா, நூர்ஜஹான் போன்ற பெண்களும் அவனது வாழ்க்கையில் குறுக்கிடுகிறார்கள். குழாய்க் கிணற்றுக்குப் பக்கத்தில் ரப்பர் பையில் கள்ளச் சாராயம் விற்குமிடத்துக்குப் போனால் ஹௌக்ளி பாலத்துக்குக் கீழே அலிகளின் நடனம் பற்றிய தகவல் கிடைக்கும் என்பது அவனுக்குத் தெரிய வருகிறது. அலுவலகத்தில், அதற்கு வெளியே, நண்பர்களுடன் அரட்டையில், தோழிகளின் நெருக்கத்தில்... இவ்வாறு பல வகைகளில் அனுபவம் பெற்ற இளைஞன் இவையெல்லாம் வெறும் ஏமாற்று வித்தைகள் என்பதை உணர்கிறான். ஒரு பெண்ணை உண்மையாகக் காதலிப்பதன் மூலம் இவற்றிலிருந்து விடுதலை பெற முயல்கிறான். ஆனால் அவன் தனியாக இருக்கும்போது கட்டுக்கடங்காத ஆடியல்கான் ஆற்றின் பயங்கர அழைப்பும் வாணிசக் ஏரியின் கொடூரமும் அவனுள்ளத்தில் ஒலிக்கின்றன. அவன் தன் சிறு பருவத்தில் கழுத்துவரை வளர்ந்துள்ள கிழக்கு வங்காளச் சணல் வயலில் ஓடித் திரிந்தது அவனுக்கு நினைவு வருகிறது. இவற்றையெல்லாம் துறந்துவிட்டு வந்ததால் ஏற்பட்ட துக்கத்தைவிடப் பெற்றோரைப் பிரிந்த துக்கம் பெரிதாகத் தோன்றவில்லை அவனுக்கு. இத்தகைய அனுபவங்களின் விளைவாக அவன் கற்றுக் கொள்ளும் படிப்பினை மனிதன் மேல் நம்பிக்கையிழப்பது பாவம் என்பதுதான்!

ஆகவேதான் இவ்வளவு ஐயங்களுக்கு நடுவிலும் அவன் உலகத்தின் பால் கருணைகொண்டு மெல்லக் கால் வைத்து நடக்கிறான். ஒரு வேர்க் கடலையைச் சாப்பிடும்போதுகூட அவனுக்குத் தோன்றுகிறது; அது தன் உயிரைக் கொடுத்து அவனைக் காப்பாற்றுகிறது என்று. அது "நன்றி கெடாதே!" என்று அவனுக்குச் சொல்வதாக நினைக்கிறான் அவன்.

இல்லை, அவன் நன்றி கெடவில்லை. வாழ்க்கையில் எழும் எந்தப் பிரச்சினை பற்றியும் கவலைப்படாமல் அவன் நம்பிக்கையுடன் சொல் கிறான்—"பயப்படத் தேவையில்லை. எல்லாம் சரியாகிவிடும்!"

நாவலாசிரியர் சுநீல் கங்கோபாத்தியாய் கதாநாயகனுக்கும் 'சுநீல்' என்றே பெயரிட்டு விட்டார். முற்றிலும் வேறுபட்ட வகையைச் சேர்ந்த, எந்த விதிக்கும் கட்டுப்படாத இந்த நாவல், கதாநாயகன் சுநீலின் வாக்கு மூலமாகும். இந்த நாவலில் நிகழ்ச்சிகளை விடக் கதாநாயகனின் உள்ளார்ந்த அனுபவங்களே முக்கியத்துவம் பெறுகின்றன. கதாநாயகன் காதலை நம்புகிறான். காதலிக்க விரும்புகிறான். அவன் பிறரைத் தாக்க விரும்ப வில்லை. ஆனால் அவனுக்குக் காதல் கிடைக்கவில்லை. தன் காதல் மறுக்கப்பட்ட பின்பும் அவன் காதலிக்கவே விரும்புகிறான்.

சமரேஷ் பாசுவின் 'பிபர்' நாவலின் கதாநாயகன் விரைவில் உணர்ச்சிவசப்படும் நிலையைக் கடந்து, வயதிலும் அனுபவத்திலும் ஓரளவு முதிர்ச்சி பெறுகிறான். ஆத்ம பிரகாஷின் கதாநாயகன் வயதில் இன்னும் இளையவன். அவன் பல இடையூறுகளுக்கு உள்ளாகியும் உணர்ச்சி வசப்படுகிறான். 'பிபரி'ன் கதாநாயகன் ஓர் உரைநடை எழுத் தாளனின் இரக்கமற்ற படைப்பு. ஆனால் சுநீல் கங்கோபாத்தியாய் அடிப் படையில் ஒரு கவி. கவிக்குரிய அனுதாபம் அவரது இந்த நாவலிலும் வெளிப்படுகிறது. 'ஆத்மப்ரகாஷ்' ஒரு கவியின் படைப்பு. நாவலாசிரியர் தம் பெயர் கொண்ட கதாநாயகன் மூலம் தம் வேதனை நிறைந்த ஆளுமையையே வெளிப்படுத்துகிறார்.

இந்த நாவலில் வர்ணிக்கப்படும் இளைஞர்கள் உணர்ச்சியற்ற வர்களோ ஈடுபாடற்றவர்களோ அல்லர் என்பது நாவலைப் படிக்கும் போது புலனாகும். இவர்கள் பூஜைமேடை கிடைக்கப் பெறாத புரோகிதர்கள். இவர்களால் பூஜைக்குரிய சிலையைக் கண்டுபிடிக்க முடியவில்லை. இவர்கள் தடுப்பு வேலிகளை எதிர்கொள்ளாத புரட்சிக்காரர்கள். அதனால் இவர்கள் மயானத்தில் அலைகிறார்கள், மது அருந்துகிறார்கள், கஞ்சா குடிக்கிறார்கள், ஒருவரோடொருவர் சண்டையிடுகிறார்கள். ஒரு வெறுமை யுணர்வின் தாக்கத்தால் இவர்கள் இவ்வாறு செய்கிறார்கள். கதாநாயகன் தன் உணர்ச்சிகளின் வெளிப்பாட்டுக்கு ஓர் ஆதாரத்தைத் தேடுகிறான். அவனுக்கு அது கிடைக்கவில்லை. சாதாரணமாக நடுத்தட்டு-கீழ்த்தட்டு மக்களின் குடும்பங்களில் உள்ள பரஸ்பர அன்பு, ஈடுபாடு இந்த இளைஞர் களுக்கு இல்லை. இவர்களை இவர்களுடைய குடும்பங்களுக்கு வெளியே விரட்டியடிக்கும் அளவுக்குத்தான் இக்குடும்பங்கள் சித்திரிக்கப்பட்டுள்ளன. இவர்கள் நாட்டு விடுதலைக்குப் பிற்பட்ட காலத்தைச் சேர்ந்தவர்கள். இவர்களைப் பொறுத்தவரை, ஊர்வலங்கள், பெயரற்ற பலருடைய ஒருமித்த முழக்கங்கள் தாம். கதாநாயகன் ஓர் ஊர்வலத்தைப் பார்த்துவிட்டு வருத்தத்தோடு நினைக்கிறான், "ஊர்வலத்திலே போறவங்க சந்தோஷமா இருக்காங்கன்னு நினைக்கறேன். ஏன்னா அவங்களுக்குக் கோரிக்கைகள் இருக்கு." இந்த இளைஞர்களுக்குக் கோரிக்கை யெதுவுமில்லை. இவர்களில் ஒருவன் ஊர்வலத்தைக் கடந்து சென்று ஒரு குருடனைச் சாலையின் மறுபக்கம் கொண்டுபோய்ச் சேர்க்கிறான். எது பெரிய உண்மை?

கதாநாயகனின் வாழ்க்கையில் குறுக்கிட்ட மூன்று பெண்களும்—காயத்திரி, மனீஷா, யமுனா—அவனது உள்ளத்தில் சலனம் விளைவிக் கிறார்கள். ஆனால் அவனது வாழ்வின் அடிப்படையைத் தொடவில்லை.

...

அவர்கள் அவனைக் கனவு காணத் தூண்டுகிறார்கள். அவனது கையைப் பிடித்துக் கொள்ளவில்லை. சாதாரண நடுத்தர வர்க்க மனிதனுக்கு மிகவும் கவர்ச்சிகரமான ஒரு நல்ல வேலை கதாநாயகனுக்குக் கிடைத்திருக் கிறது. ஆனால் அவன் தன் வேலையைப் பற்றிப் பேசும் போதெல்லாம் தன் அக்காவின் கணவனைக் குறிப்பிடுகிறான். அதிக வேலையில்லாத, நல்ல சம்பளமுள்ள, பிறரை அதட்டி அதிகாரம் செய்யும் உரிமையளிக்கும் இந்த உத்தியோகம்,அவருடைய தயவால்தான் அவனுக்குக் கிடைத்திருக்கிறது. இதுவும் ஒரு தோல்வியுணர்வுதான்—மனீஷா விஷயத்தில் அவனுக்கு ஏற்படுவது போன்ற உணர்வுதான். மனீஷாவைக் காதலிக்கத் தனக்கு வாய்ப்புக்கூடக் கிடைக்கவில்லையென்று வருந்துகிறான் அவன். பின்வரும் கூற்றிலிருந்து அவனது மனநிலை புரிகிறது—"நான் கல்கத்தா வந்ததும் என் சொந்த ஊரின் நினைவு, ஈச்சஞ்சாறின் மணம், ஆற்று நீரின் சலசலப்பு இவை என் மனதைப் பலமாகத் தாக்கின. இவற்றையிழந்த துக்கத்தில் நான் என்னை எல்லாமிழந்தவனாக உணர்ந்தேன். தொடர்ந்து இழப்புக் குள்ளாகும் மனிதனை ஒரு கட்டத்தில் இழக்கும் வெறி பற்றிக் கொண்டு விடுகிறது. நானும் தர்மம்-அதர்மம், நியாயம்-அநியாயம், பாவம்-புண்ணியம் எல்லாவற்றையும் இழந்துவிடத் தீர்மானித்து விட்டேன்..."

இதே தலைமுறையைச் சேர்ந்த இன்னோர் எழுத்தாளர் சீர்ஷேந்து முகோபாத்தியாயின் ஒரு கூற்று நினைவுக்கு வருகிறது—"மைமன்சிங்கின் பிரும்மபுத்திரா ஆற்றை வெகு காலத்துக்கு முன்பே விட்டுவிட்டு வந்து விட்டேன். எனினும் அது பூகோள எல்லையை மீறி இன்னும் என்னிடம் வருகிறது" சியாமல் கங்கோபாத்தியாயின் இன்னொரு கூற்றும் நினைவு வருகிறது—"அந்த சமயத்தில் நாற்புறத்திலிருந்தும் தாக்கிய அவமானந்தான் எனக்குத் துணையாயிருந்தது."

ஆயினும் இந்த அனுபவங்கள் அந்த இளைஞர்களின் உள்ளார்ந்த எளிமையைப் பாதிக்கவில்லை. பல அவமானங்களையும் ஏமாற்றங் களையும் எதிர்கொண்ட பின்னர் கதாநாயகன் சொல்கிறான்—" இப்படித் தான் காலம் கழிகிறது. மற்ற மனிதர்களை மலர்ந்த முகத்துடன் பார்த்து அவர்களும் அவ்வாறே என்னைப் பார்க்க வேண்டும் என்று நினைக்கிறேன். ஆனால் பெரும்பாலோரின் முகத்தில் உணர்ச்சியே இல்லை." இதிலிருந்து அவனது வேதனைக்குக் காரணம் புரிகிறது. இந்த அனுதாபமற்ற உலகில்தான் அவன் வாழவேண்டும்—"இது வரை எவ்வளவோ பேர் 'எப்படி இருக்கீங்க?' என்று என்னைக் கேட்டிருக்கிறார்கள். ஆனால் ஒருவர்கூட என் பதிலுக்காக ஒரு நிமிடம் காத்திருக்கவில்லை." இருந்தாலும் அவன் "பிழைத்திருப்பதே பெரும் இன்பம்" என்று சொல்கிறான்; தரைக்கு அதிர்ச்சி ஏற்படாதபடி மெல்ல நடக்கிறான்; ஆரஞ்சுப் பழத்துக்கும் வேர்க்கடலைக்கும் நன்றி தெரிவிக்கிறான். இவ்வாறு அவன் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறான்.

இந்த நாவலுக்குத் தேவைப்படுவது கதையின் கட்டுக்கோப்பு அல்ல, பாத்திரங்களின் ஆளுமையின் மலர்ச்சிதான். கதாநாயகன் தான் பார்த்ததை அப்படியே சொல்கிறான் என்ற கூறினால் போதாது. பார்ப்பது பெரிய விஷயமில்லை, பார்த்துக் கொண்டே சுநீலின் ஆளுமை மலர்வதுதான் முக்கியம். இந்த நாவலின் கதையோட்டத்தில் ஓர் உள்ளார்ந்த பிணைப்பு

இருப்பதை அக்கறையுள்ள எந்த வாசகனும் உணர்வான்; இந்தப் பிணைப்பு நாவலின் வெளிப்புறக் கட்டுக்கோப்பைவிட உறுதியானது. நூர்ஜஹான் கதை, எழுத்தாளர் சுநீல் கங்கோபாத்தியாய் கேள்விப்பட்ட ஓர் உண்மை நிகழ்ச்சி. இந்தக் கதையை அவர் வேறொரு படைப்பிலும் பயன்படுத்தி யுள்ளார். அவர் கேள்விப்பட்டாரோ, பார்த்தாரோ—இந்த நிகழ்ச்சி கதா நாயகன் சுநீலின் அனுபவமாக இந்த நாவலில் இடம் பெறுகிறது. இந்தப் பகுதியை எடுத்துவிட்டால் ஒரு குறிப்பிட்ட காலத்தின் கறை நாவலிலிருந்து துடைக்கப்பட்டிருக்கும், ஆனால் நாவலின் முழுமை பாதிக்கப்பட்டிருக்கும்.

நைஹாத்தி **சரோஜ் பந்த்யோபாத்தியாய்**

காலைவேளையில் பரிதோஷ் வந்து சொன்னான், "நீங்க இதென்னெ ஆரம்பிச்சிருக்கீங்க! எல்லாத்துக்கும் ஒரு எல்லை இருக்கணும்!"

இரண்டாவது கப் டீ குடித்தாகவில்லை அப்போது. தினசரிப் பத்திரிகை படிக்கத் தொடங்கிப் படித்தது மறந்து மறந்து போகிறது. கண் இமைகள் கோந்து மாதிரி ஒட்டிக் கொண்டிருக்கின்றன. தினம் காலையில் கண் விழித்ததும் இரண்டு விருப்பங்கள் தோன்றுகின்றன— ஒன்று, கட்டிலுக்குக் கீழே வைத்திருக்கும் தண்ணீர் டம்ளரையெடுத்து கடகடவென்று ஒரே மூச்சில் எல்லாத் தண்ணீரையும் குடித்து விடுவது; அப்போதெல்லாம், "ஆகா, தண்ணீரல்லவா உயிர்!" என்று தோன்றும். எவ்வளவோ பானங்கள் குடித்திருக்கிறேன், ஆனால் அவை எதிலும் காலை வேளையில் குடிக்கும் தண்ணீரின் அருமையான ருசி இல்லை. இரண்டாவது, தினசரிப் பத்திரிகை படிக்கத் துடிக்கும் மனது.

அன்று அப்போதும் தூக்கக் கலக்கம் போகவில்லை எனக்கு. இமைகளைத் திறந்து வைத்திருக்க முடியவில்லை, தலை கிறுகிறுத்தது. பத்திரிகையின் முதல் பக்கத்தைப் படித்து முடித்துவிட்டு ஏழாம் பக்கத்துக்குப் போகும்போது முதல் பக்கம் மறந்து போய்விட்டது. அன்றைக்கு முக்கியச் செய்தி என்ன என்று யோசித்துப் பார்க்க நேர்ந்தது. மறுபடியும் முதல் பக்கத்தைப் புரட்டிப் பார்க்கும்போது தூக்க மயக்கம்...

பரிதோஷ் வருவதை வராந்தாவிலிருந்தே பார்த்துவிட்டேன். அப்போது தூறிக் கொண்டிருந்தது. பரிதோஷ் கையில் குடையுடன் வாத்து நடையுடன் வந்து கொண்டிருந்தான்.

நான் சிரமப்பட்டு கண்களைத் திறந்து வைத்துக்கொண்டு, "என்ன விஷயம்?" என்று கேட்டேன்.

"நேத்து ராத்திரி நீங்க எங்கே இருந்தீங்க?"

எனக்கு பரிதோஷை அவ்வளவாகப் பிடிக்காது. ஒருவனுடைய நண்பர்களின் தம்பிகளைப் போல் அவனும் அடக்கமானவன்தான், பண்புள்ளவன்தான். ஆனால் அப்படிப்பட்ட தம்பியொருவன் எகனாமிக்ஸ் எம்.ஏ. படித்துக் கொண்டு, படிப்பிலும் கெட்டிக்காரனா யிருந்துவிட்டால், அவன் தன் அண்ணனின் நண்பர்களோடு இருக்கும் போது ஓரளவு அகம்பாவக்காரனாகி விடுகிறான். இதுதான் வழக்கம். அவன்தான் உலகத்துக்கு மிகவும் தேவையானவன், அவனுடைய அண்ணனின் நண்பர்களான நாங்கள் இருந்தாலும் ஒன்றுதான் இல்லாவிட்டாலும் ஒன்றுதான் என்று அவன் நினைக்கிறான்.

இருந்தாலும் காலைவேளையில் எல்லாரையும் மன்னித்து விடத் தோன்றுகிறது. ஆகையால் பரிதோஷிடமும் அக்கறை காட்ட விரும்பினேன் நான்.

நான் கேட்டேன், "நேத்து ராத்திரியா? ராத்திரி ஒண்ணரை மணி வரையிலே வெவ்வேறு இடத்திலே இருந்தோம். நீ எந்த நேரத்தைப் பத்திக் கேக்கறே?"

பரிதோஷ் கண்ணிமைக்காமல் என்னையே பார்த்தவாறு உணர்ச்சியற்ற குரலில் சொன்னான், "நேத்து ராத்திரி அண்ணன் வீடு திரும்பலே..."

இதைக் கேட்டுச் சங்கடமாயிருந்தது எனக்கு. விடிந்தும் விடியாமல் பிறர் பிரச்சினையெல்லாம் நமக்கு வந்து சேர்கிறது. 'இந்த நேரத்தில்—காலை ஏழரை மணி முதல் ஒன்பதரை மணிவரையில் தனிமையாக இருக்கத் தோன்றுகிறது; கட்டில், நாற்காலி, புத்தக அலமாரி, மேலே சுற்றும் விசிறி இவற்றுடன் சேர்ந்து நம்மையும் நேசித்துக் கொள்ளத் தோன்றுகிறது. இந்த சமயத்தில்தான் "தண்ணீரின் இன்னொரு பெயர் உயிர். மனிதன் உலகத்தில் சுகமாக இருக்கிறான்–" என்றெல்லாம் நினைக்கத் தோன்றுகிறது. பரிதோஷ் என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொண்டு போகட்டும். நாம் அதைக் காதில் போட்டுக் கொள்ள வேண்டாம் என்றுதான் நினைத்தேன். இருந் தாலும் பரிதோஷின் குரலில் தொனித்த கோபம் குழலின் ஒலிபோல் கூர்மையாக ஒலித்தது. அதைப் புறக்கணிக்க இயலவில்லை.

"சேகர் ராத்திரி வீட்டுக்கு வரலியா? ஏன்?"

"உங்களுக்குத் தெரியாதா?"

"தெரியாதே! ரெண்டு மூணு நாளா அவனை நான் பார்க்கவே இல்லையே!"

"இருந்தாலும் அவன் எங்கே போயிருப்பான்னு நீங்க ஊகிக்கலாமே!"

"நீ ஏன் இவ்வளவு அவசரமாக் கிளம்பி வந்தே? இதுக்குள்ளே அவன் வீட்டுக்குத் திரும்பி வந்துருக்கலாம். ராத்திரி எங்கேயாவது தங்க நேர்ந்திருக்கும்."

"அம்மா ராத்திரி பூராத்தூங்கலே– விடியக்காலையிலிருந்தே என்னை விரட்டிக்கிட்டிருக்காங்க, தேடச் சொல்லி..."

"இதுக்கு முந்தியும் ரெண்டு மூணு தடவை சேகர் ராத்திரியிலே வீடு திரும்பாம இருந்திருக்கான்... எங்கேயாவது சீட்டாட்ட மும்முரத்திலே... கவலைப்பட வேண்டியதில்லே..."

"ராத்திரி வீடு திரும்பாம இருக்கறது அண்ணனுக்கு சாதாரணமா யிருக்கலாம், ஆனா அம்மாவுக்கு இதை எப்படிப் பொறுத்துக்க முடியும். சொல்லுங்க! அவங்க ஒவ்வொரு தடவையும் கவலைப்படறாங்க."

எனக்குக் கொஞ்சம் சிரிப்பு வந்தது. ஏதோ நான்தான் ராத்திரி விட்டுக்கு வரவில்லை, என்னால்தான்அவனுடைய அம்மாவுக்குக் கவலை, சேகர் ராத்திரி வீடு திரும்பாததற்கு நான்தான் காரணம் என்பது போல் தொனித்தது பரிதோஷின் பேச்சு. காலை வேளையில் இவர்களுக்கெல்லாம் எப்படி இந்த மாதிரியெல்லாம் வாதாடத் தோன்றுகிறது? எகனாமிகஸ் படித்தால் இப்படியெல்லாம் தோன்றும் போலும்? ஒரு எகனாமிக்ஸ் மாணவனின் சீரியஸ் தோற்றம்—உலகத்துக்கு உபகாரம் செய்யப் பிறந்தவ னல்லவா! நாங்களெல்லாரும் இருந்தாலும் ஒன்றுதான் இல்லாவிட்டாலும் ஒன்றுதான்–

சேகர் விஷயத்தில் அக்கறை எடுத்துக் கொள்வதா இல்லையா என்று புரியவில்லை எனக்கு. அவன் இரவில் வீடு திரும்பாதது நிஜமாகவே ஒரு பெரிய விஷயமா? சேகர் ஆஜானுபாகுவாக இருப்பான்; அவன் பையில் எப்போதும் பணம் இருக்கும்; கல்கத்தா மைதானத்தின் ஒரு பகுதியை ஏலம் போட்டு விற்றுவிடக்கூடிய அளவு அபார கெட்டிக்காரன்; வாய்க்காலை ஆறு என்று நினைத்து ஏமாறுபவன் அல்ல. அவன் ஒரு ராத்திரி வீடு திரும்பவில்லையென்றால் அதற்காக இவ்வளவு கவலைப் படுவானேன்? இதற்குக் கவலைப்படுவதானால், திபெத்தில் ஏன் சீனி தயாரிக்கப்படுவதில்லை என்பதைப் பற்றியும் கவலைப்பட வேண்டியது தான்!

ஆனால் ஒருவனை அவனுடைய நண்பர்கள் புரிந்து கொள்வது போல் உறவினர்கள் புரிந்து கொள்ள இயலாது என்பது உண்மைதான்.

அதிசயம்தான்! காலை வேளையில் எனக்குக்கூட இவ்வளவு சிந்திக்கத் தெரிந்திருக்கிறதே!

நான் முகத்தில் கவலையை வரவழைத்துக் கொண்டு கேட்டேன்.

"சேகர் நேத்திக்கு எப்போ வீட்டிலேருந்து போனான்?"

"வழக்கம்போல சாப்பிட்டுவிட்டுப் பத்து மணிக்கு ஆபீசுக்குப் போனான். என்னிக்குமே அவன் வீடு திரும்ப ராத்திரி பத்துமணி, பதினோருமணி ஆயிடும். நேத்து ராத்திரி திரும்பி வரலே, எந்தவிதமான செய்தியும் அனுப்பலே...

"நீ ஏன் முதல்லே என்கிட்டே வந்தே? வேறே..."

"தாபஸ் அண்ணாகிட்டேதான் முதல்லே போனேன். அவர்தான் உங்களைக் கேக்கச் சொன்னார்..."

இதைக் கேட்டு எனக்குச் சிரிப்பு வரும் போலிருந்தது. ஒருவர் பொறுப்பை இன்னொருவரிடம் தள்ளிவிடுவதுதான் வழக்கம் போலிருக் கிறது. 'தாபஸ் இவனை என்னிடம் அனுப்பியிருக்கிறான். நான் இவனை அவிநாஷிடம் அனுப்ப, அவன் பரீட்சித்திடம் அனுப்ப... எனக்குப் பரிதோஷைப் பார்க்கப் பாவமாக இருந்தது. அவன் குடையை மடக்கிப் பக்கத்தில் வைத்துவிட்டு நாற்காலியில் நிமிர்ந்து உட்கார்ந்து கொண் டிருந்தான் அவனுடைய முகத்தில் கவலையைவிடக் கோபமே அதிகமாகத் தெரிந்தது. சேகருக்கு ஆபத்து எதுவும் நேரவில்லை என்று அவனும் நினைக்கிறான். ஆனால், சேகரின் இந்தத் தறுதலைத்தனம் அவனுக்குப் பிடிக்கவில்லை.

நான் ஜாக்கிரதையோடு சொன்னேன், "எங்கேயாவது தங்கிவிட நேர்ந்திருக்கலாம். இதுக்குள்ளே வீட்டுக்குத் திரும்பியிருக்கலாம். அப்படித் திரும்பலேன்னா மதியத்திலே என் ஆபீசுக்கு போன் பண்ணு. நா சாயங்காலம் தேடிப் பாக்கறேன். நீ இப்போ ஒரு இடத்துக்கும் அலைய வேண்டாம்... டீ குடி!"

"இல்லே. டீ வேண்டாம், எனக்கு இப்பவே வீடு திரும்பணும்."

"கொஞ்சநாளா சேகரைப் பார்க்கவேயில்லே நான். இப்போ எனக்கு அவனோட அவ்வளவு தொடர்பு இல்லே. இருந்தாலும் சாயங்காலம் விசாரிச்சுப் பார்க்கறேன்..."

“நீங்க வழக்கமாப் போற இடம் எதுவேயாவது...”

“இப்பல்லாம் நான் அந்த இடங்களுக்குப் போறதில்லே...”

“என்னாலே நம்ப முடியலே...”

நான் லேசாகச் சிரித்துக் கொண்டு சொன்னேன், “உனக்குத் தெரியாது பரிதோஷ்... நான் இப்போ ரொம்ப மாறிப்போயிட்டேன்.”

பரிதோஷ் தலை குனிந்தவாறே சொன்னான், “ஒரு குறிப்பிட்ட நேரத்துக்குள் ஒருத்தர் எவ்வளவு மாறமுடியுங்கறது எனக்குத் தெரியும். சுநீல் அண்ணா, நீங்க வாழ்க்கையை வச்சுக்கிட்டு விளையாடற விளை யாட்டுக்கு என்ன முடிவுன்னு எனக்கு தெரியலே.”

“நீ சின்னப் பையன்...”

“நான் ஒண்ணும் ரொம்பச் சின்னப் பையனில்லே. உங்களைவிட அஞ்சாறு வருஷம் சின்னவனாயிருப்பேன், அவ்வளவுதான்!”

“வாழ்க்கையிலே இந்தப் பருவத்திலே அஞ்சாறு வருஷங்கறது குறைவான காலமில்லே. ஒவ்வொரு வருஷமும் நீண்ட... காலம்...”

“வாரேன். மதியம் ஆபீசுக்கு போன் செய்யறேன்...”

“அதுக்குக்கூட அவசியமிருக்காது. நீ வீடு போய்ச்சேர்றதுக்குள்ளே அவன் அங்கே வந்திருப்பான். வந்துட்டாலும் எனக்கு போன் பண்ணி விஷயத்தை சொல்லு...”

பரிதோஷ் சென்றபிறகு மழை வலுத்துவிட்டது. விரைவில் நிற்கு மென்று தோன்றவில்லை. அதாவது, இன்று இஸ்திரி போட்ட சட்டை அணிந்து கொண்டு போகவேண்டாம். ஷூபாலிஷ் செய்வதிலும் அர்த்த மில்லை. ஏனென்றால் அதில் சேறு அப்பிக் கொள்ளத்தான் போகிறது. நேற்றுப் போட்டிருந்த சட்டையையும் பாலிஷ் செய்யாத ஷூவையும் அணிந்து கொண்டு போகும்போது முகச் சவரம் மட்டும் எதற்கு? இவ்வாறு பல காரியங்கள் குறைந்து விட்டதால் நிறைய நேரம் கிடைத்தது. சாதாரணமாக இந்த மாதிரி மழை நாட்களில் பெரும்பாலோருக்கு ஆபீஸ் போக வேண்டாமென்று தோன்றும். ஆனால் எனக்கு இப்போதெல்லாம் ஆபீஸ் போக உற்சாகமாயிருக்கிறது. ஆபீசில் நீண்ட சதுர மேஜைமேல் கால்களைப் போட்டுக் கொண்டு டீ குடிக்கும்போது ஏற்படும் மகிழ்ச்சியோடு ஒப்பிட்டால் வீட்டில் கட்டிலில் படுத்திருப்பதால் உண்டாகும் மகிழ்ச்சி ஒன்றுமேயில்லை. இப்போது எனக்கு ஆபீசில் பதவி உயர்வு கிடைத் திருக்கிறது. முன்பு ஒரு ஹாலில் பலருடன் உட்கார்ந்து கொண்டு வேலை செய்தேன். இப்போது ஒரு சிறிய அறையில் இன்னும் இரண்டு ஆபீசர்களுடன் உட்கார்ந்திருக்கிறேன். மேஜை மேலே உள்ள மணியை ‘டிங் டிங்’ என்று அடித்தால் பியூன் ஜரீசிங் உள்ளே வருவான. அவனுக்கு என்ன உத்தரவு வேண்டுமானாலும் கொடுக்கலாம். லே-அவுட் பிரிவில் மூன்று பேர் எனக்குக் கீழே வேலை பார்க்கிறார்கள். அவர்களில் வனமாலி பாபுவுக்கு என் சின்னத் தாத்தா வயது. அவரை அதட்டி மிரட்டுவதில் எனக்கு அலாதி மகிழ்ச்சி. சமயம் கிடைத்தால் “உங்களுக்கு கண்கூட சரியாத் தெரியலே. ஏன் இன்னும் பேனாவைக் கட்டிக்கிட்டு அழறீங்க? ஒய்வு எடுத்துக்கிட்டு ராமாயணம், மகாபாரதம் படிச்சுக்கிட்டு இருங்களேன்!” என்று விரட்டுவேன். மற்றவர்களை அதட்டுவதில் அல்லது

கேலி செய்வதில் ஏற்படும் மகிழ்ச்சியை இப்போதுதான் அனுபவிக்கத் தொடங்கியிருக்கிறேன் நான்...

மூன்று மணி வாக்கில் சுவிமல் வந்தான். சற்று நேரத்துக்குப் பிறகு பரிதோஷிடமிருந்து போன் வந்தது... அட, நான் சேகர் விஷயத்தை மறந்தே போய்விட்டேன்! பரிதோஷின் குரலில் பயம் சற்றுமில்லை. கோபந்தான் இன்னும் அதிகமாயிருந்தது.

"அண்ணா இன்னும் திரும்பலே... உங்களுக்கு ஏதாவது தெரிஞ்சுதா?"

"கொஞ்சம் இரு" என்று சொல்லிவிட்டு, டெலிபோனின் வாயைக் கையால் மூடிக் கொண்டு சுவிமலைக் கேட்டேன், "சேகரைப் பத்தி ஏதாவது தெரியுமா?"

"என்ன விஷயம்?"

"நேத்திக்கி அவனைப் பார்த்தியா?"

"இல்லே."

"நேத்து ராத்திரி சேகர் வீட்டுக்கு வரல்லே. கொஞ்சம் இரு..." என்று சுவிமலிடம் சொல்லிவிட்டுப் பரிதோஷுடன் போனில் பேசினேன், "எனக்கு ஒரு செய்தியும் இல்லே. சேகர் ஒரு செய்தியும் அனுப்பலியா?"

"இல்லே... நான் அண்ணனோட ஆபீசுக்கு போன் பண்ணினேன். நேத்து மதியம் ரெண்டு மணிக்கே ஆபீசைவிட்டுப் போயிட்டானாம். எல்லா ஆஸ்பத்திரியேயும் விசாரிச்சுட்டேன் – ஒரு செய்தியும் கிடைக்கலே..."

"போலீஸ் ஸ்டேஷன்ல விசாரிச்சியா?"

"போலீஸ் ஸ்டேஷனா...? எதுக்கு?"

"எவ்வளவோ காரணம் இருக்கலாம்... சரி, விட்டுத் தள்ளு. போலீஸ் ஸ்டேஷன்லே இருக்கமாட்டான்... நான் பார்க்கறேன்."

"அம்மா ரொம்பக் கவலைப்படறாங்க. அடிக்கடி உங்களைத் தான் விசாரிக்கச் சொல்றாங்க. அண்ணனோட சிநேகிதர்களிலே உங்களைத்தானே அம்மாவுக்கு நல்லாத் தெரியும்!"

"அம்மாவைக் கவலைப்படாம இருக்கச் சொல்லு. நாங்கதான் இருக்கோமே...! நான் இப்பவே வெளியே போய் விசாரிக்கறேன். அவன் அநிமேஷைப் பார்க்க பெர்ஹாம்பூர் போயிருந்தாலும் போயிருக்கலாம். சில சமயம் அங்கே அவன் போறதுண்டே...! ஆபீசிலே லீவு எடுத்துக் கிட்டிருக்கானா?"

"இல்லே"

"சரி, நான் பார்க்கறேன். முடிஞ்சா சாயங்காலம் உங்க வீட்டுக்கு வரேன்... போனை வச்சுடவா?"

போனை வைத்துவிட்டு, "சேகருக்கு என்ன ஆச்சு?" என்று சுவிமலைக் கேட்டேன்.

சுவிமல் எரிந்து போன தீக்குச்சியால் காதைக் குடைந்து கொண்டே "என்ன ஆயிருக்கும்? மண்டை அரிச்சிருக்கும்..." என்று சொன்னான்.

"நீ நேத்திக்குச் சண்டியோட கடைக்குப் போயிருந்தியா?"

"ஆமா."

"அங்கே சேகர் இல்லயா?"

"இல்லே."

"சரி. புறப்படு! சேகரைத் தேடணும். அவிநாஷ் அல்லது பரீட்சித்துக்குத் தெரிஞ்சிருக்கலாம்..."

"அவங்க ரெண்டு பேரும் நேத்திக்கு என்னோட சண்டி கடையிலே இருந்தாங்க. அவங்க சேகரைப் பார்க்கலே..."

"எதுக்கும் போய்ப் பார்ப்போம்... இது ஒரு தொந்தரவு!"

"எங்கே போகப் போறே?"

"எனக்கே தெரியாது. வைக்கோல் போரிலே ஊசியைத் தேடவேண்டியதுதான்..."

சுவிமல் என் அறையிலிருந்த மற்ற இருவரையும் திரும்பிப் பார்த்து விட்டுத் தாழ்ந்த குரலில் சொன்னான், "தேடத் தொடங்கறதுக்கு முன்னாலே கொஞ்சம் பீர் குடிச்சுக்குவோம். கொஞ்ச 'ஈரம்' இல்லாம இந்தத் தேடற வேலையெல்லாம் செய்ய முடியாது. எவ்வளவு இடத்துக்குப் போகணுமோ, யார் கண்டாங்க!"

நான் இதற்குள் மேஜை டிராயரைப் பூட்டிவிட்டு நாற்காலியிலிருந்து எழுந்துவிட்டேன். "இந்த மழை நாளிலே பீரா? உனக்கு மூளை கெட்டுப் போச்சா?"

சுவிமல் சிரித்துக் கொண்டே சொன்னான், "நானும் நீ இப்படிச் சொல்லுவேன்னுதான் எதிர் பார்த்தேன். மழை நாளிலே கண்ணியமான வங்க யாராவது பீர் குடிப்பாங்களா? இது விஸ்கி குடிக்கத் தகுந்த வெதராக்கும்!"

"விஸ்கிக்கு யாரு காசு கொடுப்பாங்க?"

"யார் கொடுப்பாங்களோ அவங்கதான்"

"அந்த ஆளு யாருன்னுதான் கேக்றேன்."

"நீ கொடுக்கமாட்டேன்னு புரியுது. அப்படீன்னா அவிநாஷ் கிட்டே போகலாம்."

நாங்கள் அறையை விட்டு வெளியேறும்போது எதிரில் வனமாலி பாபு வந்தார். அவர் கையில் டிராயிங்குகள் அடங்கிய சில காகிதங்கள். இந்த மனிதர் ஒரு கிழவனுடைய சித்திரம் வரைவதென்றால் தம் முகத்தையே வரைவார் போலும்.

"மிஸ்டர் கங்கூலி, நீங்க வெளியே போறீங்களா? சைமன்ஸ் கம்பெனியோட டிராயிங்..."

சட்டென்று குரலில் கடுமையை வரவழைத்துக் கொண்டு சொன்னேன், "நாளைக்கு பிரஸ் மூடியிருக்கும். இன்னிக்கு டிராயிங் ரெடி பண்ணி என்ன பிரயோசனம்? இதிலே நீங்க செய்யக்கூடியது ஒண்ணு மில்லே. பிரஸ்ஸிலே டைப் கம்போஸ் பண்ணி அச்சுப் போட வேண்டியது தான்... நீங்க டிராயிங்கை என் மேஜை மேலே வச்சுட்டுப் போங்க. மிஸ்டர் மைத்ரா விசாரிச்சார்னா நான் செக்ரிடேரியட்டுக்குப் போயிருக்கேன்னு சொல்லுங்க. அவசர காரியமாப் போறேன், சொல்ல மறந்துடாதீங்க!"

மிஸ்டர் மைத்ரா என் தமக்கையின் கணவர். அவரது தயவில்தான் எனக்கு இந்த வேலை கிடைத்திருக்கிறது. வேலை கிடையாது. சுமார் சம்பளம், கீழேயுள்ளவர்களை அதட்டி மிரட்ட நிறைய வசதி. இவை யெல்லாம் இந்த வேலையில் உண்டு. ஆபீசில் அடிக்கடி அவருடைய

பெயரைச் சொல்லி என்னை உற்சாகப்படுத்திக் கொள்வேன். ஆபீசில் உறவினர்களிருந்தால் அவர்களிடமிருந்து சற்று விலகியிருக்க வேண்டும் என்ற கொள்கை எனக்கு உடன்பாடல்ல. சிலசமயம் 'மிஸ்டர் மைத்ரா' என்று சொல்லாமல் 'பெரிய மாப்பிள்ளை' என்று கூடச் சொல்லுவேன். எப்போதாவது கணக்கரிடம் போய், "பெரிய மாப்பிள்ளையோட ரூமிலே விசிறி 'கிரீச் கிரீச்'சுனு சத்தம் போடுதே! அவர் வேலைப் பளுவிலே இதையெல்லாம் கவனிக்கறதில்லே. நீங்களாவது இதுக்கு ஏதாவது ஏற்பாடு பண்ணக் கூடாதா?" என்று கேட்டு வைப்பேன்.

இந்த ஆபீசின் 'பெரியதுரை'யின் மைத்துனன் நான். என்னை எதிர்த்துப் பேச யாரால் முடியும்?

நான் இப்போது மிஸ்டர் மைத்ராவின் பெயரை உச்சரித்ததால் வனமாலி பாபு இன்றைக்கு ஆறுமணி வரையில் ஆபீசில் உட்கார்ந்திருப்பார்.

மோசமான மழை; வானம் ஈயம் மாதிரி இருக்கிறது. பார்க்கிறபோதே தெரிகிறது—ராத்திரி வரையில் இப்படித்தான் தூறிக் கொண்டேயிருக்கும், வலுக்கவும் வலுக்காது-நிற்கவும் செய்யாது என்று. சுவிமல் ஜன்னல் வழியே கை நீட்டிப் பார்த்தான். நான் ரிசப்ஷன் கௌண்டரிலிருந்த யூதப் பெண்ணிடம் லேசாகத் திரும்பி, "மிஸ் நவோமி, எனக்கு ஏதாவது டெலிபோன் வந்தா நா இன்னிக்கு ஆபீசுக்குத் திரும்பி வரமாட்டேன்னு சொல்லு. சாயங்காலக் கடிதங்களைப் பிரிச்சுவை... நீ ரெண்டு நாள் லீவு எடுத்துக்கறே இல்லே?" என்றேன்.

"ஆமா..."

"பாவம். இந்த ஆபீஸ் ரெண்டு நாள் 'வெறிச்'சுனு இருக்கும்!"

அவள் 'களுக்'கென்று சிரித்து விட்டுச் சொன்னாள், "நீங்க கிளம்பிப் போறீங்க, இன்னக்கிப் பிற்பகல் முழுதும் வெறிச்சுனு இருக்கும் எனக்கு!"

நான் அவளுக்கு சற்று அருகில் போய், "அப்படியா? இன்னிக்கு நீ ஃப்ரீயா இருக்கியா? வெளியிலே என்னோட..." என்று கேட்டேன்.

உதடுகளில் சிரிப்பு இன்னும் தவழ அவள் சொன்னாள், "ஸாரி, இன்னிக்கு நான் அஞ்சரை மணிவரையில் தான் ஃப்ரீ..."

அவள் குட்டை, முகத்தில் அம்மைத் தழும்பு, ஆனால் அவளுடைய சிவப்பு நிறத்துக்குப் பொருத்தமாகத்தானிருந்தது. தலை முடி மஞ்சள் நிறம், கண்களிரண்டும் வெவ்வேறு நிறம். ஒன்று நீலம், மற்றது கருப்பு. இந்த மாதிரி வெவ்வேறு நிறக் கண்கள் கொண்ட பூனை ஒன்றை அத்தை வீட்டில் பார்த்திருக்கிறேன்.

சுவிமல் தூறலிலேயே தெருவில் கால் வைத்துக் கொண்டவாறு கேட்டான், "இந்தப் பொண் கிடைப்பாளா?"

"முயற்சி பண்ணிப் பார்க்கறேன்..."

"அருணோட ஆபீசிலே ஒரு டெலிபோன் ஆபரேட்டர் இருக்கா—வங்காளிப் பொண்ணு. அவ குரலை மாத்திக்கிட்டு போன்லே அருணோடே காதல் பேச்சுப் பேசுவா..."

"இதெல்லாம் அருணோட கப்ஸா!"

"இல்லேயில்லே, எனக்குத் தெரியும்... அருண் தனியா இருக்கற போது அவ முதல்லே தன் இயற்கையான குரல்லே 'மிஸ்டர் தாஸ் குப்தா,

உங்களுக்கு ஒரு போன் கால்' அப்படீன்னு சொல்லுவா. அப்பறம் கொஞ்சம் நிறுத்திட்டு, குரலை மாத்திக்கிட்டு, 'ஹலோ, அருண்?' என்று சொல்லிட்டுச் சிரிப்பா. அருண், 'யாரு?'ன்னு கேப்பான். 'என்னைத் தெரியல்லியா?'ன்னு அவ பதிலுக்குக் கேள்வி கேப்பா. 'இல்லியே, நீ யாரு?'ன்னு கேப்பான். 'தெரியல்லேன்னாப் போனாப் போகுது'ன்னு சொல்லிட்டு அவ போனை வச்சுருவா. மறுநாளும் இதேமாதிரி நடக்கும். அருணுக்கு சங்கடமாப் போயிடுச்சு. டெலிபோன்லே சில பேருக்குக் குரல் கொஞ்சம் மாறிப் போயிடும். அவனுக்கு நிறையப் பொண்களோட பழக்கம் உண்டு. அவன் ஒரு பொண்ணுக்குப் பதிலா இன்னொரு பொண்ணோட பேரைப் போன்லே சொல்லிட்டா ஆபத்து... இப்படி ரெண்டு மூணுநாள் ஆனப்பறம் ஒரு நாள் அருண், 'நீ மாலதி தானே?'ன்னு கேட்டுட்டான்.

"அந்தப் பொண்ணு ஒரு பெருமூச்சு விட்டுட்டு, 'அப்பாடா, இப்பவாவது தெரிஞ்சுக்கிட்டியே?' அப்படீன்னா."

". . . மாலதி, நீ கான்பூரிலேருந்து எப்போ திரும்பி வந்தே?'ன்னு அருண் கேட்டான்."

"அந்தப் பொண்ணு சொன்னா, 'மூணு நாளாச்சு... மூணு நாளா போன் பண்றேன். உனக்கு என்னைத் தெரியவேயில்லே. இந்தக் கொஞ்ச நாளிலேயே...'

"அருண் சொன்னான் 'நாள் இல்லே... மூணு வருஷம்..."

"அந்தப் பொண்ணு சொன்னா, 'சரி, அப்படீன்னா மூணு வருஷத்திலே எல்லாம் மறந்துபோயிடுமாக்கும்...?' இப்படிக் கொஞ்சநாள் நடந்துக் கிட்டிருந்தது..."

"அப்பறம்?"

"கேளு வேடிக்கையை... அப்பக்கூட அருணுக்கு ஒண்ணும் புரியலே. டெலிபோன் ஆபரேட்டர் மேலே சந்தேகமே வரலே அவனுக்கு. இந்த மர்மத்தை நினைச்சு நினைச்சுக் குழம்பிக் கிட்டிருந்தான் அருண். ஒரு நாள் நான் அவனோட ஆபீசுக்குப் போயிருந்தபோது என்கிட்டே விஷயத்தைச் சொல்லி, 'நான் என்ன பண்றது, சொல்லு'ன்னு கேட்டான். நான் சொன்னேன், மாலதி உன்னோட பழைய சிநேகிதியாக்கும்! அவளை நேரே பார்த்துக் கேக்க வேண்டியதுதானே!"

"அருண் ஒரு பெருமூச்சு விட்டுட்டுச் சொன்னான், 'அதுதாண்டா மர்மமாயிருக்கு! எனக்கு ஒரு மாலதியையும் தெரியாது. நான் வேணும்னு தான் மாலதின்னு சொன்னேன். அவளும் தான்தான் மாலதின்னு பாசாங்கு பண்றா... யாரு இப்படி என்னோட விளையாடிக்கிட்டிருக்கா?..."

"அருணோட பொண்டாட்டியே இந்தமாதிரி குறும்பு பண்றாளோ என்னவோ!" நான் சொன்னேன்.

"இல்லே, நிச்சயம் அருணோட மனைவி இல்லே, ஏன்னா, அருணோட மனைவி சொந்தக்காரங்களோட ஒருநாள் மாட்டினி ஷோவுக்குப் போயிருந்தா. அன்னிக்கும் டெலிபோன் வந்தது அருணுக்கு. இதை வெறும் தமாஷாவும் எடுத்துக்க முடியலே. தமாஷாயிருந்தா இவ்வளவு நாள் தொடராது. மேலும் அந்தப் பொண்ணோட பேச்சிலே ரொம்ப அந்தரங்கமான விஷயங்களெல்லாம் வருது... இப்படி அருண் குழம்பிக்

கிட்டிருக்கறப்ப எனக்குத்தான் தோணித்து. இது டெலிபோன் ஆபரேட்ட ரோட வேலையா இருக்குமோன்னு... ஆபீசிலே டெலிபோன் ஆபரேட்டர் ரெண்டு பேர் ஷிஃப்ட்லே வேலை பார்க்கறாங்க. ஒருத்தி கறுப்பு, பருமன்; இன்னொருத்தி சிவப்பா, சில்லுப்போல இருப்பா. இவங்கள்ளே யாரு இந்த விளையாட்டு விளையாடறது? அந்தக் கருப்பு குண்டச்சியாத்தான் இருக்கும்னு நெனைச்சேன். கடைசியிலே ஒருநாள் கையுங் களவுமாப் பிடிபட்டா குறும்புக்காரி... நாம ஒரு காரியம் செய்வோம். அவிநாஷைப் பார்க்கறதுக்கு முன்னாலே ஒரு ரவுண்டு டிரிங்க் சாப்பிட்டுப் போகலாம்..."

நாங்கள் பேசிக்கொண்டே நடந்தவாறு வெலிங்டன் தெருவிலிருந்து தாம்தலாவுக்கு வந்து சேர்ந்திருந்தோம். உடம்பு முழுதும் நனைந்து போயிருந்தோம். அவிநாஷின் ஆபீஸ் பெண்டிங்க் தெருவில். இன்னும் கொஞ்ச தூரம் நடக்க வேண்டும்.

"என்கிட்டே காசு இல்லே" என்றேன்.

"என்கிட்டே பத்து ரூபா இருக்கு. உன்கிட்ட கொஞ்சங்கூட இல்லையா? ஒரு காரியம் செய்யலாமே! அது ஏன் நமக்கு இவ்வளவு நேரம் தோணலே? நீயும் முட்டாள்! நாம அவிநாஷோட ஆபீசுக்கு எதுக்குப் போகணும்? டெலிபோன்லே அவனைக் கூப்பிட்டு இங்கே வரச் சொன்னாப் போச்சு!"

டெலிபோனில் அவிநாஷ் கிடைத்துவிட்டான். அவனை வரச் சொல்லிவிட்டு நாங்கள் ஒரு சிறிய 'பாரி'ல் நுழைந்தோம். வெயிட்டருக்கு டிப்ஸ் கொடுக்காமலிருப்பதற்காக, சுவிமல் தானே கௌன்டரிலிருந்து இரண்டு கிளாஸ் விஸ்கியும் சோடாவும் கொண்டு வந்தான். பிறகு என்னைப் பார்த்துச் சொன்னான், "ஏன் கோவிச்சுக்கறே? நான் வேணும்னு தான் நிறைய 'சோடா கலந்துக்கிட்டு வந்திருக்கேன்... இதையெல்லாம் நீ கத்துக்கணும். முதல்லே டிரிங்க் சாப்பிடறபோது நிறைய சோடா கலந்து மெதுவா சாப்பிடணும். அப்பறம் நேரம் போகப்போக எப்படி வேணும்னாலும் சாப்பிடலாம்."

விஸ்கி ஒரு மடக்கு குடித்ததுமே என் நிம்மதி கெட்டுப் போய்விட்டது. நான் சுவிமலிடம் சொன்னது பொய். என் சட்டைப் பையில் நிறையப் பணம் இருந்தது. நான் முதல்நாள் சட்டையையே போட்டுக் கொண்டு வந்திருந்தேன். நேற்று எனக்குக் கிடைத்த அவ்வளவு பணமும் இப்போது சட்டைப் பையில் இருந்தது. சுவிமலுடன் டிரிங்க் படலம் தொடங்கிவிட்டது. இது எங்கு போய் முடியும் என்று தெரியாது. இன்றைக்கு இவர்களை யெல்லாம் தவிர்க்க முடிவு செய்திருந்தேன் நான். இன்று ஒரு சாதாரண மனிதன் போல் மூன்று எளிய காரியங்கள் செய்யத் திட்ட மிட்டிருந்தேன்.

முதலாவதாக, ஆஸ்பத்திரிக்குப் போகவேண்டும். இடையிடையே ஆஸ்பத்திரிக்குப் போனால் வாழும் ஆசை வலுப்பெறுகிறது. ஆனால் நான் இன்று ஆஸ்பத்திரி போக விரும்பியது இதற்காக அல்ல. என் தாத்தா ஆஸ்பத்திரியில் இருக்கிறார். நான் அவரைப் பார்த்து எட்டு வருடங்களாகி விட்டன. கடைசி முறையாக அவரைப் பார்க்க ஆசை எனக்கு. ஆனால் அது இயலாது என்று ஒரு மடக்கு விஸ்கி குடித்ததுமே எனக்குப் புரிந்து விட்டது.

"ஏன் திடீர்னு மூஞ்சியை 'உம்'முனு வச்சிக்கிட்டிருக்கே?" சுவிமல் கேட்டான்.

"சேகரைப் பத்தித்தான் யோசிச்சுக்கிட்டிருக்கேன். எங்கே போயிட்டான் அவன்?"

"எங்கேயோ பதுங்கிக்கிட்டிருக்கான்... மிருச்சகடிகத்திலே ஒரு பாத்திரம் உண்டே, வசந்தசேனாவோட காதலன், அவன் மாதிரிதான் இந்த சேகர்... அவன் பேரென்ன?"

"சாருதத்தனா?"

"ஆமா, அவன்தான். சாருத்தத்தன் மாதிரி சேகரும் சூதாட்டத்துலே தோத்துப் போய் தன்னையே இழந்திருப்பான்..."

"ரொம்ப சூதாடறானா இப்ப?"

"அவன் ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு போதையிலே பைத்திய மாயிடறான். இப்பல்லாம் அவன் குடிக்கறதில்லே. இப்ப அவனுக்குச் சூதாட்ட வெறி. சூதாட்டத்திலே தோக்கற வெறி. ஜெயிச்சா அவனுக்கு அவ்வளவு மகிழ்ச்சியில்லே, தோக்கத் தோக்கத்தான் வெறி அதிமாகுது... சரி, சேகரை விட்டுத் தள்ளு... அந்த அருண் விஷயத்தைக் கேளு..."

"ஆமாமா... கடைசீலே நாடகம் ஆடினது ஆரு? கறுப்பு டெலிபோன் ஆபரேட்டரா, சிகப்பியா?"

"கேளு விஷயத்தை! நான் ஒருநாள் அருணோட ரூமில இருந்தபோது அந்தப் போலி மாலதியோட போன் வந்தது. கொஞ்ச நேரம் பேசிக் கிட்டிருந்துட்டு அருண் என்கிட்ட ரிசீவரைக் கொடுத்துட்டு நேரே டெலிபோன் ரூமுக்குப் போனான். நான் என் குரலைக்காட்டாம 'உம், உம்' னு மட்டும் சொல்லிக்கிட்டிருந்தேன்... போலி மாலதி கையுங்களவுமாப் பிடிபட்டா. அவ யாரு தெரியுமா? சிவப்பு அழகிதான்...! .விஷயம் என்னன்னா, அவ வெறும் வேடிக்கைக்காக இதைச் செய்யலே. அவ நிஜமாகவே அருணைக் காதலிச்சிருக்கா! பிடிபட்டதும் அவ முகம் வெளிறிப் போய்த் தலை குனிஞ்சுக்கிட்டா, அவ உடம்பு நடுங்கத் தொடங்கிருச்சு. 'என்னை மன்னிச்சுடுங்க! தயவு செஞ்சு இங்கேயிருந்து போயிடுங்க!'ன்னு கெஞ்சினா. அருண் ஒண்ணுமே பேசாமே திரும்பி வந்துட்டான். நான் போனை வச்சுக்கிட்டிருந்தபோது அந்தப் பொண்ணு சொல்றா 'என்னாலே இனியும் பொறுத்திருக்க முடியாது. அருண்! நீ என்னை உதறித் தள்ளிட்டா எனக்கு என்ன ஆகும்னு சொல்ல முடியாது!' அந்தப் பொண்ணோட குரல்லே கேலியோ விளையாட்டோ கொஞ்சங்கூட இல்லை. அதைக் கேட்டு என் உடம்பு சிலிர்த்துப் போச்சு."

"அந்தப் பொண்ணோட பேர் என்ன?"

"சாவித்திரி ஹால்தார். கிழக்கு வங்காளத்திலேருந்து அகதியாக வந்த குடும்பம். தான் வேலை பார்த்து ஒரு பெரிய குடும்பத்தைப் பரா மரிக்கறா... அவ ஒரு சாதாரண டெலிபோன் ஆபரேட்டர் டைப் இல்லே, அவகிட்டே ஒருவித நளினம் இருக்கு. அவளோட பார்வை எங்கேயோ தூரத்திலேருந்து பார்க்கற மாதிரி, அல்லது கிட்டே இருந்தாலும் ஏதோ தூரத்துப் பொருளைப் பார்க்கற மாதிரி இருக்கும்."

இன்னொரு ரவுண்டு விஸ்கிக்கு ஆர்டர் கொடு. நீ போய் கொண்டு வரவேண்டாம். வெயிட்டர் கிட்டே சொல்லு"

"இன்னும் கொஞ்சம் சோடா வேணுமா?"

"வேணாம்"

"அந்தப் பொண்ணை ஆபீசிலே இருக்கறவங்க—முக்கியமா, நடுத்தர வயது ஆபீசர்கள்—தொந்தரவு பண்ணுவாங்க. இள வயசுக் கிளார்க்குகளைப் பத்திச் சொல்லவே வேண்டாம்.. நீ இன்னிக்கு உங்க ஆபீஸ் ரிசெப்ஷனிஸ்ட் கிட்டே பண்ணினியே அந்த மாதிரி..."

"நான் ஒண்ணும் பண்ணலே, சும்மா வேடிக்கைப் பேச்சுதான்"

"அதுதான்! எல்லாருமே டெலிபோன் ஆபரேட்டர்கிட்டே கொஞ்சம் வேடிக்கை, விளையாட்டு செய்யறதுண்டு. ரகசியமா கொஞ்சம் மஜா பண்றதுக்காக... அன்னிக்கு அந்தப் பொண்ணோட டியூட்டி முடிஞ்ச சமயத்திலே நாங்க ரெண்டுபேரும் தெருவிலே காத்துக்கிட்டிருந்தோம். நான் கொஞ்சம் தள்ளி நின்னேன். அருண் மட்டும் போய் அவளோட பேசிட்டு வந்தான். பொண்ணுக்கு ஒரே வெக்கம். பேச்சே வரல்லே அவளுக்கு. 'என்னை மன்னிச்சுடுங்க, மன்னிச்சுடுங்க!'ன்னு திருப்பித் திருப்பிச் சொல்றா... எனக்கு அவளைப் பார்க்கப் பாவமா இருந்தது. அவளைக் கலியாணம் பண்ணிக்கலாம்னு தோணிச்சு..."

"நீயா? இதிலே உனக்கென்ன சம்பந்தம்?"

"நல்லாயிருக்கே நீ சொல்றது! அருணுக்குக் கலியாணம் ஆயிருச் சுன்னு அவளுக்குத் தெரியாது. அவனோட அழகான முகம்., இதமான சுபாவத்தைப் பார்த்து மயங்கிட்டா. அதுக்காக அவ வாழ்க்கையைக் கெடுத்துடலாமா? நான் அவளைக் கலியாணம் பண்ணிக்கிட்டா..."

"அந்தப் பொண்ணு காதலிக்கறது அருணை. அவ ஏன் உன்னைக் கலியாணம் பண்ணிக்கணும்? மேலும், அவ அருணைக் காதலிக்கறான்னு தெரிஞ்சுக்கிட்டு நீ அவளை எப்படிக் கலியாணம் செஞ்சுப்பே?"

"அவ அருணைக் காதலிச்சது வாஸ்தவந்தான், அதுக்காக அப்பறம் என்னைக் காதலிக்கக் கூடாதா? நானுந்தான் இதுவரை பதினேழு பொண்களைக் காதலிச்சிருக்கேன். அதுக்காக இனிமேல் வேறொரு பொண்ணைக் காதலிக்கக் கூடாதா? எனக்கு அன்னிக்கே அந்தப் பொண்ணு மேல காதல் பிறந்துடுச்சு. சாவித்திரி! இந்தப் பேரை நினைச்சாலே என் மனதை என்னவோ பண்ணுது. இதுக்குத்தானே காதல்னு பேரு?"

"இருக்கலாம்.. நீ அந்தப் பொண்ணுகிட்டே கலியாணப் பேச்சு எடுத்தியா?"

"இல்லே... அவளுக்கு என்னைத் தெரியாதே! அருண் அவளுக்கு என்னை அறிமுகப்படுத்தியிருந்தா, நான் நிபந்தனையின்றி அவகிட்டே சரணடைஞ்சிருப்பேன்.. டெலிபோன்ல கேட்ட அவளோட குரல் இன்னும் என் காதிலே ஒலிக்குது—'நீ என்ன உதறித் தள்ளிட்டா எனக்கு என்ன ஆகும்னு சொல்ல முடியாது!'.. அவ வெள்ளத்திலே மிதந்து போயிக் கிட்டிருக்கா. அவளோட மிருதுவான கைகளைப் பிடிச்சு அவளைக் காப்பாத்தித்தான் ஆகணும்னு எனக்குத் தோணிச்சு. நான் அருண்கிட்டே

எல்லாம் சொன்னேன். அவன் என்ன செஞ்சான் தெரியுமா? அவன் வைக்கப் போரிலே படுத்திருக்கற நாய் மாதிரி. அவனுக்கு என்மேல ரொம்பக் கோபம் வந்துடுச்சு. இனிமேல் அவனோட ஆபீசுக்கு நான் வரக் கூடாதுன்னுட்டான். வந்தால் தர்வானை விட்டு வெளியே தள்ளிரு வானாம்!"

"அருணைக் குத்தம் சொல்ல முடியாது. அவன் எப்படி உன்னை நம்புவான்?"

"ஏன் நம்பக்கூடாது? ஒரு நிமிஷத்திலே ஒரு மனுசனோட வாழ்க்கைப் பாதையே மாறக்கூடாதா? நான் அந்த நிமிஷத்திலே..."

"உண்மைதான். ஒரு நிமிஷத்திலே மாறலாம். ஆனா அந்த நிமிஷம் எதுன்னு கண்டுபிடிக்கறதுதான் கஷ்டம். நீ முன்னாலேயே பதினேழு தடவை..."

"அது சரிதான், ஆனா அந்த நிமிஷந்தான் சரியான சமயம்– அதுக்காக அருண் என்னை அவன் ஆபீசுக்கே வரக்கூடாதுன்னு சொல்றதா? இது ரொம்பக் கீழ்த்தரமான காரியமில்லே?"

சுவிமல் ஒரே மடக்கில் எல்லா விஸ்கியையும் குடித்துவிட்டுக் கிளாசை 'டக்' என்று மேஜைமேலே வைத்தான். அவன் உதடுகள் கோணி யிருந்ததைப் பார்த்தால் அவனுக்கு இந்தப் பானம் பிடிக்கவில்லையென்று தோன்றியது. அவன் தன் விரல்களால் தலைமுடியைக் கோதிக் கொண்டு வேண்டா வெறுப்பாகச் சொன்னான். "அடுத்த ரவுண்டு உன் செலவிலே–"

சுவிமலைப் பார்த்தால் உண்மையிலேயே அவன் மனம் புண்பட்டு விட்டதென்று தோன்றியது. எதற்காக இந்த வருத்தம்? அருண் அவனை ஆபீசுக்கு வரக் கூடாதென்றதற்கா, சாவித்திரியுடன் அறிமுகம் கிடைக்க வில்லையென்றா?

நான் சற்றுக் குரலைத் தாழ்த்திக் கொண்டு அவனைக் கேட்டேன, "சுவிமல், நீ இன்னும் எவ்வளவுதான் பகல் நேரத்திலே சிநேகிதங்களோட ஆபீசிலே போய் உக்காந்திருப்பே? இது உனக்குப் பிடிச்சிருக்கா?"

சோர்வுடன் பதில் சொன்னான் சுவிமல், "என்ன செய்வேன் சொல்லு! பகல் நேரத்திலே வீட்டிலே உக்காந்திருக்கப் பிடிக்கலே. தனியா இருந்தா என்னென்னவோ கவலைகள் வந்து மண்டையைத் தொளைக்குது. உடம்பு கெட்டுப்போகுது."

"ஆனா இந்த மாதிரி ஒவ்வொரு ஆபீசாப் போயி வம்பளந்தாப் போர் அடிக்கலே உனக்கு...? ஏதாவதொரு வேலை தேடிக்கக் கூடாதா?"

"யாரு வேலை கொடுப்பாங்க?"

"அவினாஷ்கிட்டே சொல்லி வையேன்! அவனுக்கு ரொம்பப் பேரை..."

"போடா போ! அவிநாஷ் எனக்கு வேலை வாங்கிக் கொடுத்து நான் பிழைக்கணுமாக்கும்! உனக்குத் தெரியுமா. சொந்த ஊர்ல நாங்க ஜமீந்தார். அவிநாஷோட குடும்பம் எங்க குடிகள். அவிநாஷோட அப்பா எங்க தாத்தாகிட்டே தினம் காலையிலே வந்து 'ஹி ஹி'ம்பாரு..."

"இந்தக்கதையெல்லாம் விட்டுத் தள்ளு! கிழக்கு வங்காளத்திலேருந்து வந்த ஒவ்வொருத்தனும் தான் அங்கே ஜமீந்தாராயிருந்ததாச் சொல்லிக்

கிறான். இந்த மாதிரிப் பேச்சு நிறையக் கேட்டிருக்கேன். அதை யெல்லாம் மறந்துட்டு இப்ப..."

"உனக்கு நம்பிக்கையில்லையா? உங்க சொந்த ஊர் எது?"

"நானும் கிழக்கு வங்காளத்துக்காரன்தான். என் தாத்தா திண்ணைப் பள்ளிக்கூடம் நடத்திக்கிட்டிருந்தார். நாங்க வசிச்சது குடிசையிலே. இங்கே மாடி வீட்டிலே இருக்கோம். நான் வசதியாத்தான் இருக்கேன்... அது இருக்கட்டும். உனக்கு அவிநாஷைக் கேக்க இஷ்டமில்லேன்னா வேற எங்கேயாவது வேலை தேடு..."

"நான் இதுவரையிலே நூத்தி இருபத்தி மூணு அப்ளிகேஷன் போட்டிருக்கேன். பதினேழு இண்டர்வியூவுக்குப் போயிருக்கேன். ஒரே யொரு இடத்திலேதான் வேலைக்குக் கூப்பிட்டாங்க—நூத்திப் பதினேழு ரூபா சம்பளத்திலே! அதிலேருந்து வேலைக்கு மனுப்போடறதையே நிறுத்திட்டேன்—இஞ்சினீரிங்—கிஞ்சினீரிங் படிச்சிருக்கலாம்— இந்த இலக்கியம், தத்துவம், வரலாறு இதுக்கெல்லாம் மதிப்பே இல்லே நாட்டிலே..."

"எங்கேயாவது ஸ்கூல் மாஸ்டர் வேலைக்கு முயற்சி பண்ணக் கூடாதா?"

"பட்டிக்காட்டு வேலையா? அது முடியாதப்பா என்னாலே... தவிர, சின்னப் பசங்களை மோசம் பண்ண நான் தயாரில்லே. வேற வேலை கிடைக்கலேங்கறதுக்காகப் பள்ளிக்கூட வாத்தியாராப் போறது, வகுப்பிலே உக்காந்துக்கிட்டு, மேஜை மேலே காலைப் போட்டுக்கிட்டுப் பசங்களை 'டாஃபோடில்ஸ்' கவிதையோட விளக்கத்தை எழுதச் சொல்லிட்டு ஒரு தூக்கம் போடறது—இதெல்லாம் என்னால ஆகாது. என்னால அக்கறையாப் பாடம் சொல்லித் தரவும் முடியாது. ஏமாத்தவும் பிடிக்காது. என்ன செய்யறது?"

"அக்கறையா ஏன் படிப்பு சொல்லித் தரக்கூடாது?"

"நீ ஏன் என்னைக் குறுக்கு விசாரணை செய்யறே...? இன்னொரு ரவுண்டுக்கு ஆர்டர் கொடு... அக்கா புருஷன் தயவிலே வேலை கிடைச் சிருக்கு உனக்கு. ஆபீசுக்குப் போய்ச் சும்மா ஆர்ப்பாட்டம் செய்யறதோட சரி... எல்லாராலும் எல்லாக் காரியமும் செய்ய முடியாது. என்னால பள்ளிக்கூட வாத்தியார் வேலை செய்ய முடியாது. மனுஷனுக்கு நான் கத்துத் தரவேண்டியது ஒண்ணுமில்லே... உனக்கு ஒரு நல்ல வேலை கிடைச்சிருக்கே. நீ ஏன் வேலை செய்ய மாட்டேங்கிறே?"

"நான் வேலை செய்யறதிலே. ஏன்னா செய்யறதுக்கு வேலை இல்லே. ஆபீசிலே பாக்கிப் பேர் மேஜைக்கு முன்னால உக்காந்துக்கிட்டு நாள் பூரா பைலைப் புரட்டிக்கிட்டு இருக்காங்களே, அவங்களோட வேலை உண்மையிலே ஒரு மணி நேரத்திலே செய்யக்கூடியது... நான் இதுக்கு முன்னால ஒரு சர்க்கார் ஆபீசிலே குமாஸ்தாவா இருந்தேன். அங்கேயும் வேலை இல்லே. 'ஏழிரண்டு பதினாலு, நாலு போகக் கையிலே ஒண்ணு'ன்னு பென்சிலை வச்சுக்கிட்டு நாள்பூரா உக்காந்திருக்காங்க. நீதான் பாரேன், நாடே ஸ்தம்பிச்சுக் கிடக்கு. இப்பல்லாம் உண்மையிலே ஒவ்வொரு நாளுமே 'பாரத்-பந்த்'தான். அதனால உழைக்கறதைப் பத்தி யெல்லாம் கவலைப்படாதே. ஏதாவதொரு வேலையைத் தேடிக்க. காசு

வேண்டியிருக்கே! எல்லாரும் வேலை செய்யாம சம்பளம் வாங்கறாங்க. நீ மட்டும் ஏன் வாங்கக்கூடாது?"

சுவிமல் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுச் சொன்னான். "எனக்கு வேலை-கீலை கிடைக்கப் போறதில்லே... இனிமேல் கவிதை எழுதறதை விட்டுட்டு நாவல்-கீவல் எழுத ஆரம்பிக்கலாமான்னு பார்க்கறேன்..."

நான் சிரித்துக் கொண்டு சொன்னேன், "ஆதனால உன் பிரச்னை தீர்ந்துடுமா? எவ்வளவு பேர் நாவல் எழுதறாங்க! நீ நாவல் எழுதி ரெண்டு நாளிலே பெரிய மனுஷனாயிருவியா? விமல் மித்ரா மாதிரி எழுத முடியுமா உன்னால?"

இந்த சமயத்தில் வாயிலில் அவிநாஷின் நீண்ட உருவம் தெரிந்தது. அவன் மிகவும் விலையுயர்ந்த சூட் அணிந்திருந்தான். இங்குமங்கும் தலையைத் திருப்பி எங்களைத் தேடினான். எங்களைப் பார்த்ததும் வெயிட்டருக்கு ஆர்டர் கொடுத்துவிட்டு எங்கள் மேஜையில் வந்து உட்கார்ந்தான்.

"ஏன் இவ்வளவு நேரம்?" சுவிமல் கேட்டான்.

நான் கேட்டேன், "சேகரைப் பத்தி ஏதாவது செய்தி தெரியுமா?"

"சேகருக்கு என்ன வந்தது?"

"அவன் நேத்து ராத்திரி வீடு திரும்பலே..."

"அவன் கிடக்கான். விடு! வீட்டுக்குத் திரும்பலேன்னா என்ன மோசம்? அவனுக்கு வீட்டுக்கா பஞ்சம்? சீக்கிரம் கிளம்புங்க. பாரீன் அண்ணன் வீட்டுக் கச்சேரிக்குப் போகலாம்."

"நான் பாரீன் வீட்டுக்கு வரல்லே. எனக்குப் பிடிக்கலே" சுவிமல் சொன்னான்.

"வாப்பா! அங்கே இன்னிக்கி அடிதடி நடக்கலாம்"

"அடிதடியெல்லாம் நமக்கு வேண்டாம்ப்பா"

"நான் இருக்கேன். உன்னோட சுநீல் இருப்பான். பரீட்சித்தும் வருவான். உனக்கென்ன பயம்? பாரீனை ஒரு கை பார்க்கணும் இன்னிக்கு!"

"ஆனா மொதல்லே சேகரைக் கண்டுபிடிக்கணும்" நான் சொன்னேன். "இன்னிக்கிக் காலையிலே அவனோட தம்பி வந்திருந்தான் என்கிட்டே. எங்கே போயிருப்பான்...?"

அவிநாஷ் என்னை அதட்டினான், "நீ அவனை எங்கேன்னு தேடுவே? அவன் எங்கெங்கே போறான்னு ஒரு கணக்கு இருக்கா...? பாரீன் வீட்டுக்குப் போனா அங்கே ஏதாவது தெரிஞ்சாலும் தெரியலாம்"

நாங்கள் முதலில் பாருக்குள் நுழைந்தபோது அது அநேகமாகக் காலியாயிருந்தது. இப்போது இருட்டத் தொடங்கியபின் கூட்டம் வந்து விட்டது. மூலை மேஜையில் கட்டுமஸ்தான உடல்வாகு கொண்ட இளைஞன் ஒருவன் போதையில் குழந்தைக் குரலில் பாடத் தொடங்கிவிட்டான். பாட்டின் இடையிடையே அவன் கத்தினான். "பஞ்சாப் சிங்கம்! என் அப்பன் யாரு தெரியுமா? பஞ்சாப் சிங்கம்! இந்துஸ்தானத்து வானம்பாடி! என் அப்பன்தான் கே.எல். சைகால். சிங்கத்தோட குட்டி சிங்கக் குட்டி....!" பிறகு அவனிடமிருந்து ஒரு உறுமல் ஒலி வந்தது...

எனக்கு அவனைத் தெரியும். இன்னும் சிறிது நேரத்தில் இந்த 'பாரி'ன் வெயிட்டர்கள் அந்தச் சிங்கக் குட்டியை நரியைப் போல் தள்ளிக் கொண்டுபோய் வெளியில் தள்ளி விடுவார்கள்.

பாரின் இன்னொரு பக்கத்திலிருந்து ஒரு கிளாஸ் டம்ளர் உடையும் ஒலி வந்தது. கூடவே 'ஹோஹோ' என்று சிரிப்பு...)

(வெளியில் மழை நின்று விட்டது. எனினும் காற்றில் நுண்ணிய நீர்த் துளிகள் மிதந்து வந்தன. ஏதோ ஊர்வலமாம். டிராம்கள், பஸ்கள் எல்லாம் அசையாமல் நின்று கொண்டிருந்தன. டாக்சியும் கிடைக்காது இப்போது. ஈர ரஸ்தாவில் நனைந்த ஆடைகளுடன் ஊர்வலம் போய்க் கொண்டிருந் தவர்கள் கோபமாக ஏதேதோ கோஷங்கள் போட்டுக் கொண்டிருந்தனர். 'வியட்நாம்' என்ற பெயர் காதில் விழுந்தது.

குழந்தைப் பருவத்திலிருந்தே எனக்கு ஊர்வலம் பார்க்கப் பிடிக்கும். எல்லா ஊர்வலங்களிலும் ஊர்வலம் போகும் ஜனங்கள் ஒரே மாதிரியாகத் தானிருக்கிறார்கள். பேண்ட் அணிந்தவர்கள் மூன்று பேர். அவர்களுக்குப் பிறகு வேஷ்டியணிந்த இருவர். குட்டையாக ஒருவன் வரிசையைச் சரிப்படுத்திக் கொண்டு ஓட்டமும் நடையுமாக வருவான். அவனுக்குப் பின் மார்பு இல்லாத பெண்கள் சிலர், பைஜாமாவும் காவி நிற ஜிப்பாவும் அணிந்துகொண்டு எண்ணெய்படாத தலைமுடியுடன் இருவர். பின்னால் இன்னும் மூன்று பேண்ட் பேர் வழிகள்.... எல்லா ஊர்வலங்களிலும் இதே மாதிரிதான். அவர்களுடைய முகங்களும் ஒரே மாதிரிதான் இருக்கும். கோஷம் மட்டும் வியட்நாமுக்குப் பதிலாக 'உணவு வேண்டும்!' என்று மாறும். பூஜா போனஸ் கிளர்ச்சி, பஞ்சப்படி உயர்த்தக் கிளர்ச்சி, 'ஆட் குறைப்பு கூடாது', 'காஷ்மீரை விடமாட்டோம்', 'டி.ஐ.ஆரை வாபஸ் வாங்கு' எல்லா ஊர்வலங்களிலும் இதே வரிசைதான். இதே முகங்கள்தான். இதை நன்றாகக் கவனித்திருக்கிறேன். ஊர்வலம் போகும் மனிதர்கள் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள் என்று எனக்குத் தோன்றும்; காரணம், அவர்களுக்குச் சில கோரிக்கைகள் இருக்கின்றன. பத்துக் கோரிக்கைகள் வெளியிட்டால் ஒன்றிரண்டாவது கிடைக்கும் என்ற நம்பிக்கை இருக்கிறது அவர்களுக்கு. எனக்குக் கோரிக்கையெதுவுமில்லை. ஆகையால் நான் சாலையோரத்தில் நின்று கொண்டு ஊர்வலத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.)

சுவிமல் சொன்னான், "இருங்க. நான் இன்னிக்கான நல்ல காரியத்தைச் செஞ்சுட்டு வரேன்."

"அது என்னப்பா?" அவிநாஷ் கேட்டான்.

"தினம் ஒரு நல்ல காரியமாவது செய்யறதுன்னு தீர்மானம் பண்ணி யிருக்கேன். இதனாலே மனசு தூய்மையா இருக்கு."

(சுவிமல் ஒரு நடுவயது மனிதனிடம் போய், "வாங்க" என்றான். அந்த மனிதன் திரும்பிப் பார்த்தான். அவன் குருடன். அவன் கையில் ஒரு வெள்ளைத்தடி.

சுவிமல் அவனிடம் சொன்னான், "நீங்க ரோடைக் கடக்கணுமா? இந்த ஊர்வலம் ரொம்பப் பெரிசு. முடிய வெகு நேரமாகும். நான் உங்களை அந்தப் பக்கத்துக்குக் கூட்டிக்கிட்டுப் போறேன்."

"ஆமா. எனக்கு அவசரந்தான். நேரமானா ரயிலைப் பிடிக்க முடியாது" அந்த மனிதன் சொன்னான்.

குருடர்களும் தன்னந்தனியே ரயிலில் பிரயாணம் செய்கிறார்கள் என்பது எனக்கு அப்போதுதான் தெரிந்தது.

சுவிமல் அவனுடைய கையைப் பிடித்து ஊர்வலத்தின் ஆத்திரம் நிறைந்த கோஷங்களுக்கிடையே அவனைச் சாலையின் மறுபுறத்தில் கொண்டுபோய் விட்டான்.

நாங்கள் மூவரும் சௌரிங்கியில் நடக்கத் தொடங்கினோம். சிறிது நேரம் மௌனம். பிறகு சுவிமல் அவிநாஷைக் கேட்டான். "பாரீன் அண்ணனோட உனக்கென்ன சண்டை?"

அவிநாஷ் ஆத்திரத்தோடு சொன்னான், "அவன் ஒரு பிசாசு. சுடு காட்டுக்கிட்டே தொழில் பண்றவன்தானே! நேத்து விளையாடறபோது..."

நான் வேறு ஏதோ நினைவில் ஆழ்ந்துவிட்டேன். அவர்களுடைய உரையாடலைக் கேட்கவில்லை. என் உடல் குறுகுறுத்தது. போதை ஏற்பட வில்லைதான். ஆனால் மூளைக்குள் ரத்தம் ஏறியிருந்தது. காலடியொலி பலமாகக் கேட்டது. நாக்கு உலர்ந்து போயிருந்தது. இந்த மாலை நேரத்தை வேறுவிதமாகக் கழிக்கத் திட்டமிட்டிருந்தேன். முதலில் ஆஸ்பத்திரிக்குப் போய்த் தாத்தாவைப் பார்க்க எண்ணம். தாத்தா இனி பிழைக்கமாட்டார். அவரை நான் பார்த்து எட்டு வருடங்களாகி விட்டன. தாத்தாவின் நினைவு வந்தாலே அவரது எழுபத்தோரு வயதுத் தோற்றம் மனக் கண்ணில் தோன்றுகிறது. நெடிய உடல், மார்பு நிறைய நரைமயிர். அவர் கறுப்பு. தலைமுடி பெரும்பாலும் கறுப்பாயிருக்க, மார்பு மட்டும் முற்றிலும் நரைத்து விட்டது.

'தாத்தா' என்றால் என் சிறு பருவம். நான் அவருடன் பெர்ஹாம் பூரில் வசித்தபோது அவர் சொல்வார், "சம்ஸ்கிருதம், கணக்கு இது ரெண்டையும் நல்லாப் படி. இது ரெண்டும் நல்லாத் தெரிஞ்சுட்டா வாழ்க்கை சம்பந்தமாக குழப்பம் ஏற்படாது. உலகம் ஒரு பயங்கர விஷயமாத் தோணாது. தெரியாத விஷயங்கள் நம்ம அறிவுக்கு எட்டாதுன்னு நினைக்காம அவற்றுக்குள்ளே நுழைஞ்சு புரிஞ்சுக்கத் தோணும்... தெரிஞ்சுதா...?"

நான் சமஸ்கிருதம், கணக்கு இரண்டையுமே சரியாகக் கற்றுக் கொள்ளவில்லை. அதனால்தான் எனக்கு இவ்வளவு குழப்பமோ?

தாத்தா இனி பிழைக்க மாட்டார். அவரைப் பார்த்து எட்டு வருடங் களாகி விட்டன. இளமைப் பருவத்தை எட்டிவிட்ட நான் என் சிறு பிராயத்து இலட்சிய மனிதரான தாத்தாவை ஒருமுறை பார்த்து விட வேண்டும் என்று ஆசைப்பட்டேன். அவரை இப்போது ஒருமுறை பார்க்காவிட்டால் அவரைப் பற்றிய என் நினைவு முழுமையாகாது என்று நினைத்தேன் நான்.

ஆனால் இன்று அவரைப் பார்க்கப் போக முடியாது. இனி பார்க்க முடியாமா? நேற்று அக்கா சொன்னதைப் பார்த்தால் வெகுநாள் பிழைத் திருக்க மாட்டார் என்று தோன்றுகிறது. அவர் ஒரு மருந்துப் பைத்தியம். பலவித மருந்துவப் பத்திரிகைகளைப் படித்துவிட்டுத் தனக்குத்தானே

சிகிச்சை செய்துகொள்வார். சாதாரண ஜலதோஷம், இருமலுக்குக்கூட மருந்து சாப்பிடுவார். பிறரையும் சாப்பிடச் செய்வார். அவர் இதயத் தாக்குதலால் நினைவிழந்து மருத்துவமனையில் பல நாட்கள் இருந்தபின் இப்போது இரண்டு மூன்று நாட்களுக்கு முன்புதான் நினைவு வந்திருக்கிறது. மருத்துவமனையிலும் மருந்து சாப்பிடும் நேரம் தவறினால் பொறுக்க மாட்டார். மேஜைமேல் இருக்கும் பாக்கெட் வாட்சைக் காட்டி நர்சை மெல்ல அதட்டுவார். "இப்ப மணி ஏழு மூணு. நீ மூணு நிமிஷம் தாமதம் பண்ணிட்டே...!. உன் பொறுப்பு ரொம்பப் பெரிசு. பிறருக்கு சேவை செய்யற பொறுப்பு... மனஷனோட வாழ்க்கையிலே நேரம் ரொம்ப விலை யுயர்ந்ததாக்கும்...!"

நேற்று மாலையில் பெரிய அக்காவும் மற்றவர்களும் மருத்துவ மனைக்குப் போயிருந்தபோது தாத்தா தூங்கிக் கொண்டிருந்தாராம். அவருடைய முகம் தெளிவாயிருந்ததாம். அதனால் அவர் உடல்நிலை திருந்தி வீடு திரும்பிவிடுவார் என்று அவர்கள் நம்பினார்கள். நர்ஸ் சரியான நேரத்தில் கையில் மருந்துடன் அவரை எழுப்பிவிட்டபோது அவர் கண் விழித்துச் சற்று நேரம் பைத்தியம் போல் பார்த்துக் கொண்டிருந்தாராம். பிறகு படுக்கையில் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு கைகூப்பி ஒரு புது மாதிரியான குரலில் நர்ஸிடம் சொன்னாராம்., "அம்மா, இனிமேல் எனக்கு மருந்து கொடுக்க வேண்டாம். நான் வீட்டுக்குப் போறேன். என்னை மன்னிச்சுடு!"

இதைக் கேட்டு எல்லாருக்கும் ஆச்சரியம். அவர்கள் எவ்வளவோ கேட்டுக் கொண்டும் அவர் மருந்து சாப்பிட இணங்கவில்லை. மீண்டும் மீண்டும் குழந்தை மாதிரி "நான் வீட்டுக்குப் போறேன். வீட்டுக்குப் போறேன்!" என்று சொல்லிக் கொண்டிருந்தார். அவருக்குள்ளிருந்து வேறு யாரோ பேசுவது போலிருந்ததாம்.

இந்த இடத்தில் 'வீடு' என்றால் சாவா? தாத்தாவைப் பார்த்து இதைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்...

நடந்து கொண்டே நாங்கள் வந்து சேர்ந்த இடத்துக்கு அருகில்தான் மருத்துவமனை. ஆனால் இப்போது என்னால் அங்குபோக முடியாது. இப்போது என் நாக்கு காய்ந்திருக்கிறது. மண்டையில் குறுகுறுப்பு. காலடி யொலி பலமாகக் கேட்கிறது... தாத்தா, நீ இன்னும் ஒரு நாளாவது பிழைச்சிரு. நான் உன்னைப் பார்த்தாகணும். நான் நாளைக்கு உன்னைப் பார்க்க வாரேன்...

"ஒரு டாக்சி பிடிப்பா. என்னாலே இனிமேல நடக்க முடியாது" என்று நான் அவிநாஷிடம் சொன்னேன். அவர்களிருவரும் பேச்சில் மும்முரமாக இருந்தார்கள். சுவிமல் சொன்னான், "அப்படி யொண்ணும் ரொம்ப நேரம் ஆயிடல்லே. காளிகாட்டுக்கு நடந்தே போயிரலாம்."

வானத்தைப் பார்த்தால் ஏழரை மணிக்கு மேலாகியிருக்காதென்று தோன்றியது. பேண்ட சட்டை உடம்பிலேயே பாதி உலர்ந்து போயிருந்தன. என்னிடம் சிகரெட் இல்லை. வெற்றிலை பாக்குக்கடை வாசலில் நின்று கொண்டு கண்ணாடியில் என் முகத்தைப் பார்த்துக் கொண்டேன். குறைவாகக் குடித்தாலும் என் கண்கள் சிவந்து விடுகின்றன.

பவானிபூர் அருகில் சாலையைக் கடக்க நின்று கொண்டிருந்தேன். சாலையின் மறுபுறத்தில் நாலைந்து இளம் பெண்கள் பேசிக் கொண்டு நிற்பதைப் பார்த்தேன். பெண்களென்றால் அவர்களை ஒரு தடவை பார்க்கத்தான் வேண்டும்; அப்படி அவர்களை சாதாரணமாகப் பார்த்தேன். பிறகு சாலையின் இந்தப் பக்கம் பின்னலையாட்டிக் கொண்டு போய்க் கொண்டிருந்த இரண்டு பெண்களைப் பார்த்துவிட்டு மறுபடியும் சாலையின் மறுபக்கம் பார்வையைத் திருப்பினேன். அவர்களைப் பார்த்த போது மனதில் ஏதோ பொறி தட்டியது. பிறகு பார்வையைத் திருப்பி அங்கே போய்க் கொண்டிருந்த பஸ்ஸின் ஜன்னலோரத்தில் மஞ்சள் புடவையணிந்த ஒரு பருமனான பெண்மணி உட்கார்ந்திருப்பதைப் பார்த்தேன். அதே சமயத்தில் சல்வார் அணிந்த இரண்டு பஞ்சாபிக் குமரிகள் என்னைக் கடந்து போய்க் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய வாட்ட சாட்டமான உடலையும் பார்க்காமலிருக்க முடியவில்லை. அதன் பிறகு மறுபடியும் சாலையின் மறுபுறம் பார்வையைத் தவழ விட்டேன். ஐந்து பெண்கள்-வயது பதினைந்து-பதினாறு இருக்கும். கைகளை ஆட்டிக் கொண்டு கலகலவென்று பேசிக் கொண்டிருக்கிறார்கள். நான் அவர்களை ஒவ்வொருவராகப் பார்த்தபோது ஏதோ ஒன்று என் நினைவுக்கு வருவது போலிருந்தது. நினைவுக்குள் அலாரம் கடிகாரத்தின் 'கிணுகிணு' ஒலி...



அந்தப் பெண்களில் சிவப்புப் புடைவையணிந்தவளை இரண்டு மூன்று முறை பார்த்தபோது, இரண்டு வருடங்களுக்கு முன்பு அவளைப் பார்த்தது ஞாபகம் வந்தது. ஒரு கல்யாண வீட்டில் நிறைய வெளிச்சத்தில், நிறைய ஜனங்களுக்கு நடுவில் அவளைப் பார்த்திருக்கிறேன். அவள் பெயர் யமுனா. அவளது தோற்றம் இன்னும் நினைவில் அப்படியே இருக்கிறது. கலியாண வீட்டில் ஆட்கள் இங்குமங்கும் பரபரப்பாக நடமாடிக் கொண்டிருக்கிறார்கள்; ஷெனாய் வாத்திய ஒலியுடன் சேர்ந்து கொண்டு வேறு பல ஒலிகளின் கதம்பச் சத்தம்; பொருத்தமில்லாத பளபள உடைகளில் ஏராளமான அவலட்சணப் பெண்கள்—இவற்றுக் கிடையே நான் யமுனாவைப் பார்த்தேன். அவள் அப்போது சிறுமிதான். மாடியின் மேற்படியில் நின்றுகொண்டு கீழே நடமாடும் மனிதர்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் வெள்ளை கவுன் அணிந்திருந்தாள். அவளது ஒற்றை நாடி உடம்பு ஆரோக்கியமாகத் திகழ்ந்தது. அவளது கண்களில் வியப்புணர்வு பிரதிபலித்ததது. அவளுடைய வயது, அன்னம் போன்ற உடல், தேவதையின் முகச்சாயல், பளீர் வெள்ளை கவுன், கண்களில் வியப்பு-இவையெல்லாம் சேர்ந்து அவள் எனக்கு எளிமையின் உருவகமாகக் காட்சியளித்தாள். அவளது உடம்பு விழித்துக் கொள்ளும் இந்தப் பருவத்தில் அவளுக்கு உலகமே அழகாகத் தோன்றுகிறது. உலகத்தில் இந்த அழகு மலர்வதைத்தான் அவள் பார்த்து அனுபவித்துக் கொண்டிருந்தாள் போலும்! அழகிகளை நிறையவே பார்த்திருக்கிறேன் நான்-சிலரை அருகிலிருந்து, சிலரைத் தூரத்திலிருந்து, சிலரை ஒப்பனை

அலங்காரங்களுடன், சிலரை ஒப்பனை எதுவுமின்றி. ஏன், இந்த கல்யாண வீட்டில்கூட அழகிகள் இருந்தார்கள்? அவர்களுடைய உடலழகே முக்கியமாகக் கண்ணில்பட்டது. எத்தனையோ அழகிகளுடன் பேசி மகிழ்ந்திருக்கிறேன். நெருங்கி உறவாடியிருக்கிறேன். ஆனால் அந்த நிமிடத்தில் எளிமைக்காக ஏங்கத் தொடங்கிவிட்டேன் நான். அந்தப் பெண்ணைக் கையால் தொட்டுப் பார்த்து அவளது எளிமை என் கையில் ஒட்டுகிறதா என்று பார்க்கத் தோன்றியது எனக்கு. வியப்புகள் நிறைந்த வாழ்க்கையின் புனிதம் அந்த எளிமையில் குடி கொண்டிருந்தது.

(அவள் அப்படியொன்றும் பிரமாத அழகியல்ல. அந்தப் பருவத்தில் எல்லாப் பெண்களுமே ஒருவகையில் அழகாகத் தானிருப்பார்கள். மற்ற பெண்களிடமிருந்து அவளை வேறுபடுத்திக் காட்டும்படியான அழகு அவளிடமில்லை. அவள் நல்ல சிவப்பில்லை. நீல உறை பொருத்திய மேஜை விளக்கின் ஒளியின் நிறம்தான் அவளது உடம்பின் நிறம். அவளை நான் முன்பே பார்த்திருக்கிறேன். ஆனால் அன்று நான் கண்ட தோற்றம் வழிபாட்டுக்குரிய தேவதையின் தோற்றம்.

நான் அவளை "குழந்தை! நீ ஒரு பூ எடுத்துக்கறியா?" என்று கேட்டேன்.

"நான் ஒண்ணும் குழந்தையில்லே. என் பேரு யமுனா. என்னைத் தெரியல்லியா உங்களுக்கு? நான் வருணோட தங்கை." என்று அவள் சொன்னாள்.)



இப்போது அவள் சிவப்புப் புடைவை உடுத்தியிருந்தாள். அவளது முகத்தில் இன்னும் அதே புனித எளிமை. அருவியின் நீர்போல் மினு மினுக்கும் உடம்புடன் நின்று கொண்டிருந்தாள் அவள்.

நான் என் நண்பர்களிடம் சொன்னேன், "நீங்க போயிக்கிட்டு இருங்க. நான் பின்னாலே வர்ரேன்")

"ஏன்?" அவிநாஷ் கேட்டான்.

"பெரியக்காவுக்கு ஒரு மருந்து வாங்கணும். இப்போ வாங்கலேன்னா, அப்பறம் முடியாது."

"வாங்கிட்டு வாயேன். நாங்க நின்னுக்கிட்டு இருக்கோம்..."

"இல்லேயில்லே. மருந்து மிக்ஸர். அது கலந்து தரக் கொஞ்ச நேரமாகும். நீங்க போங்களேன். நான் பின்னாலே வரேன்."

"சரி வா. அவன் பின்னாலே வரட்டும்" என்று சுவிமல் அவிநாஷிடம் சொன்னான்.

அவிநாஷ் என்னருகில் வந்து கேட்டான். "நிச்சயம் வருவியா? இல்லே, நழுவிடலாம்னு பார்க்கறியா?"

("சேச்சே, நிச்சயம் வருவேன். பதினஞ்சு இருபது நிமிஷத்திலே நான் பாரீன் வீட்டுக்கு வந்து சேர்ந்துடறேன்" என்று அவிநாஷிடம் சொல்லிவிட்டு நான் எதிரிலிருந்த ஒரு மருந்துக் கடைக்குள் நுழைந்தேன்.

கௌண்டருக்குப் பின்னாலிருந்தவன் பார்வையாலேயே கேட்டான். "என்ன வேணும்?" என்று.

"ஒரு டெலிபோன் பண்ணணும். அவசரம்!"

ரிசீவரை எடுத்தபோது என் கை நடுங்குவதைக் கவனித்தேன். ஏன் என்று எனக்கே புரியவில்லை. வேண்டுமென்றே டயலில் ஐந்து எண்களை மட்டும் சுழற்றினேன். ஆகையால் வெகுநேரம் 'என்கேஜ்டு' ஒலிதான் கேட்டது. உதட்டைப் பிதுக்கியவாறு ரிசீவரை வைத்துவிட்டு மருந்துக் கடையை விட்டு வெளியே வந்து உண்மையிலேயே சுவிமலும் அவிநாஷும் போய்விட்டார்களா என்று பார்த்துக் கொண்டேன்.

ஆனால் இப்போது எதிர்சாரியில் அந்தப் பெண்களைக் காணோம். இந்த இரண்டு நிமிடங்களுக்குள் எங்கே மாயமாய் மறைந்து விட்டார்கள்? அல்லது நான்தான் அவர்களைக் கற்பனை செய்து கொண்டிருந்தேனோ? உண்மையில் நான் யமுனாவைப் பார்க்கவே இல்லையோ?

சட்டென்று என் உடம்பில் சூடேறியது. ரத்தம் தலைக்குப் பாய்ந்தது. நான் சாலையைச் சுட்டெரிப்பது போல் விழித்துப் பார்த்து எனக்குள் சொல்லிக் கொண்டேன், "யமுனாவைக் கொண்டுவா உடனே! இல்லாவிட்டால் விபரீதம் நிகழ்ந்துவிடும்! நான் டிராம் பாதையைப் பெயர்த்து விடுவேன். தந்திக் கம்பங்களைப் பிடுங்கி எறிவேன். சாலை நடுவில் நெருப்பு மூட்டிவிடுவேன்! யமுனா எங்கே? அவளை உடனே கொண்டு வந்து கொடு...!"

நான் இங்குமங்கும் திரும்பிப் பார்த்தேன். சட்டென்று அவள் கண்ணில் பட்டாள். யாரோ அவளைக் காணாமற் போகச் செய்துவிட்டு இப்போது மறுபடியும் கொண்டு வந்தது போல். அவள் சற்றுத் தொலைவில் பஸ் நிறுத்தத்தில் நின்று கொண்டிருந்தாள். என் உடம்பின் விறைப்பு கொஞ்சம் கொஞ்சமாகத் தளர்ந்தது. முகம் இளகியது. வெகுநேரம் மூச்சையடக்கி வைத்திருந்தவன் போல் நீண்ட மூச்சு விட்டேன்.

சப்தம் செய்யாமல் யமுனாவுக்கருகில் போய், "என்ன எப்படி இருக்கே?" என்று கேட்டேன்.

அவள் திடுக்கிட்டுத் திரும்பினாள். "அட, சுநீல் அண்ணாவா? நீங்க எங்கே இந்தப் பக்கம்...?"

"நீ இங்கே எப்படி வந்தே? இங்கேதான் இருக்கீங்களா இப்ப?"

"இல்லே, நாங்க லேக் பிளேசிலே இருக்கோம். இங்கே பாட்டுக் கிளாசுக்கு வரேன். அதோ அதுதான் எங்க பாட்டு ஸ்கூல்..."

"நீ புடவை கட்டிக்க ஆரம்பிச்சுட்டே... அதனால் தான் முதல்லே உன்னை அடையளம் தெரியலே..."

"நான் ரொம்ப நாளாப் புடைவை கட்டிக்கறேனே! நீங்க பார்க்கல்லே போலேயிருக்கு..."

"உன்னைக் கடைசியாப் பார்த்தது புலுவோட கலியாணத்திலே. அன்னிக்கு நீ பளீர் வெள்ளை நிறக் கவுன் போட்டுக்கிட்டிருந்தே..."

"பொய், பொய்...! புலு சித்தி கலியாணத்திலே நான் கவுன் போட்டுக்கிட்டு இருக்கலே. அப்பவே நான் புடைவை கட்டிக்க ஆரம்பிச் சுட்டேன். கொஞ்சநாள் முந்திதானே அந்தக் கலியாணம்..."

"கொஞ்சநாள் இல்லே, இரண்டு வருஷம். அப்போ நீ..."

"நான் புலு சித்தி கலியாணத்திலே ரோஸ் கலர் மூர்ஷிதாபாத் பட்டுப்புடைவை கட்டிக்கிட்டிருந்தேன்..."

"அது பௌபாத் அன்னிக்கு இருக்கலாம். கலியாணத்தன்னிக்கு நீ கவுன்தான் போட்டுக்கிட்டிருந்தே. எனக்கு நல்லா ஞாபகமிருக்கு."

"உங்களுக்கு ஒண்ணும் ஞாபகமிருக்கறதில்லே. நீங்க சொல்றது மூணு வருஷம் முன்னாலே நரேஷ் அண்ணா கலியாணத்திலே. போன வருஷம் ஜூன்லேதான் புலு சித்திக்குக் கலியாணம். அந்தக் கலியாணத் துக்கு நீங்க வரவேயில்லே... புடைவை விஷயம் நிச்சயம் பொண்களுக்கு ஞாபகமிருக்கும்..."

"அடேயப்பா! புடைவை கட்டிக்கிட்டாப் பெரிய 'பொண்' ஆயிட்டதா நினைப்போ? நீ இன்னும் குழந்தைதான்!"

"இல்லவேயில்லே!"

"சரி. அப்படியே வச்சுக்குவோம்... நீ என்னை எப்படி அடையாளம் கண்டுபிடிச்சே?"

"ஏன் கண்டுபிடிக்க முடியாது...? ஆனா நீங்க ரொம்ப மாறித்தான் போயிட்டீங்க. முன்னேயெல்லாம் பார்க்கறதுக்கு ரொம்ப நல்லாயிருப்பீங்க. நெசமாத்தான்!"

"பாரு. நீ இன்னும் குழந்தையாத்தான் இருக்கேன்னு உன் பேச்சிலே ருந்தே தெரியுது. வயது வந்த பொண்ணு யாராவது ஒரு ஆண்பிள்ளை கிட்டே 'நீங்க பார்க்க நல்லாயிருக்கீங்க'ன்னு நேரடியாச் சொல்லுவாளா? சொல்லுவதாயிருந்தால், கொஞ்சம் சுத்தி வளைச்சுச் சொல்லுவா..."

கணீரென்று சிரித்தாள் யமுனா. அந்தச் சிரிப்பில் நெருடல் சற்றுமில்லை. அவளது உடல் முழுவதிலுமிருந்து எழுந்தாற் போன்ற சிரிப்பு அது. "நீங்க இப்போ நல்லா இருக்கீங்கன்னு நான் சொல்லலியே! இப்போ நீங்க ரொம்ப மோசமா..."

"மோசம்னா, எப்படி?"

"கருத்துப் போயிட்டீங்க. ஷேவ் பண்ணிக்கலே. பேண்ட் சட்டையெல்லாம் என்னவோ மாதிரி..."

"மழையிலே நனைஞ்சதாலே அப்படி. நாளைக்குப் பாரு. கம்ப்ளீட்டா மாறிப் போயிருப்பேன். நாளைக்குப் பாரேன்!"

"நீங்க ஏன் இவ்வளவு இரைஞ்சு பேசுறீங்க?"

நான் திடுக்கிட்டுக் கேட்டேன். "இரைஞ்சு பேசறனா? உனக்கு சங்கடமாயிருக்கா?"

யமுனா தன் விசாலமான கருவிழிகளை என் பக்கம் திருப்பிச் சொன்னாள், "இல்லே, நீங்க முந்தியெல்லாம் இவ்வளவு உரக்கப் பேச மாட்டீங்களே! உங்க கண் சிவந்திருக்கு. உங்களுக்கு உடம்பு சரியில்லையா?"

"இல்லையில்லே. என் கண்ணிலே தூசி விழுந்துருச்சு. அதுதான் கண்ணு சிவந்து போச்சு... நீ பஸ்ஸிலே ஏறிக்கப் போறியா? காளிகாட் வரையிலே நாம் நடந்தே போகலாமே! அப்பறம் பஸ்ஸிலே ஏறிக்கோயேன்!"

"சரி... நீங்க ஏன் எங்க வீட்டுக்கு வரதில்லே...? இன்னிக்கு வரீங்களா...?"

"ஊஹூம். இன்னிக்கு இல்லே. இன்னொரு நாள் வரேன்... உன் அண்ணா வருண் அமெரிக்காவிலேருந்து வந்துட்டானா?"

"நவம்பர் மாசம் வருவான். அவன்கிட்டே எனக்கு ஒரு டேப் ரிகார்டர் வாங்கிட்டு வரச் சொல்லியிருக்கேன்..."

சிவப்புப் புடைவை, சிவப்பு ரவிக்கை, சிவப்பு நிறச் செருபபு, இவற்றில் யமுனாவின் மாசு மருவற்ற, இளம் உடல், இவ்வளவு சிவப்பு இருந்தாலும் அதில் நெருப்பின் தீவிரப் பளபளப்பு இல்லை. இதுதான் உண்மை அழகு. இதைப் பார்த்தால் மனதில் பணிவு பிறக்கிறது. "யமுனா, நீ நிசமாவே அழகு!" என்று சொல்லி அவள் காலில் விழுந்து கும்பிடத் தோன்றியது எனக்கு. அவளிடமிருந்த அழகு கும்பிடத்தக்கதுதான். ஆனால் அப்படிச் செய்ய முடியாது. செய்தால் மற்றவர்கள் என்னைப் பைத்தியம் அல்லது குடிகாரன் என்று நினைப்பார்கள்.

நான் அவளுடன் நடந்து கொண்டே சொன்னேன். "உன்னைத் திடீர்னு பார்த்ததிலே எனக்கு ரொம்ப சந்தோஷமாயிருக்கு யமுனா!"

"வீட்டுக்கு வாங்களேன்! அப்படியென்ன தலைபோற வேலை உங்களுக்கு?"

"இல்லே. இன்னிக்கு முடியாது. அதுக்கு முன்னாலே நான் உன்னை உன் பாட்டு ஸ்கூலுக்கு முன்னாலே சந்திக்கறேன்."

"பாட்டு ஸ்கூலுக்கு முன்னாலயா? ஏன்?"

"சும்மாத்தான்! இன்னிக்கு உன்னை அங்கே பார்த்து சந்தோஷமா யிருந்ததில்லியா? அதே மாதிரி இன்னொரு நாளும் பார்த்தா சந்தோஷமா யிருக்கும். நீ இப்போ என்ன பாட்டு கத்துக்கறே-'பாத்தார் பேலா பாஸாயியா?"

"அட, இதெல்லாம் உங்களுக்கு எப்படித் தெரியும்...? ஆனால் அது முதல் கிளாசுக்கு. நான் படிக்கறது ரெண்டாம் கிளாசிலே..."

"அப்படியா? அப்படீன்னா, நீ இப்போ கத்துக்கற பாட்டு 'சிராவண், தூமி பாத்தாஸே கார் ஆபாஸ் மேலே'தானே?"

யமுனா உடல் முழுவதுமாகச் சிரித்தாள். "இதெல்லாம் எப்படித் தெரிஞ்சுது உங்களுக்கு? நீங்களும் பாட்டுக் கத்துக்கிட்டீங்களா?"

"அதெல்லாமில்லே. எங்க பக்கத்து வீட்டுப் பொண்ணு பாட்டு ஸ்கூல்லே ரவீந்திர சங்கீத் கத்துக்கிட்டு வந்து தினம் காலையிலே ஆர்மோனியத்தை வச்சுக்கிட்டுப் பாடுவா. இல்லே கத்துவா. அதனாலே எந்தப் பாட்டுக்கப்பறம் எந்தப்பாட்டு கத்துக் கொடுப்பாங்கன்னு எனக்கு மனப் பாடம் ஆயிருச்சு."

"நல்லதுதான். உங்களுக்கும் பாட்டு வந்துருச்சே!"

ஆகா, என்ன தூய்மையான முகம்! அதில் அப்பழுக்கு இல்லை. புனிதமான அக்கண்களில் தயக்கம் சற்றுமில்லை. புருவங்கள் நல்ல கறுப்பு. அப்போதுதான் மரத்திலிருந்து பறித்த ஆப்பிள் அல்லது கொய்யாப் பழம் ஒன்றைக் கையில் வைத்துக் கொண்டால் எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்குமோ அவ்வளவு மகிழ்ச்சியாக இருந்தது எனக்கு. யமுனாவின் களங்கமற்ற முகத்தைப் பார்த்து பூமியில் சிறந்த எல்லா வற்றையும் அவள் முகத்தில் காண்பதாக எனக்குத் தோன்றியது. குற்றமற்ற உடலமைப்பு, அதில் எங்கிலும் மிகையோ குறையோ இல்லை—ஒரு குதிரைக்குட்டி அல்லது ஒரு பருந்தின் உடலின் ஒவ்வோர் உறுப்பும் ஒருவகை ஒழுங்குடன், பொருத்தமாக அமைந்திருக்குமே அதுபோல். ஒரு விமானம் ஆகாயத்தில் பறக்கும் போது காணப்படும் நேர்த்தி அவளிடமிருந்தது'. மிருதுவான

கழுத்துக் கீழே அப்போதுதான் மலர்ந்து கொண்டிருந்த மார்பகம். அவள் தன் பாட்டு நோட்டை மார்பகத்துக்கருகில் வைத்துக் கொண்டிருக்கிறாள். நான் எங்கேயோ கேள்விப்பட்டிருக்கிறேன்- இளமையின் வருகையை அறிவித்து ஒலியெழுப்பும் பொருளுக்குத்தான் 'ஸ்தனம்' என்ற பெயர் என்று. நான் யமுனாவின் முகத்தையும் மார்பகத்தையும் பார்க்கும்போது இளமை விழித்தெழும் ஒலியைக் கேட்கிறேன். நடைபாதையிலேயே அவள் காலில் விழுந்து கும்பிடத் துடிக்கிறேன் நான். ஆனால் அது முடியாதே.

"உன்னோட பாட்டு வகுப்பு என்னென்னிக்கு?"

"செவ்வாயும் வியாழனும்... ஆறிலேருந்து எட்டுமணி வரையிலே. நீங்க பாட்டுக் கத்துக்கப் போறீங்களா...? கத்துக்கங்களேன்! உங்க மாதிரி ரொம்பப் பேர் கத்துக்கறாங்க..."

"சீ, சீ... அதுக்காக இல்லே... நான்தான் சில சமயம் இந்தப் பக்கம் வரேனே...! என்னிக்காவது இந்த மாதிரி சந்திக்கலாம்னுதான். இன்னிக்கு உன்னைப் பார்த்ததிலே ரொம்ப சந்தோஷம்."

"அம்மாகிட்டே சொல்றேன் உங்களைப் பார்த்தேன்னு. எப்போ வருவீங்க எங்க வீட்டுக்கு...?"

"வரேன், வரேன்... அடே, உன் பஸ் வந்துடுச்சு. ஏறிக்கோ, ஏறிக்கோ. இல்லாட்டி வீட்டிலே கவலைப்படுவாங்க. உனக்கு வழி தவறிப் போச்சோன்னு..."

"என்ன அசட்டுத்தனமாப் பேசறீங்க! நான் தனியா எவ்வளவு இடத்துக்குப் போயிட்டு வரேன்!"

"புரியுது புரியுது நீ பெரியவளாயிட்டேன்னு. இப்போ பஸ்ஸிலே ஏறு!"

யமுனா பஸ்ஸில் ஏறிக்கொண்டாள். பிறகு திரும்பி என்னைப் பார்த்துச் சிரித்தாள். அவள் அணிந்திருந்த உடையின் சிவப்பு அவளது சிரிப்பிலும் பிரதிபலித்தது. பஸ் புறப்பட்டபோது அவள் தன் கணீர்க் குரலில் "நிச்சயம் வரணும்!" என்று உரக்கக் கூறியது 'சுத்த தைவத' இசையாக ஒலித்தது எனக்கு.

யமுனா இன்னும் 'பெண்' ஆகவில்லை. குழந்தையாகத் தானிருக்கிறாள் வயது வந்த எந்தப் பெண்ணும் பஸ்ஸில் ஏறிக்கொண்டபின் இந்த மாதிரி சாலையில் நிற்கும் ஆண் மகனுடன் உரக்கப் பேசமாட்டாள். மரபு இதை அனுமதிக்காது.

★ ★ ★

காளிகாட் பஜாருக்கு மேலே ஓர் அறை எடுத்துக் கொண்டு வசிக்கிறான் பாரீன். அவனுடன் எங்களுக்கு எப்படிப் பழக்கம் ஏற்பட்டதென்பது இப்போது எனக்கு நினைவில்லை. அவனுடைய அறைக்கு சினிமா நடிகர்கள், கால்பந்து வீரர்கள் பலர் வருவதைப் பார்த்திருக்கிறேன். அந்த அறையில் காசு வைத்துச் சீட்டாடி எவ்வளவோ இரவுகளைக் கழித்திருக்கிறேன். சிலசமயம் சூதாட்டத்தில் எல்லாவற்றையும் இழந்திருக்கிறேன். அப்போதெல்லாம் காலையில் பாரீன் எனக்கு வேக வைத்த

முட்டையும் டீயும் கொடுத்து வீடு திரும்பப் பஸ் சார்ஜும் கொடுத் திருக்கிறான். பாரீன் முரடன்தான். ஆனால் முற்றிலும் சுயநலக்காரனல்ல. சூதாடும் போது ஒரு பைசாகூட விட்டுக் கொடுக்கமாட்டான். ஆனால் மற்ற சமயங்களில் கடன் கேட்டால் உடனே கொடுப்பான். திருப்பிக் கேட்கவும் மாட்டான். அவன் குட்டை. ஆனால் கட்டுமஸ்தான உடல்வாகு. கைகளிரண்டும் உலக்கை போலிருக்கும். குட்டையாக வெட்டப்பட்ட தலைமுடி. முகத்தைப் பார்த்தால் நேப்பாளி மாதிரி இருக்கும். அவனுடைய முகபாவத்திலிருந்து உணர்ச்சிகளை ஊகிக்க இயலாது. அவன் கேதவ் வடாதலா சுடுகாட்டுக்கருகில் ஒரு பூக்கடை வைத்திருக்கிறான். பகல் நேரத்தில் அங்கே உட்கார்ந்திருப்பான். ஆனால் இந்தப் பூக்கடையிலிருந்து அவனுக்கு அதிக வருமானம் இல்லை. அவனுடைய் வருமானத்தில் பெரும்பகுதி இரவு நேரச் சூதாட்டத்தில்தான். அது மட்டுமல்ல. அவனிடம் நாலைந்து குடிவகைகளும் இருக்கும். காசு கொடுத்து வாங்கிக் குடிக்கலாம். ஆனால் அவனுக்குத் தன் பூக்கடையின் மேல் நிறையப் பாசம். அவனுக்கு யாரையாவது ரொம்பப் பிடித்து விட்டால் அவன் சொல்லுவான். "நீ செத்துப் போனால், உன் பிணத்துக்குத் தேவையான எல்லாப் பூவும் நான் இலவசமாத் தரேன்!"

நான் பாரீனின் அறைக்குள் நுழைந்தபோது அங்கே நல்ல கூட்டம். நுழைந்ததுமே நான் இங்குமங்கும் திரும்பிப் பார்த்தேன். சேகர் இருக் கிறானா என்று. இல்லை. கட்டிலின்மேல் சூதாட்டம் நடந்து கொண்டிருந்தது- பாரீன், அவிநாஷ், தாபஸ், எனக்குப் பரிச்சயமில்லாத இன்னொருவன். நூருலும் சுவிமலும் ஜன்னலுக்கருகில் உட்கார்ந்திருந்தார்கள். ஒரு புறத்தில் பரீட்சித் கால்களை நீட்டிக் கொண்டு படுத்துக் கிடந்தான். அவன் படுத் திருக்கும் தோரணையைப் பார்த்தால் இரவு முழுதும் அப்படியே படுத் திருப்பான் போலிருந்தது.

"பாரீன் அண்ணா, சேகரைப் பத்தி ஏதாவது தெரியுமா?" நான் கேட்டேன்.

"இல்லேப்பா. பதினஞ்சு நாளா அவன் இங்கே வர்றதில்லே. இனிமேல் வரமாட்டேன்னு சொல்லிட்டுப் போயிட்டான்."

"வரமாட்டானா? ஏன்?"

"அவங்களுக்கெல்லாம் என்ன விளையாடத் தெரியும்? போனமாசம் அவன் சேர்ந்தாப்பலே நாலு நாள் ஜெயிச்சான். சுமார் 500 ரூபா. அதுக்கப் பறம் ஒரு நாள் சுமார் 600 ரூபா தோத்துட்டான். அப்பறம் சொல்றான். அவன் வேணும்னுதான் தோத்தானாம்! அவனுக்கு விளையாட்டிலே நாட்டமில்லே. அவன் மாதிரி ஆளுங்களை வச்சுக்கிட்டு விளையாட முடியாது... விளையாட்டிலே கில்லாடி அவிநாஷ் மித்திர்தான்...!"

"அவினாஷா? அவனோட நேத்திக்கு நீ சண்டை போட்டியாமே?"

அவிநாஷ் ஒன்றும் பேசாமல் சீட்டுக்களைக் கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தான்.

பாரீன் ஹோ ஹோவென்று சிரித்துக் கொண்டு சொன்னான். "நேத்திக்கு அவிநாஷ் நிறையப் பணம் ஜெயிச்சுட்டான். அதிலே கொஞ்சம் சூடாயிட்டான்... நானும் இருபது வருஷமா சூதாடிக்கிட்டிருக்கேன். நான்

பார்த்துட்டேன்-தோத்துப் போற சூதாடியை விட ஜெயிக்கற சூதாடிக்குத் தான் அதிகம் சூடேறுது... புது 'டீல்' போடப் போறேன். நீ வர்ரியா?"

"இல்லே. நான் வரலே..."

"சுநீல். வாப்பா. ஒருமணி நேரம் விளையாடலாம். வா."தாபஸ் கூப்பிட்டான்.

"இல்லேப்பா. நீங்க விளையாடுங்க."

"ஏன்? காசில்லையா?"

"அதுக்காக இல்லே. எனக்கு இன்னிக்கு 'மூடு' இல்லே. நீங்க விளையாடுங்க. நான் சேகரைத் தேடிக்கிட்டு வந்தேன். உங்களிலே யாருக்குமே சேகர் எங்கேயிருக்கான்னு தெரியாதா? அப்படீன்னாக் கவலைக்குரிய விஷயந்தான்..."

"சேகர் ரொம்ப சுயநலக்காரன். அவன் யாருக்காகவும் கவலைப் படறதில்லே. நாம மட்டும் ஏன் அவனுக்காகக் கவலைப்படணும்?"

"அவன் நேத்திக்கு வீடு திரும்பலே. எங்கே தொலைஞ்சு போயிட்டான்? தேடிப் பார்க்க வேண்டாமா?"

அவிநாஷ் சற்றுத் தடுமாறும் குரலில் சொன்னான், "நாமதான் தொலைஞ்சு போயிட்டோம்னு நினைச்சுக்க. அவன் நம்மளைத் தேடட்டுமே!"

"அவனைப் பார்த்தாத்தானே தேடச் சொல்லலாம்!"

"வீணா வீட்டிலே தேடிப் பாத்தியா? அந்த ராஸ்கல் நிச்சயம் அங்கே தான் இருப்பான்."

"வீணா வீட்டிலேயா? இப்பல்லாம் அவன் அங்கே போறதில்லேன்னு கேள்விப்பட்டேனே! தவிர அங்கே போயிருந்தாலும் மறுநாள் வீடு திரும்பி வரமாட்டானா?"

"அடிதடி பண்ணியிருப்பான். அல்லது அவனைக் கட்டிப் போட்டு வச்சிருக்கலாம். யாரு கண்டாங்க? நீ அங்கே போய்ப்பாரு. நிச்சயம் இருப்பான்!"

நான் சற்று எழுந்து கொண்டே சொன்னேன். "எனக்கு மட்டும் என்ன வந்தது? நான் மட்டும் தனியா அவனைத் தேடணுமா?"

அவிநாஷ் பல்லைக் கடித்துக் கொண்டு இகழ்ச்சியாகச் சொன்னான், "அப்படீன்னா ஏன் இங்கே வந்து சேகரைப் பத்திப் பேசிக்கிட்டிருக்கே...? விளையாடறதுன்னா விளையாடு. இல்லேன்னா இடத்தைக் காலி பண்ணு!"

"சீட்டுப் போடறேன். உக்கார்றியா ரெண்டு ரவுண்டு?" பாரீன் கேட்டான்.

"இல்லே. நீங்க விளையாடுங்க. நான் பார்த்துக்கிட்டிருக்கேன். போர்டு எவ்வளவு காசு?"

"சின்ன போர்டு தான்-பத்துப் பைசா, இருபது பைசா."

"லிமிட் என்ன?"

"பன்னெண்டு ரூபா. ரெண்டு பேராயிட்டா லிமிட் கிடையாது."

பாரீன் சீட்டுக்களைப் பிரித்துப் போட்டுக் கொண்டே சொன்னான், "உம் உம். போர்டுக் காசு கொடுங்க... தொடங்குங்க!"

தாபஸ் முதலிலேயே சீட்டை எடுத்துப் பார்த்து விட்டு உதட்டைப்

பிதுக்கிக் கொண்டு "பேக்" என்றான். எனக்குப் பரிச்சயமில்லாத மனிதன் ஒரு ரூபாயை எடுத்து வைத்துப் "பத்து" என்று சொன்னான். பிறகு அவிநாஷ் "பத்து" என்று சொல்ல, பாரீனும் "பத்து" என்றான். பிறகு மூவரும் மறுபடி "பத்து, பத்து, பத்து... பத்து, பத்து, பத்து..."

இந்தச் சமயத்தில் ஹீராலால் ஒரு கிளாஸ் டம்ளரில் சோடா கலந்த ரம் கொண்டு வந்து, "சுநீல் பாபு, இதை வாங்கிக்கிட்டு மூணு ரூவா பதினஞ்சு பைசா கொடுங்க" என்றான்.

"இதென்ன? யார் கேட்டாங்க? நான் கேக்கலியே!"

"குடிக்க மாட்டீங்களா?"

"ஆமா... தவிர, நான் விஸ்கி குடிச்சிட்டுதான் வந்திருக்கேன்."

"விஸ்கி தீர்ந்து போயிருச்சு... ரம்மும் ஜின்னுந்தான் இருக்கு... உள்ளூர்ச் சரக்கு இருக்கு. குடிக்கறீங்களா?"

"வேண்டாம். எனக்கு இன்னிக்கு எதுவும் வேண்டாம்... நீ இதை எடுத்துக்கிட்டுப் போயிடு!"

"நான் கலந்துட்டேனே...! நீங்க குடிக்காட்டி வேறே யாராவது குடிப்பாங்க... எனக்குக் காசை மட்டும் குடுத்துடுங்க..."

பாரீனின் இந்த வேலைக்காரனை எனக்குப் பிடிக்கவே பிடிக்காது. முரட்டுத்தனமாகத்தான் பேசுவான். அவனை இரண்டு அறை அறைந்து விடலாமா என்று எனக்குச் சில சமயம் தோன்றும். ஆனால் அந்த முரடனை விரோதித்துக் கொள்ளத் தைரியமில்லை எனக்கு. ஒன்றும் பேசாமல் காசைக் கொடுத்துவிட்டு டம்ளரை வாங்கிக் கொண்டேன். ஒரு மிடறு குடித்ததும் ஏண்டா குடித்தோம் என்று தோன்றியது. நான் ஹீராலாலிடம் சொன்னேன், "என்னப்பா இது, வெறும் ஸ்பிரிட்டு...! காசும் கூட வாங்கிக்கிட்டு மட்டச் சரக்கைக் கலக்கிறியே!"

"என்ன சொல்றீங்க? நான் அசல் 'அஞ்சு வருஷம்' கொடுத்திருக் கேனாக்கும்...! நீங்க பழைய ஆளு..."

பாரீன் என்னைச் சமாதானப் படுத்தும் குரலில் சொன்னான். "நிசமாகவே இந்த ஹீராலால் ரொம்ப மோசம்! சில சமயம் அவன் எனக்குக் கொடுக்கறதே பாடாவதியாயிருக்கும்-மட்டச் சரக்கு கலந்தாப்படிலே. என்ன ஹீரு? எனக்கு ஒரு கிளாஸ் கொடு!"

நான் இன்னொரு மிடறு குடித்தேன். உண்மையிலேயே படு மட்டம். "நான் இதை குடிக்கப் போறதில்லே. கொட்டிடப் போறேன்" என்று சொன்னேன்.

அவிநாஷ் கையை நீட்டினான். "கொட்டாதே. என்கிட்டே கொடு."

அவன் டம்ளரிலிருந்த பானத்தை ஒரே மூச்சில குடித்து விட்டு இடது புறங்கையால் உதடுகளைத் துடைத்துக் கொண்டான். அவன் நெற்றியில் வியர்வை. தலைமுடி விறைத்துக் கொண்டு நின்றது. மூக்கு நுனி பளபளத்தது.

அவன் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு "பிளைண்ட் ஒரு ரூவா ஹிட் சம்மதமா?" என்றான்.

பாரீன் புன்சிரிப்புடன் "சம்மதம்" என்று சொன்னான்.

வேறு எதுவும் பேசாமல் மௌனமாயிருந்த வேற்று மனிதனும் சீரியஸான குரலில் "சம்மதம்" என்றான்.

ஜன்னலருகில் சுவிமலும் நூருலும் பேசாமல் உட்கார்ந்திருந்தார்கள். நூருல் ஒரு சிகரெட்டைக் கையில் வைத்து அதை இரு விரல்களால் நசுக்கிக் கொண்டிருந்தான். பிறகு நெருப்புக் குச்சியால் அதன் உட்புறத்தைக் குடைந்து புகையிலைத்தூளை வெளியேற்றிவிட்டு, வேறு ஏதோ பொடியை அதற்குள் திணித்தான். பிறகு என்னைக் கேட்டான். "என்ன சுநீல் பாபு, 'பெரிய' புகையிலை ஒரு இழுப்பு இழுக்கிறீங்களா?"

"வேணாம்பா. நான் கஞ்சா குடிக்கறதை விட்டுட்டேன்."

நூருல் இதைக்கேட்டுச் சற்றுச் சிரித்தான். அவனுடைய சிரிப்பு ரொம்ப இனிமை. பிறகு தலையைக் குனிந்து கொண்டு சொன்னான். 'எல்லாருந்தான் சொல்றாங்க, 'விட்டுட்டேன்'னு... ஆனால் விடறதுக்கு எப்போ உங்களைத் தகுதியாக்கிக்கிட்டீங்க? நல்ல முறையிலே பழக்கம் ஏற்படுத்திக்கிட்ட பிறகுதானே அதை விடத் தகுதி வரும்? உபநிஷத்திலே என்ன சொல்லியிருக்கு தெரியுமா? இன்பந்தரும் பொருள்களை முழுவதும் துய்த்தால்தான் அவற்றின் உண்மைத்தன்மை புரியும். அதன் பிறகுதான் பற்றுக்கள் விலகும். ஆகையாலே எதையும் முதல்லே அனுபவிக்கணும். அப்பறம் விடணும். அதில்லாமே, 'நான் இதைச் சாப்பிடமாட்டேன், அதைத் தொடமாட்டேன், இன்னொண்ணைச் செய்யமாட்டேன்'னு சொல்லிக்கிட்டிருந்தா ஆத்மா எப்படித் தூய்மையாகும்? வாழ்க்கை என்பது ஒரு சாதனை. நாம அந்த சாதனையை முழு மனதோடே நிறை வேத்துவோம். எல்லாப் பொருள்களையும் பரிசோதித்துப் பார்ப்போம்– நீங்க கஞ்சாவை விட்டுட்டதாச் சொல்றீங்களே. கஞ்சாங்கறது என்னன்னு தெரியுமா உங்களுக்கு?"

நூருல் ஒவ்வொரு வார்த்தையையும் அழுத்தமாக உச்சரித்தான். அவனுடைய பேச்சைக் கேட்டு நான் சிரித்தேன்.

சுவிமல் சொன்னான், "ஆனால் சுநீல் ஒரு காலத்திலே நிறையக் கஞ்சா குடிச்சிருக்கான். இப்போ இவன் எலும்புந் தோலுமா இருக்கான். மூஞ்சி மாங்கா வத்தல் மாதிரி வதங்கியிருக்கு. ஆனால் ஒரு சமயம் கொழு கொழுன்னு சேப்பாயிருந்தான் பஞ்சாபி முள்ளங்கி மாதிரி. கஞ்சா குடிச்சுக் குடிச்சுத்தான் இவனுக்கு இந்த நிலைமை வந்திருக்கு. இவன் கண்ணுக்குக் கீழே கறுப்பு வளையம் தெரியுதே அது ஏன் தெரியுமா? மாஃப்பியா இஞ்செக்‌ஷன் போட்டுக்கிட்டதாலே. தலைக்கு நடுவிலே வழுக்கை விழுந்ததுக்கு காரணம்..."

நான் சிரித்துக் கொண்டு சொன்னேன், "நிறுத்து. நிறுத்து! நான் ஒண்ணும் அவ்வளவு போதை பழகலே. என் மூஞ்சியும் அவ்வளவு மோசமாயில்லே– இன்னிக்குக் கூட ஒரு பெண் என் அழகைப் புகழ்ந்தாளாக்கும்!"

சுவிமல் சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு கேட்டான், "நீ இன்னிக்கு எந்தப் பொண்ணை, எங்கே பார்த்தே? நான்தான் நாள் முழுக்க உன்னோடேயே இருந்தேனே!"

"காலம்பற... "

சுவிமல் குழம்பிய கண்களுடன் கத்தினான், "காலம்பறவா? ஏண்டா, உனக்கு இப்பல்லாம் காலை வேளையிலேயே பொண்ணு கிடைக்குதா?

என்ன விஷயம்? எனக்கு ஒண்ணும் புரியலியே! காலை வேளையிலேயே பொண்களை எப்படி சந்திக்கிறே?"

நான் நூருலைக் கேட்டேன், "சுவிமல் நிறையக் கஞ்சா குடிச்சுட்டானா?"

நூருல் முன் போலவே இனிமையான புன்சிரிப்புடன் சொன்னான், "ரொம்ப இல்லே. ஆனா இதிலேயே போதை ஏறிடுச்சு... நீங்க ஒரு ரூவா கொடுக்கறீங்களா?"

"இல்லே. எனக்கு வேணாம். நீங்க குடிங்க. சாராயம் குடிச்சுட்டுக் கஞ்சா சாப்பிட்டா எனக்கு ஒத்துக்காது. நான் கஞ்சா கொஞ்சம் கொஞ்சம் ருசி பார்த்திருக்கேன். அதோட உண்மை சொரூபத்தைப் புரிஞ்சுக் கிட்டேனா இல்லையா தெரியாது... ஆனால் அதிலே எனக்கு ஒரு கவர்ச்சி ஏற்படலே- இதுகள்ளே ஏதாவது என் வாழ்க்கையை முன்னேறச் செய்யும்னு தோணலே..."

"இன்னிக்கு ஒரு இழுப்பு இழுத்துப் பாரேன்... வாழ்க்கையே மாறிப் போயிடுமாக்கும்!" சுவிமல் கரகரத்த குரலில் கூறினான்.

"கஞ்சா குடிச்சு சொப்பனம் காண வேண்டிய தேவை இன்னிக்கு எனக்கு இல்லே. எனக்கு வேறே சொப்பனம் கிடைச்சிடுச்சு."

நூருலின் முகத்தில் மறுபடியும் சோகம் படர்ந்தது. அவன் வருத்தத் துடன் சொன்னான், "நீங்க மறுபடியும் தவறாகப் பேசறீங்க. சொப்பனம் காண்றதுக்குக் கஞ்சா குடிப்பானேன்? கஞ்சாவுக்காவே கஞ்சா குடிக்கணும். ஒரு பொண்ணுகிட்டேப் போறதுன்னா அவளுக்காகவே போகணும்- அவகிட்டே ஒரு தெய்வத்தன்மையையோ, இயற்கையழகையோ அனுப விக்கறதுக்காக இல்லே. ஒரு அழகை இன்னொரு வகையான அழகா மாத்த வேண்டிய அவசியமில்லே. ஒவ்வொரு பொருளுக்கும் அதுக்கே உரிய ஒரு அழகு இருக்கு... அதை இன்னொரு பொருளோடே ஒப்பிடாமே, இன்னொரு பொருளோட தன்மையை அதுலே ஏத்தி வைக்காமே, அதையே அதன் வேர் வரையிலே ருசிச்சு அனுபவிக்கணும்... மகரிஷி ஆரணி, சுவேத கேதுவுக்குச் சொன்னாரே..."

சுவிமல் திடீரென்று மயக்கத்திலிருந்து விழித்துக்கொண்டு ஒரு அதட்டல் போட்டான், "என்ன இம்சை! இந்தத் துலுக்க ராஸ்கல் இப்பல்லாம் வார்த்தைக்கு வார்த்தை சமஸ்கிருதத்தை எடுத்து வீசறானே..! ஏய் நூருல்...! நீ முசல்மான். நீ எதுக்கு இவ்வளவு சமஸ்கிருதம் சொல்றே? ஒரு நாள் பல் உடைஞ்சு போயிரும், சொல்லிட்டேன். இனிமேல் விட்டுடு!"

"நீ வறட்டுப் பாப்பான். வாயை மூடு!" நூருல் சொன்னான். "பச்சரிசியும் வாழைக்காயும் தின்னு தின்னு உன் ரத்தமும் பல்லி மாதிரி வெள்ளையாயிடுச்சு. பெரிய இந்து மாதிரி ஜம்பம் பேசறே! நானும் சுநீல் பாபுவும் ஞானத்தைப் பத்தி ஆராய்ச்சி பண்ணிக்கிட்டிருக்கோம். முட்டாப் பய நீ ஏன் இதிலே குறுக்கே வரே?"

சுவிமல் கண்களை உருட்டிக் கொண்டு சொன்னான், "இரு இரு. ஒரு நாள் உன் வயித்தைக் கத்தியாலே கிழிச்சுடறேன்- கொடு, சிகரெட்டைக் கொடு இன்னொரு இழுப்பு இழுக்கறேன்."

நூருல் சிகரெட்டை அவன் பக்கம் நீட்டியவாறு தாழ்ந்த குரலில் சொன்னான், "ஒரு நாள் இதிலே கஞ்சாவுக்குப் பதிலா விஷத்தை வச்சுக் குடுக்றேன், பாரு!"

சுவிமல் கையை மூடிக் கொண்டு சிகரெட்டை விரலிடுக்கில் சொருகி ஒரு நீண்ட இழுப்பு இழுத்தான் கண்களை மூடியவாறு. பிறகு புகையை வெளியே விடாமல் வாயை மூடியவாறே கிசுகிசுத்தான். "அப்படியே செஞ்சுடு, நான் பிழைச்சுப் போறேன். நானே விஷம் சாப்பிடத் துணிவில்லே எனக்கு. நீ கொடுத்தா அப்படியே முழுங்கிடறேன். விஷம் சாப்பிட்டு நானும் சாவேன். உன்னையும் தூக்கிலே தொங்க வைப்பேன்-காரியம் முடிஞ்சுது!"

நான் நூருலிடம் சொன்னேன், "நீ சொல்றது சரிதான் ஆனா ஒரு பொருளை இன்னொரு பொருளாக கற்பனை பண்ணிக்காமே வாழறது ரொம்பக் கஷ்டம். அதுக்கு ரொம்ப முயற்சி பண்ணணும்னு நினைக்கிறேன். ஆதிகாலத்திலே மனிதன் ஏதோ ஒரு சின்னத்தைப் பூஜை பண்ணிக் கிட்டிருந்தான். சூரியனைக் கடவுள்னு நினைச்சான். மரத்தைத் தேவதைன்னு நினைச்சான். அந்த வழக்கம் இன்னும் தொடருது. இப்பவும் நதியைப் பார்த்தா ஒரு பொண்ணு நடனமாடற மாதிரி தோணுது. பொண்ணைப் பார்த்தா ஆறாகத் தோணுது. வெய்யிலைப் பார்த்தா ஈட்டி முனைன்னு தோணுது, ஈட்டி முனையைப் பார்த்தா வெய்யிலாலே பண்ணின மாதிரி இருக்கு. இந்த மாதிரி நாம் ஒண்ணை இன்னொண்ணோட ஒப்பிட்டுப் பார்த்துக்கிட்டே இருக்கறதால எந்தப் பொருளோட உண்மையான தன்மையையும் கண்டுபிடிக்க முடியலே. ஒரு பொருளோட வேரைக் கண்டுபிடிக்கறது எப்படி? நம்ம கண்தான் அதுலேருந்து வழுக்கிக்கிட்டு போயிடுது. அதிலே வேறே ஒரு பொருளோட நிழல் வந்து விழுந்துடுது..."

"இதுக்காகத்தான் நமக்கு முதல்லே நம்மளைப் பத்தி ஒரு தெளிவான அறிவு ஏற்படணும். நாம நம்மளையே தவறாப் புரிஞ்சுக்கக் கூடாது. நம்மைப் பிறரோட ஒப்பிட்டுப் பார்க்கக் கூடாது. நாம நம்மளை வரலாற்றிலேருந்து தனிமைப்படுத்திக்கிட்டு ஆராய்ஞ்சால் மத்த பொருள்களோட வேர் வரையிலே போக நமக்கு ஒரு வழி கிடைக்கும். பழத்தை விண்டு பார்த்தா விதை இருக்கு. விதையை உடைச்சுப் பார்த்தா உள்ளே ஒண்ணுமே இல்லே. வெங்காயம் அல்லது முட்டைக் கோசை உரிச்சுக்கிட்டே போனா கடைசில ஒண்ணும் இருக்காது. இந்தப் பிரபஞ்சத்திலே நமக்கு ஒண்ணையும் சரியாத் தெரியாததாலே எல்லாத்தையும் தனித்தனியாப் பார்க்கறோம் நாம..."

"எல்லாத்தையும் பார்க்கணும்னா ஏதாவதொரு நிலையான மையத்தை வச்சுக்கணுமே! அந்த மையம் எது? அன்பா?"

"அன்புதான்! ஆனால் யாரை அன்பு செய்யறது— தன்னையேவா அல்லது ஒரு பொண்ணையா? தன்னையே நேசிக்கிறதைச் சரியா உணர முடியாது. அது காத்து மாதிரி. தண்ணியோட நிறம் மாதிரி. பஞ்சு விதை போற போக்கு மாதிரி. அந்த அன்பு வேறே எதோடயாவது மோதணும், அந்த வேறொண்ணு பெண்பிள்ளையா இருந்தா நல்லது. பெண் கல்லாலான் தேவதை மாதிரி. அவ அசையமாட்டா. உணர்ச்சி வசப்பட மாட்டா-அவகிட்டதான் திரும்பத் திரும்ப நம்மை வெளிப்படுத்திக்க ஆசை ஏற்படுது. அந்த வெளிப்பாடுங்கறது அவளோடே படுத்துக்கிட்டுப் பிள்ளை உண்டாக்கறதா இருக்கலாம். அல்லது கோவிலுக்குப் போய்

ரகசியமாப் பிரார்த்தனை பண்றதா இருக்கலாம். இந்தக் கருத்து இப்பத்தான் எனக்குத் தோணிச்சு. இதுக்கு முன்னாலே தோணலே..."

நூருல் சிரித்து விட்டான். "என்ன இது, கஞ்சா குடிக்காமலேயே இப்படியெல்லாம் தோணுதா?"

நானும் சிரித்துக் கொண்டே சொன்னேன், "இதெல்லாம் கஞ்சா குடிச்சவனோட உளறல்னு சொல்றியா? அப்படியும் இருக்கலாம். ஆனால் நான் முழு மூச்சோட கஞ்சா குடிச்சுக்கிட்டிருந்த காலத்திலே இந்த மாதிரி யோசனை எதுவும் தோணினதில்லே. உடம்பு வலிக்கும். தொண்டை வறண்டு போகும். கண்ணுக்குக் கலர் கலரா ஏதாவது தெரியும்— எங்கே கொடு. கஞ்சா ஒரு இழுப்பு இழுத்துப் பார்க்கறேன்..."

அநேகமாக தீர்ந்து போயிருந்த சிகரெட்டை நூருல் என்னிடம் நீட்டினான். நான் அதில் இரண்டு இழுப்பு நீளமாக இழுத்து இருமினேன். அதில் கஞ்சா அதிகமில்லை. புகையிலைதான் மிஞ்சியிருந்தது.

"இதிலே ஒண்ணுமில்லே" என்று சொன்னேன்.

"இன்னும் ஒண்ணு தயார் பண்ணிக் கொடுக்கவா?"

சீட்டாட்ட மேஜையிலிருந்து ஒரே சத்தம். தாபஸின் குரல்தான் பலமாகக் கேட்டது. "ட்ரையோவா? மோசடி... வெறும் மோசடி!"

"மோசடியா?" பாரீனின் குரலில் கடுமை.

தாபஸ் மென்று விழுங்கிக் கொண்டு சொன்னான், "இல்லே, நீ மோசடி பண்றேன்னு சொல்லலே. இது கடவுளோட மோசடி. இந்தச் சீட்டு எனக்குக் கிடைச்சிருக்கலாமே...! நான் வேற சீட்டை வச்சிக்கிட்டு உக்காந்திருக்கேன்... இனிமேல் விளையாடலே நான். என் காசெல்லாம் தீர்ந்து போச்சு... நான் வீட்டுக்குக் கிளம்பறேன்."

அவிநாஷ் சொன்னான், "அட உக்காருப்பா! இப்பத்தான் ஆட்டம் சூடு பிடிச்சிருக்கு... ஹீராலால், எனக்கு ஒரு கிளாஸ் கொடு!"

தாபஸ் எழுந்து விட்டான். "இல்லப்பா. நீங்க விளையாடுங்க, நான் போறேன்."

"இப்பவேயா?"

"ஆமா... இன்னும் நேரமானா சாயா அழத் தொடங்கிடுவா. பாவம். தனியா இருக்கா-பதினொண்ணரை மணி ஆயிடுச்சு..."

(வேற்று மனிதன் தன் ஷூ நாடாவைக் கட்டிக் கொண்டான். பிறகு அவனும் எழுந்து கொண்டு, "நானும் கிளம்பறேன், நாளைக்கு வரேன்" என்று சொன்னான். பிறகு அவனும் தாபஸும் வேறு பேச்சின்றி அங்கிருந்து போய்விட்டார்கள்.

அந்த வேற்றாள் மர்ம மனிதன்தான். சீட்டாட்டத்திலேயே கருத்தா யிருந்தான். வேறு வார்த்தை பேசவில்லை. அறையிலிருந்த மற்றவர்களைப் பற்றி ஒரு அக்கறையும் காட்டவில்லை.

நான் கண் ஜாடையால் அவிநாஷைக் கேட்டேன் அவன் யாரென்று.

அவிநாஷ் சொன்னான், "யார் கண்டாங்க? தாபஸ் எங்கேயிருந்தோ சீட்டாட்டத்துக்கு ஆள் பிடிச்சுக்கிட்டு வந்திருக்கான்.")

(பாரீன் காசை எண்ணிக் கொண்டே "விளையாட்டு இனிமேல் கிடையாதா?" என்று கேட்டான்.

அவிநாஷ் ஒரே மடக்கில் பானத்தைக் குடித்து விட்டு, "நிச்சயம் உண்டு. நானும் நீயும் கொஞ்சநேரம் விளையாடுவோம்" என்றான்.

"அவிநாஷ், நான் வீட்டுக்குக் கிளம்பறேன். எனக்கு ஒண்ணும் பிடிக்கலே" என்று சொன்னேன்.

"இல்லே இல்லே. போகாதே! ப்ளீஸ்... இன்னும் கொஞ்ச நேரம் விளையாடிட்டு..."

"இல்லே, ரொம்ப நேரமாச்சு. இப்போ வீட்டுக்குப் போகலேன்னா..."

அவிநாஷின் குரல் போதையால் குழறியது. கேட்கப் பரிதாபமாக இருந்தது. "நீங்க எல்லாரும் ஏன் இப்படி 'வீடு வீடு'ன்னு தவிக்கிறீங்க? பிடிக்கவேயில்லை எனக்கு! தினமும் வீடு திரும்பறது, அங்கே அம்பது வருஷப் பழசான வெண்கலத் தட்டிலே சோறு திங்கறது, பாட்டியோட கலியாணத்திலே சீர் கொடுத்த கட்டில்லே படுக்கை! ஹூம்! எனக்கு சகிக்கலே! காலையிலே ஷேவிங், ஆபீஸ், அப்பறம் வீடு, அம்மா-கிம்மா, அத்தை-சித்தி உறவுக்கூட்டம்... சீ...! பாரீன், சீட்டைப் பிரிச்சுப் போடு... உன்னாலதான் பிழைச்சிருக்கேன். இங்கே வந்தால் கொஞ்சம் மனசுக்கு தெம்பாயிருக்கு..."

"அவிநாஷ் நீ விளையாடு. சுவிமல் இருக்கான். நான் போறேன்..."

அவிநாஷ் நிமிர்ந்து உட்கார்ந்து என் கையைக் 'கப்'பென்று பிடித்துக் கொண்டு, கெஞ்சும் குரலில் சொன்னான், "உன் கால்லே விழறேன். போகாதே...! இன்னும் கொஞ்ச நேரத்திலே கிளம்பிடலாம்... ஆனால் வீட்டுக்கு இல்லே. உன்னை ஒரு இடத்துக்கு கூட்டிக்கிட்டுப் போறோன். பாரு...!"

அந்தப் பக்கம் சுவிமல் நூருலுடன் ஏதோ பேசிக்கொண்டிருந்தான். நன்றாகப் போதை ஏறியிருந்தது அவனுக்கு.

பாரீன் ஆளுக்கு மூன்று சீட்டுகள் பிரித்துப் போட்டான். நான் அவர்களுடைய சீட்டுக்களைப் பார்க்க முடியாதபடி தள்ளி உட்கார்ந்து கொண்டேன்.

அவிநாஷ் கத்தினான், "இல்லேயில்லே! போனதடவை உனக்கு 'ட்ரையோ' கிடைச்சுது, இந்தத் தடவை நாலு சீட்டு!"

பாரீன் சிரித்துக் கொண்டே சொன்னான், "உனக்கு ஞாபகம் இருக்கே!"

"பாரீன் அண்ணே, இப்போ நாம் ரெண்டு பேர்தானே! கூடக் காசு வைச்சு ஆடலாம். ஒரு ரூவா. ரெண்டு ரூவா... சம்மதமா?"

"சரி... சரி. நீ இப்போ தொடங்கு"

அவிநாஷ் சீட்டை எடுக்காமல் சொன்னான் 'ப்ளைண்ட ஒண்ணு' என்று.

பாரீனும் சீட்டை எடுக்காமல் சொன்னான், "ஒண்ணு" "ரெண்டு!" "ரெண்ணு!" "மூணு!"..."

பாரீன் சீட்டை எடுக்காமலேயே "ஷோ" என்றான்.

அவிநாஷ் ஆச்சரியத்துடன் தன் சிவந்த கண்களால் பாரீனைப் பார்த்தான். நாலு சீட்டிலேயே 'ஷோ' வா? அவன் தன் சீட்டுக்களைத் திருப்பிக் காண்பித்தான். இரண்டு ஏஸ். பாரீனிடம் ஒன்றுமில்லை-ராணிதான் டாப்.

அவிநாஷ் பணத்தை தன் பக்கம் இழுத்துக் கொண்டு முணு முணுத்தான், "நீ ரொம்பப் பெரிய ஆளுதான் பாரீன் அண்ணே! உன் சீட்டைத் திருப்பிப் பார்க்காமலேயே அது ரொம்ப மோசந்தான்னு எப்படி தெரிஞ்சுக்கறே நீ?"

பாரீன் புன்சிரிப்புடன் சொன்னான், "என் மனசுக்குள்ளே ஏதோ ஒண்ணு சொல்லிடும். சீட்டுப் பிரிச்சு முடிச்சதும் நான் கொஞ்சநேரம் பேசாம உட்கார்ந்திருப்பேன். என் மனசுக்குள்ளே அந்தக் குரல் கேக்கு தான்னு பார்ப்பேன். குரல் கேக்காத நாளிலே நான் ஜெயிச்சாலும் ஜெயிப்பேன், தோத்தாலும் தோப்பேன்... பின்னாலிருந்து பார்த்து மனுசனைப் புரிஞ்சுக்க முடியாது. ஆனால் நான் பின்னாலிருந்து பார்த்தே சீட்டைக் கண்டு பிடிச்சுடுவேன்!"

"சீட்டுகளிலே ஏதாவது அடையாளம் பண்ணி வச்சிருக்கியா?" அவிநாஷ் கேட்டுக் கொண்டே ஒரு சீட்டை எடுத்துக் கவனமாகப் பார்த்தான்.

"அதெல்லாம் கிடையாது இங்கே. நான் சூதாடி இல்லே. சீட்டாடறவன். 52 சீட்டு அடங்கியது என் குடும்பம். வாழ்க்கையிலே ஒருத்தனுக்கு இன்னொருத்தனைப் பிடிக்காம இருக்கலாம். ஆனால் அந்த இன்னொருத் தனை வேறே ஒருத்தனுக்கு ரொம்பப் பிடிச்சிருக்கலாம். ஒருவன் தன் பொண்டாட்டிகிட்டே மட்டமா நடந்துப்பான். ஆனால் அவனையே அந்தத் தெருக்காரங்க ரொம்ப நல்லவன்னு கொண்டாடுவாங்க. ஆபீஸிலே வேலை செய்யாத கழுப்பிணி ஒரு கிளப் அல்லது சங்கத்துக்காக உயிரைக் கொடுத்து உழைப்பான். அதே மாதிரி சீட்டுகளோட உலகத்துலேயும் ஒவ்வொரு சீட்டுக்கும் அதுக்குரிய இடம் ஒண்ணு இருக்கு. ஏது எங்கே பொருந்துதுன்னு பார்க்கணும். ரொம்ப ஜனங்க மட்டமானவங்க-ரெண்டாம் நம்பர், மூணாம் நம்பர் சீட்டு மாதிரி. ஆனா அவங்களையே டயமண்ட் அல்லது ஏஸுக்குப் பக்கத்திலே நிறுத்து... அவங்களுக்கு மெருகு ஏறிடும்!"

"சரி சரி. லெக்சர் போதும். ஆட்டத்தைத் தொடங்கு. தியானம் பண்ணிக் கேட்டுக்கோ. இந்தத் தடவை ஜெயிப்பியான்னு."

அந்தத் தடவையும் அவிநாஷ்தான் ஜெயித்தான்-அவனுக்குப் பன்னிரண்டு ரூபாய் லாபம்.

மறுபடியும் சீட்டுகள் பிரித்துப் போடப்பட்டன. பாரீன் தன் சீட்டுகளை மேலாகத் தொட்டுப் பார்த்து விட்டு "இந்தத் தடவை நான்தான் ஜெயிப்பேன்" என்றான்.

அவிநாஷ் கேலியாகச் சிரித்தான்-"அப்படியா? பார்க்கலாம்? இப்போ நான் எல்லாத்தையும் பணயம் வைக்கறேன். முதல்லேயே அஞ்சு ரூவா ஹிட்!"

"நானும் அஞ்சு ரூவா" பாரீன் தாழ்ந்த குரலில் சொன்னான்.

"பத்து"

"பத்து"

"இருவது"

"இருவது"

"முப்பது"

"முப்பது"

"அம்பது"

"அம்பது"

"எழுபத்தஞ்சு"

"எழுபத்தஞ்சு"

"நூறு"

"பணம் எங்கே? சும்மா வாயால சொன்னாப் போதாது. போர்டிலே காசை எடுத்து வை."

"கொடுக்கறேன். நீ..."

"அது நடக்காது. காசை எடுத்து வச்சாத்தான் ஆட்டம்!"

அவிநாஷ் தன் சட்டைப் பையில் தேடிப் பார்த்தான். அவனிடம் அவ்வளவு பணமில்லை. அவன் என்னிடம் திரும்பிக் கேட்டான், "சுநீல், உன் கிட்டே பணம் இருக்கா?"

"அறுபது ரூவா இருக்கும்"

"கொடு. எனக்குக் கொடு."

"அது கூடாது!" பாரீன் சொன்னான். உன்கிட்டக் காசு இருந்தா விளையாடு. இல்லாட்டி நடையைக் கட்டு. ஆடற சமயத்திலே கடன் கூடக் கிடையாது."

"அட! நான் கடன் வாங்காம என் பேனா அல்லது கடிகாரத்தை அடகு வச்சுப் பணம் வாங்கிக்கிறேன். உனக்கென்ன ஆட்சேபம்?"

"அந்த வேலையெல்லாம் என் வீட்டில் நடக்காது. பையிலே காசு. நெஞ்சிலே தைரியம் ரெண்டும் இருக்கறவரையிலேதான் விளையாட்டு. இது ரெண்டும் தீர்ந்து போனா ஆட்டங்குளோஸ்... போனாப் போறது. உனக்கு 'ஷோ' கொடுக்க ஒரு சான்ஸ் தரேன். உன்கிட்ட இருக்கற காசையெல்லாம் வச்சு 'ஷோ' கொடு. இந்தத் தடவை நான்தான் ஜெயிக்கப் போறேன்..."

"நீயா ஜெயிக்கப் போற?" அவிநாஷ் அறையே கிடுகிடுக்கச் சிரித்தான். "உனக்குத்தான் சீட்டுத் தெரியும். எனக்குத் தெரியாதா?"

அவிநாஷ் தன் மூன்று சீட்டுக்களையும் கையால் வருடினான், "ஆகா எவ்வளவு லேசாயிருக்கு, காத்திலே பறக்கற மாதிரி...! சுநீல், சரஸ்வதி பூஜையன்னிக்கு அதிக வயசு வித்தியாசமில்லாத மூணு அக்கா தங்கைகள் நல்லா அலங்காரம் பண்ணிக்கிட்டுக் காவிக்கலர்ப் புடைவையுடுத்திக் கிட்டுத் தலையை விரிச்சுப் போட்டுக்கிட்டுத் தெருவிலே போனா அவங்க மூணு பேரும் ஒரே மாதிரி இருப்பாங்களே. அது மாதிரிதான் இந்த மூணு சீட்டும் ட்ரையோவாக்கும்! ஒரே ஒரு வித்தியாசம் என்னன்னா அந்தப் பொண்களுக்கு வேற வேற வயசு... காசு எடு சீக்கிரம்!"

"சுநீல், நீ பணம் கொடுக்காதே!" பாரீன் சொன்னான்.

நான் சொன்னேன், "நான் கொடுக்கறதை நீ ஏன் தடுக்கறேன்னு எனக்குப் புரியலே. அவன் விளையாட ஆசைப்பட்டா விளையாடட்டுமே!"

"அவன் தன் பணத்திலே விளையாடணும்!"

"அவனோட ஒரு பையிலே பணமில்லேன்னா இன்னொரு பையிலேருந்து எடுத்துக்கலாமே! அது மாதிரி அவன் தன் சிநேகிதன் கிட்டேயிருந்து வாங்கிக்கறான். இதிலே என்ன தப்பு?"

"ஊஹூம். இதெல்லாம் சூதாடியோட பழக்கம். நான் சூதாடியில்லே. சீட்டாடறவன். காசு சம்பாதிக்க விளையாடலே நான். நான்தான் இவனுக்கு 'ஷோ' கொடுக்க ஒரு சான்ஸ் தரேனே! ஜெயிக்கறதாயிருந்தால் இந்த போர்டிலே எழுபத்தஞ்சும் எழுபத்தஞ்சும் நூத்தம்பது ரூவா ஜெயிக்கட்டுமே!"

அவிநாஷ் கத்தினான், "நீ என்ன சான்ஸ் தர்றது? எனக்குத் தயவு பண்றியா? ஊம், பெரிய பெரிய வார்த்தை! சூதாட்டமில்லையாம். சீட்டாட்டமாம்! இந்த அஞ்சாறு மாசத்திலே எத்தனை ஆயிர ரூவா சம்பாதிச்சிருப்பே! எனக்குச் சீட்டுப் புரிஞ்சு போச்சுன்னு இப்ப உனக்குப் பயம் வந்துடுச்சு!

பாரீன் புண்பட்ட குரலில் சொன்னான், "பயமொண்ணும் இல்லே எனக்கு. நான் யாரோட பணத்தையும் பிடுங்கிக்கலே. நீங்க பணத்தை ஆட்டத்துலே தோக்கறீங்க. என் வீட்டிலே என் ரூல்படிதான் விளையாடணும்! இஷ்டமில்லேன்னா வர வேண்டாம்! இங்கே விளையாட வர எத்தனையோ பேர் தயாராயிருக்காங்க. உன் மாதிரி அல்காப் பேர் வழிகள் தேவையில்லே எனக்கு..."

"உனக்கு ஒவ்வொரு நாள் ஒவ்வொரு ரூலா? சுடுகாட்டுக்குப் பக்கத்திலே தொழில் செய்யற கழுகுதானே நீ! இன்னிக்கு நான் உன் குட்டை உடைக்கப்போறேன்...! நீ கடைசிவரை விளையாடணும். ஆமா!"

பாரீனின் பணம் ஒரு காலி சிகரெட் டின்னில் இருந்தது. அவன் இறுகிய தாடையுடன் அந்த டின்னை இடது கையால் அழுத்திப் பிடித்துக் கொண்டு சொன்னான், "உனக்கு ரெண்டு சான்ஸ் கொடுத்தேன். நீ எடுத்துக்கலே... இன்னிக்கு விளையாட்டு அவ்வளவுதான்." இவ்வாறு சொல்லிவிட்டு அவன் வலது கையை நீட்டிப் போர்டின் பணத்தை எடுக்கப் போனான்.

"ஜாக்கிரதை!" என்று கர்ஜித்துக்கொண்டே அவிநாஷ் பாரீனின் தாடையில் பலமாக ஒரு குத்து விட்டான். பாரீன் ஒரு பக்கமாகச் சாய, அவனிடமிருந்த சில்லறையெல்லாம் தரையில் விழுந்து சிதறியது. அவிநாஷ் பாரீனை இன்னொரு முறை குத்திக் கட்டிலிலிருந்து கீழே தள்ளினான். கீழே விழுந்த பாரீன் உடனே எழுந்து விட்டான்.

சுவிமலும் நூருலும் எழுந்து நின்றார்கள். நான் அப்போது சண்டைக்காரர்களிடையே புகுந்து சண்டையைத் தடுத்திருக்க வேண்டும். அப்படிச் செய்திருந்தால் பின்னால் நான் இவ்வளவு கஷ்டப்பட நேர்ந் திராது. அந்த சமயம் எனக்குத் தோன்றியது. அவிநாஷுக்கும் பாரீனுக்கு மிடையே ஏதோ பழைய விரோதம் இருக்கிறதென்று. அவர்கள் அதைத் தீர்த்துக் கொள்வது நல்லது என்று நினைத்தேன் நான். அவர்களிருவரும் வயது வந்தவர்கள். அவர்களது சண்டையில் நான் ஏன் தலையிட வேண்டும்?

நூருல் சுவர்ப்பக்கம் நகர்ந்து போய் நின்று கொண்டு போதை நிரம்பிய குரலில் "நான் எந்தக் கட்சியிலேயும் இல்லே" என்றான். என்ன செய்வது என்று புரியாமல் மௌனமாக நின்றான் சுவிமல். கட்டிலின் மறுபுறம் அவிநாஷின் பயங்கரமான நீண்ட முகம். கட்டிலின் இந்தப்

பக்கத்தில் பாரீன். அவனுடைய உதடுகளிலிருந்து ரத்தம் வழிகிறது. அவன் இரும்பு போன்ற தன் கைகளை அவிநாஷின் பக்கம் நீட்டி, "வாடா நாயே!" என்று கத்தினான்.

அவிநாஷும் கொடூரமாகக் கத்தினான், "வாடா...!"

அப்போது திரைக்குப் பின்னாலிருந்து அங்கே வந்தான் ஹீராலால். சாப்பிட்டுக் கொண்டிருந்தான் போலும். அவனது ஒரு கை எச்சில். அவன் அவிநாஷுக்கு முன்னால் வந்து "ஒப்நாஷ் பாபு. என்ன செய்யறீங்க? உங்களுக்கு ரொம்பப் போதை ஏறிடுச்சு. வீட்டுக்குப் போங்க..." என்று சொன்னான்.

அவிநாஷ் அவனை இடது கையால் ஒரு தள்ளு தள்ளி, "நீ போடா" என்றான்.

பாரீனும் "நீ தள்ளிக்கோ, ஹீராலால்" என்று சொன்னான்.

அப்படியும் ஹீராலால் அவிநாஷின் ஒரு கையை அழுத்தமாகப் பிடித்துக் கொண்டான். அப்போது திடீரென்று சுவிமல் அவர்களுக்கருகில் போய் ஹீராலாலிடம் சொன்னான், "நீ அவன் மேலே கை வைக்காதே! கையை எடு!"

ஹீராலால் சுவிமலின் பேச்சைச் சற்றும் பொருட்படுத்தாமல் இடது கையால் அவனைத் தள்ளிவிட்டான். போதையால் பலவீனமாயிருந்த சுவிமல் வாசல் படிக்கருகில் விழுந்து விட்டான். ஹீராலால் அறையின் கதவைத் திறந்து அவிநாஷை அதட்டினான். "போங்க வெளியிலே போயிடுங்க!"

"வாயை மூடு!" என்று அவிநாஷ் கத்தினான்.

சுவிமல் தரையில் கிடந்தவாறே ஹீராலாலைக் காலால் உதைத்தான். ஹீராலால் சற்றுப் பின்னால் நகர்ந்து சுவிமலைப் பலமாக உதைக்க, சுவிமல் கதவுக்கு வெளியே உருண்டு போனான். அதே சமயத்தில் ஹீராலால் திரைக்குப் பின்புறம் ஓடிப்போய் ஓரடி நீளக்கத்தியொன்றை எடுத்து வந்ததும் அவிநாஷ் வெளியே ஓடிவந்தான்.

அந்த சமயத்தில்தான் எனக்கு அடி விழுந்தது. எனக்கு யோசிக்கச் சிறிதும் நேரம் கொடுக்காமல் பாரீன் சட்டென்று என் காதுக்குமேல் பலமாகக் குத்தினான். எனக்கு அதிகமாக ஏற்பட்டது வலியா, ஆச்சரியமா என்று சொல்ல முடியாது. இந்தத் தாக்குதலை நான் எதிர்பார்க்கவேயில்லை. என் தலை கிறுகிறுத்தது. உயிரே போவது போன்ற வலி. என் முதுகில் யாரோ கத்தியால் குத்திவிட்டார்கள் என்றுதான் முதலில் நினைத்தேன். நான் நிலை தவறிக் கீழே விழப்போய் ஜன்னலைப் பிடித்துக் கொண்டு சமாளித்துக் கொண்டேன். என் கண்பார்வை தெளிவாக இல்லை. நான் தலையைத் தூக்கிப் பார்த்தபோது நூருல் வெளிறிய முகத்துடன் சுவரோடு சுவராக நின்று கொண்டிருந்தான். பரீட்சித் நினைவிழந்து தரையில் கிடந்தான். சுவிமலும் அவிநாஷும் போய்விட்டார்கள். ஹீராலாலையும் காணோம். வாசல் கதவு வெகுதூரத்தில் இருப்பதுபோல் தோன்றியது. தரையில் சில்லறைக்காசு சிதறிக் கிடந்தது. எனக்கு நேரெதிரில் நின்று கொண்டிருந்தான் பாரீன். சாதாரணமாக ரொம்ப அமைதியானவன் அவன். ஆனால் இப்போது அவனது மௌனமான முகத்தில் கற்பனைக்

கப்பாற்பட்ட கடுமை. நெருப்பைக் கக்கும் கண்கள். உதட்டுக்கருகில் ரத்தம். அவன் ஒரு தடவை ரத்தத்தைத் துடைக்க முயற்சித்து இருப்பான் போலும். அவனது இடது கன்னத்தில் ரத்தக் கறை.

எவரையும் ஒருபோதும் அடிக்க முடிந்ததில்லை என்னால். நான் வாழ்க்கையில் பலரை அடிக்க விரும்பியதுண்டு. கடும் தண்டனை கொடுக்க நினைத்ததுண்டு. ஆனால் அவர்கள் என்னை விட மிகவும் பலசாலிகளாயிருந்தார்கள். அல்லது மிகவும் பலங்குறைந்தவர்களா யிருந்தார்கள். என்னோடு ஒத்த பலமுள்ள எதிரியெவரும் எனக்குக் கிடைக்கவில்லை. ஆகையால் எவரையும் அடித்ததில்லை நான். ஆனால்...)

(மறுபடியும் என்னையடிக்கத் தேவையே இருக்கவில்லை. ஆனால் அடிக்கும் வெறியால் தூண்டப்பட்டுப் பாரீன் என்னைத் தாடையில் அடித்தான். பலமான அடியல்லதான். இருந்தாலும் மோவாய் வெட்டுப்பட்டு விட்டது. அதிலிருந்து ஒரு பொட்டு ரத்தம் தரையில் விழுந்தது. அதைப் பார்த்து என் மண்டை குழம்பியது. நான் என்னைக் காப்பாற்றிக் கொள்ள முயற்சி செய்யாவிட்டால் இவர்கள் என்னைக் கொன்று விடுவார்கள். ஆனால் பாரீனின் முதல் தாக்குதலே என்னை பலவீனமாக்கியிருந்தது. நான் தலையைத் தூக்காமலேயே பாரீன் இருந்த பக்கத்தில் கையை வீசினேன். அது பாரீனின் தோளில் லேசாகப்பட்டது. பாரீன் அந்தக் கையைக் 'கப்'பென்று பிடித்துக் கொண்டு பலமாக முறுக்கிவிட்டான்.

நான் அடிபட்ட நாய் மாதிரி "ஆ... ஆ..." என்று கத்தினேன். பாரீன் என் முகத்தை மூடி "பேசாதே" என்று அதட்டிவிட்டுத் தன் இரு கைகளால் என் இடது கையை என் முதுகுப் பக்கம் கொண்டு போய்ப் பலமாக முறுக்க, எனக்கு மரண வலி ஏற்பட்டது.

நான் கெஞ்சினேன், "பாரீன் அண்ணே, என்னை கொண்ணுடாதே, விட்டுடு, விட்டுடு...! நான் உன் கால்ல விழறேன்...")

அப்போது நான் ஒரு விஷயத்தைக் கவனித்தேன்-பாரீன் என் இடது கையைத்தான் முறுக்கிக் கொண்டிருந்தான். என் வலதுகை சுதந்திரமாகத் தானிருந்தது. ஆனால் அதுவும் செயிலிழந்து போய்விட்டது. வலது கையால் நான் பாரீனைத் தாக்கியிருக்கலாம். ஆனால் அதுவோ செயலிழந்து சும்மா தொங்கிக் கொண்டிருந்தது-அதற்கும் எனக்கும் ஒரு தொடர்பு மில்லாததுபோல்; அல்லது அது நூருலைப் போல் நடுநிலை வகித்தாற் போல்; அல்லது பரீட்சித்தைப் போல் நினைவிழந்தாற்போல் இந்தச் சண்டையில் கலந்து கொள்ள இஷ்டமில்லை அதற்கு.

"நீ அவங்களுக்கு ரொம்ப சிநேகிதன் இல்லே?" பாரீன் சீறினான்.

"பாரீன் அண்ணே, என்னை விட்டுடு... உன் கால்லே விழறேன்... உனக்கும் எனக்கும் ஒரு சண்டையுமில்லே..."

"என் காலைப்பிடி!"

"என்னாலே குனிய முடியல்லே..."

பாரீன் தன் பிடியைச் சற்றுத் தளர்த்தினான். நான் தரையில் முழந் தாளிட்டு உட்கார்ந்துகொண்டு, "பாரீன் அண்ணே, என்னை அவமானப் படுத்தறதிலே உனக்கு என்ன லாபம்?" என்று கேட்டேன்.

"காலைப் பிடி... அப்பறம் மூக்கைத் தரையிலே தேய்!"

துக்க மேலீட்டால் என் நெஞ்சு லேசாகி விட்டது. நான் மிகவும் சாது மாதிரி என் மூக்கைத் தரையில் தேயத்துக் கொண்டே கட்டிலின் கால் வரை வந்து, மூக்கைத் தரையில் வைத்தவாறே சொன்னேன், "இந்த ரூம் முழுக்க என் மூக்கைத் தேயச்சுக்கிட்டு வரணுமா, சொல்லு! நான் உன் காலைப் பிடிச்சுக்கிட்டு உன் பாதத்திலே இருக்கற தூசியை நாக்காலே நக்கத் தயார். செய்யணுமா? சொல்லு! என்ன வேணும் உனக்கு? உசிரோட இருக்கறதுக்காக நான் எதுவும் செய்யத் தயார். சொல்லு...!"

"நீ வெளியே போ! இனிமே ஒரு நாளும் வராதே!"

நான் அமைதியாகச் சொன்னேன், "இல்லே வருவேன்... வர்றபோது தனியா வருவேன்..."

மாடிப்படி ஒரே இருட்டு. அரவமில்லை. காலையில் இங்கே காய்கறிகள் விற்பார்கள். அந்த இரைச்சலுடன் ஒப்பிடும்போது இந்த நிசப்தத்தை ஆழ்ந்த அமைதி என்றுதான் சொல்லவேண்டும். தவிர, இப்போது எந்த சப்தமும் என் மூளையில் ஏறாது. கீழ்ப்படியின் ஓரத்தில் ஹீராலால் நின்று கொண்டிருந்தான். அவன் கையிலிருந்த கத்தி என் கண்ணுக்குத் தெரியவில்லை. ஹீராலால் என்னைப் பார்த்துத் தன் வெள்ளைப் பற்கள் பளீரென்று தெரியச் சிரித்தான். நான் சற்று நின்றேன். ஒரு குறுகிய சந்தில் எதிரில் ஒருமாடு வந்துவிட்டால் அதைக் கடந்து போகலாமா இல்லயா என்ற சந்தேகம் தோன்றும். அதன் முகத்தைப் பார்த்தால் அமைதியாகத்தான் இருக்கிறது. இரண்டு பேர் பக்கவாட்டில் அதைக் கடந்து போகும்போது அது பேசாமலிருக்கிறது. ஆனால் இன்னொருவன் கடக்கும்போது கொம்பை ஆட்டுகிறது- அந்த மாட்டுக்கு எதிரில் நிற்கும் மனிதனின் நிலையில் இருந்தேன் நான். நான் மாடிப்படி மேலேயிருந்து ஹீராலாலைப் பார்த்துச் சிரித்தேன். பிறகு ஒவ்வொரு படியாக இறங்கி வரும்போது என் உடம்பு நடுங்கத் தொடங்கியது. நான் அசட்டுத் துணிச்சலாக நடந்து கொள்கிறேன் என்று எனக்குத் தோன்றியது. ஹீராலால் கொம்பை ஆட்டுவானா என்று எனக்குத் தெரியாது. இருந்தாலும் நான் ஒரே இடத்தில் நின்றுவிட முடியாது, இறங்கித்தான் ஆகவேண்டும்.

நான் பலவீனமாகச் சிரிக்க முயற்சி செய்தவாறு, "என்ன ஹீராலால்!" என்றேன்.

ஹீராலால் வருத்தப்படுபவன் போல் சொன்னான், "என்ன தொந்தரவு பண்றீங்க!"

நான் அவனைக் கடந்த பிறகு அவன் சாதாரணமான குரலில், "அந்த ரெண்டு பாபுவும் தெருவிலே நின்னுக்கிட்டிருக்காங்க" என்று சொன்னான்.

பாபு-! சற்று நேரத்துக்கு முன்னால் சுவிமலைப் பலமாக உதைத்தவன் இப்போது அவனைப் 'பாபு' என்கிறான்! என்ன இருந்தாலும் வேலைக் காரன்தானே! அவனுக்கு இரண்டணா பக்கீஷ் கொடுத்துவிட்டு வரலாம் போலிருந்தது.

வெளியில் பலத்த மழை வந்து விட்டது. மழையின் 'ஜோ' என்ற சப்தம். நான் ஓட்ட ஓட்டமாய்த் தெருவைக் கடந்து மறுபக்கத்தில் மழைக்கு ஒதுங்கி நின்றேன். சுவிமல் ஒரு கடைத்திண்ணையில் உட்கார்ந்திருந்தான். அவிநாஷ் கிராதியைப் பிடித்தவாறு நின்று கொண்டிருந்தான்.

அவிநாஷ் பரபரப்போடு கேட்டான், "உனக்கு ஒண்ணும் ஆகலியே...? நான் உன்னைக் கூட்டிக்கிட்டு வர மறுபடி வரலாம்னு பார்த்தேன். ஆனா இந்த ஹீராலால் கையிலே கத்தியை வச்சுக்கிட்டு..."

"எனக்கு ஒண்ணும் ஆகலே"

"முதல் நம்பர் போக்கிரி! நான் போலீசிலே சொல்லி இவங்களைப் பிடிக்கறேன்..."

"சுவிமலுக்கு என்ன ஆச்சு?"

"சீரியஸா ஒண்ணுமில்லே... போதைதான் ஜாஸ்தியா இருக்கு... நீ பாரீனை நல்லா உதைச்சியா...? உன் மோவாயிலே ரத்தம் ஏன்? வா, வெத்திலைக் கடையிலேருந்து கொஞ்சம் சுண்ணாம்பு வாங்கித் தடவலாம்..."

"அதெல்லாம் வேண்டாம். சுண்ணாம்பு தடவினாக் காயம் ஆற நாளாகும். வா, வீட்டுக்குப் போகலாம். வீட்டுக்குப் போறேன்னு அப்பவே சொன்னேன். உங்களுக்காக இருந்ததிலே..."

அவிநாஷ் மகிழ்ச்சி பொங்கச் சொன்னான். "நான் பாரீனுக்கு கொடுத்த ரெண்டு குத்தையும் ஜன்மத்துக்கு மறக்கமாட்டான். நீ அவனுக்கு ஒண்ணு ரெண்டு அடிகூடக் கொடுக்கலியா?"

எனக்கு மிகவும் களைப்பாயிருந்தது. மண்டைக் கிறுகிறுப்பு அப்போதும் குறையவில்லை. நான் சொன்னேன், "இல்லே... நான் அவன் கிட்டே வசமா மாட்டிக்கிட்டேன். என் காதிலே பலமாக் குத்திட்டான். இன்னும் வலிக்குது... உனக்காக இந்த மாதிரி அடி வாங்கினேன்..."

அவிநாஷ் என்னைத் தேற்ற முயன்றான். "பாரீன் உன்னை அடிச் சதுக்கு நான் அவனைப் பழி வாங்காட்டி..."

"நீ எதிர்பக்கம் போறதுன்னா...! நீ சுவிமலைக் கூட்டிக் கிட்டுப்போ... நான் வேற டாக்சி பிடிச்சுக்கறேன்."

"இரு, இரு! ஒரு சிகரெட் கொடு. எனக்கு மஜாவாத்தான் இருக்கு. நிலைமை சுவாரசியமாத்தான் வந்துக்கிட்டிருந்தது. ஹீராலால் மட்டும் கத்தி எடுத்துக்கிட்டு வராம இருந்தா அவங்களைப் பன்னி மாதிரி அடிச் சிருப்பேன்... நீ பாரீனைத் தனியா ஒரு கை பார்த்திருப்பேன்னு நான் நினைச்சேன்... நான் அவன் கடைக்கு நெருப்பு வச்சுடறேன், பாரு! உன் உடம்பிலே கையைப் போட்டு அடிச்சிருக்கானே, இதுக்குப் பழி வாங்கறேன் பாரு..."

"விட்டுத்தள்ளுடா. நீ பாரீனை அடிச்சே, அவன் என் மேலே பழி தீர்த்துக்கிட்டான். இப்போ நீ அவனைப் பழி வாங்கப் போனா, அவன் அதுக்குப் பழியாய் பரீட்சித்தை தாக்குவான்..."

"அட, பரீட்சித் அங்கேயே இருக்கானே! அவனை..."

"விடுப்பா, பரீட்சித்துக்கு ஒண்ணும் ஆகாது... ஏ டாக்சி!"

அவிநாஷ் என்னை டாக்சியில் ஏற்றிவிட்டுச் சொன்னான், "அஞ்சு ரூவா கொடுடா. என் பை காலி... இன்னி அமளியிலே ரொம்ப நல்ல விஷயம் என்ன தெரியுமா?"

நான் விரும்பாவிட்டாலும் கஷ்டப்பட்டுச் சிரித்தேன். அவன் என்ன சொல்லப் போகிறான் என்று எனக்குப் புரிந்தது. "இனிமே ஒரு நாளும் பாரீன் கிட்டே போக வேண்டாம்னுதானே...?"

"ஆமா, பிழைச்சேன்! பாரீன் வீட்டுச் சீட்டாட்டம் காந்தம் மாதிரி என்னை இழுத்துக்கிட்டிருந்தது. அது ஒரு போதையா ஆயிடுச்சு. சீட்டாடிச் சீட்டாடி நேரத்தை வீணாக்கி என்ன பிரயோசனம்? ஆனா அதைக் கண்ணியமா விட்டுடவும் முடியலே. இங்கே வர்றதை நிறுத்த ஒரு வழியும் தோணல்லே. நடந்தது நல்லதுதான். இந்த அடிதடியாலே விவகாரம் ஒரு வழியாத் தீர்ந்து போச்சு. இனிமே ஒருநாளும் இங்கே வர வேண்டியதில்லே. நிம்மதி! ஆகா, நான் எப்படி கெட்டிக்காரத்தனமா சண்டையைக் கிளப்பிவிட்டேன் பார்த்தியா?"

"ஆமா, அதுக்காக நான் அடிபட்டேன்... சரி, வரேன்..."



சேகரின் அம்மா தினமும் காலையில் ஒன்பதரை மணி முதல் பதினோரு மணிவரை பூஜையில் இருப்பார் என்று எனக்குத் தெரியுமாதலால் சுமார் பதினோரு மணிக்கு அவரைப் பார்க்கப் போனேன். ஆனால் அப்போதும் அவர் பூஜையில்தானிருந்தார். சேகரின் தங்கை தபதி, "உள்ளே வந்து உக்காருங்க" என்று சொன்னாள்.

நான் சேகரின் அறையிலேயே போய் உட்கார்ந்தேன். பரிதோஷ் யுனிவர்சிட்டிக்குப் போயிருந்தான். தபதிக்கு இன்னும் பி.ஏ. ரிசல்ட் வராததால் அவள் வீட்டில் உட்கார்ந்து சதை போட்டுக் கொண்டிருந்தாள். அவள் இன்னும் பெருத்துக் கொண்டு போனால் அவளுக்குக் கல்யாணமாவது சிரமம். ஏற்கெனவே அவளுக்குக் காது கொஞ்சம் மந்தம். அவளைப் பார்த்துக்கொண்டு பேசினால்தான் பேசுவது அவளுக்குப் புரியும். ஆனால் அதற்காக எப்போதும் ஒரு பெண்ணை நேருக்கு நேர் பார்த்துக் கொண்டே பேச முடியுமா? அநேக விஷயங்களைப் பார்வையைத் தாழ்த்திக் கொண்டு பேச வேண்டியிருக்கும். ஆகையால் நான் எப்போதும் இயன்றவரையில் குறைவாகவே தபதியுடன் பேசுவேன். உதாரணமாக, இப்போது தபதி என்னிடம் வந்து "டீ குடிக்கிறீங்களா?" என்று கேட்டாள். எனக்கு டீ குடிக்க விருப்பமில்லை. "நான் ஆபீசுக்கு சாதம் சாப்பிட்டுத்தான் கிளம்பியிருக்கேன். எனக்கு டீ வேணாம்" என்று நான் சொல்லியிருக்க வேண்டும். ஆனால் அவள் நான் சொல்வதைச் சரியாகக் கேட்டுக் கொள்ளாவிட்டால் அல்லது புரிந்து கொள்ளாவிட்டால், மறுபடி "டீ குடிங்க!" என்று வற்புறுத்துவாள். அப்போது நான் என் நிலையை விளக்கி இன்னும் நிறையப் பேச வேண்டியிருக்கும். இந்தத் தொந்தரவைத் தவிர்ப்பதற்காகவே நான் தலையை ஆட்டி சம்மதம் தெரிவிக்க, தபதி டீ எடுத்து வர உள்ளே போனாள்.

சேகர் அறையிலிருந்த மேஜை கடிகாரம் நின்று போயிருந்தது. வேறு யாரும் அதற்குச் சாவி கொடுக்கவில்லை போலும். அவனுக்கு வந்த மூன்று கடிதங்கள் உறை பிரிக்கப்படாமல் இருந்தன. பாதி படிக்கப்பட்ட புத்தகமொன்று அப்படியே திருப்பி வைக்கப்பட்ட நிலையில் மேஜைமேலே இருந்தது. இப்படியெல்லாம் இருப்பதைப் பார்த்தால் எனக்கு என்னவோ

செய்யும். சாவின் நினைவு வரும். ஆனால் சேகர் சாவானேன்? அவன் இறந்து போகக் காரணம் எதுவுமில்லை. அவன் செய்யும் சோதனையெல்லாம் வாழ்வதற்காகத்தான். வாழ்க்கையை முடித்துக் கொள்வதற்காக அல்ல. சேகர் நிச்சயம் நீண்டநாள் வாழ்வான். என்னைவிட நீண்டகாலம் வாழ்வான். அவிநாஷை விடவுந்தான். அவிநாஷைப் பார்த்தாலே அவன் ஏதாவதொரு விபத்தில் சாகத்தான் பிறந்திருக்கிறான் என்று புரியும்...

சேகரின் அம்மா ஒரு தட்டில் சில பழத்துண்டுகளும் தேங்காய் அச்சில் செய்த சந்தேஷும் எடுத்துக் கொண்டு உள்ளே வந்தார். (சந்தேஷ் என்பது பாலைத் திரித்துத் தயாரிக்கப்படும் ஓர் இனிப்புத் தின்பண்டம்.) வெள்ளைப் புடைவை, தாட்டியான உடல்வாகு அவருக்கு. உடலமைப்பில் அவரைத்தான் கொண்டிருக்கிறாள் தபதி.

முதலில் நான் சங்கடத்துடன் தலை குனிந்து உட்கார்ந்திருந்தேன். பிறகு மிகவும் சுலபமான ஒரு காரியம் நினைவுக்கு வந்தது. நான் சட்டென்று நாற்காலியிலிருந்து எழுந்து அவரது காலைத் தொட்டு வணங்கினேன். "சித்தி! சௌக்கியமா இருக்கீங்களா?"

"சௌக்கியந்தான்... உன்னை ரொம்ப நாளாக் காணலியே! நீ எப்படி இருக்கே?"

"நல்லாயிருக்கேன்..."

"உன்னோட அம்மா அப்பா எங்கே இருக்காங்க இப்போ?"

"அவங்க கொஞ்சநாள் முன்னால பெர்ஹாம்பூர்லேருந்து வந்து இப்போ மூணாவது சித்தப்பா வீட்டிலே தங்கியிருக்காங்க. என் தாத்தாவுக்கு உடம்பு ரொம்ப..."

"என்ன ஆச்சு?"

"ஸ்ட்ரோக் ஏற்பட்டுப் பி.ஜி.ஆஸ்பத்திரிலே இருக்கார். எல்லாரும் பிஸி... நானும் கொஞ்சநாளா ஆஸ்பத்திரிக்கு அலைஞ்சுக்கிட்டு... எனக்கு நேரமே கிடைக்கலே..."

"உன் மோவாயிலே என்ன காயம்?"

"அது ஒண்ணும் இல்லே... நேத்திக்கு அவசர அவசரமா டாக்சிலே ஏர்றபோது..."

"உங்க தாத்தாவுக்கு என்ன வயசு? எழுபத்தஞ்சு இருக்குமா? ரின்ட்டு கலியாணத்திலே ஒரு தடவை பார்த்திருக்கேன்... நல்ல ஆரோக்கியமான உடம்பு—அவர்தானே உங்களை வளர்த்தார்! உன்னோட அப்பாவோட அப்பாதான்..."

"அவர் சின்ன வயசிலேயே இறந்து போயிட்டார். நான் அவரைக் கண்ணாலே பார்த்ததில்லே. எங்க அம்மாவோட அப்பாதான் எங்களை வளர்த்தார்..."

"அவர் இப்போ இறந்து போனா நல்ல சாவுதான். உங்களையெல்லாம் நல்ல நிலைமையிலே பார்த்துட்டுப் போறார். அவரோட சின்னப் பேரன் உன்னோட கலியாணத்தைத்தான் பார்க்கல்லே... நீ ஏன் கலியாணம் செஞ்சுக்கலே?"

பேச்சு எங்கெங்கோ போய்க்கொண்டிருந்தது. நான் இந்தப் பேச்சுக்காக வரவில்லையே! சேகரின் அம்மாவின் முகத்தில் சேகருக்காகக்

கவலையோ பயமோ தெரியவில்லை. பரிதோஷ்போல் அவருக்கும் சற்றுக் கோபம் இருந்தாற்போல் தெரிந்தது. அவருக்குத் தபதி போல் காது மந்தமில்லை. ஆயினும் அவர் என்னை நேருக்கு நேர் பார்த்துக் கொண்டு பேசுகிறார்.

மழையில் நனைந்த பூனை தன் உடம்பைச் சிலிர்த்துக் கொள்வது போல் மனதைத் திடப்படுத்திக் கொண்டு கேட்டேன், "சேகரைப் பத்தி ஏதாவது தகவல் கிடைச்சுதா சித்தி?"

அவர் சற்று நேரம் மௌனமாக என்னைப் பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு சொன்னார், "அவன் எங்கேயோ வெளியூருக்குத்தான் போயிருப் பான்னு தோணுது. முந்தாநாள் மத்தியானம் ஆபீசிலேருந்து கிளம்பறபோது ஆபீஸ் கூட்டுறவு சங்கத்திலிருந்து ஐநூறு ரூவா வாங்கிக்கிட்டுப் போனானாம். ஆனா ஏன் ஒரு தகவல் கூடக் கொடுக்காமப் போனான்? ஒரு டெலிபோன் பண்ணியிருக்கக்கூடாதா? சட்டை, துணிமணிகூட எடுத்துக்கிட்டுப் போகலே. சன்னியாசியாப் போறவங்கதான இந்த மாதிரி போவாங்க!"

"சேகர் என்ன ஆனாலும் ஆகலாம், ஆனா சன்னியாசி ஆயிட மாட்டான்" என்று நான் சிரித்துக் கொண்டே சொன்னேன். சொன்ன மறு கணமே எனக்குத் தோன்றியது, நான் அப்படிச் சொல்லியிருக்கக் கூடாதென்று. எந்தத் தாய்க்கும் இந்த மாதிரிப் பேச்சைக் கேட்கப் பிடிப்ப தில்லை. தன் பிள்ளை குடும்பஸ்தனாக இருந்து கொண்டு சன்னியாசி போல் நல்லவனாக வாழ வேண்டுமென்றுதான் ஒவ்வொரு தாயும் விரும்புகிறாள். அவன் கல்யாணம் செய்துகொண்டு குழந்தை குட்டிகள் பெறவேண்டும். வேலை பார்த்து வேலையுயர்வு பெற்று சன்னியாசி வேடம் போட வேண்டும்...

நான் சொன்ன வார்த்தைகளை வாபஸ் வாங்க முடியாதே!

சேகரின் அம்மா சொன்னார், "அவன் கொஞ்ச நாளாவே சொல்லிக் கிட்டிருக்கான், தனியாப் போயிடறேன்னு. நான் ஆட்சேபிக்கலே. "ஏன்"னு மட்டும் கேட்டேன். பிள்ளைகள் கல்யாணமான பிறகு தனக்குடித்தனம் வச்சுக்க ஆசைப்பட்டா அதைப் புரிஞ்சுக்க முடியும். இவனுக்கு இங்கே எந்தவிதமான இடைஞ்சலும் இல்லே. யாரும் இவன் வழிக்குப் போறதில்லே. அப்படியும் இவன் ஏன் தனியாப் போகணுங்கறான்...? உனக்கு ஏதாவது தெரியுமா?"

"இல்லே சித்தி... எனக்கு ஒண்ணும் தெரியாது."

"அவனுக்கு ஆபத்து ஒண்ணுமில்லேன்னு எனக்கு நிச்சயமாத் தெரியும். ஆபத்து ஏற்பட்டிருந்தா எனக்குத் தெரிஞ்சு போயிருக்கும் இதைத் தெரிஞ்சுக்கத்தான் நான் இவ்வளவு நேரம் பூஜையிலே உக்காந் திருந்தேன். அவன் நல்லாத்தான் இருக்கான்னு என் மனசு சொல்லுது. அவன் வீட்டை விட்டே ஓடிப்போறதாயிருந்தால் அவனோட சிநேகிதங்க யாருக்காவது தெரிஞ்சிருக்கும்... நீ என்கிட்டேயிருந்து எதையும் மறைக்கலியே?"

நான் மொசைக் தரையில் என் பார்வையைப் பதித்திருந்தேன். சேகர் வீட்டைவிட்டே போவதாயிருந்தால் அதற்கு அவனது சுயநலம்

காரணமாயிருக்காது என்று எனக்குத் தோன்றியது. அவனது குடும்பம் வசதி வாய்ந்தது. அவன் வீட்டுக் கீழ்த்தளத்திலிருந்த கடைகளிலிருந்து நிறைய வாடகை வந்து கொண்டிருந்தது. டயமண்ட் ஹார்பரில் அவர் களுக்குச் சொந்தமான ஒரு பங்களா வீட்டை ஓர் அமெரிக்கக் கம்பெனி குத்தகை எடுத்திருந்தது. ஆகையால் சேகர் பிரிந்து போனால் அவனுடைய குடும்பத்துக்குப் பொருளாதாரக் கஷ்டம் எதுவுமிருக்காது. அவன் நாக் பூருக்கோ கான்பூருக்கோ மாற்றலாகிப் போனால் அது வேறு விஷயம். கல்கத்தாவிலேயே வேறு வீட்டுக்குப் போவானேன்? கலியாணம் செய்து கொண்டு, பிறகு மனைவியுடன் சேர்ந்து அம்மாவுடன் சண்டை போட்டுக் கொண்டு போனால் அது பொருத்தமாயிருக்கும். ஓர் ஆண்பிள்ளை வேறுவழியெதுவும் இல்லாவிட்டால்தான் தனியாக இருக்க வேண்டும்...

"இல்லே சித்தி... எனக்கு நிசமாவே ஒண்ணும் தெரியாது."

இப்போது சேகரின் அம்மா சற்றும் எதிர்பாராத விதமாக குரலைத் தாழ்த்திக் கொண்டு, உணர்ச்சி பொங்கக் கேட்டார், "சுநீல், அவன் தறுதலையா அலைஞ்சு உடம்பைக் கெடுத்துக்க மாட்டான்னு நீ உறுதியாச் சொல்ல முடியுமா?"

நான் திடுக்கிட்டேன். "நானா...?" பிறகு சமாளித்துக் கொண்டு இயல் பாகச் சிரித்தவாறே, "சித்தி, நான் ஒண்ணும் அப்படிச் சொல்லலியே...! சேகர் எப்போதுமே கொஞ்சம் பிடிவாதக்காரன். அவனும் நாளா வட்டத்திலே சரியாகிடுவான். நீங்க ஏன் இவ்வளவு கவலைப்படறீங்க?"

"சேகர் விஷயத்தை விடு... நீ எனக்கு ஒரு போதும் துக்கம் தராம இருப்பியா?"

"சித்தி, நான் உங்களுக்குத் துக்கம் தருவேனா? நான் சேகரை..."

"நான் உனக்காகத்தான் கவலைப்பட்டு உன்னைக் கூப்பிட்டேன். உன் அம்மா வெளியூர்லே இருக்கா. நான் உன் அம்மா மாதிரி..."

"அது சரிதான். ஆனா நான் ஒரு நாளும்..."

"நீ நான் சொல்ற ஒரு வார்த்தையைக் கேப்பியா? கொஞ்சம் வெளியிலே வா..."

இப்போது தபதி டீ எடுத்துக் கொண்டு வந்தாள்.

"திரும்பி வந்து டீ சாப்பிடலாம். இப்போ வா என்னோட, ஷூவை இங்கேயே அவிழ்த்து வை..."

அவர் என்னைப் பூஜையறைக்கு அழைத்துப் போனார். பளபள வெள்ளைக் கல் பதித்த சிறிய அறை குளிர்ச்சியாயிருந்தது; சந்தனம், வாடிய பூக்களின் மணம். எனக்கு எப்போதும் பூஜையறைக்குள் நுழையப் பிடிக்கும். உடம்புக்குக் குளிர்ச்சியாக இருக்கும். கண்களை நன்றாகத் திறந்துகொண்டு பார்க்கலாம். சேகரின் அம்மா முகம் உணர்ச்சி வசப் பட்டிருந்தது. அவர் முதலில் சேகர் பற்றிப் பேசிக் கொண்டிருந்தபோது சலனமற்றிருந்த அவரது முகம் என்னைப் பற்றிப் பேசும்போது உணர்ச்சி வசப்பட்டுவிட்டது. இதோ அழுதுவிடுவார் என்று தோன்றியது. அவர் அழாமலிருந்தால் எனக்கு நல்லது. ஏனென்றால் யாராவது அழுவதைப் பார்த்தால் எனக்கும் அழுகை வந்துவிடும்.

சேகரின் அம்மா சொன்னார், "நீ என் பேச்சைக் கேப்பியா? இந்த லட்சுமி நாராயணன் காலைத்தொட்டு சபதம் பண்ணு—இனிமே தறு

தலையாச் சுத்தமாட்டேன். அப்பா அம்மா மனசைக் கஷ்டப்படுத்த மாட்டேன்னு! தான்தோன்றித்தனமா நடந்துக்கிட்டு வாழ்க்கையைக் கெடுத்துக்க மாட்டேன்னு உறுதி சொல்லு!")

நான் லட்சுமி நாராயணனின் தங்கம் பதித்த சிம்மாசனத்துக்கு முன்னால் முழந்தாளிட்டு உட்கார்ந்தேன். பேண்ட் அணிந்து கொண்டு வேறு எப்படி உட்கார முடியும்? தொடைப் பக்கம் பேண்ட் அழுத்தியது. நான் திரும்பி சேகரின் அம்மாவைப் பார்த்தேன். நான் அவரிடம் சொல்ல விரும்பினேன், "சித்தி, நான் சபதம் செய்ய விரும்பலே. ஏன்னா, சபதம் செஞ்சுட்டா அதை மீறமாட்டேன். நான் சபதம் செய்ய விரும்பாததுக்கு இன்னொரு காரணம்–எனக்கு வயசு முப்பது. எது நல்லது எது கெட்டதுன்னு எனக்கு நல்லாவே தெரியும். அப்படித் தெரியலேன்னா யாராலும் எனக்குச் சொல்லிக் கொடுக்க முடியாது. தவிர, நான் என் வாழ்க்கையை வீணாக்க விரும்பலே. நான் ஒவ்வொரு நிமிஷமும் என் வாழ்க்கையை நல்லதாக, சுத்தமாக வச்சுக்க ஆசைப்படறேன். என் மனசுக்கு விரோதமாக காரியம் செஞ்சு அதைக் கறைப்படுத்த விரும்பலே நான். எனக்கான வழியை நானே தேடிக் கண்டுபிடிச்சுக்கணும். எனக்குப் பிடிக்காத விஷயத்தை அம்மா-அப்பா, கடவுள், ஆபீஸ் எஜமான், இந்தியாவோட அரசியல் சட்டம்-யார் சொன்னாலும் கேக்க மாட்டேன். வெகுதூரம் பிரயாணம் செய்யணும் நான்..."

ஆனால் சேகரின் அம்மாவின் கவலை தோய்ந்த முகத்தைப் பார்த்து, என்னால் இப்படியெல்லாம் சொல்லமுடியாது என்று புரிந்தது. காலைத்தொட்டு நமஸ்காரம் செய்வதற்குரிய அம்மா, அத்தை, சித்தி போன்றவர்கள் பார்த்துவிட்டால் கையிலுள்ள முழு சிகரெட்டைத் தூக்கி யெறிய வேண்டியதுதான். அப்படிப்பட்டவர்களிடம் நான் நினைப்பதை யெல்லாம் பேச முடியாது. இந்தப் பேச்சையெல்லாம் 'வெறும் சவுடால்' என்று அவர்கள் தள்ளிவிடுவார்கள். அவர்களை எப்போதும் மகிழ்ச்சியாக வைத்திருக்க எனக்கு ஆசை. சித்திக்குச் சற்று நேரத்துக்கு மகிழ்ச்சியளிக்க முடிந்தால் அது ஒரு பெரிய விஷயம். தற்காலிக மகிழ்ச்சிக்கும் வாழ்க்கையில் மதிப்பு உண்டு... நேற்று பாரீனின் காலைப் பிடித்தேன். இன்று லட்சுமி நாராயணனின் காலைப்பிடிக்கக் கூடாதா?

(நான் குனிந்து கையை நீட்டினேன். அந்த சமயம் சட்டென்று எனக்கு யமுனாவின் முகம் நினைவு வந்தது—மூன்றாண்டுகளுக்கு முன் கல்யாணக் கோலாகலத்துக்கிடையில் மாடிப்படியில் நின்றிருக்கும் அவளது கன்னி முகம். கிளியின் கண் போன்ற கூர்மையான, களங்கமற்ற கண்கள்; அந்தக் கண்கள் நீல காந்தக் கல்லைப் பார்ப்பது போல இந்த உலகத்தைப் பார்க்கின்றன.

யமுனாவின் நினைவு வந்ததுமே என் மனது சட்டென்று தூய்மை யடைந்துவிட்டது. நான் கடவுட்சிலையின் காலைத்தொட்டு, உணர்ச்சி வசப்பட்ட குரலில் சொன்னேன், "சித்தி, நான் யாருக்கும் வருத்தம் கொடுக்கமாட்டேன். இனிமேல் அக்கிரமம் எதுவும் செய்ய மாட்டேன். நான் சேகரைத் திருப்பிக் கூட்டிக்கிட்டு வருவேன்...")



மாலை நான்கு மணிக்கு சுவிமல் மறுபடியும் என் ஆபீசில் ஆஜராகி விட்டான். நான் மும்முரமாக வேலை செய்து கொண்டிருந்தேன்—அதாவது மேஜைமேல் நிறையக் காகிதங்களைப் பரப்பி வைத்துக்கொண்டு, ஒன்றுக்குப் பின் ஒன்றாய் சிகரெட் குடித்தவாறு ஏதோ பென்சிலால் எழுதிக் கொண்டிருந்தேன். அவனைப் பார்த்து எரிச்சல் வந்தது எனக்கு. அவனுக்கு ஒரு கெட்ட வழக்கம்-முதல் நாள் நிகழ்ச்சிகளைப் பற்றிப் பேசுவது.

தவிர, நான் இன்று சுவிமலுடன் எங்கும் போகப் போவதில்லை. எனக்கு ஆஸ்பத்திரி போக வேண்டும். பிறகு இரவுச் சாப்பாட்டுக்கு மூன்றாவது சித்தப்பாவின் வீட்டுக்குப் போக வேண்டும். அம்மா வரச் சொல்லியிருக்கிறார்.)

(நாற்காலியில் உட்கார்ந்ததுமே சுவிமல் சொன்னான், "உன் ஆபீசிலே நுழையறபோது பார்த்தேன். ரிசெப்ஷனிஸ்டோட நாற்காலி காலி. ஆபீசே வெறிச்சுனு இருக்கு"

அவனைப் பேசாமலிருக்கும்படி ஜாடை செய்தேன். கோவிந்த பாபு வெளி வேலையை முடித்துக் கொண்டு வந்து மூலை மேஜையில் வேலை செய்து கொண்டிருக்கிறார். அவர் சீரியஸ் டைப் மனிதர். இந்த மாதிரிப் பேச்சு அவருக்குப் பிடிக்காது. அவர் அடிக்கடி பெரிய மாப்பிள்ளையோடு குசுகுசுவென்று பேசிக் கொண்டிருப்பார் வெகுநேரம்.

நான் சோம்பல் முறித்துக் கொண்டு, "உம், ரொம்ப வேலை சேர்ந்து போச்சு. எல்லாத்தையும் இன்னிக்கு முடிச்சுடணும்" என்று சொன்னேன்.)

"விளம்பரத்துக்கு வசனம் எழுதறது—இது ஒரு பெரிய வேலையாக்கும்!"

நான் பரிதாபமாகப் புன்சிரிப்பு ஒன்றை உதிர்த்தவாறு சொன்னேன், "உனக்கு வேலையைப் பத்தி என்ன தெரியும்? நாள்பூரா வீட்டிலே சுகமாத் தூங்கிட்டு சாயங்காலம் வம்பளக்கறதுக்காக வெளியிலே வர்றே நீ... இருடீ சாப்பிடலாம்."

மேஜை மேலிருந்த காலிங் பெல் ஸ்விட்சை அழுத்தினேன். காலிங் பெல் அடித்து யாரையாவது கூப்பிடுவதென்றால் எனக்கு ரொம்பப் பிடிக்கும். அதோ கதவுக்கருகே பியூன் ஜரிசிங் ஸ்டூலின்மேல் உட்கார்ந் திருக்கிறான் கால்களைத் தொங்கப் போட்டுக் கொண்டு. சாதாரணக் குரலில் கூப்பிட்டாலும் அவன் காதில் விழும். இருந்தாலும் மணியடித்துக் கூப்பிடுவதுதான் முறை. மணியோசை கேட்டு அவன் உள்ளே வந்து மேஜைமுன் நிற்பான். ஆனால் உடனே அவனோடு பேசக் கூடாது. அவனைக் கவனிக்காமல் வேலையில் மும்முரமாயிருப்பதாகப் பாவனை செய்ய வேண்டும். சற்று நேரங்கழித்து, தலையைத் தூக்கி, அப்போதுதான் நினைவு வந்தாற்போல், "ஓ... இதோபாரு!" என்று ஆரம்பித்துப் பேச வேண்டும். அப்போதுதான் மதிப்பு உயரும். பதவி உயர உயர, மனிதர்களை மேலும் மேலும் அலட்சியப்படுத்த வேண்டும் என்பதைக் கற்றுக் கொண்டுவிட்டேன். தவிர மணியொலி கேட்டதுமே மறுபுறத்தில் வனமாலி பாபுவும் மற்றவர்களும் இப்போது யாருக்கு அழைப்பு வரும் என்று எதிர் பார்த்துக் கொண்டு தயார் நிலையில் இருப்பார்கள். எவ்வளவு முக்கியமான

வேலையாக இருந்தாலும் நான் அவர்களிடம் போக மாட்டேன். அவர்கள் தான் என்னிடம் வரவேண்டும். ஏனென்றால் நான் அவர்களை விட அதிகச் சம்பளம் வாங்குகிறேன். நடுநடுவில் அவர்களது அறைக்குப் போய் அவர்களுடைய மேஜைக்கு முன்னால் நின்று கொண்டு புன்சிரிப்புடன் சௌஜன்யமாகப் பேசவேண்டும். அதுவும் ஒரு தொழில் தந்திரம். நான் சர்க்கார் ஆபீசில் வேலே செய்தபோது என் சீட்டுக்கருகில்தான் உதவிச் செயலாளர் மிஸ்டர் சக்கரவர்த்தியின் அறை இருந்தது. அவரது அழைப்பு மணி ஒலித்ததும் குமாஸ்தாக்களான நாங்கள் பத்துப்பேர் பரபரப்பாகி விடுவோம். கிழட்டுப் பியூன் சீரியஸ் முகத்தோடு உதவிச் செயலாளரின் அறைக்குள் நுழைவான். பிறகு அங்கிருந்து சிரித்த முகத்துடன் யானை மாதிரி ஆடியசைந்து கொண்டு வந்து என்னிடம், "சுநீல்பாபு, துரை உங்களைக் கூப்பிடறாரு, டிரக் கண்ட்ரோலர் ஃபைலை எடுத்துக்கிட்டு வரச் சொல்றாரு.." துரையாம் துரை! சக்கரவர்த்தியை இருட்டில் பார்த்தால் அவருடைய பிள்ளைக்குட்டிகளே பயந்து மயக்கம் போட்டு விழுந்து விடுவார்கள். அவருடைய உடம்பின் நிறம் அப்படி. அவர் துரையாம்!

அந்த வேலையை விட்டேனோ, பிழைத்தேன்.

ஜரிசிங்கிடம் சொன்னேன், "டோஸ்ட்டும் டீயும் வாங்கிவா... கோவிந்தபாபு, நீங்க டீ சாப்பிடுவீங்க, இல்லையா...? மூணு கப் டீ!"

கோவிந்த பாபு அங்கிருந்து சற்று வெளியே போனபோது சுவிமல் சொன்னான், "அடேயப்பா, நேத்திக்கு அவிநாஷுக்காக என்ன அடி வாங்க வேண்டியதாப் போச்சு...! இடுப்பு இன்னும் வலிக்குது..."

"எனக்குந்தான் இடது கை வலிக்குது... உன்னாலேதான் சண்டை வலுத்தது..."

"நானா? இல்லவேயில்லே...! அவங்களுக்குள்ளே ஏதோ தகராறு... எனக்கென்ன வந்தது?"

"நீ ஏன் ஹீராலாலை அடிக்கப் போன? அவங்க ரெண்டு பேரும் அடிச்சுக்கிட்டா உனக்கென்ன வந்தது?"

"நானா?"

"நீ நல்ல போதையிலே இருந்தே. அதுதான் உனக்கு ஞாபகம் இல்லே. அது போகட்டும். சேகரைப் பத்தி ஏதாவது தெரிஞ்சுதா?"

"எனக்கெப்படித் தெரியும்? நான் வீட்டைவிட்டு இப்பத்தான் வெளியே வரேன்."

"சேகர் மாயமா மறைஞ்சுட்டானே! ஆச்சரியமாயிருக்கு."

"வீணா வீட்டிலே தேடினியா...? வா போய்ப் பார்க்கலாம்."

"நான் வரலே... நீ வேணாப் போ!"

"தனியாப் போய் அவகிட்ட மாட்டிக்கணுமா? பைத்தியக்காரத் தனந்தான்! நீ வந்தா ரெண்டு பேருமாப் போகலாம்."

"எனக்கு இன்னிக்கு நேரமில்லே. எனக்கு ஆஸ்பத்திரிக்குப் போய்த் தான் ஆகணும்—தாத்தாவைப் பார்க்க. நேத்திக்கே போயிருக்கணும் நான்... போகலேன்னாக் கண்முழி கிடைக்காது... இப்போ கொஞ்சம் தேவலைன்னுதான் கேள்விப்பட்டேன்..."

"உன்னோட எந்தத் தாத்தா? சாணக்கியரைப் பத்திப் புத்தகம்

எழுதினவரா?"

"ஆமா"

"உங்க குடும்பத்திலே படிப்பு, எழுத்து எல்லாம் நிறைய உண்டா?"

"பின்னே நாங்க என்ன உன் மாதிரி படிப்பில்லாத ஜமீந்தார் வம்சமா...? இப்போ அந்த ஜமீந்தாரியும் போயிடுச்சு உங்களுக்கு!"

"இப்படிப்பட்ட படிச்சவங்க வம்சத்திலே பொறந்த நீ படிக்காம இருந்துட்டியே...! உன்னோட கோழி முட்டைக் கண்ணைப் பார்த்தா எனக்கு எங்க வீட்டு மாட்டோட நினைவு வருது... கோவிச்சுக்காதே..."

நாங்கள் ஆபீசிலிருந்து வெளியே வந்ததும் சுவிமல் கேட்டான், "உனக்கு ஆஸ்பத்திரி போய்த்தான் ஆகணுமா?"

"ஆமா... நீயும் வாயேன்!"

சுவிமல் அருவருப்போடு பதிலளித்தான், "சீ! எனக்கு ஆஸ்பத்திரி போகப் பிடிக்கறதில்லே... தவிர நர்சுங்களோட அழகை ரசிக்கவும் தெரியாது எனக்கு ... நீ இன்னிக்கு ஒருநாள் ஆஸ்பத்திரிக்குப் போக வேண்டாமே...! வா, வீணா வீட்டுக்குப் போகலாம்..."

"ஏன் திருப்பித் திருப்பிச் சொல்லிக்கிட்டு இருக்கே! எனக்கு ஆஸ்பத்திரி போகணும்னு சொல்றேனில்ல...! ஒருநாள் கூடப் போகலே நான்... பார்க்க வேண்டிய கடமை இருக்குங்கறதைத் தவிர, அவரை ஒரு தடவை பார்த்துத்தான் ஆகணும் எனக்கு. நான் அவரைப் பார்த்து எட்டு வருஷம் ஆச்சு. ரொம்ப நாள் காசியிலே இருந்தார். ஆறு மாசம் முன்னாலே பெர்ஹாம்பூருக்கு வந்தார். அதுக்கப்பறமும் அவரைப் பார்க்கலே நான்..."

"இப்போ எப்படிப் போவே? டிராம், பஸ்ஸிலே ஒரே கூட்டம்!"

"உன்னாலே நேத்திக்கும் போகலே நான்..."

"என்னாலேயா?"

சுவிமல் விளக்குக் கம்பத்தின் மேல் சாய்ந்து நின்று கொண்டு பரிதாபமாகச் சொன்னான், "நான் இப்போ எங்கே போவேன்?"

நான் அவனைப் பார்த்தவாறு நின்றேன்.

சுவிமல் பார்க்க அழகாயிருப்பான். இன்று நன்றாக ஷேவ் செய்திருந் தான். அவனது சிவந்த முகத்தின் ஷேவ் செய்யப்பட்ட இடங்களில் லேசான நீலப் பூச்சு, நன்றாக எண்ணெய்த்தடவிச் சீவப்பட்ட தலைமுடி. மடிப்புக் கலையாத பளீர் வெள்ளை வேஷ்டி, ஜிப்பா-இப்படிப்பட்ட வனுக்கு ஒரு வேலையும் கிடையாது. போக ஓர் இடமும் இல்லை. பரிதாபமாயிருக்கிறது அவனைப் பார்க்க.

அவன் ஏக்கத்தோடு சொன்னான், "நீயும் போயிட்டேன்னா நான் தனியா என்ன பண்ணுவேன் இந்த சாயங்கால வேளையிலே...? அதுசரி, சாயங்கால வேளையிலே ஜனங்க எங்கே போவாங்க. சொல்ல முடியுமா உன்னாலே? தெருவிலே இவ்வளவு பேர் போயிக்கிட்டு இருக்காங்களே, இவங்க எங்கே போறாங்க? இவங்க போயிக்கிட்டு இருக்காங்களா, வந்துக்கிட்டு இருக்காங்களா? சாயங்கால வேளையிலே எப்படித் தனியாப் பொழுதைப் போக்கறது? ஒத்தையா சினிமாவுக்குப் போக முடியுமா? மைதானத்திலே போய்த்தனியா உக்காந்திருக்க முடியுமா? எல்லாரும்

வீட்டுக்குத்தான் திரும்பிப் போறாங்களா? நாள் பூரா ஆபீசிலே வேலை பார்த்தவங்க வீட்டுக்குப் போறாங்க. நான் நாள் பூரா வீட்டிலே இருந்துட்டு சாயங்காலந்தான் வெளியிலே வரேன். யாரோடயாவது பேசிப் பொழுது போக்க முடியல்லேன்னா என்ன பண்ணுவேன் நான்?"

"ஏதாவது ஒரு வேலை தேடிக்கோ!"

"நான் வேலை செய்யாம இருக்கேனா என்ன? போன மாசந்தான் ரஷியக் கூட்டுப் பண்ணைகளைப் பத்தி ஒரு பாடாவதிப் புத்தகத்தை மொழி பெயர்த்தேன். மொழி பெயர்க்கறதுக்குள்ளே உசிரு போயிடுச்சு... ஏதோ நானூறு ரூபா கிடைச்சுது..."

"கம்யூனிஸ்ட்டுங்க இப்பவும் உனக்கு வேலை கொடுக்கறாங்களா...? உன் மாதிரி ஒரு..."

"யார் காசு கொடுத்தாலும் நான் வேலை செய்யத் தயார். ரஷியக் கூட்டுப் பண்ணையும் அமெரிக்கத் துப்பறியும் நாவலும் எனக்கு ஒண்ணு தான்-அதாவது இதெல்லாம் எனக்கு ஒரு மொழிபெயர்ப்பு வேலை. அவ்வளவுதான்... இதைக்கேளு, இன்னிக்கு மதியத்திலே நானா ஒண்ணு எழுதினேன். அப்பறம் திடீர்னு மனசுக்குள்ளே ஒரு பரபரப்பு-உடனே எங்கேயாவது வெளில போய் யாரோடயாவது பேசி என் எழுத்தைக் கொஞ்சநேரம் மறக்கணும் போலே இருந்தது. அதைக் கொஞ்சநேரம் மறக்காம இருந்தேன்னா அதுக்கிட்ட எனக்கு ஈடுபாடு ஏற்படாது. நான் தனியா இருந்தா அது என்னைப் பேய் மாதிரி பிடிச்சுக்கும். நான் ஒண்ணு, நிறையக் குடிக்கணும், அல்லது தாசி வீட்டுக்குப் போய் மஜா பண்ணணும், அல்லது சூதாட்டம் ஆடணும் இந்த மாதிரி ஏதாவது செய்யாட்டி என்னால என் எழுத்தை மறக்க முடியாது. தாசிக்குப் பதிலா ஒரு கண்ணியமான பெண்ணோடே-வேறே ஒண்ணுமில்லே-கொஞ்ச நேரம் பேசிக்கிட்டிருந்தாக்கூடப் போதும் எனக்கு. நிறையக் குடிக்கறதுக்குப் பதிலா காட்டுக்குப் போய் வேட்டையாடவும் நான் தயார். எழுத்து நல்லா வரணும்னா அதைக் கொஞ்சம் மறந்திருக்கணும். மறக்கணும்னாத் தீவிரமா ஏதாவது ஒரு காரியம் செய்யணும். இல்லாட்டி மறக்கமுடியாது. எழுத்துங்கறது அவ்வளவு பயங்கரமான விஷயம். சிற்பிகளுக்கு மாடல் வேணும், பாடகனுக்குப் பக்க வாத்தியம் வேணும், எழுத்தாளனுக்கு மட்டும் ஒண்ணும் வேணாமா, ஊம்?"

"நீ ஏன் என்னை அதட்டறே? நானா இதுக்குப் பொறுப்பு?"

"நிச்சயமா! நீ ஏன் என்னை விட்டுட்டு ஆஸ்பத்திரிக்குப் போறேங்கிறே?"

"நான் ஒருத்தன்தானா உனக்கு அகப்பட்டேன்? அவிநாஷையோ பரீட்சித்தையோ தேடிக்கிட்டுப் போயேன்!"

"ஆபீசெல்லாம் மூடியாச்சு. இப்போ அவங்களை நான் எங்கேன்னு தேடறது? ஒவ்வொரு சாராயக் கடையாப் போய்த்தேட முடியுமா? நீ என்னை அவ்வளவு மட்டமாவா நினைக்கறே? என்கிட்டே காசு இருந்தா நானே ஒரு சாராயக்கடையிலே போய் உக்காந்துக்கிட்டுக் குடிப்பேன். என் பை காலி, இதோ பாரு!"

"என்கிட்டேயும் காசு இல்லே... சிநேகிதங்களைத் தவிர வேறு யார்

கிட்டேயும் காசு கிடைக்காதா? உனக்கு வேறே தெரிஞ்சவங்க இல்லையா?"

"இல்லாம என்ன? ஆனா அவங்க எப்படிப்பட்டவங்க தெரியுமா? வெஜிடபில் கட்லெட்! வெளியே பார்க்கறதுக்கு ஒரு மாதிரியா இருக்கும். உள்ளே பார்த்தால் மட்டச்சரக்கு! பிரதீப் பாபு-வீட்டுக்குப் போனா அவரும் அவரோட பெண்சாதியும் டீ கொடுப்பாங்க. பேசிக்கிட்டிருப் பாங்க-ஆனா வெஜிடபில் கட்லெட் சாப்பிட்ட மாதிரி இருக்கும். பிரதீப் பாபுவுக்குப் பதிலா ரதன் பாபு வீட்டுக்குப் போனாலும் இதே கதைதான்..."

நான் அவனுடைய பேச்சில் பொறுமையிழந்து கொண்டிருந்தேன். சொன்னேன், "யாரையாவது காதலிக்க ஆரம்பியேன்! பொழுது நல்லாப் போகும்... அந்த டெலிபோன் ஆபரேட்டர் விஷயம் என்ன ஆச்சு?"

"நாளைக்கு அருணோட ஆபீசுக்குப் போய்ப் பார்க்கறேன்..."

"நீ காபி ஹவுஸ் போய்ப் பாரேன்... அங்கே யாராவது கிடைச்சாலும் கிடைக்கலாம்... இன்னிக்கு என்னை விட்டுடு, ப்ளீஸ்...!"

கூட்டத்தில் டிராமிலோ பஸ்ஸிலே ஏறாமல் பி.ஜி. ஆஸ்பத்திரிக்கு நடந்தே போய்விட முடிவு செய்தேன். ரஸ்தாவை விட்டுக் குறுக்கு வழியில் போவதற்காக மைதானத்தில் நுழைந்தேன். ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டேன். மூன்று சிகரெட்டுகள் குடித்து முடிப்பதற்குள் ஆஸ்பத்திரிக்குப் போய்ச் சேர்ந்து விடவேண்டும என்று தீர்மானித்துக் கொண்டு வேகமாக நடக்கத் தொடங்கினேன். குளிர்ச்சியான ஈரக்காற்று மிகவும் இதமாக இருந்தது...

ஆஸ்பத்திரி வாசலிலேயே பெரிய மாப்பிள்ளையைப் பார்த்தேன். அவர் உள்ளேயிருந்து வேகமாக வந்து கொண்டிருந்தார். என்னைப் பார்த்துவிட்டுச் சொன்னார், "வா, உன் அம்மாவுக்கு தகவல் சொல்லணும். உன் தாத்தா இறந்து போய்விட்டார். ரொம்பக் கஷ்டப்படலே. நினைவோடு இருந்தார் கடைசி வரையிலே. சாகறதுக்கு முன்னாலே உன்னைப் பத்தி விசாரிச்சார்..."

நான் திகைத்து நின்றேன். பெரிய மாப்பிள்ளையைப் பார்த்தபின்னும் கையிலிருந்த சிகரெட்டை எறியவில்லை என்ற உணர்வு ஏற்பட்டதும் சட்டென்று பின்பக்கமாக எறிந்து விட்டேன்.

இன்று என்ன கிழமை? புதன். இன்று பாட்டுக்கிளாஸ் இல்லை... இன்று மயானத்துக்குப் போகவேண்டும்...



என் சிறுவயதிலிருந்தே எனக்கும் என் தந்தைக்குமிடையே இடைவெளி ஏற்பட்டுவிட்டது. என் நண்பன் தபன் தன் அப்பாவைப் "பாபுஜி" என்று அழைப்பான். "பாபுஜி, நீ எனக்கு ஏர்கன் வாங்கித்தர்ரேன்னு சொன்னியே, வாங்கித் தரலியே!" என்று சொல்வான். தோழனிடம் பேசுவது போல் அவருடன் பேசுவான். நான் அப்பாவை "நீங்க" என்றுதான் அழைப்பேன். வீட்டுக்குச் சிறிய பிள்ளை என்ற முறையில் அப்பாவின் செல்லமாக இல்லை நான். அவரைக் கூடிய வரையில் தவிர்ப்பேன். அவர் எப்போதும் சீரியஸாக இருப்பார். தன் அபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ள மாட்டார்.

ஆகையால் அவரோடு பேச எனக்கு ஆர்வமேற்படுவதில்லை. தெருப் பையன்களுடன் தேர் பார்க்கப்போக அவரிடம் அனுமதி கேட்டால் "போகக் கூடாது!" என்று சொல்லிவிட்டு முகத்தைத் திருப்பிக் கொண்டுவிடுவார். அதாவது 'இதைப்பற்றி இனிப் பேசாதே!' என்று பொருள். பள்ளி நாடகத்தில் எனக்கு ஈஷாகானின் பாத்திரம் கிடைத்தது. ஒத்திகை மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. எங்கள் வரலாற்று ஆசிரியர்தாம் நாடக இயக்குநர். இந்த சமயத்தில் அப்பா "நாடகமாவது, கீடகமாவது!" என்று சொல்லிவிட்டார். அதுதான் அவரது முடிவான தீர்மானம். நாடகத்தன்று நான் கண்ணீரும் கம்பலையுமாய்ப் பார்வை யாளர்களோடு உட்கார்ந்திருந்தேன். அப்பாவின் இந்தக் கடுமையான சுபாவத்துக்காக எனக்கு அவரிடம் பயத்தோடு மரியாதையும் இருந்தது. என் தந்தை மற்ற அப்பாக்கள் மாதிரி இல்லை. அவர் ஒரு அலாதிப் பிறவி என்ற கர்வமிருந்தது எனக்கு. ஆனால் கொஞ்சங் கொஞ்சமாக அவருடைய முட்டாள்தனமும் பிடிவாத குணமும் கண்ணில் படத் தொடங்கின. அவருடைய கடுமை கேலிக்குரியதாகத் தோன்றியது. நான் ஒரு தடவை மூன்றாவது சித்தாப்பாவின் சட்டைப் பையிலிருந்து நாலணா திருடியதற்காக என்னைச் செம்மையாக அடித்து விட்டார் அப்பா. அதன் விளைவாக இரண்டு மூன்று நாள் காய்ச்சல் வந்து அவதிப்பட்டேன். அதே வருடம் குளிர்காலத்தில் எங்கள் வீட்டில் ஒவ்வொருவருக்கும் ஒரு நல்ல கலர் சால்வை கிடைத்தது. பிறகு எனக்குத் தெரிய வந்தது-துணிக்கடை ஹரிதாஸ் சாஹுவின் அசட்டுப் பிள்ளையைத் தம் செல்வாக்கால் டெஸ்ட் பரீட்சை எழுத அனுமதித்ததற்காக அவன் அப்பாவுக்கு அளித்த 'நன்கொடை' அது என்று. இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு நான் அப்பாவை வெறுக்கத் தொடங்கவில்லை. ஆனால் அவரும் ஒரு சாதாரண மனிதர்தான் என்ற உணர்வு ஏற்பட்டு விட்டது. என் அண்ணன் அடக்கமான தன்மையுள்ளவன். தாத்தாவிடம் சமஸ்கிருதமும் கணக்கும் ஒன்றாகக் கற்றிருந்தான். அவன் ஒரு போதும் அப்பாவை எதிர்த்துப் பேசியதில்லை. நான் மட்டும் அவருக்கு ஏறுமாறாக நடந்து கொள்ளத் தொடங்கினேன்.

பாகிஸ்தான் பிறந்த பிறகு நாங்கள் கிழக்கு வங்காளத்திலிருந்து நேரே கல்கத்தாவுக்கு வராமல் பெர்ஹாம்பூர் போய்விட்டதால் 'அகதி' என்ற முத்திரை எங்கள் மேல் விழவில்லை. என் தாத்தா முன்பே பெர்ஹாம்பூரில் ஆசிரியராயிருந்தார். அவர் என் அப்பாவுக்கும் ஆசிரியர் வேலை வாங்கிக் கொடுத்தார். நாங்கள் விரைவில் உள்ளூர் ஜனங்களோடு ஒன்றிப் போய்விட்டோம். என் மூன்று தமக்கைகளும் நல்ல அழகிகள். ஆகையால் எங்கள் குடும்பத்துக்கு ஊர் மக்களின் மரியாதையும் ஆதரவும் எளிதில் கிடைத்தது. என் தமக்கைமார் தலைப்பின்னல் அசைய, பள்ளியிலிருந்து திரும்பி வரும்போது தெருமுனையில் அரட்டையடிக்கும் இளைஞர்கள் சொல்லிக் கொள்வார்கள்— "என்னதான் சொல்லு, இந்தக் கிழக்கு வங்காளத்துப் பொண்ணுங்களை அழகிலே மிஞ்சமுடியாது!" அவர்களுக்குப் பின்னால் நான் நின்று கொண்டிருப்பேன். ஆனால் அவர்கள் என்னைப் பொருட்படுத்த மாட்டார்கள். அவர்கள் என் தமக்கைகளைப் பற்றி ஏதாவது ஆபாசமாகப் பேசினால் அவர்கள் மேல்

கல்லைவிட்டு எறிய வேண்டும் என்று நினைப்பேன் நான்.

ஊரில் பழம்பெருமை வாய்ந்த குடும்பங்களில் ஒன்று மைத்ரா குடும்பம். அந்தக் குடும்பத்துப் பெரிய பையன் என் பெரிய அக்காவைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்பியபோது எங்கள் வீட்டில் மகிழ்ச்சி வெள்ளம் கரை புரண்டோடியது. அப்பா 'ராட், வாரேந்திர' என்ற சாதி உட்பிரிவுகளைக் காட்டி ஆட்சேபம் எழுப்பினார். ஆனால் வரதட்சிணை இல்லாமல் என் அக்காவுக்கு இவ்வளவு நல்ல வரன் கிடைக்கிறது என்பதால் அம்மா அப்பாவின் ஆட்சேபத்தைப் பொருட்படுத்தவில்லை. பிற்காலத்தில் என் சின்ன அக்கா சாதி விட்டுச் சாதியில் ஒரு காயஸ்தனைக் கலியாணம் செய்து கொண்டாள். இதற்கு நானும் ஒரு காரணம் என்றுதான் சொல்ல வேண்டும். அக்காவின் காதலனின் காதல் கடிதங்கள் என் மூலமாகத்தானே அக்காவுக்குக் கிடைக்கும்!

பெர்ஹாம்பூரிலேயே எனக்கு சேகருடன் பரிச்சயம் ஏற்பட்டுவிட்டது. அங்கேதான் அவனுடைய மாமா வீடு. விடுமுறையில் அவன் அங்கே வருவான். ஒரு சமயம் என் பள்ளியில் ஒப்பித்தல் போட்டியில் எனக்குப் பரிசு கிடைத்தது. அப்போது சேகர் பெரிய மனித தோரணையோடு என்னிடம் வந்து, "உன் குரல் நல்லாத்தான் இருக்கு. ஆனா உன்னோட உச்சரிப்பு அவ்வளவு சரியில்லே... நீ ஒப்பிச்ச கவிதையோட அர்த்தம் தெரியுமா உனக்கு?" என்றெல்லாம் சொன்னான். இதைக் கேட்டு ரொம்பக் கோபம் வந்துவிட்டது எனக்கு. 'இவன் பெரிய வீட்டுப் பிள்ளையா இருக்கலாம், ஆனாத் தகராறு வந்தா இவனை ஒரே அடியிலே மண்ணைக் கவ்வ வச்சுடலாம்" என்று தோன்றியது எனக்கு. பத்மா நதியின் முழக்கம். ஆடியல்கான் ஆற்றின் பயங்கர வெள்ளம். வாணிசக் ஏரியின் கம்பீரமான கடுமை-இவற்றையெல்லாம் இழந்துவிட்ட துக்கம் அப்போதும் தீவிரமாயிருந்தது என் மனதில். யாரைப் பார்த்தாலும் முதலில் அவரிடமிருந்து என்னை எப்படிக் காத்துக் கொள்வது என்றுதான் தோன்றும் எனக்கு.

ஆனால் சேகருடன் எனக்கு நட்பு ஏற்பட்டு விட்டது. பெர்ஹாம்பூரில் சிறிதே தண்ணீர் ஓடும் கங்கைக் கரையில் நாங்களிருவரும் உலாவப் போவோம். சேகர் எனக்கு ஒரு வகுப்பு மேலே படித்து வந்தான். நாங்கள் ஆர்மீனியன் மாதா கோவிலின் இடிந்த சுவருக்கருகில் உட்கார்ந்திருக்கும் போது சேகர் சொல்லுவான், "எனக்குக் கடல் கொள்ளைக்காரனாகி சமுத்திரத்திலே அலைஞ்சு திரியணும் போல இருக்கு. உனக்கு?"

ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் மீற எனக்கு முதலில் கற்றுக் கொடுத்தவன் சேகர்தான். அவன் அதிகாலை நான்கு மணிக்கு எங்கள் வீட்டு ஜன்னல் ஷட்டரைத் தூக்கித் தணிந்த குரலில், "சுநீல், எழுந்துவா!" என்று அழைப்பான். நான் நன்றாகத் தூங்குபவன். அவன் குரலுக்கு என் தூக்கம் கலையாது. அவன் ஒரு மூங்கில் குச்சியால் என்னைக் குத்திக் குத்தி எழுப்புவான். "வா, லால்கோலா பாசஞ்சர்லே ஏறி மூர்ஷிதாபாதுக்குப் போகலாம்" என்பான். நான், "இப்பவா? அப்பா திட்டுவாரே!" என்று சொன்னால், "ப்பூ! சும்மா வாடா!" என்று சொல்லுவான்.

ஒவ்வொருநாள் இருட்டின பிறகும் வெகுநேரம் ஆற்றங்கரையில்

உட்கார்ந்திருப்போம். சேகர் சொல்லுவான். "இன்னிக்கு ரயில்வே ஸ்டேஷனுக்குப் போய் ராத்திரிப் பூராப் பிளாட்பாரத்திலே படுத்துத் தூங்குவோம். எவ்வளவு பேர் அங்கே தூங்கறாங்க!"

"வீட்டிலே தேடமாட்டாங்களா?" என்று பயத்தோடு கேட்பேன்.

"தேடட்டுமே...! நாம் என்ன செத்தா போறோம்? காலைதான் வீட்டுக்குப் போயிடறோமே...! கொஞ்சம் திட்டுவாங்க, அவ்வளவுதான்!"

பிறகு அவன் சப்தம் செய்யாமல் சிரித்தவாறு சொல்வான், "நடு நடுவிலே வழக்கத்துக்கு மாறா நடந்துக்கணும். ஒரே மாதிரியா வாழ்க்கை நடத்தக்கூடாது. ஒரு குறிப்பிட்ட நேரத்திலே எழுந்திருக்கறது. குறிப்பிட்ட நேரத்திலே சாப்பிடறது. மணிப்படி தூங்கறது-இப்படியிருந்தா சலிப்புத் தட்டிப் போகும்..."

அப்போது அம்மாவுக்கு உடல் நலமின்றிப் படுத்த படுக்கை. அப்பா வாயே திறக்க மாட்டார். அக்காமார்களிடையே எப்போதும் வேடிக்கை, விளையாட்டு, வாய் ஓயாமல் பேச்சு. வீட்டில் யாரும் என்னைக் கவனிப்பதில்லை. வீட்டார் என்னை அலட்சியப் படுத்துவதாக எண்ணி எனக்கு அவர்கள் மேல் கோபம்.

ஒருநாள் இரண்டாவது அக்கா என்னை அதட்டினாள், "என்ன இவ்வளவு அசிங்கமாப் பரதேசி மாதிரி உடுத்தறே? டீசன்டா டிரெஸ் போட்டுக்கக் கூடாதா? பார்க்கறதுக்கு முரடன் மாதிரி ஆயிக்கிட்டிருக்கே நாளுக்குநாள்...! வெக்கமாயில்லே உனக்கு?"

எனக்கு வந்த கோபத்தில் அவள்மேல் கண்ணாடி டம்ளரை வீசி யெறிந்து விட்டேன்...

ஒரு சமயம் ரயில் லைனுக்கருகில் மூன்று நான்கு பேர் ஒரு மண் பானையைச் சுற்றி உட்கார்ந்திருப்பதைப் பார்த்து, என்ன விஷயம் என்று தெரிந்து கொள்ள அங்கே போனோம்...

நாங்கள் கள் குடித்தது அதுதான் முதல் தடவை. அப்போது எனக்கு வயது பதினான்கு, பதினைந்து இருக்கும்.

மெட்ரிகுலேஷன் பாஸ் செய்த பிறகு கல்கத்தா போய்ப் படிக்க விரும்பினேன் நான். பெர்ஹாம்பூர் எனக்குப் பிடிக்கவில்லை. தவிர எனக்கு விஞ்ஞானம் படிக்கச் சற்றும் விருப்பமில்லை. ஆனால் அப்பா வலுக்கட்டாயமாக என்னை பெர்ஹாம்பூர் கல்லூரியிலேயே ஐ.எஸ்.ஸியில் சேர்த்து விட்டார். நான் அம்மாவை எவ்வளவோ கெஞ்சிக் கேட்டுக் கொண்டும் அவள் என் சார்பில் அப்பாவிடம் பேசவில்லை. அம்மாவின் மேல் எனக்கு மிகவும் கோபம் ஏற்பட்டது. நான் கல்லூரியில் சேர்ந்து சில நாட்களுக்குப் பிறகு கெமிஸ்டிரி லேபரட்டரியில் என் கை பட்டு ஒரு பீங்கான் ஜாடி விழுந்து பக்கத்திலிருந்த சல்ஃப்யூரிக் அமில ஜாடியும் கவிழ்ந்து போய் உடைந்து விட்டது. அதற்காக எனக்கு ஐம்பது ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டது. உண்மையில் என்மேல் குற்றமே இல்லை. நான் கால் தடுக்கி விழ இருந்தேன். அமிலம் என்மேல் கொட்டியிருந்தால் என் உயிரே போயிருக்கும். கொஞ்சம் அமிலம் என் இடது காலில் தெரித்ததால் அந்த இடம் பொசுங்கிப் போய் வெள்ளைத் தழும்பு இன்னும் இருக்கிறது.

இந்தச் செய்தி கேட்டு அப்பாவுக்கு ஒரே கோபம். எனக்கு சயின்ஸ்

படிக்க விருப்பமில்லாததால் நான் வேண்டுமென்றே இப்படிச் செய்ததாக அவர் நினைத்துவிட்டார். நான் செய்த தவறுக்குப் பிராயச்சித்தமாக அவர் தாம் மூன்று நாள் சாப்பிடப் போவதில்லையென்று அம்மாவிடம் சொன்னார். வீட்டில் எல்லாரும் என்னை இகழ்ச்சியாகப் பார்த்தார்கள். எனக்கு நினைவு தெரிந்து அப்போதுதான் நான் முதல் தடவையாக அம்மாவிடம் போய் அழுதேன். 'நான் வேண்டுமென்று அமில ஜாடியை உடைக்கவில்லை. படிக்க ஆரம்பித்த பிறகு எனக்கு சயின்ஸ் பிடித்துப் போய்விட்டது' என்று சொல்லி அழுதேன்.

அம்மா என் பேச்சை நம்பினாளா இல்லையா என்று தெரியாது. ஆனால் அப்பா நம்பவில்லை. அன்றைக்கு அவர் ஒன்றுமே சாப்பிட வில்லை. அக்காக்கள் எல்லாரும் அவரிடம் போய்ச் சாப்பிடச் சொல்லிக் கெஞ்சினார்கள். நான் சாப்பிட்டேனா இல்லையா என்று யாருமே பார்க்க வில்லை. அன்றிரவே நான் கல்கத்தாவுக்கு ஓடி வந்துவிட்டேன். விந்தி விந்தித்தான் நடக்க முடிந்தது என்னால். நான் மிகவும் கோபமாயிருந்ததால் கல்கத்தாவைப் பார்த்துப் பயப்படவில்லை. சியால்தா ஸ்டேஷனிலிருந்து விந்தி விந்தி நடந்து அலைந்து பாக்பஜாரில் இருந்த என் மூன்றாவது சித்தப்பாவின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தேன் கடைசியில். அதற்குப் பிறகு ஒரு வாரம் எனக்குக் கடுமையான காய்ச்சல். நினைவே இல்லை.

மூன்றாவது சித்தப்பாவுக்குக் குழந்தை குட்டிகள் இல்லாததால் சித்தப்பாவும் சித்தியும் என்னிடம் மிகவும் பரிவு காட்டினார்கள். நான் அவர்களுடன் தங்கிக் கல்லூரியில் சேர்ந்து படிக்கத் தொடங்கினேன். அதன் பிறகு எனக்கு பெர்ஹாம்பூருடன் அதிகத் தொடர்பு இல்லை. முதலிரண்டு வருடங்கள் விஜயதசமிக்குப் பிறகு அப்பா அம்மாவுக்கு நமஸ்காரம் செய்யக்கூட நான் அங்கே போகவில்லை. அம்மா அருகி லில்லாத குறையச் சித்தி தீர்த்து வைத்து விட்டாள். அவள் என் கைச் செலவுக்கு நிறையப் பணம் கொடுப்பாள். நிறைய சுதந்திரம் கொடுப்பாள். ஆகையால் அவளிடம் ஒரு பொய்கூடச் சொல்வதில்லை நான். சித்தியின் மலட்டுத் தன்மையைப் போக்க அநேக சிகிச்சைகள் செய்தார் சித்தப்பா. மூன்றாம் தடவையாக அவளுக்கு அறுவை சிகிச்சை நடந்தபோது அவள் இறந்து போய் விட்டாள். சித்தப்பா வீட்டில் என் சுகவாசமும் முற்றுப் பெற்றது.

இன்னொரு அநியாயம் செய்தார் என் அப்பா. அவரை இனி ஒரு போதும் மன்னிக்க முடியாது என்று நான் நினைத்தேன்...

சின்ன அக்கா கல்யாணத்தின்போது சித்தப்பாவும் சித்தியும் வலுக் கட்டாயமாக என்னை பெர்ஹாம்பூருக்குக் கூட்டிச் சென்றார்கள். அது முதல் நான் அவ்வப்போது அங்கே போகத் தொடங்கினேன். நான் பி.ஏ. தேர்வு எழுதிவிட்டு சுமார் ஒன்றரை மாதம் பெர்ஹாம்பூரில் இருந்தேன். அப்போது எனக்கு காயத்ரியுடன் புதிய முறையில் நட்பு ஏற்பட்டது. நான் பள்ளியில் படித்து வந்த காலத்திலிருந்தே எனக்குக் காயத்ரியைத் தெரியும். அவளுடைய அண்ணா நரேன் 'சகோதர சங்க'த்தின் செயலாளராக இருந்தார். அவருக்கு என்னை மிகவும் பிடிக்கும். ஆனால் அந்தப் பருவத்தில் என் ஆர்வமெல்லாம் அரை நிஜாருக்கும் ஃபிராக்குக்கும்

உள்ள வித்தியாசத்தைத் தெரிந்து கொள்வதில்தான் இருந்ததே தவிர, காயத்ரியின் நீண்ட மெலிந்த தோற்றத்தில் ஈடுபடவில்லை. ஒரு சமயம் டவுன் கிளப்பின் வாட்ச்மேன் ராம்சரண் தன் பெண்டாட்டியோடு கட்டிப் புரள்வதைத் தற்செயலாகப் பார்த்துவிட்டு நான் உணர்ச்சி வசப்பட்டு விட்டேன். என் சின்ன அக்காவின் தோழி குண்டுப் பாருலை இறுகக் கட்டிக் கொண்டு விட்டேன். பாருல் என்னைத் தடை செய்யவில்லை. சும்மா என் கன்னத்தில் ஒரு தட்டுத் தட்டிவிட்டு, "நீ ரொம்பப் போக்கிரி ஆயிட்டியே!" என்றாள்...

இந்தத்தடவை காயத்ரி எனக்கு வேறு மாதிரியாகத் தோற்ற மளித்தாள். அவளிடம் ஏதோ ரகசியம் இருப்பதாகத் தோன்றியது எனக்கு. நீள வாட்டமான முகம், அநேகமாக என்னளவு உயரம், ஆரோக்கியமான உடம்பு. தண்ணீர் வற்றிப்போன பாழுங்குட்டையைத் தூர்த்து அந்த இடத்தில் பளபளப்பாக ஒரு மஞ்சள் நிற மாடி வீடு எழுப்பினால் பார்க்க எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கும்! அத்தகைய மகிழ்சசி எனக்கு ஏற்பட்டது இந்தத் தடவை காயத்ரியைப் பார்த்து. அவள் அன்னம் மாதிரி நடந்தாள். ஒவ்வொரு சொல்லையும் கொஞ்சுவதுபோல் உச்சரித் தாள். அவளும் பி.ஏ. தேர்வு எழுதியிருந்தாள். மாலை வேளைகளில் அவள் நூலகத்திலிருந்து புத்தகம் எடுத்து வரும்போது சிறைச்சாலையை அடுத்த ரஸ்தாவில் நான் சந்திப்பேன். அவள் கையில் இரண்டு புத்தகங்கள். ஒவ்வொருநாள் ஒவ்வொரு நிறத்தில் சேலை உடுத்தியிருப்பாள். இவ்வளவு சூட்டிலும் அவளது முகத்தில் வியர்வை ஒரு சொட்டுக் கூட இருக்காது. தெருவில் வீசும் அவ்வளவு காற்றையும் அவள் ஒருத்தியே வசப்படுத்திக் கொண்டு விட்டதாகத் தோன்றும். முதல் நாள் அவளைப் பார்த்து நான் திகைத்துப் போய்விட்டேன். அவளுடன் பேசுவதா இல்லையா என்று தயங்கினேன். என்னைப் பார்த்து ஒரு புன்னகையை உதிர்த்துவிட்டு அவள் போய்விட்டாள்.

அதன் பிறகு தினம் அவளுடன் உலாவத் தொடங்கினேன். நான் அவளுடன் உலாவும்போது அதிகம் பேச்வதில்லை. என் உள்ளத்தில் ஒரு சிலிர்ப்பு பரவியிருக்கும். மாலை வேளைகளில் அவளுடன் இப்படி உலாவுவது ஒரு பெரிய பாக்கியம் என்று எனக்குத் தோன்றும். ஒரு யுவதி நேரே வீட்டுக்குத் திரும்பாமல் என் பேச்சைக் கேட்டு என்னுடன் கங்கைக் கரையில் உலாவுகிறாள்– இந்தப் பெரும் பாக்கியத்துக்கு தகுதி எனக்கில்லை யென்று தோன்றும். இந்த வயதில் பெண்களின் அலட்சியத்தைத்தான் சாதாரணமா எதிர்கொள்ள நேரும்... அவள் ஒரு சமயம் சொன்னாள், "நான் உனக்கு சதீநாத் பாதுரியோட 'ஜாகரி' என்ற நாவல் தரேன். நீ அதைப் படிச்சுட்டு உனக்கு அழுகை வரதா இல்லையான்னு சொல்லு அதிலேருந்து உனக்கும் எனக்கும் ஒத்துமை இருக்கான்னு கண்டு பிடிக்கலாம். நான் அதைப் படிக்கிற போதெல்லாம் அழுதிருக்கேன் ஆனா என் அண்ணா அதைப் படிச்சபோது அவனுக்குக் கண்ணிலே ஒரு சொட்டுத் தண்ணிகூட வரலே... படிச்சுட்டுச் சோம்பல் முறிச்சுக்கிட்டே 'புத்தகம் நல்லாத்தான் எழுதியிருக்காரு' என்கிறான். இந்த மாதிரியா புத்தகம் படிப்பாங்க?"

'ஜாகரி' நாவலை நான் முன்பே படித்திருக்கிறேன் அதைப் படித்த

போது விம்மி விம்மி அழுதுவிட்டேன். அழுகைச் சத்தம் கேட்டுப் பக்கத்து அறையிலிருந்த சித்தி 'என்னவோ, ஏதோ'ன்னு ஓடிவந்து விட்டாள். ஆனால் இந்தச் செய்தியை அப்போது காயத்ரியிடம் சொல்ல வெட்கமாயிருந்தது எனக்கு. அப்படிச் சொன்னால் எனக்கும் அவளுக்கும் மனத்தளவில் மிக்க ஒற்றுமை இருக்கிறது என்று ஒப்புக் கொண்டதாக ஆகி விடும். இன்னும் எவ்வளவோ விஷயங்களைக் காயத்ரியிடம் சொல்ல இயலவில்லை என்னால்—"நீ எப்போதும் கண்ணுக்கு மை தீட்டிக்குவியா? இல்லேன்னா நீ பேசற போதெல்லாம் எப்படி உன் கண்ணு சிரிக்குது? நடக்கறபோது என் உடம்பு உன் உடம்போட தற்செயலா உரசினா என் நெஞ்சு ஏன் படபடன்னு அடிச்சுக்குது? நடு நடுவிலே என் பக்கம் திரும்பி உத்துப் பார்க்கறியே, என்னத்தைப் பார்க்கறே—என் நெத்தியிலே இருக்கற காயத்தழும்பையா?"

ஆனால் இதையெல்லாம் நான் வாய் திறந்து கேட்கவேயில்லை அவளை.

ஒருநாள் நான் காயத்ரியுடன் போய்க்கொண்டிருக்கும் போது அப்பா எங்களைப் பார்த்துவிட்டார். அப்போது அவர் ஹுசேன் சாயபுவின் பையனுக்கு டியூஷன் சொல்லிக் கொடுக்கப் போய்க்கொண்டிருந்தார். நான் அவரைப் பார்த்ததும் சிகரெட்டைத் தூக்கியெறிந்துவிட்டு அப்போது தான் காயத்திரியைப் பார்த்தாற்போல் அவளுடன் பி.ஏ. பரீட்சையைப் பற்றிப் பேசத் தெடங்கினேன். அப்பா பேயைப் பார்த்தவர் போல் பிரமித்துப் போய் நின்றுவிட்டார். இத்தகைய காட்சியை எதிர்பாராதவர் போல் எங்களைப் பார்த்தார். எனக்குச் சங்கடமாயிருந்தது. அவர் எங்களைப் பார்த்துக் கொண்டே பேசாமல் நின்றார். நானும் பேசாமல் நின்று கொண்டிருந்தேன். ஒருவன் தன் அப்பாவைத் தெருவில் சந்தித்தால் என்ன செய்யவேண்டும்? வேறு யாராவதாக இருந்தால் "உங்க அப்பா செளக்யமா?" என்று கேட்கலாம். பரிச்சயமானவராயிருந்தால் ஒரு புன்சிரிப்பை உதிர்த்துவிட்டுக் கடந்து போகலாம், தெரியாதவராயிருந்தால் முகத்தைத் திருப்பிக் கொண்டு போகலாம்.

நான் பார்வையைத் தாழ்த்தியவாறு அவரைக் கடந்து போனேன். காய்த்திரி அவரைக் கவனிக்கவில்லை.

மறுநாள் மாலையில் காயத்ரியின் முகத்தில் ஈயாடவில்லை. பகல் முழுதும் அழுதிருப்பாளென்று தோன்றியது. அவள் என்னிடம் சொன்னாள், "இனிமே இந்த மாதிரி வராதே!"

நான் திடுக்கிட்டு, "ஏன்?" என்று கேட்டேன்.

"உனக்கு வெக்கமாயில்லே...? சீ, நீங்க எல்லாருமே ஒரே மாதிரிதான்!"

"என்ன ஆச்சு?"

காயத்ரி வாடிய முகத்தோடு சொன்னாள், "எனக்கு நிசமாவே இப்போ கல்யாணம் பண்ணிக்க விருப்பமில்லே. என்னைக் கட்டாயப் படுத்தாதே!"

இப்போதும் எனக்கு ஒன்றும் புரியவில்லை. எனினும் அவளது பேச்சைக் கேட்டுத் திடுக்கிட்டேன். வியப்போடு, "நீ என்ன சொல்றே, காயத்ரி?" என்று கேட்டேன்.

"உன்னோட அப்பா எங்க வீட்டுக்கு வந்திருந்தார். உனக்கும் எனக்கும்... ஆமா, உன் அப்பா என் அப்பாகிட்டே சொன்னார். என் காதால கேட்டேன்... சீ, இதை நீயே என்கிட்டே சொல்லியிருக்கக் கூடாதா? உன் அப்பாவை முதல்லியே அனுப்பணும்மா?"

அவமானத்தால் என் முகம் சுருங்கிவிட்டது. அந்த வயதில் அவமானம் ஏற்பட்டால் உடனே என் கண்ணில் தண்ணீர் வந்துவிடும். இந்த மாதிரி நேரும் என்று நான் எதிர்பார்க்கவேயில்லை. நேற்றிரவு அவர் என்னிடம் ஒன்றும் சொல்லவில்லை. வீட்டிலும் இதைப் பற்றிப் பேசித் தகராறு செய்யவில்லை. நான் மிகவும் சிரமப்பட்டுக் கண்ணீரை அடக்கிக்கொண்டு, "என்னை நம்பு காயத்ரி... எனக்கு ஒண்ணுமே தெரியாது..."

"உன் அப்பா சொன்னார், 'நம்ம சாதி ஒண்ணாயிருக்கறதாலே சீக்கிரம் கலியாணம் பண்ணிடலாம்... இந்த மாதிரி சுத்தறது பார்க்க நல்லாயில்லே...' நான் என்ன தப்புப் பண்ணினேன்? உன்னோட கொஞ்ச தூரம் உலாவிட்டு வரது குத்தமா? உனக்கு இந்த மாதிரி எண்ணம் இருந்தா உன் அப்பாகிட்டே சொல்றதுக்கு முன்னாலே என்கிட்டே சொல்லியருக்கலாமே!"

"நான் யார்கிட்டேயும் எதுவும் சொல்லலியே!"

"இந்தக் கலியாணத்திலே என்னோட அப்பாவுக்கும் அண்ணாவுக்கும் ஆட்சேபமிருக்காது... ஆனா எனக்கு இப்போ கலியாணஞ் செஞ்சுக்க இஷ்டமில்லே. எனக்கு இன்னும் படிக்க ஆசை, வெளிநாட்டுக்கு மேல்படிப்புக்குப் போக ஆசை..."

"என்னை மன்னிச்சிடு, காயத்ரி...! இது ஒரு மிஸ் அண்டர் ஸ்டாண்டிங்க்..."

அன்று நான் வீட்டுக்கு வேகமாக ஓடினேன். தடதடவென்று வீட்டுக்குள் போய் நேரே அப்பாவின் அறைக்குள் நுழைந்தேன். அம்மா அப்போது அப்பாவின் முழங்காலில் எண்ணெய் தடவித் தேய்த்துக் கொண்டிருந்தாள்.

நான் கடுமையாக அப்பாவைக் கேட்டேன், "நீங்க என்ன எல்லாம் உங்க இஷ்டப்படி நடக்கணும்னு நினைச்சுக்கிட்டிருக்கீங்களா? எனக்குன்னு ஒரு விருப்பு, வெறுப்பு இல்லையா?"

அம்மா அவசரமாக எழுந்து வந்து என் கையைப் பிடித்துக்கொண்டு, "நீ ஏன் பைத்தியம் மாதிரி கத்தறே?" என்று கேட்டாள். ஆத்திரத்தில் என் முகம் சிவந்துவிட்டது. என் கண்களில் நெருப்பு. நான் கத்தினேன், "அம்மா, நீ தலையிடாதே இதிலே! அப்பா நரேன் அண்ணா வீட்டிலே போய் என்ன சொல்லியிருக்கார் தெரியுமா?"

"ஏன் உனக்குக் கலியாணம் பண்ணிக்க இஷ்டமில்லையா?" அப்பா கேட்டார்.

"இஷ்டமா இல்லையாங்கறது என்னோட விஷயம்...? நீங்க முதல்லே என்னைக் கேட்டிருக்கலாமே!"

"கலியாணம் பண்ணிக்காம ஒரு பெண்ணோடே சுத்தறதெல்லாம் பிடிக்காது எனக்கு! இந்த வீட்டிலே இருந்துக்கிட்டு அதெல்லாம் நடக்காது!"

"நடக்க வேண்டாம்! நான் இனிமே ஒருநாளும் இந்த வீட்டுக்கு வரமாட்டேன்! உங்க சின்னப்பிள்ளை செத்துப் போயிட்டான்னு நினைச்

சுக்கங்க. இனிமே என்னைப் பத்திக் கவலைப்பட வேண்டிய அவசியமில்லே உங்களுக்கு..."

"சீ, சீ... நீ என்ன இப்படியெல்லாம் பேசறே...?" என்றாள் அம்மா.

இவ்வாறு நான் இரண்டாம் தடவையாக பெர்ஹாம்பூரை விட்டு வந்தேன். நான் அதுமுதல் வீட்டோடு எந்தவிதத் தொடர்பும் வைத்துக் கொள்ள விரும்பவில்லை. இதற்குப் பிறகு சுமார் ஒன்றரை வருடம் சித்தி உயிரோடிருந்த வரையில் சித்தப்பா வீட்டில் இருந்தேன். அந்த சமயத்தில் அப்பாவோ, அண்ணாவோ, அம்மாவோ பெர்ஹாம்பூரிலிருந்து வந்தால் அவர்கள் அங்கு தங்கும் சில நாட்களை நான் என் சிநேகிதர்கள் வீட்டில் தங்கிக் கழிப்பேன்.

எனக்கு நிறையச் செல்லம் கொடுத்தாள் சித்தி. ஒவ்வொருநாள் நான் இரவு மூன்று மணிக்கு வீடு திரும்பியதுண்டு. அப்போது சித்தி எனக்காகக் கண் விழித்துக் காத்திருப்பாள். "இந்த வயதிலே கொஞ்சம் இப்படி அப்படி இருக்கிறது இயற்கைதான். ஆனா உடம்பைக் கெடுத்துக்காதே" என்பாள் அவள்.

சித்தியின் உடல்நிலை ஆரோக்கியமாகத்தானிருந்தது. உடல் மெலிந்திருந்தாலும் செயல்திறனோடு இயங்கியது. வேடிக்கைப் பேச்சு நடக்கும்போது ஹாஸ்யத்தைப் புரிந்து கொண்டு ரசிக்கும் அவளது திறனை நான் வேறெந்தப் பெண்மணியிடமும் கண்டதில்லை. சிரிக்கும் போது அவளுடைய கண்களுடன் மூக்குக்கண்ணாடியும் பளபளக்கும். இவ்வளவு சிறப்புகளிருந்தும் மலடாயிருந்த காரணத்தால் சித்தி அநியாயமாகச் சாக நேர்ந்துவிட்டது.

சித்தியின் மரணத்துக்குப் பிறகு எனக்கும் சித்தப்பாவுக்கும் தகராறு ஏற்படத் தொடங்கியது. கடைசியில் ஒருநாள் நான் சித்தப்பாவின் வீட்டை விட்டுக் கிளம்பி மௌலாலிக்கருகில் ஒரு மெஸ்ஸுக்குப் போய் அங்கே தங்கினேன்.

அதுமுதல்தான் கல்கத்தாவுடன் என் உண்மையான பரிச்சயம் தொடங்கியது. நான் நகரின் ஒவ்வொரு தெருவையும் தனித் தனியாகப் புரிந்து கொள்ள விரும்பினேன். இந்தச் சீரழிந்து போன நகரத்தின் பார்க் தெரு, கலாபாகான் சேரி, கானிங் தெரு, புது அலிப்பூர், தரைக்குக் கீழ்த் தளத்தில் அமைந்த கடையில் அலிகளின் நடனம், வெல்லெஸ்ஸி சதுக்கத்தில் விளையாடும் சிறுவர்கள், ஃப்ரீ ஸ்கூல் தெரு, சித்பூர், பௌபஜார், கிரே தெரு, டாலி கஞ்சில் படிப்படியாக ரேட்டைக் குறைத்துக் கொண்டுவரும் வேசிகள், இரவில் உடைந்து போன குழாய்க்கிணற்றின் பள்ளத்திலிருந்து எடுக்கப்படும் கள்ளச் சாராய போத்தல், சீனர் வசிக்கும் பகுதியில் தோழர்கள் கூடி அரட்டையடிக்கும் இடம், ஹௌரா பாலத்துக்குக் கீழே சோழி வைத்து சூதாட்டம் இவற்றுடன் பழகிப் பழகி நான் கொஞ்சங் கொஞ்சமாக என்னை உறுதியாகவும் உண்மையாகவும் ஆக்கிக் கொள்ளத் தொடங்கினேன். இவற்றை அறிமுகம் செய்துகொள்ள எனக்குச் சிறிதும் சிரமம் ஏற்படவில்லை. இவற்றுள் ஒன்றுடன் பழகிவிட்டால் மற்றவை தானாகப் பழகிவிடும். இரவு பன்னிரண்டு மணிக்கு வெற்றிலை பாக்குக் கடைக்கு முன்னால் நின்றுகொண்டு உள்ளூர்ச் சரக்கைக் குடித்துக்

கொண்டிருக்கும் போது பக்கத்திலிருப்பவர்களின் உரையாடலிலிருந்து அலிகளின் நடனம் நடைபெறும் இடத்தின் விலாசம் தெரிந்து போய்விடும். தொடக்கத்தில் இரண்டு தடவை போலீசால் பிடிக்கப் பட்டுப் 'பெட்டி கேஸ்' ஆகிப் பத்து ரூபாய் அபராதம் கொடுத்து விடுதலை பெற்றேன். பிறகு இந்த இடங்களெல்லாம் நன்றாகப் பழகிப் போய்விட்டன. போலீஸ்காரர்களும் சிநேகமாகி விட்டார்கள். இப்போதெல்லாம் போலீசைக் கண்டால் அவர்களுக்கு லஞ்சம் கொடுப்பதற்காக அவர்களிடமே சில்லறை மாற்றிக் கொள்கிறேன்.

இந்த இடங்களுக்கெல்லாம் நானும் சேகரும் சேர்ந்துதான் போவோம். ஆனால் எங்கள் இருவரது நோக்கங்களும் வேறு வேறு. சேகர் சபல புத்திக்காரன். அவனது ஈடுபாடு எதிலும் வெகுநாட்கள் நிலைத்து நிற்பதில்லை. அதனால்தான் எந்தப் பெண்ணையும் காதலிக்க இயலவில்லை அவனால். பெண்களுடன் அவனுடைய நடத்தை ஓரளவு பரிவு கலந்திருந்தது. சம வயதுப் பெண் அல்லது வேசியை அவன் முத்தமிட்டால் அதுவும் பரிவின் வெளிப்பாடுதான். பல தடவைகள் அவன் பெண்களின் கண்களைப் பார்த்துவிட்டு, “பாவம், உனக்கு ரொம்பத் துன்பம்!” என்று அனுதாபப் படுவான். அவர்களுடைய கண்களில் அவனுக்கு என்ன துக்கம் தெரிகிறது என்று எனக்குப் புரியவில்லை. அவன் எப்போதும் புதுமையைத் தேடி அலைபவன். அவன் முதன்முதலாக ஓரிடத்துக்குப் போனால் மிகவும் மகிழ்ச்சியாயிருப்பான். ஆனால் சில நாட்களுக்குப் பிறகு வேறு எதையோ தேடிக் கொண்டு போய்விடுவான். அவன் ஒரு சமயம் ஒய்.எம்.சி.ஏ. யில் உற்சாகத்தோடு டேபிள் டென்னிஸ் விளையாடுவான். இன்னொரு சமயம் வெள்ள நிவாரணப் பணிக்காக அஸ்ஸாமுக்குப் போவான். அதே உற்சாகத்துடன் இன்னொரு சமயம் பௌபஜார் வேசிகளுடன் பொழுது போக்குவான். நிம்தலா சுடுகாட்டுக்குப் போய் அங்குள்ள பிச்சைக்காரர்களுடன் படுத்துத் தூங்குவான்.

என் தறுதலைத்தனத்துக்கு நான் கற்பித்துக் கொண்ட காரணம் வேறு. சொந்த வீட்டைவிட்டு வெளியேறிய நான் தனிமையுணர்வால் பீடிக்கப்பட்டேன். நான் வீடுவாசல், அப்பா அம்மா இவர்களை மட்டுமின்றி இன்னும் பலவற்றைத் துறந்து விட்டதாகத் தோன்றும் எனக்கு. நான் பிறந்த மண்ணையும் துறக்க நேர்ந்துவிட்டது எனக்கு. எங்கள் சொந்த ஊருக்குப் பக்கத்தில் ஓடுகிறது பயங் கரமான ஆடியல்கான் ஆறு-அதை இழந்துவிட்டேன் நான். எங்கள் வீட்டுக்குப் பக்கத்தில் ஒரு பப்ளிமாஸ் மரம்-அதையும் நிரந்தரமாக இழந்துவிட்டேன். வைசாக் மாதப் புயல் ஓய்ந்ததும் இனி கிளிமூக்கு மாமரத்தடியில் பழம் பொறுக்க ஓடமுடியாது. சுடுகாட்டு ஆலமரத்திலிருந்து பாம்பின் சீறலைக் கேட்க முடியாது. மூங்கில் பாலத்தின்மேல் உட்கார்ந்து கொண்டு கீழே நீரில் மீன்கள் விளையாடுவதைப் பார்க்க முடியாது. கண்ணுக்கெட்டிய தூரம் மார்பளவு வளர்ந்த சணல் பயிருக்கு நடுவில் தனியாக உலாவ முடியாது- பெற்றோரைத் துறப்பது மட்டுமல்ல, ஓர் ஆற்றை, பழகிப்போன இடத்தை நிரந்தரமாக இழப்பதும் துன்பந்தான். பெர்ஹாம்பூரில் இருந்தவரையில் இந்த இழப்பு அவ்வளவு தெரியவில்லை. கல்கத்தாவுக்கு வந்த பிறகு பிறந்த ஊர்,

பேரீச்சம்பழச்சாற்றின் மணம், ஆற்றுத் தண்ணீரின் சலசலப்பு இவற்றின் நினைவு தீவிரமாக மனதைத் தாக்கியது. எல்லாவற்றையும் இழந்த பரதேசியாக என்னை நான் உணர்ந்தேன். ஒவ்வொன்றாக இழந்து வரும் மனிதனுக்கு இன்னும் இழக்கும் வெறி வந்துவிடும். நானும் எல்லாவற்றையும் இழந்து விட முடிவு செய்து விட்டேன்—தர்மம்-அதர்மம், நியாயம்-அநியாயம், பாவம்- புண்ணியம், நம்பிக்கை-நம்பிக்கைத் துரோகம்- புதிய இடத்தில் தனிமையில் நான் பிழைத்திருக்க வேண்டுமென்றால் என்னிஷ்டப்படி வாழ்வதென்று தீர்மானித்துவிட்டேன். தொடக்கத்திலிருந்து துவங்கிக் கொஞ்சங்கொஞ்சமாக என்னை ஒரு முழுமையான மனிதனாக ஆக்கிக் கொள்ள வேண்டும் என்றெல்லாம் நினைத்தேன் நான்.

என் வாழ்க்கை முறைக்கு ஆதரவாக இன்னொரு காரணமும் இருந்தது. நான் இந்த நகரத்துக்குப் புதியவன். ஆனால் யாரும் என்னைப் பட்டிக்காட்டான் என்று நினைத்துவிடக்கூடாது. பட்டணத்தில் எந்தப் பக்கத்திலிருந்து என்மேல் தாக்குதல் வரும் என்று சொல்ல இயலாது; ஆகையால் நான் ஊர்முழுவதும் அலைந்து அதன் மூலைமுடுக்குகளையும் தெரிந்து வைத்துக் கொண்டேன். அந்த சமயம் நான் புது அலிப்பூரில் ஒரு பெரிய பணக்காரரர் வீட்டில் டியூஷன் சொல்லிக் கொடுத்தேன். வீட்டுக்காரரர் ஒரு பெரிய தொழிலதிபர். வீட்டுச் சிறுவர்களுக்குப் பாடம் கற்றுக் கொடுக்கும் சாக்கில் நான் அந்த வீட்டிலிருந்து சொகுசுப் பொருள்கள், அந்த வீட்டார் நடந்து கொள்ளும்முறை, சிறுவர்களின் தமக்கையின் நாகரீக நடை, அவர்கள் வளர்த்த அல்சேஷன் நாய்க்குக் கொடுக்கப்பட்ட செல்லம், வீட்டுக்காரர் என்னுடனோ வேலைக்காரர்களுடனோ பேசும்போது அவருடைய குரலுக்கும் மனைவியுடன் பேசும்போது கையாளும் குரலுக்குமிடையே உள்ள வித்தியாசம், டெலிபோன் மணி அடித்தால் டெலிபோனை எடுக்க மனிதர்களின் வேகம் இவற்றையெல்லாம் கூர்ந்து கவனிப்பேன். புது அலிப்பூரிலிருந்து நேரே கலாசிதலாவிலுள்ள கள்ளுக் கடைக்குப் போவேன். அங்கே குப்பை கூட்டுபவனுக்குப் பக்கத்தில் ஆங்கிலோ இந்தியன், கைவண்டி இழுப்பவனுக்குப் பக்கத்தில் ஓவியன், ஜேப்படிக்காரன் இவர்களெல்லாரும் உட்கார்ந்திருப்பார்கள். நானும் அவர்களுடன் சேர்ந்து உட்கார்ந்து கொண்டு கள் குடிப்பேன். ஆனால் பெரிய மனிதர்களெல்லாரும் அயோக்கியர்கள், ஏழைகளெல்லாரும் நல்லவர்கள் என்ற எண்ணம் எனக்குச் சிறுவயதிலும் ஏற்பட்டதில்லை, ஒவ்வொரு மனிதனும் ஒரு தனிப் பிறவி. ஆகையால் பலவகை மனிதர்களையும் புரிந்துகொள்ளும் வெறி என்னைப் பிடித்துக் கொண்டது.

பிரஜேஷ்வர் பாபு மனிதனைப் பற்றி மிகவும் சுவையாக ஒரு வர்ணனை செய்தார். அவர் மெஸ்ஸில் என்னுடன் என் அறையில் தங்கியிருந்தார். அவருக்கு நடுவயது, உயரமாயிருப்பார். மெஸ்ஸிலிருந்த மற்றவர்கள் அவர் ஒரு பெரிய போக்கிரி என்று நினைத்தார்கள். ஆனால் உண்மையில் அவர் ஒரு சிந்தனையாளர். அவருடன் சேர்ந்து வசிக்க வாய்ப்புக் கிடைத்தது என் அதிருஷ்டந்தான். அவர் மார்ட்டின் பர்ன்

ஆபீசில் குமாஸ்தா வேலைதான் பார்த்தார் என்றாலும் அவருடைய மனப்போக்கு ஜமீந்தார்களுக்குரியதுதான். அவருக்குப் பிடித்தமான விஷயங்கள் இரண்டு—பழைய புத்தகங்கள் படிப்பது, இரவில் வேசிகள் குடியிருப்புக்குப் போய் கள் குடிப்பது. அவர் நல்ல சிவப்பு, அடர்த்தியான சுருட்டைத் தலைமுடி... அவர் அந்தி வேளையில் மடிப்புக் கலையாத ஜிப்பாவும் உதடுகளில் புன்னகையுமாகப் புறப்பட்டுவிடுவார். அவர் என்னிடம் ஒரு சமயம் சொன்னார— "மனுஷன் எப்படிப்பட்டவன் தெரியுமா? தத்துவத்திலே ஒரு வார்த்தை இருக்கு, 'த்ருணாரணிமணி'ன்னு. த்ருணம்னாப் புல். அரணிங்கறது அரணிமரம். மணின்னா ரத்தினம். இந்த மூணுக்கும் நெருப்பை உண்டாக்கும் சக்தி இருக்கு. ஆனா இந்த மூணும் ஒண்ணாயிடுமா? இவற்றோட தன்மையே வேறே. அது மாதிரிதான் மனுசனும். எல்லா மனுசனும் பார்க்க ஒரே மாதிரிதான் இருக்கான். ஆனா உண்மையிலே ஒவ்வொருத்தனும் ஒவ்வொரு வகை. ஒருத்தன் பன்னிக் குட்டி, இன்னொருத்தன் எலிக்குஞ்சு, வேறொருத்தன் தேவதை- தேவதையை இன்னும் பார்க்கலே நான். இருந்தாலும் சாகறதுக்கு முன்னாலே ஒரு தேவதையையாவது பார்த்துடலாம்னு நம்பிக்கிட்டு இருக்கேன்."

சில சமயங்கள் பிரஜேஷ்வர்பாபு என்னை அவருடன் பலவிதமான விசித்திரமான இடங்களுக்கு அழைத்துப் போயிருக்கிறார். ஒரு தடவை அவரோடு தெலிங்காபாகானுக்குப் போனேன். அங்கே ஒரு சண்டை ஏற்பட்டு ஒருவர்மேல் ஒருவர் சோடாபாட்டில்களை எறிந்து கொண்டார்கள். நல்ல வேளை, மயிரிழையில் உயிர் பிழைத்தேன். ஆனால் பிரஜேஷ்வர்பாபு சிரித்துக் கொண்டே, "இதெல்லாம் ஒரு வகை யோகசாதனை. ஆத்மாவை சுத்தப்படுத்த வீராசாரம், விலங்கு ஆசாரம் எல்லாம் கடைப்பிடித்துப் பார்க்க வேண்டும். கள்ளைப் பார்த்துவிட்டால் சூரியனைப்பார்ப்பது ஒரு சாதனை; அது போல் இரவைப் பார்ப்பதற்குக் கள்ளை உடம்புக்குள்ளே புகுத்த வேண்டும். உள் நெஞ்சுக்குள்ளே போதை கொண்ட வண்டோட மூச்சைக் கேட்டா உன் வாழ்க்கை வெற்றின்னு புரிஞ்சுக்கலாம். இதெல்லாம் தெரியுமா உனக்கு? ஊஹூம். நீங்களெல்லாரும் இங்கிலீஷ் படிக்கறவங்க... உனக்கு ரசவாதம் தெரியுமா? இரும்பைச் சுட்டுச்சுட்டுத் தங்கமாக்கற கலை...?

"பிரஜேஷ்வர் அண்ணா, நீதான் இதெல்லாம் செஞ்சுக்கிட்டிருக்கியே! உனக்கு சித்தி கிடைச்சுட்டதா? நீ சுத்தமான மனுஷனா ஆயிட்டியா?"

ஒரு பெருமூச்சுவிட்டுப் பதிலளித்தார் அவர், "இல்லேப்பா, என் கிட்டே அந்தச் சரக்கு இல்லே. அது எனக்கு முதல்லே புரியல்லே. கண்ணாடிமேல 'ஃபூ'ன்னு ஊதினா அது மேலே ஒரு லேசான படலம் படியும், தண்ணிமேலே ஊதினாப் படலம் கலைஞ்சு போகும். நாம கண்ணாடியா தண்ணியாங்கறது முதல்லியே தெரியாது. நிறைய வாழ்நாள் கழிந்த பிறகுதான் தெரியும். முயற்சி தோல்வியடைஞ்சா அதுக்காக வருத்தப்பட வேண்டியதில்லே, முயற்சி செஞ்சோங்கற திருப்தியிருக்கும்..."

ஆனால் இந்த மாதிரி வாதங்களின் தவறு எனக்குக் கொஞ்சங் கொஞ்ச மாகப் புரிந்துவிட்டது. என்னைப் பக்குவப்படுத்திக் கொள்வதாக நினைத்துக் கொண்டு சமூக விரோதச் செயல்களிலும் ஒழுங்கீனங்களிலும்

திளைத்த பிறகு ஒரு நாள் உணர்ந்து கொண்டேன்- என் வாதங்கள் வெறும் சாக்குதான், அத்தகைய சட்ட விரோதமான காரியங்களில் ஈடுபடுவது ஒரு வகை வெறி, அந்த வெறிதான் என்னைப் பீடித்திருக்கிறது என்று. இது என் அகந்தையைத் திருப்தி செய்கிறது. நாகரீகமான பணக்காரக் குடும்பத்துடன் பழகும்போது ஒரு விதமான சங்கடம் தோன்றுகிறது. ஷூ ஓரத்தில் அழுக்கு ஒட்டிக் கொண்டிருக்கிறதோ, அதை அவர்கள் பார்த்துவிடுவார்களோ, டீ குடிக்கும் போது கொஞ்சம் தளும்பி விழுந்து அவர்களது விலையுயர்ந்த தரை விரிப்பைப் பாழாக்கிவிடுமோ, என்றெல்லாம் பயம்; பேண்டின் இக்கட்டில்லாத இடத்தில்கூட ஒரு பொத்தான் உடைந்து போயிருந்தால் ஒரே அவமானமா யிருக்கும். ஆனால் கள்ளுக்கடை, சூதாட்ட மேடை, தூதி அல்லது வீணா போன்ற வேசியின் வீடு, மல்லிக் பஜார், ஹௌரா பாலத்துக்குக் கீழே- இந்த இடங்களிளெல்லாம் இயற்கையாக, எவ்விதக்கட்டுப்பாடுமின்றி நடந்து கொள்ளலாம். இந்த இடங்களில் மேஜை மேலே காலைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கலாம், நம்மிஷ்டத்துக்கு உரக்கவும் பேசலாம், மெல்லவும் பேசலாம், புழுக்கமாயிருந்தால் சட்டையைக் கழற்றிவிடலாம், எப்போது சிரிக்க வேண்டும் என்ற கவலை இல்லை. மனிதன் என்ற முறையில் சுதந்திரமாக இருக்க முடிகிறது இந்த இடங்களில்...

ஆனால் இந்த வாதத்திலும் ஓர் ஓட்டை இருக்கிறது. சுதந்திரமாக இருக்க வேண்டுமென்றால் நம் அறைக்குள் தனியாக அப்படி இருக்கலாமே!

உண்மையில் அகந்தையைத் துறப்பது மிகவும் கடினம்....

அந்தி நேரம். ஜிம்தலாவில் கங்கைக் கரையில் மூட்டை தூக்குவோர் ஐந்து பேர் கஞ்சா குடித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் வட்டமாக உட்கார்ந்திருந்தார்கள். நடுவில் நெருப்பு எரிந்து கொண்டிருந்தது. அருகில் 'பாதாசா' எனப்படும் இனிப்புத் தின்பண்டம். சிவப்புத் துணியில் சுற்றப்பட்ட கஞ்சாக் குழல் கைமாறிக் கொண்டிருந்தது. பின்னால் கங்கையின் காற்று.

நான், அவிநாஷ், சேகர் மூவரும் எங்கெங்கோ சுற்றித் திரிந்துவிட்டு அங்கு வந்து அக்கடாவென்று தரையில் உட்கார்ந்தோம். நான் கஞ்சாக் குடியர்களில் ஒருவனின் தோளில் தட்டி, "அண்ணே, எனக்கும் கொடேன் ஒரு இழுப்பு இழுக்க" என்று சொன்னேன். அவன் குழம்பிய கண்களால் என் பக்கம் திரும்பிப் பார்த்துவிட்டுக் குழலை என் பக்கம் நீட்டினான். நான் பலமாக ஒரு உறிஞ்சு உறிஞ்சிவிட்டு அவிநாஷிடம் கொடுத்தேன். அவன் சிவப்புத் துணியைக் கவனமாகப் பிடித்துக் கொண்டு மெதுவாகக் கஞ்சாவை உறிஞ்சத் தொடங்கினான். மூட்டை தூக்கிகள் வியப்போடு எங்களைப் பார்த்தார்கள். அவர்களில் ஒருவன், "இந்தப் பாபுமார் என்ன மஜாவா... ஹிஹி!" என்று சிரித்தான்.

"தீர்ந்து போச்சு... இன்னும் இருக்கா?" அவிநாஷ் கேட்டான்.

"இன்னும் வேணுமா? இருங்க, கொண்டுவரேன்" ஒருவன் சொன்னான்.

"இந்தா, காசு வாங்கிக்கிட்டுப்போ" என்று அவிநாஷ் சொல்லி அவனுக்கு எட்டணா கொடுத்தான். அவன் அதை எடுத்துக் கொண்டு

ஓடினான்.

முதலில் பேசிய மூட்டைதூக்கித் தரையில் துப்பிவிட்டு மறுபடியும் சொன்னான், "பாபுமார் என்ன குஷியாக் குடிக்கறாங்க, ஹிஹிஹி...!

அவர்கள் எங்களுக்காக மிகவும் அக்கறை எடுத்துக் கொண்டார்கள். தாங்கள் குடிக்காமல் எங்களுக்குக் கஞ்சாவைக் குழலில் போட்டுக் கொடுத் தார்கள். நாங்கள் தரையில் அப்படியே படுத்துக் கொண்டு அவர்களுடன் ஒன்றாகி விட்டோம்.

ஆனால் இந்த ஒன்றுதலில் ஒரு போலித்தன்மை இருக்கிறது. இது இயற்கையான, உண்மையான சங்கமம் அல்ல. எங்கள் தோற்றம், உடல்நிறம், உடை இவை எல்லாமே நாங்கள் 'கண்ணியமான' குடும்பங்களைச் சேர்ந்தவர்கள் என்பதைப் பறைசாற்றின. சாதாரணமாக நாங்கள் இந்த மூட்டை தூக்கிகளிடம் வேலை வாங்குவோம், இவர்களை ஒருமையில் அழைப்போம். இரண்டு காசு நாலு காசுக்குத் தகராறு செய்வோம். அப்படிப்பட்ட நாங்கள் இவர்களோடு சேர்ந்து உட்கார்ந்திருக்கிறோம், இவர்களுடைய கஞ்சாக் குழலில் நாங்களும் குடிக்கிறோம் என்பதைப் பார்த்து இவர்கள் எங்களிடம் நன்றி பாராட்டு கிறார்கள். இந்த நன்றி எங்களுக்கு மிகவும் இதமாயிருக்கிறது. அதுமட்டுமல்ல, கங்கைக் கரையில் உட்கார்ந்து கொண்டு கஞ்சா குடிக்க ஆசைப்பட்டோம் நாங்கள். ஆனால் யார் கடைக்குப் போவது, கஞ்சா, குழல் எல்லாம் வாங்கிவருவது...! இந்தச் சிரமமேயில்லாமல் எங்கள் விருப்பம் நிறைவேறிவிட்டது இப்போது!

இந்த மாதிரி எவ்வளவோ நிகழ்ச்சிகள்...!

ஒரு சமயம் இரவு பன்னிரண்டரை மணிக்கு சென்ட்ரல் அவென்யூவில் தன்னந்தனியாக நின்று கொண்டிருந்தேன். தெரு வெறிச்சென்றிருந்தது. ஒரு ரிக்ஷாக்காரன் மட்டும் நின்று கொண்டிருந்தான். அங்கிருந்து என் வீடு நல்ல தூரம். ர்க்ஷாக்காரன் அவ்வளவு தூரம் வர இசைய மாட்டான். நான் அவனிடம் போய் "அண்ணே, பீடி இருக்கா?" என்று கேட்டேன். "சிகரெட் குடிக்கப் பிடிக்கலே... உனக்கு வேணும்னா சிகரெட் தரேன்" என்றும் சொன்னேன். அவன் ஆச்சரியத்தோடு என்னைப் பார்த்து ஒரு டப்பாவைத் திறந்து எனக்கு ஒரு பீடி கொடுத்துவிட்டுத் தானும் ஒன்று எடுத்துக் கொண்டான். நான் நெருப்புக் குச்சியைக் கிழித்து முதலில் அவனுடைய பீடியைப் பற்ற வைத்துவிட்டுப் பிறகு என் பீடியைப் பற்ற வைத்துக் கொண்டேன். அப்புறம் அவன் தோளைத் தட்டி "என்ன, ரொம்பக் குளுருதா?" என்று கேட்டேன். அப்போது ரிக்ஷாக்காரன் தானாகவே "நீங்க எங்கே போகணும்?" என்று கேட்டான். பிறகு என்னை என் வீட்டில் கொண்டு போய் விட்டான். எட்டணாதான் கூலி வாங்கிக் கொண்டான். விலையுயர்ந்த ஸ்வெட்டரும் கம்பளிப் பேண்டும் அணிந்த நான் அவனை "அண்ணே" என்று கூப்பிட்டு அவனிடம் பீடி வாங்கிக் கொண்டதில் அவனுக்கு உச்சி குளிர்ந்து விட்டது. இதுவும் ஒரு மோசடிதான். கீழ்மட்டத்திலுள்ளவர்களோடு நெருக்கமாகப் பழகி அவர்களுடைய உதவியைப் பயன்படுத்திக் கொள்வது...

சேகர் இவர்களுடன் இன்னும் நெருக்கமாகப் பழகுவான். "அண்ணே, உன் சொந்த ஊர் எது? எந்த ஜில்லா...? வீட்டிலே யார் யார் இருக்காங்க...?

பாவம், குழந்தை குட்டிகளைப் பார்த்து மூணு வருசமாச்சா? என்ன, கலியாண மாகி ஒரு வருசத்திலே உம் மருமகன் செத்துப்போயிட்டானா? த்சொ, த்சொ... என் தங்கை கூட... உங்க ஆரா ஜில்லா நல்ல இடம். நான் ஒரு தடவை ஆரா டவுனுக்குப் போயிருக்கேன். அங்கே போஸ்ட் ஆபீஸ் பக்கத்திலே ஒரு சேப்பு வீடு இருக்கில்லியா, அது என் அண்ணனோட பிள்ளை வீடாக்கும்...!

அவ்வளவுதான், சேகரின் பேச்சில் அப்படியே மயங்கிப் போய்விடுவான் ரிக்ஷாக்காரன். அழகாகத் தலைசீவிக் கொண்டு பளபள ஷூ அணிந்த பாபு அவனுடைய சொந்த ஊருக்கு ஒரு தடவை வந்திருக்கிறார் என்ற செய்தியில் சொக்கிப் போய், சேகருக்காக என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாராகிவிடுவான்.

இதுவும் ஓர் ஏமாற்றுவேலைதான்.

கொஞ்சங் கொஞ்சமாக எனக்கு இத்தகைய வாழ்க்கை அலுத்துப் போய்விட்டது. திருடன்-போக்கிரி-சூதாடி-குடிகாரன்-வேசி- தரகன் இவர்களது சகவாசம் வெறுத்துவிட்டது. ஆத்மாவை சுத்தப்படுத்திக் கொள்ளும் பேச்சு எல்லாம் வெறும் சாக்கு என்று புரிந்துவிட்டது. பணம் சம்பாதிக்கும் ஆசையில் சூதாடத் தோன்றுகிறது இப்போது. கள் குடித்தால் ரத்தம் தலைக்கேறி நம்மைப் பற்றி ஓர் உயர்வான எண்ணம் ஏற்படுவதால் குடிக்கத் தோன்றுகிறது. பொறுப்பில்லாத முறையில் சில வகைப் பெண்களுடன் பழக முடிகிறது என்பதால் அவர்களிடம் போகத் தோன்றுகிறது.

இதெல்லாம் புரிந்து கொண்டபிறகு நான் இந்தப் பழக்கங்களை ஒவ்வொன்றாகத் துறக்க முயற்சித்தேன். துறப்பது ஒன்றும் சுலபமான விஷயமல்லதான். எங்கள் வீட்டுக்குப் பின்னால் கட்டாரி மரத்தில் நிறைய வௌவால்கள் தொங்கும். நான் சிறு வயதில் அந்த மரத்திலேறி ஒரு வௌவாலின் இறக்கையைப் பிடித்துக் கொண்டேன். அது சிறிது நேரம் சிறகடித்துத் தவித்துவிட்டு உயிர்விட்டுவிட்டது. அதைப் பார்க்க அருவருப்பா யிருந்தது எனக்கு. நான் அதை மூங்கில் புதரில் எறிந்துவிட்டேன். ஆனால் அதன் இறக்கையிலிருந்து கசிந்த மைபோன்ற கருப்புப் பிசின் என் கையில் ஒட்டிக் கொண்டுவிட்டது. நான் சோப்பு, செம்மண் போட்டுத் தேய்த்தும் அந்தக் கறை போகவில்லை. ஒரு வாரம் வரை சாப்பிட உட்கார்ந்தால் அந்தப் பிசினின் நாற்றத்தில் எனக்குக் குமட்டிக் கொண்டு வரும். இப்போதும் அந்த நினைவு வந்தால் என் கையில் அந்தப் பிசுக்கு இருப்பது போல் தோன்றும், வயிற்றைக் குமட்டும்.

கெட்ட பழக்கங்களும் வௌவாலைப் பிடிப்பது போல்தான். ஒரு தடவை பிடித்துக் கொண்டால் விடாது. இப்போதும் எனக்கு என் நடத்தை குறித்துப் பச்சாத்தாபம் ஏற்பட்டுவிடவில்லை. போதைக்கு முற்றிலும் அடிமை யாகி விடுவேனோ என்ற பயத்தால்தான் குடிப்பழக்கத்தையும் வேறு பழக்கங் களையும் துறக்க முயற்சி செய்கிறேன்.

ஆனால் இன்னொரு பிரச்சினை—இந்தப் பழக்கங்கள் இல்லையென்றால் வேறென்ன செய்வது? கல்கத்தா இப்போது நன்றாகப் பழகிவிட்டது. இனி யாரைப் புரிந்து கொள்ளும் முயற்சியில் பொழுது போக்குவது? யாரிடமாவது போய் இந்தக் கேள்வியைக் கேட்க வேண்டும்.

பிரஜேஷ்வர் அண்ணா சொல்லியிருக்கிறார்—"இந்தப் பழக்கங்களிலிருந்து விடுபட வேண்டுமென்றால் யாரையாவது காதலி. காதல்தான் உலகத்தின் எல்லா வகை சூனியத்தையும் நிரப்பக் கூடியது... இது நான் கேள்விப்பட்டதுதான். காதலைத் தேடிப்போக வேண்டிய அவசியம் எனக்கு இதுவரை ஏற்படலே."

அப்போது மனீஷாவின் நினைவு வந்தது எனக்கு. நான் பிரஜேஷ்வர் அண்ணாவிடம் சொன்னேன், "நானும்தான் காதலிக்க முயற்சி பண்ணினேன், முடியலே..."

ஒரு வருடத்துக்கு முன் என் மெஸ் வாசம் முடிவு பெற்றுவிட்டது. என் திருவிளையாடல்களின் புகழ் என் உறவினர்களுக்கு எட்டிவிட்டது. என் மூன்றாவது, நான்காவது அக்காக்கள் கவலைப்பட்டுக் கான்பூரிலிருந்து கடிதம் எழுதினார்கள். மூன்று நான்கு ஆண்டுகளாக நான் உறவினர்களோடு ஒரு தொடர்பும் இல்லாமலிருந்தேன். பெரிய அக்காவுக்கு என் ஆபீஸ் போன் நம்பர் தெரியும். அவள் அவ்வப்போது என் ஆபீசுக்குப் போன் செய்து விசாரிப்பாள். அவள் மிகவும் வற்புறுத்தினால் எப்போதாவது ஒரு ஞாயிற்றுக்கிழமை அவள் வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டுவிட்டு வருவேன்.

ஒரு நாள் திடீரென்று பெரிய அக்கா காரில் என் மெஸ்ஸுக்கு வந்து சொன்னாள், "நீ இப்பவே இந்த ரூமைக் காலி பண்ணிட்டு எங்க வீட்டுக்கு வா!"

"உனக்குப் பைத்தியம் பிடிச்சிருக்கா? நான் இங்கே சௌக்கியமாத்தான் இருக்கேன்."

"அப்படீன்னா நானும் இங்கேயேதான் உக்காந்திருக்கப் போறேன்! என்னை விரட்டிடு பார்ப்போம்!"

"நீ எனக்காக இப்படி ஏன் கவலைப்படறே? நான் என்ன சின்னப் பாப்பாவா?"

"நீ எங்களைப் பத்திக் கவலைப் படாம இருக்கலாம். ஆனா எங்களுக்கு உன்னைப் பத்திக் கவலைப்படத்தான் வேண்டியிருக்கு... உன்னைப் பத்திக் கவலைப்பட்டுக் கவலைப்பட்டு அம்மா உடம்பு மோசமாயிக்கிட்டு இருக்கு... உன்னைப்பத்தி என்னவெல்லாம் காதிலே விழுது...! நீ ஏன் இப்பிடி ஆயிட்டே?"

பெரிய அக்காவின் பேச்சைக் கேட்டு எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது. கல்யாணத்துக்குப் பிறகே அவள் பெருக்கத் தொடங்கி விட்டாள். இப்போது நல்ல பருமன். செல்வாக்கான குடும்பத்துக்கு ஏற்ற மாதிரி உருவந்தான். சிறுவயதிலிருந்தே அவள் பேசுவதைப் பார்த்தால் உலகத்தில் எப்போதும் பயப்படத்தக்க நிகழ்ச்சிகள் நடந்து கொண்டேயிருப்பது போல் தோன்றும்.

"நான் என்ன ஆயிட்டேன்? நல்லாத்தானே இருக்கேன்!"

"கலியாணம் கிலியாணம் பண்ணிக்கமாட்டியா? எப்போதும் இதேமாதிரி தறுதலையாச் சுத்திக்கிட்டு இருப்பியா?"

"கலியாணம் பண்ணிக்க ஆசை வர்றபோது பண்ணிக்கறேன். உலகத்திலே எல்லாரும் முப்பது வயசுக்குள்ளேயே கலியாணம்

பண்ணிக்கறாங்களா?"

"நீ உனக்கு பிடிச்ச காரியத்தைச் செய்! ஆனா எங்க கண்ணுக்கு முன்னாலே செய்... இந்த மெஸ் சாப்பாட்டைச் சாப்பிட்டு பிழைச்சிருப்பானா மனுஷன்! நினைச்சாலே குமட்டிக்கிட்டு வருது. என்னமாக் கெட்டுப் போச்சு உன் உடம்பு!"

"இந்த மெஸ்ஸிலே என்னைத் தவிர முப்பத்தாறு பேர் இருக்காங்க. அவங்கள்ளாம் மனுஷங்க இல்லையா?"

"அவங்களைப் பத்தியெல்லாம் கவலைப்பட முடியாது என்னால. அவங்களுக்கு அம்மா, அக்கா இருந்தா அவங்க கவலைப்படட்டும். எனக்கு உன்னைப் பத்தித்தான் கவலை. கிளம்பு என்னோடே! நம்ம வீட்டு வெளிப்புற ரூமிலே நீ இருந்துக்கோ, உன்னை ஒருத்தரும் தொந்தரவு பண்ணமாட்டாங்க... நீ வரல்லேன்னா, எப்போதும் உன் கவலையாவே இருக்கும் எனக்கு...!

"ஆமா, முதல்லே இப்படித்தான் சொல்லிக் கூட்டிக்கிட்டுப்போவே. கொஞ்ச நாள் கழிச்சு, 'இன்னிக்குப் போய் காய்கறி வாங்கிக்கிட்டுவா... என் நாத்தி வீட்டிலே இன்னாரைக் கொண்டு போய்விடு... ஹௌரா ஸ்டேஷன் லேருந்து என் சின்ன மாமியாரைக் கூட்டிக்கிட்டுவா...' அப்படீன்னெல்லாம் சொல்ல ஆரம்பிச்சுடுவே...! அதெல்லாம் என்னாலே ஆகாது! அதுக்கப்பறம் ஒரு நாள் சொல்லுவே, 'காலை வேளையிலே கொஞ்ச நேரம் என் ரெண்டு கொழந்தைகளுக்கும் கொஞ்சம் பாடம் சொல்லிக் கொடுக்கக் கூடாதா? காசு கொடுக்காமே ஒரு டியூஷன் வாத்தியார்...!"

இதைக் கேட்டுச் சிரித்துவிட்டாள் அக்கா—"இந்தக் கவலையே வேண்டாம் உனக்கு! உன்னை நம்பி நான் என் குழந்தைகளை உன்கிட்டே படிக்கவிட மாட்டேன்! உன்கிட்டே படிச்சா அவங்க என்ன கத்துக்குவாங்கன்னு எனக்குத் தெரியும்!"

ஆனால் வாழ்க்கையில் எல்லா நிகழ்ச்சிகளும் நாம் எதிர்பார்க்கிறபடி நடப்பதில்லை. நான் அக்கா வீட்டில் தங்கத் தொடங்கியபிறகு அவளுடைய பிள்ளை படுல் என்னுடன் ஒட்டிக் கொண்டுவிட்டான். எனக்கும் அவன் மேல் பாசம் ஏற்பட்டுவிட்டது. புவியியலில் அவனுக்குத் தேர்ச்சி போதாது என்று கண்ட நான் தேர்வு சமயத்தில் இரண்டு நாட்கள் மாலையிலும் காலையிலும் அவனோடு உட்கார்ந்து அவனுக்குப் புவியியல் கற்றுக் கொடுத்தேன்.

பெரிய அக்காவின் கணவர் எனக்கு அவருடைய ஆபீசிலேயே ஒரு வேலை கொடுத்ததும் நான் சர்க்கார் ஆபீஸ் வேலையை விட்டுவிட்டேன். சர்க்கார் வேலையின் வசதி என்னவென்றால் வேலைக்கு ஒழுங்காக வரா விட்டாலும் வேலையில் எவ்வளவு தவறு செய்தாலும் வேலை போகாது. தனியார் ஆபீசில் இந்த வசதி இல்லை. என்றாலும் இந்த ஆபீஸ் அக்கா கணவரின் ஆபீஸ். எனக்கு வேலை போய்விடும் ஆபத்து இல்லை. ஆகையால் இந்த வேலையில் சேர இணங்கினேன். ஆனால் சேர்ந்த பிறகு இன்னொரு ஆபத்து நேர்ந்தது. நல்ல சம்பளந்தான். ஆனால் ஒரு மாதமும் முழுச் சம்பளம் எனக்குக் கிடைப்பதில்லை. என் சம்பளத்திலிருந்து நூறு

ரூபாய் என் அப்பா வுக்கு அனுப்பப்படும், நூறு ரூபாயை அக்கா கணவரே எடுத்துக் கொள்வார்- நான் அவர் வீட்டில் இலவசமாகத் தங்கி இருப்பதாக நினைத்துச் சங்கடப்படக் கூடாதென்று. ஆனால் இலவசமாகத் தங்கிச் சாப்பிடுவதில் எனக்கு சங்கடம் ஒன்றுமில்லை. அக்காதானே வந்து கூப்பிட்டாள். நான் வந்தேன். இதில் எனக்கென்ன கௌரவக் குறைவு?

நான் கலியாணம் செய்து கொண்டால் அதன் பிறகு இந்த இருநூறு ரூபாயை என் சம்பளத்திலிருந்து எடுத்துக் கொள்ள மாட்டேன் என்று அக்கா சொல்லியிருக்கிறாள். கதைகளில் வரும், ஒருவன் கலியாணம் செய்து கொண்டு பாதி ராஜ்யம் பெற்றதாக, நான் கலியாணம் செய்து கொண்டால் எனக்கு இருநூறு ரூபாய் கூடுதல் வருமானம்.

நான் வெகு நாட்கள் முன்பே மனீஷாவை மணம் செய்துகொள்ள விரும்பினேன். அதற்குள் நான் பல பெண்களுடன் நெருங்கிப் பழகிவிட்டேன். பெண்களின் புடைவை உடலில் எவ்வளவு சுற்று, பிக்னிக் போனால் அவர்கள் ஏன் அடிக்கடி குளத்தைப் பார்க்கப் போகிறார்கள் என்பதையெல்லாம் புரிந்து கொண்டேன். ஒரு பெண்ணை முத்தமிடுவதற்குமுன் அவளது விரல் நுனியை உதட்டால் தொடவேண்டும். அதற்குப் பிறகு-ரொம்பப் பிறகு-தான் அவளைக் காதலிப்பதாகச் சொல்ல வேண்டும். "இன்னிக்கு நீ ரொம்ப அழகாயிருக்கே" என்பதைவிட "உன்னைப் பார்த்தா என் அம்மா மாதிரி இருக்கு" என்று சொன்னால்தான் பெண்களுக்கு அதிக மகிழ்ச்சி. பெண்களின் அழகைப் புகழ்வதைவிட அவர்களது குறைகளைப் புகழ்வது நல்ல பலன்தரும். பெண்ணின் மோவாயில் வெட்டுத் தழும்பு இருந்தால், ஒரு விரல் நகம் கருப்பாயிருந்தால், காதுகள் ரொம்பப் பெரிதாயிருந்தால் அவற்றைப் புகழ்ந்து "ஆகா என்ன அழகு!" என்று பாராட்ட வேண்டும். ஒரு பெண் தன்னை அலங்கரித்துக் கொள்ளும் போது ஓர் ஆணைத் தன் பக்கத்திலிருக்க அனுமதித்தால் அவன் தன்னைக் கொஞ்ச வேண்டுமென்று எதிர்பார்க்கிறாள் என்று பொருள். அவனுடைய கொஞ்சல் இல்லாமல் அவளது அலங்காரம் முழுமை பெறாது. எப்போதாவது ஒரு தடவை பெண் அழும்போது அவளருகில் இருந்து கொண்டு அவளுடைய கன்னத்தைத் துடைக்க வேண்டும். இதைச் செய்யாமல் வங்காளத்தில் எந்த ஆணும் ஒரு பெண்ணைக் காதலித்ததாக நான் கேள்விப் பட்டதில்லை. நான் கிராமத்துப் பையனாயிருந்தாலும் கல்கத்தா வந்த பிறகு இந்த விஷயங்களை விரைவில் கற்றுக் கொண்டு விட்டேன்.

ஆனால் மனீஷா விஷயத்தில் இந்த விதிகள் பொருந்தா.

ஒரு மனிதன் ஒரு முழுநாளைப் பாலைவனத்தில் கழித்தால் நிச்சயம் ஒரு தடவையாவது கானல் நீரைக் காண்பான். அதுபோல் ஒவ்வொரு மனிதனும் வாழ்க்கையில் ஒரு தடவையாவது தான் வென்றுவிட்டதாக நினைத்துக் கொள்வான். சுமார் ஆறுமாத காலம்— அதாவது சென்ற பிப்ரவரி முதல் ஆகஸ்ட் வரை—நான் வெல்லப்படமுடியாதவன் என்று என்னைக் கருதிக் கொண்டேன். ஏதோ ஒரு தெய்வீக சக்தி என்னை ஆட்கொண்டிருந்தாற் போலிருந்தது. ஒவ்வொரு துறையிலும் நான் வென்று கொண்டிருந்தேன். தினம் சீட்டாட்டத்தில் கை நிறையப் பணம்

சம்பாதித்தேன். ஒருவரும் என்னோடு சூதாடத் துணியாத நிலைமை ஏற்பட்டுவிட்டது. நிறையக் குடித்த பிறகும் என்னால் முழு நினைவுடன் நடமாட முடிந்தது. அவிநாஷ் போன்ற மொடாக்குடியனும் போதையில் மயங்கித் தடுமாறிய போது அவனைத் தூக்கிக் கொண்டு போய் டாக்சியில் ஏற்றியிருக்கிறேன் நான்.

ஒரு சமயம் லைட்ஹவுஸ் தியேட்டருக்கெதிரில் சில மார்வாரி இளைஞர் களுடன் சண்டை போட்டேன். ஆங்கிலப் பள்ளியில் படித்த, குழாய்ப் பேண்ட் அணிந்த அவர்கள் எண்ணிக்கையில் எட்டுப் பேர். நாங்கள் மூன்று பேர்தான். ஆனால் அவர்கள் அருணின் மனைவியைப் பற்றி அசிங்கமாக ஏதோ பேச எனக்கு ரொம்பக் கோபம் வந்துவிட்டது. ஒரு ராட்சதனின் பலம் எனக்கிருப்பதாக ஓர் உணர்வு எனக்கு. நான் ஒரு தாவு தாவி ஒருவனின் காலரைப் பிடித்தேன். உடனே அவர்கள் அடங்கிப் போய் எங்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்கள்...

ஆகா, அந்தச் சில மாதங்கள் எவ்வளவு உற்சாகமாக இருந்தேன் நான்! உலகத்தில் என்னாலியலாதது எதுவுமில்லை என்ற பெருமித உணர்வில் மிதந்தேன் நான். உலகமே என் கைப்பிடிக்குள் இருப்பதாகத் தோன்றியது. இந்தப் பெருமித உணர்வில்தான் நான் மனீஷாவையும் அடைந்துவிடுவேனென்று நினைத்தேன். ஆனால் அவள் எனக்கு வாய்ப்பே அளிக்கவில்லை.

அப்போது ஒவ்வொரு சமயம் நாங்கள் மாலை நேரங்களில் அருணின் வீட்டில் கூடி அரட்டையடிப்போம். என் நண்பன் தாபஸின் தங்கைதான் அருணின் மனைவி. ஆகையால் அவர்களிருவரையும் எனக்கு நன்றாகத் தெரியும். அருணின் வீட்டில்கூட இருந்தவர்கள் அருணின் தந்தையும் தங்கை மனீஷாவுந்தான். அருணின் அப்பா இரண்டாம் மாடியிலுள்ள தம் அறையில்தான் எப்போதும் இருப்பார். ஆகையால் நாங்கள் சுதந்திரமாக வம்பளக்க வசதியான சூழ்நிலை இருந்தது. அருணின் தமக்கை விதவையாகித் தன் குழந்தை குட்டி களுடன் பிறந்த வீட்டுக்கு வந்த பிறகு நாங்கள் அங்கு போவதை நிறுத்திக் கொண்டுவிட்டோம்.

மனீஷாவுக்குப் பட்டுச் சேலை அணிந்து கொள்ளப் பிடிக்கும். நான் மாலை வேளைகளில் அவளைப் பார்க்கும் போதெல்லாம் அவள் பட்டுச் சேலையணிந்து கொண்டு எங்கேயாவது புறப்பட்டுக் கொண்டிருப்பாள் அல்லது திரும்பி வந்து கொண்டிருப்பாள். இப்போதும் அவளைப் பற்றி நினைத்தால் என் மனக் கண்ணில் தோன்றுவது மெரூன் நிறப் புடைவையணிந்த அவளது தோற்றந்தான். பட்டு அணிந்து கொண்டால் பெண்களின் முகம், மார்பு, தொடையின் சரிவு எல்லாமே இன்னும் மென்மையாகத் தோன்றும். அந்த மென்மையான உடம்பின் மேல் தலைவைத்துப் படுத்திருக்கத் தோன்றும். அத்தகைய உடல் கைக்கருகில் வந்தால் அதைக் கட்டித் தழுவிக் கொள்ள முடியாவிட்டால் நெஞ்சுக்குள் தீவிர வேதனை பிறக்கும்.

மனீஷாவின் சிறுவயதிலேயே அவளுடைய தாய் இறந்து விட்டதால் அவளுக்கு வீட்டில் நிறைய சுதந்திரம் இருந்தது. நினைத்தபோது வெளியே போவாள். இஷ்டம்போல் திரும்பி வருவாள். யாரும் அவளை

அடக்குவதில்லை. அடக்கத் தேவையுமில்லை. காரணம் அவள் ஒரு போதும் ஆபத்தில் மாட்டிக் கொள்ளக் கூடியவளல்ல. யாரும் அவளை ஆபத்தில் மாட்டிவிடவும் முடியாது. மாறாக, அவள் யாரையாவது ஆபத்தில் சிக்க வைக்க விரும்பினால் அந்த ஆள் தப்பமுடியாது. இவ்வளவு அழகான, புத்திசாலியான, கடுமையான பெண்ணை நான் பார்த்ததில்லை.

மாலை நேரம். அறையில் சீட்டாட்டத்துக்காகச் சீட்டுகள் பிரிக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றன. ஏதோ எடுத்துக் கொள்வதற்காகஅறைக்குள் நுழைந்தாள் மனீஷா. நான் அவளிடம் சொன்னேன், "மனீஷா, என் சீட்டைத் தொட்டுட்டுப் போ, எனக்கு அதிருஷ்டம் வரும்." மனிஷா சற்றும் தயக்கமின்றி என்னருகில் மண்டியிட்டு உட்கார்ந்து மூன்று சீட்டுகளை எடுத்துப் பார்த்தாள். அவளுக்கும் நன்றாகச் சீட்டாடத் தெரியும். பிறகு அவள் சிரித்தவாறே "இப்போ நீங்க ஜயிக்காட்டி பார்த்துக்கங்க!" என்று எச்சரித்தாள். நான் சீட்டுக்களை எடுத்துப் பார்த்தேன், ஆச்சரியத்தால் திகைத்துப் போனேன். எவ்வளவு பிரமாதமான சீட்டுக்கள்! அப்போது மனீஷா என்னருகில் இருந்தாள். அவளிடமிருந்து இனிமையான மணம் வந்து கொண்டிருந்தது. பட்டுப்புடவையணிந்த அவளது உடலின் மடிப்புகள் இன்னும் மென்மையாகத் தோன்றின. நான் உலகத்தையே வென்றுவிடுவேன் என்ற உணர்வு ஏற்பட்டது எனக்கு...

என் உணர்வை அவள் புரிந்து கொண்டு விட்டாளா?

உடனே எழுந்துவிட்டாள் அவள்.

"கொஞ்சம் உக்காந்திரு, ப்ளீஸ்!" என்று கெஞ்சினேன்.

"ஆமா, உங்களோட உக்காந்துக்கிட்டுச் சீட்டாடணுமாக்கும்!" என்று சொல்லிவிட்டு அவள் போய்விட்டாள்.

சிறிது நேரத்துக்குப் பிறது அவள் மறுபடி அங்கே வந்தாள். அப்போது நான் சீட்டைக் கையிலெடுத்துவிட்டேன். என்னைப் பார்த்து, "சீட்டு எடுத் திட்டீங்களா?" என்று கேட்டாள்.

நான் என் கையை நீட்டி, "கையைக் கொஞ்சம் தொடு, தொட்டால் நான் ஜெயிச்சுடுவேன்" என்றேன்.

அவள் என் கையைத் தொட்டதும் நான் அவள் கையைப்பிடித்து இழுத்தேன். அவள் அனாயாசமாகத் தன் கையை விடுவித்துக் கொண்டு, "என்னை அவ்வளவு சுலபமா மடக்கிட முடியாது!" என்று சொல்லிச் சிரித்தாள்.

அந்தத் தடவையும் வெற்றி எனக்குத்தான். ஆனால் அதற்குள் மனீஷா வெளியே போய்விட்டிருந்தாள்...

எனக்கு மனீஷாவின் பரிச்சயம் ஏற்படாமலிருந்தால் நான் முன்பே என் வாழ்க்கை முறையைத் திருத்திக் கொண்டிருப்பேன். மனீஷா குற்றமற்ற, அழகான பெண். ஆனால் அவளால்தான் என் வாழ்க்கையில் வீழ்ச்சி ஏற்பட்டது. மனீஷாவிடம் நான் கொண்ட காதல் தோல்வி யடைந்ததன் விளைவாக நான் சோர்வடைந்தேன். தன்னம்பிக்கை யிழந்தேன். இனி யாரையும் என்னால் காதலிக்க இயலாது. யாரும்

என்னைக் காதலிக்க மாட்டார்கள். நான் காதலுக்குத் தகுதியற்றவன் என்ற தாழ்வுணர்ச்சி ஏற்பட்டுவிட்டது. மனீஷா இப்படி என்னைப் புறக்கணிக்காவிட்டால் சென்ற வருடம் நான் காலுடியில் ஒரு சாந்தால் பெண் விஷயத்தில் சிக்கிக் கொண்டிருக்க மாட்டேன்.

ஆனால் மனீஷாவை நான் காதலிக்கத் தொடங்கவேயில்லை. நான் அவளைப் பார்க்கும்போதெல்லாம் அவள் என்னுடன் இயல்பாக, நெருக்கமாகப் பழகினாள். ஒரு சமயம் "அடே, உங்க சட்டைப் பொத்தான் உடைஞ்சு போயிடுச்சே... இருங்க, நான் மத்த பொத்தானையும் உடைச்சிடறேன்" என்று சொல்லி மற்ற பித்தான்களைச் சடசடவென்று பிடுங்கிவிட்டாள். நான் அவளைப் பிடிக்கக் கை நீட்டுவதற்குள் மாயமாய் மறைந்து விட்டாள்.

ஆனால் நான் அவளைப் பார்த்து ஒரு மாதம் இரண்டு மாதம் ஆகி விட்டாலும், "என்னை உங்களைப் · பார்க்கறதே இல்லையே, எங்கே போயிருந் தீங்க?" என்று கேட்க மாட்டாள். அவளைத் தனியே சந்திக்கும் வாய்ப்பே கிடைக்கவில்லை எனக்கு. அவள் அருணின் தங்கை. ஆகையால் அவள் வீட்டுக்குப் போய் அவளைப் பார்க்க வேண்டும் என்று சொல்ல முடியுமா? சொன்னால் தப்பில்லைதான். ஆனால் பட்டிக்காட்டுப் பையனான எனக்கு அந்தத் துணிவு வரவில்லை. ஒவ்வொரு சமயம் நான் தனியே அருண் வீட்டுக்குப் போயிருக்கிறேன். அவனுடனும் அவன் மனைவியுடனும் பேசிக் கொண்டிருந்திருக்கிறேன். ஆனால் "மனீஷா எங்கே?" என்று கேட்கக் கூச்சம். அவள் வருவாளா என்று எதிர்பார்த்து ஆவலுடன் காத்திருந்திருக்கிறேன். ஒரு தடவை கூட அவளைப் பார்க்கவில்லை. நான் அருணுக்கு டெலிபோன் செய்யும்போது சில சமயம் அவள் போனை எடுப்பாள். குரலிலிருந்தே என்னை அடையாளங்கண்டு கொண்டு சற்றுநேரம் வேடிக்கையாகப் பேசிவிட்டு, "அண்ணாவைத்தானே கூப்பிடணும்?" என்று கேட்பாள். நான் "இல்லை இல்லை, நான் உன்னோடு பேசத்தான் போன் பண்ணினேன்" என்று சொன்னால், "ஆகா! என்ன பாக்கியம், என்ன பாக்கியம் எனக்கு...! ஆனா எனக்கு வேறே வேலை இருக்கு. இருங்க, அண்ணாவைக் கூப்பிடறேன்..." என்று சொல்லி அருணைக் கூப்பிடப் போய்விடுவாள்.

அவளைத் தனியாகச் சந்திப்பதற்காக நான் பல்கலைக் கழகத்து வாசலிலும் காத்திருந்திருக்கிறேன். அவள் அப்போது அரசியல் துறையில் எம்.ஏ. படித்துக் கொண்டிருந்தாள். ஒரு நாள் பல்கலைக்கழகத்திலிருந்து வெளியே வந்து பஸ் ஸ்டாப்பில் நின்றவள் என்னை முதலில் பார்த்தாள். எந்த விதக் கூச்சமோ தயக்கமோ இன்றி என்னைப் பார்த்து இயல்பாகச் சிரித்தவாறு கேட்டாள், "எந்தப் பொண்ணு? எனக்குக் காட்டுங்க!"

எனக்கு ஒன்றும் புரியவில்லை. "என்ன சொல்றே?"

"எந்தப் பொண்ணுக்காக நின்னுக்கிட்டிருக்கீங்க? என்கிட்டே சொல்லுங்க... எனக்குத் தெரிஞ்சவளான்னு பார்க்கறேன்..."

"நான் உனக்காகத்தான் வந்து நின்னுக்கிட்டிருக்கேன்..."

"அவ வரலியா இன்னிக்கு? அவ பேரைச் சொல்லுங்களேன்!"

"நிசம்மா உனக்காகத்தான் நின்னுக்கிட்டிருக்கேன்..."

"அப்படியா? கேக்க ரொம்ப சந்தோஷமாயிருக்கு... சரி, என்னை வீட்டிலே கொண்டு போய் விடுங்க..."

"போகலாம்... அதுக்கு முன்னாலே எங்கேயாவது போய் ஒரு டீ குடிக்கலாமே..."

"எனக்கு இப்பவே வீடு திரும்பணும்.. வாங்க- வீட்டுக்கு".

"கொஞ்ச நேரம் எங்கேயாவது உக்காந்து..."

"வீட்டுக்கு வாங்களேன்! வீட்டிலே டீ குடிக்க முடியாதா? இதோ பஸ் வந்துட்டது..."

வேறு வழியின்றி அவளுடன் அவள் வீட்டுக்குப் போனேன். போய்ச் சேர்ந்ததும் மனீஷா தன் அண்ணியை உரக்க அழைத்தாள். "அண்ணி, உன் மச்சினர் வந்திருக்கார். டீ குடிக்கப் பறக்கறார். அவருக்கு டீ போட்டுக் கொடுத்துப் பேசிக்கிட்டு இரு. நான் கொஞ்சம் பாரமிதாவோட வீட்டுக்குப் போயிட்டுவரேன்."

என்னை மாடியறையில் உட்காரவைத்துவிட்டு மர்மப் புன்னகை யொன்றைச் சிந்தியவாறு அவள் சொன்னாள், "அண்ணியோடே உக்கார்ந்துக் கிட்டுப் பேசிக்கிட்டிருங்க.. த்சொ, த்சொ– உங்க மூஞ்சி வெயில்லே எப்படி செவந்து போயிடுச்சு! ஃபேனுக்குக் கீழே வசதியா உக்காருங்க... நான் வரேன்..."

அன்று என்னை முட்டாளாக்கிவிட்டாள் மனீஷா. அருணின் மனைவி குக்கூ அப்போதுதான் தூங்கியெழுந்திருந்தாள். இனிமேல்தான் அவள் முகங் கழுவித் தன்னை அலங்கரித்துக் கொள்ள வேண்டும். அவள் செயற்கை ஆர்வத்துடன், "கொஞ்சம் உக்காந்துருங்க, நான் பாத்ரூமிலேருந்து வரேன். உங்களுக்கு டீ அனுப்பறேன்..." என்று சொல்லிவிட்டுப் போனாள். அந்த அறையில் தன்னந்தனியே உட்கார்ந்து கொண்டு டீ குடிக்க எனக்குச் சங்கடமா யிருந்தது. ஆனால் குடிக்காமல் கிளம்பவும் முடியவில்லை. மனீஷா திரும்பி வரவேயில்லை.

என்னை மனீஷாவுக்குத் தகுந்தவனாக ஆக்கிக் கொள்ளவும் நான் முயற்சி செய்தேன்.

நான் சாதாரணமாக அரைக்கைச் சட்டைதான் அணிவேன். முழுக்கைச் சட்டையணிந்தாலும் கையை மடித்துவிட்டுக் கொள்வேன். இப்போது இரண்டு மூன்று முழுக்கைச் சட்டை தைத்துக் கொண்டேன். அந்தச் சட்டையை அணிந்து கொண்டு கல் பதித்த ஸ்டீல் கஃப் பொத்தான்களைப் போட்டுக் கொண்டதும் என் கம்பீரம் கூடிவிட்டதாகத் தோன்றியது. இரண்டு கைகளையும் நன்றாக மூடிக் கொண்டால் மனதுக்கு ஓர் அமைதி ஏற்படுவது உண்மை. இந்த விஷயம் எனக்குச் சில நாட்கள் முன்புதான் தெரிந்தது. இதற்குமுன், முழுக்கைச் சட்டையணிவதற்கும் கையை மடித்துவிட்டுக் கொள்வதற்குமிடையே வித்தியாசமேதும் இருப்பதாக எனக்குத் தோன்றியதே இல்லை. அவிநாஷும் பரீட்சித்தும் ஒரு தடவை ஒரு டாக்சி டிரைவரோடு சண்டைபோட்டுப் போலீசால் கைது செய்யப்பட்டார்கள். அவர்களது வழக்கு நடந்தபோது நானும் கோர்ட்டுக்குப் போயிருந்தேன். சேகரும் தாபஸும் என்னுடன் வந்திருந்தார்கள். அவிநாஷும் பரீட்சித்தும் குற்றவாளிகளுக்கான

கம்பிவலைக்குப் பின்னால் நின்றிருக்க, நாங்கள் மூவரும் பார்வையாளர்களுக்கான இருக்கைகளில் அமர்ந்து கொண்டு வக்கீல்களின் உளறலைக் கேட்டுக் கொண்டிருந்தோம். அப்போது கோர்ட் சார்ஜண்ட் ஒருவன் என்னிடம் வந்து, "நீங்க எழுந்திருச்சி வெளியே போங்க" என்றான்.

"ஏன்?" என்று அவனைக் கேட்டேன்.

"போங்கன்னாப் போயிடுங்க!"

முதலில் நான் பயந்து போய்விட்டேன். காரணம் இந்த அடிதடி சமயத்தில் நானும் இருந்தேன். போலீஸ் வருவதற்குள் நழுவி விட்டேன். டாக்சிக்காரன் ஆபாசமாகத் திட்டியபோது நான்தான் டாக்சி மீட்டரை இரண்டு முறை கீழே இறக்கித் தூக்கிவிட்டேன். இப்போது அதற்காக என்னையும் பிடித்துக் கொள்ளப் போகிறார்களா? ஊஹூம். அதெல்லாம் ஒன்றுமில்லை. என் சட்டைக் கை மேலே மடிக்கப்பட்டிருந்தது. கழுத்துப் பக்கம் பொத்தான் போடாமல் திறந்திருந்தது. இந்த மாதிரி மாஜிஸ்திரேட்டுக்கு முன்னால் தோன்றக் கூடாதாம்...! இதைக் கேட்ட எனக்கு, "ஆகா, இன்னும் நாம உலகத்திலே கத்துக்க வேண்டிய விஷயம் எவ்வளவு இருக்கு!" என்று தோன்றியது.

மாஜிஸ்திரேட்டுக்குப் பின்னால் சுவரில் மகாத்மா காந்தியின் படம் மாட்டப்பட்டிருந்தது. நான் அதை மானசீகமாக வணங்கிவிட்டுக் கோர்ட்டை விட்டு வெளியேறினேன்.

இந்த அனுபவத்தின் மூலம் உடையால் கண்ணியத்தைப் பெறுவது எப்படி என்று கற்றுக் கொண்டுவிட்டேன். மனீஷாவுடன் நெருங்கிப்பழகு வதற்காக நன்றாக முகத்தை மழித்துக் கொண்டேன். தும்பைப்பூ போல வெண்மையான முழுக்கை சட்டை தைத்துக் கொண்டேன். தொடர்ச்சியாக சில இரவுகள் நேரப்படி தூங்கி என் கண்களைச் சுற்றிப் படர்ந்திருந்த நிழலைப் போக்கிக் கொண்டேன். என் உடம்பில் சந்தன மணம் கமழத் தொடங்கியது. மனீஷா எப்போதும் பட்டுப்புடைவை உடுத்துகிறாள், "எனக்கு அழுக்கு உடை பிடிக்காது" என்று அடிக்கடி சொல்கிறாள். அவளுடைய மனதைக் கவர்வதற்காக நானும் தூய ஆடைகள் அணியத் தொடங்கினேன். சுத்தமான ஆடைகள் அணிய அணிய என் மனமும் சுத்தமாயிற்று. மனீஷாவையடையும் ஆர்வமும் தீவிரமாயிற்று. அவள் எனக்கு மிகவும் தேவையாகிவிட்டாள். அவள் பேச்சு எப்போதும் தெளிவாயிருக்கும். அதை இருவிதமாகப் பொருள் கொள்ள இடமிருக்காது. அப்படியும் அவள் என்னைக் குழப்பத்திலாழ்த்தி விட்டாள். நான் அவளை விரும்புகிறேன் என்பதை அவளிடம் சொல்ல அவள் எனக்கு வாய்ப்பே கொடுக்கவில்லை. நான் என் காதலைத் தெரிவித்து அவள் அதை ஏற்க மறுத்தால் கூடப் பரவாயில்லை. தோல்வியடைந்த காதலனாக இருக்க எனக்கு ஆட்சேபமில்லை. ஒரு பெண் தன் காதலனை மறக்கலாம், தன்னால் காதல் மறுக்கப்பட்டவனை ஒரு போதும் மறக்க மாட்டாள். மனீஷாவின் மனதிலோ வாழ்க்கையிலோ என் சுவட்டைப் பதிக்க விரும்பினேன் நான். நான் வேறு பலரோடு இருக்கும்போது மனீஷா என்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருப்பது போல் நடந்து கொள்வாள்.

ஒரு நாள் சாயுங்காலம் நானும் சில நண்பர்களும் அருணின் அறையில் உட்கார்ந்திருந்தோம். தலைமுடியைச் சீவிக் கொண்டே உள்ளே நுழைந்தாள் மனீஷா. அவள் சட்டென்று என் தலைமுடியைச் சீவத் தொடங்கிவிட்டாள். “பரட்டைத்தலைன்னா எனக்குக் கட்டோடே பிடிக்காது” என்று சொல்லிக் கொண்டே எனக்கு மிகவும் நெருக்க மாக நின்று கொண்டிருந்தாள் அவள். உணர்ச்சியுள்ள எந்த ஆணுக்கும் அவளை அப்படியே கட்டித் தழுவிக் கொண்டு சொல்லத் தோன்றும், “நீ என்னைத் தூய்மையாக்கிவிடு!” என்று. ஆனால் என்னால் வாய்திறக்க இயலவில்லை. மனீஷாவின் உடம்பின் மணம் என் நெஞ்சில் நிறைந்திருந்தது. ஆனால் அவள் என்னை நேருக்கு நேர் பார்க்கவேயில்லை. அவள் என் தலை முடியில் சீப்பை வைத்து அழுத்த நான் வலி தாங்காமல் “ஐயோ! ஐயோ!” என்று கத்தவும் அவள் சிரித்துக் கொண்டு ஓடிப்போய்விட்டாள்.

மனீஷாவைத் தனிமையில் சந்திக்க இயலவில்லை. நான் தனியா யிருக்கும்போது அவள் உலகத்திலிருந்தே அஸ்தமித்துப் போய் விடுகிறாள். நான் எவ்வளவோ நாட்கள் என் நண்பர்களைத் தவிர்த்துவிட்டுத் தனிமையில் அலைந்திருக்கிறேன். அப்போது எத்தனையோ பேர்களைத் தற்செயலாக சந்தித்திருக்கிறேன். மனீஷாவை மட்டும் ஒருதடவை கூடப் பார்க்கவில்லை. மனீஷா பெரும்பாலும் தனியாகத்தான் வெளியே சுற்றுகிறாள். நான் தனியாக அலையும்போது அவள் வேண்டுமென்றே என்னைத் தவிர்த்து வேறு வழியில் போய்விடுகிறாளோ என்னவோ? நான் அவளைத் தெருவில் சந்திக்கும் போதெல்லாம் என்னுடன் சில நண்பர்கள் இருப்பார்கள், அல்லது அவளுடன் சில தோழிகள் இருப்பார்கள்.

ஒரு தடவை ஒரு தியேட்டரில் மனீஷாவைச் சந்தித்தேன். அப்போது அவளுடன் இரு தோழிகளும் அத்தை பெண் ஒருத்தியும் இருந்தார்கள். அவள் என்னைப் பார்த்ததுமே உற்சாகமாக என்னிடம் ஓடிவந்து, “சுநீல் அண்ணா, இன்னிக்கு நீங்க எங்களுக்கு ஏதாவது சாப்பிட வாங்கிக் கொடுக்கணும்! எங்களுக்கு ரொம்பப் பசி! நல்ல வேளையா உங்களைப் பார்த்தோம்!”

நான் தணிந்த குரலில் அவளிடம் சொன்னேன், “நீ தனியா வரியா என்னோட? உன்னோட எனக்கு ரொம்பப் பேச...”

மனீஷா இனிய குரலில் சிரித்துக்கொண்டே தன் தோழிகளிடம் திரும்பி, “இவர் என்ன கருமி பாருங்க! எனக்கு மட்டும் சாப்பிட வாங்கித் தருவாராம்...!” என்றாள்.

பாண்டெல் என்ற ஊருக்கு ஒரு தடவை பிக்னிக் போனோம். நான் என்ன முயற்சி செய்தும் மனீஷா என்னுடன் தனியாகக் குளக்கரைக்கு வர வில்லை. நாங்கள் ஆண்களும் பெண்களும் சுமார் பதினைந்து பேர் இருந்தோம். மனீஷா முட்டையோட்டைக் கையில் வைத்துக் கொண்டு என்னோடு விளையாடினாள்.. நான் அவளுடைய புடைவைத் தலைப்பில் என் கையைத் துடைத்துக் கொள்ளப் போனேன். அவள் ஆரஞ்சுத் தோல் சாற்றை என் கண்ணில் பீய்ச்சிவிட்டாள். இவ்வளவு செய்தவள் குளத்தங்கரைக்கு மட்டும் என்னுடன் தனியாக வரவில்லை. நாங்கள் கல்கத்தா திரும்பும்போது வண்டியில் அவள் என்னருகில்தான்

உட்கார்ந்திருந்தாள். கூட்ட நெரிசலில் என் உடம்பு அவளது உடம்போடு உரசிக் கொண்டிருந்தது. ஆனால் அவள் என்னை நேருக்கு நேர் பார்க்கவில்லை.

ஹோலியன்று நான் கலர்ப்பொடி பூசும் வெறியில் அவளுடைய மார்பகத்தைத் தொட்டுவிட்டேன். என் கை அவளது முகம், கழுத்து இவற்றிலிருந்து சட்டென்று கீழே பிளவுசுக்குள் நுழைந்து அவளுடைய கதகதப்பான உருண்டைத் தனங்களைத் தொட்டுவிட்டது. அப்படியும் அவள் திகைக்கவில்லை, என்னைத் திட்டவில்லை. சட்டென்று அங்கிருந்து வெளியே ஓடிப்போய் மறுநிமிடம் கை நிறையக் கரிப்பொடியை எடுத்துவந்து என் முகத்தில் பூசி, "இப்போ எப்படி இருக்கு?" என்று கேட்டாள்.

என் குறைதான் என்ன என்று புரியவில்லை எனக்கு. நான் பைத்தியமாகி விட்டேன். மனீஷா பைத்தியமல்ல, குழந்தையுமல்ல; ஆனால் நான் அவளுடன் தனிமையில் பேச ஒரு தடவைகூட எனக்கு வாய்ப்புத் தரவில்லை. என் சாடைகள், சூழ்ச்சிகள், என் சரணாகதி எல்லாவற்றையும் பயனற்றதாகச் செய்துவிட்டுஅவள் கூட்டத்தில் மட்டும் எனக்குரியவளாக நடந்து கொண்டாள். காதலில் தோற்கக் கூட எனக்குத் தகுதியில்லையா? காதலிக்கவே வாய்ப்புப் பெறாதவன் காதலில் தோல்வியுறுவது எப்படி?

அவளுக்குக் கடிதம் எழுதலாமா என்று யோசித்தேன். அவள் வீடு எங்கள் வீட்டுக்கு வெகு அருகில். இவ்வளவு அருகில் உள்ள ஒருவருக்குக் கடிதம் எழுதுவது அசட்டுத்தனம் என்று தோன்றியது. தவிர, நான் கடிதம் எழுதினால் மனீஷா அதை வீட்டில் எல்லாருக்கும் படித்துக் காண்பித்து என்னைக் கேலிக்குள்ளாக்குவாள் என்ற பயமும் இருந்தது.

அவள் எம்.ஏ. பாஸ் செய்தபிறகு சமூகக் கல்விப் பயிற்சிக்காக இரண்டு மாதங்கள் ஹைதராபாதில் தங்கியிருந்தாள். அந்த சமயத்தில் நான் தந்திரமாக அவளுடைய விலாசத்தைத் தெரிந்து கொண்டு அவளுக்கு ஒரு கடிதம் எழுதி என் காதலைத் தெளிவாகத் தெரிவித்தேன். அவளிடமிருந்து பதில் வரவில்லை. அவள் திரும்பி வந்த பிறகும் என் கடிதத்தைப் பற்றிப் பேசவில்லை. அவள் என்னிடம் நடந்து கொண்ட முறையிலும் எந்த மாறுதலும் இல்லை.

நானே ஒரு நாள் அருணுக்கு முன்னால் அவளைக் கேட்டேன். "நான் உனக்கு ஒரு லெட்டர் போட்டிருந்தேனே, நீ ஏன் பதிலே எழுதல்லே?"

அப்போது அவள் ஹைதராபாதிலிருந்து வாங்கி வந்திருந்த கற்கள் பதித்த மாலையை எங்களுக்குக் காட்டிக் கொண்டிருந்தாள். மிகவும் இயல்பாக என் பக்கம் திரும்பி, "லெட்டர் எழுதினீங்களா? எனக்குக் கிடைக்கலியே! கிடைச்சிருந்தா ரொம்ப சந்தோஷமா இருந்திருக்கும்... வெளியூரிலே இருக்கறபோது லெட்டர் கிடைச்சா உற்சாகந்தான்...

ஒரு சிறிய பெண்ணின் மனதைக் கவரும் திறன் எனக்கு இல்லையா? நான் அவ்வளவு மட்டமா, உதவாக்கரையா? இதற்கு முன் நான் சில பெண் களுடன் பழகியிருக்கிறேன், விளையாடியிருக்கிறேன். பொம்மைகளை வைத்துக் கொண்டு விளையாடுவது போல்: ஆனால் பொம்மைகளுக்கு உயிரூட்டும் மந்திரம் எனக்குத் தெரியவில்லை. மனீஷா வேறு யாரையாவது காதலிக்கிறாளா என்று கண்டுபிடிக்க நான் செய்த முயற்சி வீண். மேலும்

அவள் உண்மையில் யாரையாவது காதலித்தால் தன் காதலை மறைத்து வைக்கக் கூடியவளல்ல. மறைத்து வைக்கத் தேவையுமில்லை அவளுக்கு. அவளுடைய சக மாணவர்கள் அவளது வீட்டுக்கு வருவதுண்டு. அவள் அவர்களுடன் முன்னறையில் உட்கார்ந்து கொண்டு பேசிக் கொண்டிருப்பாள், சில சமயம் அவர்களுடன் வெளியே போவதுமுண்டு. அவர்கள் வீட்டுச் சூழ்நிலை அவர்களுக்கு முழு சுதந்திரம் அளித்திருந்தது. மேலும் மனீஷாவின் தந்தை கார்ப்பரேஷன் கவுன்சிலர். ஆகவே அவருக்குப் பொது அலுவல்கள் அதிகம், வீட்டைப் பற்றிக் கவனம் செலுத்த நேரமில்லை. அருணுக்கும் மனீஷாவுக்குமிடையே வயது வித்தியாசம் அதிகமில்லை. ஆகவே அவர்களிருவரும் நண்பர்கள் போலவே பழகுவார்கள்.

மனீஷா தன் அலட்சியமான போக்கால் என்னைத் துன்புறுத்தினாள். என் துன்பத்தை வெளியில் சொல்லவும் முடியவில்லை. இந்த விஷயத்தில் நான் மேலும் மேலும் தனிமைப்பட்டுப் போனேன். அதே அளவில் மனீஷாவுக்காக என் ஏக்கமும் வளர்ந்தது. பிறகு நான் அவர்கள் வீட்டுக்குப் போவதையே நிறுத்திக் கொண்டுவிட்டேன்.

மனீஷாவைப் பார்க்காமலிருப்பதால் நான் கொஞ்சங் கொஞ்சமாக என் சக்தியை இழந்து வருவதை உணர்ந்தேன். நான் சூதாட்டத்தில் மறுபடியும் தோற்கத் தொடங்கினேன். கொஞ்சங் குடித்ததுமே நினைவு தப்பத் தொடங்கி விட்டது. ரஸ்தாவைக் கடக்கும் போது பஸ்ஸில் அரைபடாமல் மயிரிழையில் தப்பினேன். என்னை நிமிர்ந்து பார்க்கக்கூடப் பயந்தவர்கள் சற்றும் தயக்கமின்றி என்னை அவமானம் செய்ய ஆரம்பித்தார்கள்...

மனீஷா விவகாரத்தை வெட்டு ஒன்று துண்டு இரண்டாக முடிவு செய்வதுதான் நல்லது என்று உணர்ந்தேன்.

பிறகு— நாலரை மாதங்களுக்குப்பிறகு- திடீரென்று ஒரு நாள் மனீஷாவுடன் சந்திப்பு நேர்ந்தது. ஒரு நாள் மாலையில் நான் நேஷனல் லைப்ரரியிலிருந்து வெளியே வந்து கொண்டிருந்தபோது மனீஷா என்னைப் பின்னாலிருந்து கூப்பிட்டாள். அவளும் லைப்ரரியில்தான் இருந்திருக்கிறாள்!

"நீ எப்போ வந்தே?" என்று கேட்டேன்.

"மூணு மணிக்கே வந்துட்டேன் நான்" என்றாள்.

ஆக, நாங்கள் இவ்வளவு நேரம் லைப்ரரியில் இருந்திருக்கிறோம். அப்படியும் நான் அவளைப் பார்க்கவில்லை. இப்போது எனக்குத் தெரிந்தவரோ அல்லது அவளுக்குத் தெரிந்தவரோ யாராவது வந்து விடுவார்கள், எங்களை விட்டு நகர மாட்டார்கள்... நாங்களிருவரும் அப்படியே அங்கிருந்து மறைந்து போய் விடமாட்டோமா என்றிருந்தது எனக்கு.

நல்ல வேளை, வேறு யாரும் எங்களைத் தொந்தரவு செய்ய வரவில்லை.

"நீ வீட்டுக்குத்தானே போறே?" நான் கேட்டேன்.

"ஆமா... நீங்க எங்கேயாவது அரட்டைக் கச்சேரிக்குப் போகப்போறீங்

களாக்கும்! பஸ் ஸ்டாப் வரையிலாவது என்னைக் கொண்டு போய்விடுங்க."

"நான் ஒரு இடத்துக்கும் போகலே. வா, மைதானத்திலே நடந்துக்கிட்டே எஸ்பிளனேடு வரையிலே போவோம். அங்கே உன்னைப் பஸ்ஸிலே ஏத்தி விட்டுடறேன். இன்னிக்குச் சூடும் இல்லே."

"நல்லாக் காத்து வருது, இல்லே? லைப்ரரிக்குள்ளே ஒரே இறுக்கமா இருந்தது."

சிறிது நேரம் மௌனமாகவே நடந்தோம். நான் நாலரை மாதங்களாக அவளைப் பார்க்கவில்லை என்பது பற்றி ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை அவள். நானோ அவளைப் பற்றி ஒவ்வொரு நாளும் நினைத்துக் கொண்டிருந்திருக்கிறேன். இப்போது அவளுடைய பேச்சும் நடத்தையும் இயல்பாக இருந்தது. அவளுக்கு என்னைப் பார்த்ததில் மகிழ்ச்சி என்றுதான் தோன்றியது. அவள் சிரித்தாலும் சிரிக்காவிட்டாலும் அவளுடைய கீழுதட்டில் எப்போதும் புன்னகை தவழ்ந்து கொண்டிருக்கும். அவளது அப்பழுக்கற்ற முகத்தின் நிறம் இப்போது நிலா வெளிச்சத்தில் சற்று மாறியிருந்தது. அவளணிந்திருந்த மெரூன் நிறப்புடைவை அவளது உடம்பிலிருந்து சற்று விலகினாற்போல் தோற்றமளித்தது. அவளுடைய புருவங்களுக்கு நடுவில் இல்லாமல் சற்று விலகி ஒரு சிவப்புப் பொட்டு. சற்றுக் குஷியாகவே இருந்தாள். தன் கைப்பையை அவ்வப்போது மேலே தூக்கிப் போட்டுப் பிடித்தாள்.

"மனீஷா, உன் கையைப் பார்க்கறேன், கொடு" என்றேன்.

அவள் தயங்காமல் கையை என் பக்கம் நீட்டியவாறு சொன்னாள், "பாருங்க, எப்படி வேர்த்துப் போயிருக்குன்னு. எனக்குக் கை ரொம்ப வேர்க்கும்."

நான் அவள் கையைப் பிடித்து அதன் மணத்தை முகர்ந்து விட்டுச் சொன்னேன், "உன் கையிலே தைலவாசனை. நீ தலைக்கு என்ன எண்ணெய் தேச்சுக்கறே?"

மனீஷா சாதாரணமாகக் கொண்டை போட்டுக் கொள்வதில்லை. அவள் தன் கையால் தலைமுடியை என்பக்கம் தள்ளி "நீங்களே மோந்து பாருங்களேன். வெறும் தேங்காயெண்ணெய்தான் தடவிக்கறேன்," என்று சொன்னாள்.

நான் அவளது தலைமுடியைக் கொத்தாகப் பிடித்துக்கொண்டு என் முகத்தை அதற்குள் புதைத்துக் கொண்டேன்.. யார் பார்த்தாலும் பார்த்துக் கொள்ளட்டும்!

"உன் முடியிலேயும் ஒரு நல்ல வாசனை-முடியோட சொந்த வாசனை!"

அவள் கலகலவென்று சிரித்தாள், "அப்படியா? ஆனா எல்லா மூக்குக்கும் இந்த வாசனை தெரியாது... எனக்கு ஒரு அழுகின நாத்தந்தான் தெரியுது."

"இல்லவேயில்லை! அழுகல் நாத்தம் இல்லே!"

"நிச்சயம் இருக்கு! இங்கே எங்கேயோ ஒரு செத்த பூனையோ நாயோ கிடக்கு... அதோ பாருங்க!"

உண்மைதான்—ரேஸ்கோர்ஸ் பக்கத்தில் ஓரமாக ஒரு நாய் செத்துக்

கிடந்தது. அது இரண்டு மூன்று நாள் முன்னால் காருக்கடியில் அரை பட்டிருக்கலாம். அதன் வயிற்றுப்பகுதி நசுங்கிச் சின்னா பின்னமாயிருந்தது. கண்களைக் காணோம். காகங்கள் அதைக் கொத்திக் குதறிவிட்டுப் போயிருக்கின்றன. நாளை மறுபடி தின்ன வரும். அந்த அருவருப்பான காட்சியைக் காணப் பொறுக்காமல் என் பார்வையைத் திருப்பிக் கொண்டேன். இப்போது இந்தக் காட்சியா கண்ணில் படவேண்டும்!

சற்றுநேரம் எங்களிடையே மௌனம். நாங்கள் கையைப் பிடித்துக் கொண்டு கொஞ்சதூரம் நடந்தோம். பிறகு நான் அவளைக் கேட்டேன், "மனீஷா, உனக்கு ஏன் இவ்வளவு அகம்பாவம்?"

"அட, நான் எப்போ உங்ககிட்டே அகம்பாவமா இருந்தேன்?"

"நீ என்னோட பேசவே மாட்டேங்கற... என்னைப் பார்க்கவே மாட்டேங்கறே... நான் உன்னை..."

"ஏன், இப்பத்தான் பார்த்துக்கிட்டோமே...! நீங்க எல்லாருந்தான் எங்கெங்கேயோ அலையறீங்க..."

"எல்லார் பேச்சும் இப்போ என்னதுக்கு? என்னைப்பத்தி மட்டும் நீ பேச மாட்டியா?"

"ஓ, அப்படீன்னா உங்களுக்குத்தான் அகம்பாவம் ஜாஸ்தியாயிருக்கு... தாபஸ் அண்ணாவுக்குக் கல்யாணம் ஆயிடுச்சாமே?"

"ஆமா—"

"பார்த்தீங்களா? எனக்கு அழைப்பு கூடக் கொடுக்கல்லே... ஆனா உங்க கல்யாணத்துக்கு நிச்சயம் எனக்கு அழைப்பு கொடுக்கணும், ஆமா!"

"உன் கலியாணம் எப்போ?"

"அதுதான் நினைச்சுப் பார்க்கறேன்... அந்த நல்ல நாள் வருமா?" என்று சொலலிச் சிரித்தாள் அவள்.

நானும் சற்றுச் சிரித்துவிட்டுக் கேட்டேன், "மனீஷா, உனக்கு என்னைப் பார்க்கவே பிடிக்கலே, இல்லையா?"

அவள் நேராக என் பக்கம் திரும்பிக் கொண்டு சொன்னாள், "ஏன், இதோ பார்க்கறேனே...! ஆகா, எவ்வளவு அழகான முகம் உங்களுக்கு! உங்களைப் பார்க்காமே இருக்க முடியுமா...? வாங்க, விக்டோரியா மெமோரியலுக்கு முன்னாலே போய்க் குல்ஃபி-மலாயி சாப்பிடலாம்."

"மனீஷா, ரொம்ப நாளாவே உன்கிட்ட ஒரு வார்த்தை சொல்லணும்னு—"

"இவ்வளவு நேரமாப் பேசிக்கிட்டிருக்கீங்க, இன்னும் ஒரு வார்த்தையா...? வாங்க வாங்க, குல்ஃபி மலாயி சாப்பிடலாம்."

"சாப்பிடலாம். அதுக்கு முன்னால..."

"அதுக்கு முன்னால ஏன்? அப்புறம் ஆகாதா? அப்படி என்னதான் விஷயம்? நடுநடுவிலே நீங்கள்ளாம் இந்த மாதிரி சிறுபிள்ளைத்தனம் செய்யறீங்க..."

"மறுபடியும் எல்லார் பேச்சையும் ஏன் எடுக்கறே? இன்னிக்கு என்னைப் பத்தி மட்டுந்தான் பேசணும்!"

"ஹூம், எவ்வளவு சுயநலக்காரர் நீங்க...! வாங்க அந்தக் கிழவன்கிட்டே போய்க் குல்ஃபி வாங்கலாம்..."

குல்ஃபி சாப்பிட்டு முடித்தோம். என் சிகரெட் தீர்ந்து போய்விட்டது. நான் கிரரெட் வாங்கிக் கொண்டேன். "ரெட்ரோடு வழியா நடக்கலாமே! அழகான ரஸ்தா!" என்றேன்.

ரஸ்தாவில் மங்கலான இருள். வண்டிகள் வேகமாகப் போய்க் கொண்டிருந்தன. சிகரெட்டின் புகை வாயிலிருந்து வந்ததுமே காற்றில் சிதறிப் போயிற்று. நாங்கள் காற்றுக்கு எதிர்த்திசையில் நடந்து கொண்டிருந்ததால் மனீஷா உடலின் ஒவ்வொரு பரிமாணமும் வளைவும் என் கண்ணுக்குத் தெளிவாகத் தெரிந்தது. நான் அவள் பக்கத்தில் நடந்தவாறு அவளுடைய கழுத்து, மார்பகம், தொடைகளின் சரிவு இவற்றைப் பார்த்து ரசித்தேன். பிறகு வேண்டுமென்றே சற்றுப் பின்தங்கி அவளது உடலின் பின் பக்கத்தைப் பார்த்துக் கொண்டேன். மனீஷாவை அப்பழுக்கற்ற அழகி என்று சொல்ல முடியாது. அவளுடைய இடுப்பு இன்னுங் கொஞ்சம் மெலிந்திருந்தால் நன்றா யிருக்கும். புட்டம் போதிய அளவு பெரிதாக இல்லை. தலைமுடியும் அவ்வளவு அடர்த்தியில்லை. ஆனால் ஒருசில குறைகளிருந்தால்தான் அழகு மனதைக் கவரும். மனீஷாவின் இடது கண்ணுக்கருகில் ஒரு வெட்டுக்காயம் இருக்கிறது. அந்தத் தழும்பில் முத்தமிட, அந்தத் தழும்பை என் முகத்தில் அப்படியே பதித்துக் கொள்ள ஆசையாயிருக்கிறது எனக்கு... பிறகு நான் அவள் முகத்தை நன்றாகப் பார்ப்பதற்காக அவளோடு சேர்ந்து நடக்கத் தொடங்கினேன்.

மனீஷா காற்றில் பறக்கும் தன் தலைமயிரை அழுத்திக்கொண்டு சொன்னாள், "இன்னிக்கு நடக்கறதுக்கு ரொம்ப நல்லாயிருக்கு. இந்த ரஸ்தா எவ்வளவு அழகு! இதிலே எப்போதும் நாம வண்டியிலேதான் போனோம். ஆனால் நடந்து போனாத்தான் மஜா– நீங்க என்ன சொல்றீங்க?"

"ஆமா, ஆனா இன்னிக்குக் காத்து ரொம்பப் பலமா வீசுது. உரக்கப் பேச வேண்டியிருக்கு."

"பேசாமயே இருந்தாப்போச்சு! பேசாம நடந்தாத்தான் நல்லாயிருக்கு–"

"ஆனா எனக்கு உன்னை ஒரு விஷயம் விசாரிக்கணுமே...! எங்கே, உன் கையைக் கொடு!"

"ஹஜாரிபாகிலே ஒரு ரஸ்தா இருக்கு, ரொம்ப அழகு! இரண்டு பக்கமும் அடர்த்தியான காடு, நடுவிலே நீளரஸ்தா. அந்த ரஸ்தாவிலே நடக்கறபோது யாருக்கும் பேசத் தோணாது. அதுதான் உலகத்திலேயே ஜன நடமாட்டமில்லாத இடம்னு விபூதிபூஷண்பந்த்யோபா சொல்றார். அப்போ என்னோட ரத்னா இருந்தா, அவளோட புருஷன் இருந்தார். இன்னும் ரெண்டு நண்பர்கள் இருந்தாங்க, ஆனா ஒருத்தரும் ஒரு வார்த்தைகூடப் பேசலே. எப்போதும் பேசிக்கிட்டே இருக்கிற நான் கூட மௌனமாயிட்டேன். அரைமணி நேரம்வரை எங்க செருப்போட சத்தம் மட்டுந்தான் கேட்டுக்கிட்டு இருந்தது."

நான் சட்டென்று நின்று, "மனீஷா, வரியா? மைதானத்திலே கொஞ்ச நேரம் உக்காரலாம்...

"ஊஹூம், ரொம்ப நேரம் ஆயிடுச்சு. திரும்பணும். வாங்க, போய்ப் பஸ்ஸிலே ஏறிக்கலாம்."

"சரி, அப்போ இங்கேயே கொஞ்சம் நிப்போம்."

"ரஸ்தாவிலே நடக்கறபோது நிக்கப் பிடிக்காது எனக்கு. நடந்துக்கிட்டே இருக்கத்தான் பிடிக்கும்."

ஆனால் நான் ஒரு மரத்தடியில் நின்றுவிட்டேன். மனீஷாவின் கை என் கைப்பிடியில். என் உதட்டுப் பக்கம் கசந்தது. உடலில் அவமான உணர்வு. ஒரு மனிதன் தான் விரும்புவதைச் சட்டென்று சொல்ல அவனால் ஏன் முடிவதில்லை? இத்தகைய சங்கடம் எனக்கு ஏற்பட்டதேயில்லை இதுவரை. அவளைக் கேட்க விரும்பினேன் நான். "உன்னைக் காதலிச்சு நிம்மதி பெற ஆசைப்படறேன் நான். நீ எனக்கு அந்த நிம்மதி தருவியா, மாட்டியா?"

ஆனால் நான் இப்படிச் சொன்னால் அவள் கலகலவென்று சிரித்து விடுவாள். அப்படிப்பட்ட பெண் அவள்! இந்தப் பெண்களே இப்படித்தான், ஒவ்வொரு பெண்ணும் கபடத்தனத்தின் உருவகம்! இவர்களைச் சமாளிப்பது என்னால் இயலாத காரியம்.

நான் அவளைப் பரிதாபமாகக் கேட்டேன், "என்னோட இங்கே நின்னுக்கிட்டிருக்க உனக்குப் பிடிக்கலியா?"

"ஏன் பிடிக்கலே? நல்லாப் பிடிக்குது... ஆனா இப்போ வீடு திரும்பணும்..."

"கொஞ்ச நேரமாயிட்டா என்ன மோசம்? நீ என்கிட்டே பயப்படறியா?"

உரக்கச் சிரித்தாள் மனீஷா. "ஏன் பயப்படணும்...? நீங்க ஏன் இன்னிக்கு அசட்டுப் பேச்செல்லாம் பேசறீங்க? உங்களுக்கு என்ன ஆயிடுச்சு?"

"ஒண்ணும் ஆகலே... நீ என்கிட்டே வர..."

"இப்போ கிட்டேதானே இருக்கேன்! இன்னும் கிட்டே வரணுமா? இதோ வந்துட்டேன்...! சரி, வாங்க, திரும்பிப் போகலாம்."

"உனக்கு ஒண்ணும் புரியலியா?"

"இல்லே, எனக்குப் புரியலே... இருட்டு வேளையிலே எனக்கு நீங்க புரியவைக்கவும் வேண்டாம்."

என் பொறுமை அத்துடன் தீர்ந்து போய்விட்டது. நல்லவனாக ஆவதற்காக நான் மேற்கொண்ட முயற்சிகளும் முடிந்து போய்விட்டன. என் வாழ்வைச் சீர்திருத்திக் கொள்ளும் முயற்சியும் அத்துடன் நின்று போய்விட்டது. நான் அவளைச் சட்டென்று என்பக்கம் இழுத்துக் கட்டித் தழுவிக் கொண்டேன். என் ஒரு கை அவளுடைய முதுகைப்பலமாக அழுத்தியது. அந்த அழுத்தத்தில் என் கை விரல்கள் அவளுடைய மிருதுவான முதுகில் பதிந்தன. அவளுடைய முதுகெலும்பு முறிந்துவிடும் போலிருந்தது. இன்னொரு கையால் நான் அவளுடைய முகத்தை நிமிர்த்தினேன். முதலில் அவள் தன் உதடுகளைத் திறக்கவில்லை. நான் பலவந்தமாக அவளை உதடுகளைத் திறக்க வைத்து என் மூச்சு முட்டும் வரையில் தொடர்ந்து முத்தமிட்டேன்.

இந்த மொழியையாவது அவள் புரிந்து கொள்கிறாளா, பார்க்கலாம்!

நான் என் பிடியை விட்டதும் மனீஷா முதலில் தன் உதடுகளையும் பிறகு தன் முகம் முழுவதையும் தன் புடைவைத் தலைப்பால் துடைத்துக்

கொண்டாள். பிறகு அமைதியாகச் சொன்னாள், "சீ, இதென்ன பைத்தியக்காரத்தனம்!"

எனக்குப் பதில் சொல்ல விருப்பமில்லை. அப்போது எனக்கு மூச்சு இறைக்கிறது. என் கண்கள் மங்கிப் போய்விட்டன. தூரத்திலிருக்கும் மரங்களையோ ஆகாயத்தையோ பார்க்க முடியவில்லை என்னால். எவ்விதப் பின்புலமும் இல்லாமல் மனீஷா மட்டும் என் பார்வைக்குத் தெரிந்தாள். அவளது சிறு உருவம் தரையைத் தொட்டுக் கொண்டிருந்தபோதிலும் வானளாவி நிற்பதாகத் தோற்றமளித்தது. நான் மறுபடியும் முத்தமிட அவளை என் பக்கம் இழுக்க முயன்றபோது அவள் தன் மிருதுவான கையால் என் உதடுகளைப் பொத்திவிட்டுச் சொன்னாள். "இனியும் நீங்க இந்த மாதிரிப் பைத்தியக்காரத்தனம் செய்ய விடமாட்டேன். பின்னால் இதனால் உங்களுக்குத்தான் கஷ்டம்."

"ஏற்கனவே எனக்கு ரொம்பக் கஷ்டமாத்தான் இருக்கு. நீ ஏன் எனக்கு இவ்வளவு கஷ்டம் கொடுக்கறே?"

"நான் உங்களுக்குக் கஷ்டம் கொடுக்கறேனா...? அப்படீன்னா தெரியாம கொடுத்திருப்பேன்... நிசமாவே உங்களுக்குக் கஷ்டமா என்னாலே?"

அப்போது என் மூளை தெளிவாயில்லை. எல்லாமே தலைகீழாகிவிட்ட மாதிரி இருந்தது. இறுதியாகத் தோல்வியடையும் சமயத்தில் எல்லா மனிதர்களுமே கோழையாகிவிடுகிறார்கள். நான் கரகரத்த குரலில் கத்தினேன், "உனக்கு ஒண்ணும் தெரியாதா? வேஷமா போடறே?" பேசும்போதே அவள் கன்னத்தில் பலமாக அறைந்துவிட்டேன். இவ்வளவு பலமாக அறைய விரும்பவில்லை நான். இல்லை, அறைய வேண்டுமென்றே இதற்குமுன் தோன்றவில்லை எனக்கு.

பிறகு அவளை எரித்து விடுவது போல் பார்த்துக் கொண்டு நின்றேன்.

மனீஷாவும் வெகுநேரம் என்னைப் பார்த்தவாறு நின்றாள். அவள் முகத்தில் கோபத்தின் சாயலே இல்லை. அவளுடைய கண்கள்கூட அமைதியாக, தெளிவாக ஒளி வீசின. இல்லையில்லை. ஒளியில்லை, அது கண்ணீர் துளிர்க்கும் அடையாளம்.

அவள் மெல்லச் சொன்னாள், "நீங்க நிசமாவே பைத்தியமாயிட் டீங்களா...? நீங்க இந்த மாதிரி சிறுபிள்ளைத்தனம் பண்ணுவீங்கன்னு தெரியாது எனக்கு. இவ்வளவு பலமா அறையலாமா? நிசமாவே ரொம்ப வலிக்குது..."

"மனீஷா, என்கிட்டே என்ன குறை? நான் எந்த விதத்திலே தகுதியில்லாதவன்?"

"நல்ல பைத்தியத்துக்கிட்டே மாட்டிக்கிட்டேன் நான்...! உங்ககிட்டே குறையிருக்குன்னு சொன்னேனா? நீங்க சிறுபிள்ளைத்தனமாயிருக்கீங்கன்னு தான் சொன்னேன்..."

"நீ பேச்சை மாத்தறே. நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லு! என் கிட்டே என்ன குறை இருக்குன்னு எனக்குத் தெரிஞ்சுதான் ஆகணும்!"

"நான் இனிமேல் ஒரு பேச்சும் கேட்கத் தயாரில்லே, பதில் தரவும்

தயாரில்லே. நான் வீட்டுக்குப் போகப்போறேன். ஆனா அதுக்காக நீங்க என்னை இந்த இருட்டிலே தனியா விட்டுட்டுப் போயிடக்கூடாது. பஸ் ரஸ்தா வரையிலே என்னைக் கூட்டிக்கிட்டுப்போய் விட்டுடுங்க" மனீஷா மெதுவாக என் கையைப் பிடித்துக் கெஞ்சும் குரலில் தொடர்ந்தாள், "வாங்க, நல்ல பிள்ளையா வாங்க. நீங்க அனாவசியமா என் மேலே கோவிச்சுக்கிட்டு இருக்கீங்க."

எந்தப் பொருளைக் கொண்டு உருவாக்கப்பட்டவள் இவள்? இவள் பெண்ணா அல்லது மோகினிப் பிசாசா? பிசாசாயிருந்தால் இந்த இருபத்து நான்கு வயதான வாழ்க்கையைக் கொண்டு என்ன செய்ய நினைக்கிறாள்? இவளுடைய உடம்பு அப்படியொன்றும் குளிர்ச்சி இல்லையே! நான் இவளது மார்பகத்தைத் தொட்டுப் பார்த்திருக்கிறேன். அது குளிர்காலத்தில் பூனையின் உடம்பைப் போல் மிருதுவாக, கதகதப்பாகத் தான் இருக்கிறது. ஹோலியன்று நான் திடீரென்று இவளுடைய மார்பகத்தைத் தொட்டபோது அவள் முகத்தில் நாணம் தெரியாவிட்டாலும் இவளது மார்பு நாணமும் உணர்ச்சியும் கொண்டது என்பதை நான் கவனித்திருக்கிறேன். இன்று இவளை முத்தமிட்டபோதும் இவளுடைய நாக்கின் வெதுவெதுப்பை அனுபவித்தேன். பின் ஏன் இப்படி உணர்ச்சியில்லாமல் என் வாயை அடைக்கிறாள்? என்னை இப்படித் தோற்கடிப்பதில் இவளுக்கு என்ன மகிழ்ச்சி? இத்தணையூண்டுப் பெண், கையால் நசுக்கினால் நசுங்கிப் போய்விடுவாள், இவளால் எப்படி என்னை அசடாக்க, பலவீனமாக்க முடிகிறது? உண்மையிலேயே எல்லாப் பெண்களும் காளி மாதிரி மனிதத் தலைகளை மாலையாக்கி அணிந்து கொள்ள விரும்புகிறார்களா? ஆண்களைக் குத்திக் கிழிக்காவிட்டால் திருப்தியேற்படாதா அவர்களுக்கு? மனீஷா ஹைதராபாதிலிருந்து வாங்கி வந்த மணிமாலை போட்டுக்கொண்டிருக்கிறாள். அதற்குப் பதிலாக மனிதத்தலைகள் கோத்த மாலை வேண்டுமா இவளுக்கு?

நாங்கள் மௌனமாகப் பாக்கி தூரத்தைக் கடந்தோம். எப்போதும் கலகலப்பாயிருக்கும் ஒரு பெண்ணின் வாயை அடைத்துவிட்டேனே என்று எனக்குப் பச்சாத்தாபம் ஏற்பட்டது. ஆனால் நான் என்ன தவறு செய்துவிட்டேன் என்பதும் புரியவில்லை எனக்கு. நான் ஒரு பெண்ணின் உள்ளேயிருந்து அவளது பெண்மையை வெளிக்கொணர முயற்சித்தேன். என்னால் முடியவில்லை. எப்படி வெளிக்கொணர்வது என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் ஒரு விஷயம் எனக்குத் தெளிவாகத் தெரியும். இதயம் கிதயம் என்பதெல்லாம் வெறும் பேச்சு, ஒரு பெண்ணின் உள்ளிருக்கும் பெண்மையைப் பார்க்காமல் என்னால் இருக்க முடியாது. அவள் அதைக் காண்பிக்காவிட்டால் என்னால் பார்க்க இயலாது...

மதுபூரில் பூத்துக் குலுங்கும் ஒரு வாகை மரம் எனக்கு மிகவும் பிடித்துப் போய்விட்டது. அதற்குள் ஒரு பெண்ணின் அழகு இருக்கிறதென்று எனக்குப் புரிந்தது. இரண்டு அழகான நாய்க்குட்டிகள் விளையாடிக் கொண்டிருப்பதை ஒரு சமயம் பார்த்தேன். அந்தக் காட்சியிலும் பெண்மையின் அழகை உணர முடிந்தது என்னால். ஒரு படுக்கை விரிப்பின் அழகான வேலைப்பாட்டில் பெண்ணின் உருவச்சாயல்

தெரிகிறது. அழகான ஒவ்வொரு பொருளிலும் பெண்மையைப் பார்க்கிறேன். அப்படியிருக்க ஒரு பெண்ணுக்குள் பெண்மையைக் காணமுடியாதா என்னால்?

இதுவரை முடியவில்லை. மனீஷா எனக்குக் கிடைக்கவில்லை...

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகும் நான் மனீஷாவைச் சந்தித்திருக்கிறேன். அவள் என்னைப் பற்றி புகார் செய்யவில்லை. என்னிடம் இயல்பாக நடந்து கொண்டாள். ஆனால் நெருங்கி வரவில்லை மனீஷாவின் மர்மத்தைக் கண்டு பிடிக்க இன்னும் எவ்வளவு காலம் காத்திருக்க வேண்டுமோ, தெரியவில்லை. ஆனால் அவளைத் தனிமையில் சந்திக்கும் விருப்பம் எனக்கு அதற்குப்பின் ஏற்படவில்லை. ஆனால் அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு, பெண்கள் மேல் என் கோபம் வெகுகாலம் நிலைத்திருந்தது. சுமார் நாலைந்து மாதங்கள் நான் பெண்களை மிகவும் கடுமையாக நடத்தினேன். அவர்களுடைய உடம்பைக் குத்திக் குதறினால் அவர்களது பெண்மையின் ரகசியத்தைக் கண்டுபிடிக்கலாம் என்று நினைத்தேன் நான். ஆனால் ரகசியம் எங்கே? உடலில் உடல்தான் இருந்தது. அவ்வப்போது உடலை உடலுக்காகவே அனுபவிக்க நன்றாகத் தானிருக்கிறது. கைக்கருகில் இன்னொரு உடலுக்காக ஏக்கம் ஏற்படுகிறது. அந்த உடலின் எல்லா மூலைமுடுக்குகளையும் தெரிந்து கொள்ள ஆசை உண்டாகிறது. நம் உடலுடன் அந்த உடலைப் பிணைத்துக் கொள்ளத் தோன்றுகிறது. ஆனால் அந்த உடலுக்குரியவளை முழுதும் உணர்ந்து கொண்டதாக எனக்குத் தோன்றுவ தில்லை. அவளது அழகு என்னைப் புறக்கணிக்காமல் ஏற்றுக் கொண்டு என்னைத் தூய்மையாகும்படி தூண்டவில்லை.

மனிதன் ஏன் குளிர்காலத்தில் விடியுமுன் எழுந்திருந்து சூரியோதயம் பார்க்க டைகர் ஹில்லுக்குப் போகிறான்? நான் ஒளிவு மறைவின்றிச் சொல்கிறேன். டைகர் ஹில்லிலிருந்து நான் பார்த்த சூரியோதயத்தில் பெண்மையின் அழகைக்கண்டேன். ஆனால் யாராவது ஒரு பெண்ணிடம் சூரியோதயத்தின் அழகைப் பார்க்க நான் விழைகிறேன்.



தாத்தாவின் மரணத்துக்குப் பின் வெகு நாட்கள் நான் வீட்டிலேயே இருந்தேன். அந்தச் சில நாட்கள் குடும்பச் சூழ்நிலையில் பொழுது கழிந்தது. பெரிய அக்கா, அம்மாவையும் அப்பாவையும் மூன்றாவது சித்தப்பா வீட்டிலிருந்து தன் வீட்டுக்குக் கூட்டி வந்தாள். துக்கம் கொண்டாடும் வீடுதான். விருந்தினர் வருகையால் அது ஓரளவு விழாக்கோலமும் பூண்டது. வெகு நாட்களுக்குப் பின் தாத்தா, பாட்டி வந்ததால் குழந்தைகளுக்குக் கொண்டாட்டம். அவர்களது கும்மாளத்தை யார் அடக்க முடியும்?

அம்மா தொடக்கத்தில் அழுது கொண்டேயிருந்தாள். பிறகு ஒரு சமயம் அழுகையை நிறுத்திவிட்டு என்னைக் கேட்டாள், "உன் மோவாயில வெட்டுக் காயம் எப்படி வந்தது?"

"பாத்ரூமிலே வழுக்கிவிட்டு..."

"இங்கே வா, என்கிட்டே வந்து உக்காரு..."

அம்மாவின் தோற்றம் மிகவும் மோசமாயிருந்தது. உடம்புத்தோல் உடம் பிலிருந்து பிரிந்து தனியாகத் தொங்குவது போலிருந்தது.

"அண்ணி உன்னை நல்லாக் கவனிச்சுக்கறதில்லையா? உன் உடம்பு ஏன் இவ்வளவு மோசமாயிருக்கு?" நான் கேட்டேன்.

"கவனிச்சுக்காம என்ன? சரமா சாட்சாத் லட்சுமியாக்கும்...! அது சரி, நீ எப்போ கலியாணம் பண்ணிக்கப்போறே? நாங்க உனக்கு ஒரு ஏற்பாடும் பண்ணலேன்னு எல்லாரும் எங்களைக் குத்தஞ்சொல்றாங்க. என் அப்பா சாகறதுக்கு முன்னால உன் பெண்டாட்டி முகத்தைப் பார்த்துட்டுப் போயிருக்கலாமே!"

"ஆமா ஆமா... உன் அப்பாவை சாகறதுக்கு முன்னாலே நானே பார்க்கலே. அவர் என் பெண்டாட்டி முகத்தைப் பார்க்கலேன்னு நீ வருத்தப்படறே!"

"நீ ஒரு நாள் கூட ஆஸ்பத்திரிக்குப் போகலே... அவருக்கு உன்மேலே எவ்வளவு பாசம்!"

"எனக்கும் அவர்மேலே ரொம்பப் பாசந்தான். ஆனா அம்மா, எனக்கு ஆஸ்பத்திரிக்குப்போகப் பிடிக்கறதேயில்லே. போகணும் போகணும்னு நினைச்சுக்கிட்டிருந்தேன், ஒவ்வொரு நாள் ஆஸ்பத்திரி வாசல்வரை போயிட்டு உள்ளே நுழையாமே திரும்பி வந்துட்டேன். வியாதியைப் பார்க்க எனக்குப் பிடிக்கல்லே."

"அப்படீன்னா எனக்கு வியாதி வந்தா நீ பார்க்க வரமாட்டே! நான் ஒரு நாள் செத்துப்போவேன், உனக்குத் தெரியாமயே...!"

"அதென்ன அப்படிச் சொல்றே? ஆஸ்பத்திரிக்குப் போனா நம்மள வங்களைத் தவிர வேறே நோயாளிகளையும் பார்க்க வேண்டியிருக்கே, அதனாலேதான்..."

"நீ உடம்பு நல்லாயிருக்கியா?"

அந்த சமயத்தில் பெரிய அக்கா அங்கே வந்தாள். அவள் சொன்னாள், "அதை ஏன் கேக்கறே, அம்மா! அப்பப்பா அவன் திருவிளையாடல்! உடம்பைப் பத்திக் கொஞ்சங்கூடக் கவலைப்படலே. அப்படியும் ஏதோ கண்ணிலே படும்படியா வச்சுக்கிட்டிருக்கேன்."

"நீ இவ சொல்றதை நம்பாதேம்மா! நான் ரொம்ப நல்ல பிள்ளையா இருக்கேன். என்னைப் பத்திக் கவலையே பட வேண்டாம். எனக்குத்தான் உங்களைப் பத்திக் கவலையா இருக்கு..."

"நீ ஒண்ணும் எங்களுக்காகக் கவலைப்படவேண்டாம். நீ கவலைப்படறதாயிருந்தால்தான் இந்தப் பிரச்னையே வந்திருக்காதே!"

"அம்மா, நீ இங்கே கொஞ்ச நாள் இருந்து உடம்பைத் தேத்திக்க. எனக்குச் சிநேகிதன் ஒரு நல்ல கண் டாக்டர் இருக்கார். அவர்கிட்டே போய் உன் கண்ணை டெஸ்ட் பண்ணிக்கலாம்."

"நான் திங்கள்கிழமையே பெர்ஹாம்பூருக்குக் கிளம்பறேன். சரமா கர்ப்பமாயிருக்கா, அவளைத் தனியா விட்டுட்டு வந்திருக்கேன்."

"ஒரு வருஷத்துக்குள்ளே இன்னொரு குழந்தையா?"

அம்மா ஏதோ ஞாபகம் வந்ததும் வருத்தத்துடன் சொன்னாள்,

"காயத்ரி சமாசாரம் தெரியுமா உனக்கு? அதான் முகர்ஜி வீட்டுக் காயத்ரி? அவ ஆறுமாசம் கர்ப்பமாயிருந்தபோது ஊரையழைச்சு மசக்கைக்கு விருந்து போட்டாங்க. அதுக்குக் கொஞ்சநாள் கழிச்சு அவளோட புருஷன் அபரேஷ் செத்துப்போயிட்டான்!"

அக்கா திடுக்கிட்டுக் கேட்டாள், "அய்யோ! ஒண்ணரை வருஷம் முன்னால் தானே அவளுக்குக் கலியாணமாச்சு! அவன் எப்படிச் செத்துப் போனான்?"

"வயத்திலே ஏதோ பிரச்னை... ஆபரேஷன் செய்யப் போய்... இப்போ காயத்ரிக்கு ஏழு மாசம். என்ன பரிதாபம்...!

அம்மாவும் அக்காவும் காயத்ரிக்காகப் பரிதாபப்படத் தொடங் கினார்கள்.

வகிட்டில் குங்குமம் அணிந்த நிலையில் காயத்ரியைப் பார்த்ததே இல்லை நான். ஆகையால் குங்குமம் அழிந்த நிலையில் அவளைக் கற்பனை செய்து கொள்ள முடியவில்லை என்னால். நான் கேட்டேன், "அபரேஷ் யார் வீட்டுப் பையன்? காயத்ரி விரும்பித்தான் அவனைக் கல்யாணம் பண்ணிக்கிட்டாளா?"

"இல்லையில்லே, வீட்டுப் பெரியவங்கதான் பண்ணி வச்சாங்க... புது ஸ்டேஷன் மாஸ்டரோட பையன். ரொம்ப நல்லபிள்ளை, உடம்பும் நல்லாத்தான் இருந்தான். மூத்திரம் போறது கஷ்டமாயிருந்ததாம். அதுக்காகத் தான் வயத்திலே ஆபரேஷன் பண்ணினாங்க. இந்த வயசிலே என்ன கஷ்டம் அந்தப் பொண்ணுக்கு! வயத்திலே குழந்தை வேறே!"

"நீங்க இவனுக்குக் காயத்ரியைக் கல்யாணம் பண்ணி வைக்கறதா..."

அம்மாவின் உடம்பு வெடவெட என்று நடுங்கியது. "நல்லவேளை, பண்ணலே! அதிருஷ்டங்கெட்ட பொண்ணு அவ...!"

"நீ ஏன் அனாவசியமா அந்தப் பொண்ணைக் குத்தஞ் சொல்றே?" அக்கா இடைமறித்துச் சொன்னாள். "அந்தப் பையனோட விதி கெட்டதா யிருந்திருக்கலாமே! ஒரு சமயம் அவளை இவனுக்குக் கலியாணம் பண்ணியிருந்தா அவளுக்கு இந்தக் கதி நேர்ந்திருக்காது."

"காயத்ரி என்னைக் கலியாணம் பண்ணிக்கிட்டிருந்தா அவளே செத்துப் போயிருப்பா" நான் சிரித்துக் கொண்டே சொன்னேன்.

"சீ! ஏன் இவ்வளவு இரக்கமில்லாமப் பேசறே?"

"நான் நிசத்தைத்தான் சொல்றேன்... ஒரு ஜோசியன் என் கையைப் பார்த்துச் சொல்லியிருக்கான். நான் முப்பது வயசுக்கு முன்னாலே கலியாணம் பண்ணிக்கிட்டா என் பெண்டாட்டி செத்துப் போயிடுவான்னு."

அக்கா சிறிது அவநம்பிக்கையோடு "போலி ஜோசியன்!" என்றாள்.

அம்மா சொன்னாள், "உன் ஜாதகம் என்கிட்டே இருக்கு. எனக்குத் தெரியாதா? என்கிட்டேயா சரடு விடறே?"

பெர்ஹாம்பூர் சிறைக்கு அருகிலுள்ள ரஸ்தாவில் பொழுதுசாயும் நேரத்தில் அபரேஷிடம் "நான் இப்போ கலியாணம் செஞ்சுக்க விரும்பல்லே" என்று காயத்ரியால் சொல்ல இயலவில்லை; அபரேஷைப் பரிதாபமாகப் பார்த்து, "நான் கலியாணம் செஞ்சுக்காட்டாலும் பல விஷயங்களைத் தெரிஞ்சுக்க விரும்பறேன்" என்று சொல்ல முடியவில்லை. வெளி நாடு

சென்று மேல் படிப்பு படிக்க விரும்பனாள் அவள். வங்காளத்தின் ஒரு சிறு நகரத்தில் ஒரு வக்கீல் வீட்டுப் பெண்ணாகப் பிறந்தவளுக்கு எவ்வளவு பைத்தியக்காரத்தனமான ஆசை இது! இப்போது அவள் வெள்ளை உடையணிந்து பள்ளியில் ஆசிரிசையையாகக் காலங்கழிக்க வேண்டும். அவள் வயிற்றிலுள்ள குழந்தை பிழைக்காவிட்டால், சைவ உணவு மட்டும் சாப்பிட்டு அவள் உடம்பு கெட்டுப் போகாமலிருந்தால், அவள் எதிர்காலத்தில் இலட்சியவாதியான ஒரு பஞ்சாபி இளைஞனை மணந்து கொள்வதும் சாத்தியமே. அவளுக்காக நான் வருத்தப்படுவது உசிதமா இல்லையா என்று எனக்குப் புரியவில்லை. அவளது இப்போதைய முகத்தை நான் பார்க்கவில்லை. அவளுடைய சோகமான தோற்றத்தைப் பார்த்தால் எனக்குச் சங்கடமாக இருக்கும். ஆகையால் நான் பெர்ஹாம்பூருக்குப் போகப் போவதில்லை.

அக்கா எனக்கு வேறொரு சங்கடத்தை உண்டாக்கி விட்டாள்; வீட்டில் வேறு இடமில்லையென்று என் அறையில் இன்னொரு கட்டிலைப் போட்டு அதில் அப்பா படுத்துக் கொள்ள ஏற்பாடு செய்துவிட்டாள். வயது வந்த பிள்ளையும் அப்பாவும் ஒரே அறையில் படுத்துக் கொள்ள முடியுமா? அப்பாவுக்கு முன்னால் பிள்ளை சிகரெட் பிடிக்க முடியுமா? நான் சிறிது ஆட்சேபம் செய்து பார்த்தேன். அக்கா கேட்கவில்லை. நான் பலமாக ஆட்சேபித்திருந்தால் எனக்கு அப்பாவிடம் மரியாதையில்லை யென்று சொல்லுவார்கள்.

அப்பாவுக்கு மரியாதை காட்டுவது இருக்கட்டும், சிறு வயதிலிருந்தே அவருடன் நான் அதிகம் பேசுவதில்லை. நாலைந்து வருடங்கள் அவருடன் எனக்குப் பேச்சு வார்த்தையே இல்லாமலிருந்தது. இந்த நிலையில் அவருடன் ஒரே அறையில் படுத்துக்கொள்வது எவ்வளவு சங்கடமான விஷயம்! இந்த சமயத்தில் வீட்டுக்கு வெளியே இரவைக் கழிப்பதும் நன்றாகயிருக்காது. ஆகையால் நான் இப்போதெல்லாம் நாள் முழுவதும் என் அறைக்குப் போவதில்லை. வீட்டுப் பெண் பிள்ளைகளோடு பேசியோ, அல்லது அக்காவின் குழந்தைகளோடு கேரம் விளையாடியோ பொழுது போக்கிவிட்டு இரவு வேளையில் அறைக்குள் நுழைந்து படுக்கையில் படுத்துவிடுகிறேன்.

படுத்துக் கொண்டதும் தூக்கம் வந்துவிடுவதில்லை. நான் இருட்டில் அப்பாவின் கட்டிலைப் பார்த்துக் கொண்டிருப்பேன். இறுக்கமாக இருப்பதால் இரவு முழுதும் ஃபேன் சுற்ற வேண்டும். ஆனால் அப்பா எப்போதும் போர்வையைப் போர்த்திக் கொண்டுதான் தூங்குவார். அவருக்கும் எளிதில் தூக்கம் வருவதில்லை. அவருக்குத் தூக்கம் குறைந்து போய்விட்டது என்று தோன்றுகிறது. நடு இரவில் எழுந்திருந்து ஒரு சிகரெட் பற்ற வைத்துக் கொள்வார். அவர் மூச்சை உள்ளிழுக்கும் போது சிகரெட் நெருப்பின் ஒளியில் அவரது முகம் தெளிவின்றித் தெரியும்.

அப்பா அக்காவீட்டில் இப்படித் தங்கியிருந்தபோது அவருடன் சில வார்த்தைகள் பேசினேன். முதல் நாள் இரவில் "ஃபேன் சுத்திக்கிட்டிருந்தா உங்களுக்கு அசௌகரியமா இருக்குமா?" என்று கேட்டேன். அவர் "இல்லை" என்று சொன்னார். பிறகு கேட்டார், "நீ அந்த வேலையை

விட்டுட்டு உன் அக்கா புருஷன்கிட்டே வேலைக்கு வந்திருக்கியே, உறவுக் காரங்ககிட்டே வேலை பார்க்கறது நல்லதா?"

நான் அவர் பக்கம் திரும்பாமலே, மேஜையின் மேலிருந்த புத்த கங்களைச் சரி செய்வதாகப் பாவனை செய்தவாறு, "அக்காதான் ரொம்ப வற்புறுத்தினா... சம்பளமும் ஜாஸ்தி" என்றேன்.

"இருந்தாலும் சர்க்கார் உத்தியோகம் நிலையானது... இப்பல்லாம் சர்க்கார் உத்தியோகம் லேசிலே கிடைக்காது..."

இதற்கு என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் சும்மா ஏதோ முனங்கினேன்.

அப்பாவின் தலைமுடி பெரும்பாலும் நரைத்துவிட்டது. அவர் ஓய்வு பெற்று ஐந்தாறு வருடங்களாகிவிட்டன. ஏற்கெனவே மெலிந்த அவரது தோற்றம் இரண்டு மூன்று நாட்களாக முகம் மழிக்கப்படாததால் இன்னும் மெலிந்து காணப்பட்டது. அவர் நள்ளிரவில் போர்வையைப் போர்த்தவாறு படுக்கையில் உட்கார்ந்து கொண்டு கிரரெட் பிடிப்பதைப் பார்க்கும்போது பரிதாபமாயிருக்கும். பக்கத்துக் கட்டிலில் அந்த இருட்டில் நான் கண்களைத் திறந்தவாறு படுத்திருப்பேன். அப்பா மற்றவர்களால் புறக்கணிக்கப்பட்டுத் தனிப்படுத்தப்பட்டிருக்கிறார் என்று தோன்றும் எனக்கு. அவருடன் மனந்திறந்து பேச எனக்கு உள்ளூர ஆசை ஏற்படும். இவர் என்னைப் பெற்றவர். இருட்டில் என்னைப் பார்த்துக் கொண்டிருக்கிறார். இவருக்கும் என்னுடன் ஏதாவது பேச வேண்டிய விஷயம் இருக்கலாம். இதற்குள் ஓரிரு முறை இவர் சாவின் அழைப்பைக் கேட்டிருக்கிறார். இந்த நிலையில் தன் சந்ததிக்குக் கடைசியாகச் சொல்ல வேண்டியது எதுவுமிருக்காதா? அப்பாவிடம் எனக்கிருந்த கோபமெல்லாம் மறைந்து, இப்போது அவரிடம் பரிவு ஏற்பட்டது என்று சொல்லலாம். ஆதரவற்ற நிலையில் இருப்பவராகத் தோற்றமளித்த அவருக்கு ஆதரவாக அவர் பக்கம் கையை நீட்ட விரும்பினேன். அவருக்குக் காய்ச்சல் வந்தால் அவருடைய நெற்றியில் ஈரத்துணியை வைத்து அவரது தலைமுடியைக் கோதிவிட ஆசை உண்டாயிற்று. இடையிடையே அவர் இருமினார். 'கல்கல்' என்று இருமல் ஒலி. அவரது நெஞ்சுக்குள் எண்ணற்ற வலைகள் பின்னிக்கிடந்தாற் போல் தோன்றியது. அவர் வெகு நேரம் இருமிவிட்டுப் பக்கத்திலிருந்த கிண்ணத்தில் கோழையைத் துப்பினார். அவரிடம் நெருங்கிப் போய் என் கையால் அவர் வாயைத் துடைத்துவிடலாம் போலிருந்தது. என் கையால் அவரது எச்சிலைத் தொடும் எண்ணம் அருவருப்பு உண்டாக்கவில்லை. அவரிடம் ஆதரவாகச் சில வார்த்தைகள் சொல்ல விரும்பினேன் நான். ஆனால் எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது என்பதுதான் புரியவில்லை. சிறு வயதி லிருந்தே அவருடன் அந்தரங்கமாகப் பேசிப் பழக்கமில்லை எனக்கு. அந்த இருளில் நாங்களிருவர் ரத்த உறவில் மிகவும் நெருங்கியவர்கள். ஆனால் நாங்கள் உரையாடுவதற்கான மொழியை மறந்துவிட்டோம். ஆகையால் எங்களிடையே மௌனமே நிலவியது. நான் படுக்கையிலிருந்தவாறே சிகரெட் வெளிச்சத்தில் தெரிந்த அப்பாவின் தெளிவற்ற முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.



சில நாட்களுக்குப்பிறகு நான் ஆபீசுக்குச் சென்றபோது என்மேஜை மேல் ஒரு காகிதத் துண்டு இருந்தது. அதை எடுத்துப் பார்த்தேன். சேகர் எனக்கு டெலிபோன் செய்திருக்கிறான். நான் ஐந்தாம் நம்பர் வீட்டில் அவனைப் போய்ப் பார்க்க வேண்டுமாம்.

அப்படியானால் சேகர் திரும்பி வந்துவிட்டானா? இப்போது யார் ஐந்தாம் நம்பர் வீட்டுக்குப் போவது? அந்தமாதிரி இடங்களுக்குப் போக எனக்கு இப்போது கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை. விஷயம் என்ன வென்று தெரிந்து கொள்வதற்காக அவனுடைய ஆபீசுக்கு போன் செய்தேன். அவன் ஐந்து நாளாகவே ஆபீசுக்கு வரவில்லையாம். இன்னும் மூன்று வாரங்களுக்கு லீவு போட்டிருக்கிறானாம்... கல்கத்தாவில் இருந்துகொண்டு ஆபீசுக்கு ஏன் போகவில்லை அவன்?

நான் அவனுடைய வீட்டுக்கு போன் செய்தேன்.

தபதிதான் டெலிபோனை எடுத்தாள். அவள் குரலைக் கேட்டதும் திடுக்கிட்டேன். தபதிக்குக் காது மந்தம். அவளுடன் டெலிபோனில் பேசுவது ரொம்ப சிரமம். ஆபீஸ் போனில் உரக்கப் பேசினால் நன்றா யிருக்குமா? ஆங்கிலத்தில் பேசினால் பரவாயில்லை. காது மந்தமானவர்கள் ஆங்கிலப் பேச்சை எளிதில் புரிந்து கொள்வதை நான் கவனித்திருக்கிறேன். நான் முடிந்தவரை என் குரலை கீச்சுக் குரலாக்கிக் கொண்டு, "சேகர் இருக்கானா?" என்று கேட்டேன்.

"ஹலோ, யாரு பேசறது?" மறுமுனையிலிருந்து தபதியின் கேள்வி.

"சேகர் இருக்கானா?"

"யாரு பேசறது?"

"பேரைச் சொன்னாலும் உன் காதிலே விழாது, பேரைச் சொல்லி என்ன பிரயோசனம்? போனை வேறே யார்கிட்டயாவது கொடு சீக்கிரம்!"

"சுநீல் அண்ணாவா? குரல்லேருந்தே கண்டுபிடிச்சுட்டேன்- அண்ணா வீட்டிலே இல்லே..."

"... 'வீட்டிலே இல்லே'ன்னா, முந்தி காணாமே போனவன் இன்னும் திரும்பி வரல்லேன்னு அர்த்தமா, அல்லது திரும்ப வந்திட்டான் இப்போ வெளியே போயிருக்கான்னு அர்த்தமா? என்ன சங்கடம்!"

"அண்ணா கல்கத்தாவுக்கு வெளியே போயிருக்கான். திரும்பி வர ஏழு நாளாகுமாம்."

"நான் எனக்கே சொல்லிக்கிட்டதெல்லாம் உன் காதிலே விழுதா? சோதித்துப் பார்க்கலாம்—தபதி, நீ எப்படி இருக்கே?"

"ஏதாவது சொல்லணுமா உங்களுக்கு? அம்மாவோட பேசறீங்களா?"

"தபதி, நீ எப்படி இருக்கே?"

"அம்மாவோட பேச வேண்டாமா? சரி, நீங்க எப்படி இருக்கீங்க?"

நான் தெளிவில்லாமல் ஏதோ முனகிவிட்டு டெலிபோனை வைத்து விட்டேன். தபதி நான் சொல்லிக் கொண்டிருந்ததையெல்லாம் கேட்டு விட்டாளா? என்ன சங்கடம்! காது மந்தமானவர்கள் பேசுபவர்களின் வாயைக் கவனித்துத்தான் பெரும்பாலான பேச்சைப் புரிந்து கொள் கிறார்கள். அப்படியானால் தபதிக்கு என் டெலிபோன் பேச்சு எப்படிப் புரிந்தது? அல்லது புரிந்து கொள்ளாமலே உத்தேசமாகப் பேசினாளோ?

சுவிமல் வருவதற்குள்ளேயே ஆபீசிலிருந்து கிளம்பிவிட நான் தீர்மானித்திருந்தேன். சுவிமல் வந்துவிட்டால் வழக்கம் போல் மறுபடியும் அவிநாஷ், பரீட்சித், தாபஸ் இவர்களிடம் இழுத்துக் கொண்டு போவான். மறுபடி கூத்தும் கும்மாளமும் ஆரம்பித்துவிடும். இதெல்லாம் எனக்குப் பிடிக்கவில்லை. சேகரைப் பார்க்க ஐந்தாம் நம்பர் வீட்டுக்கும் போகப் போவதில்லை. காணாமற்போன சேகர் திரும்பி வந்துவிட்டான். அவனைத் தேடும் பொறுப்பு தீர்ந்துவிட்டது.

ஆபீசின் சில வேலைகளுக்காக அச்சகத்துக்குப் போனேன். வழியில் ரிசப்ஷனிஸ்டைப் பார்த்து "மிஸ் நௌமி, ரெண்டு நாள் லீவை எப்படிக் கழிச்சே?"

அவள் புன்சிரிப்புடன் தன் வலது கையைக் காட்டினாள். நடுவிரலில் முத்துப் பதித்த ஒரு மோதிரம்.

"ஓ, என்கேஜ்மெண்ட் ஆயிடுச்சா? எனக்கு வருத்தந்தான். எனக்கும் ஒரு சான்ஸ் கிடைக்கும்னு நினைச்சிருந்தேன்... பரவாயில்லை, கங்கிரேசுலேஷன்...!"

அவள் புன்சிரிப்பு மாறாமல் பதில் சொன்னாள், "நீங்க ரொம்ப நைஸ் மேன்...!"

அச்சகத்தில் ஐந்தரை மணி வரையில் அக்கறையோடு வேலை செய்தேன். ஒவ்வொரு வரி கம்போஸ் ஆகி வந்ததும், உதட்டைப் பிதுக்கி "ஊஹூம், இந்த ஃபேஸ் உபயோகமில்லை. இதுக்குப் பதிலா டபிள் கிரேட் கம்ப்ரெஸ்ட் போடுங்க. உங்ககிட்டே நாப்பத்தெட்டு பாயின்ட் டைப் ஏன் இல்லே...? புது டைப் வாங்குங்க... சும்மா இந்தப் பழைய, தேஞ்சுபோன டைப்பையே வச்சிக்கிட்டு... நான் சொன்னது ஹேர் ரூல், நீங்க பட்டையா லைன் போட்டுட்டீங்க! இப்படிப் பண்ணினா எப்படி வேலை நடக்கும்...? படத்தை வெட்டி அவுட்லைன் மேலே ஒட்டுங்க! இந்தச் சின்ன வேலைக்கு ரெண்டு மணி பண்ணிடாதீங்க!"

நடுநடுவிலே இந்த மாதிரி கடுமையாகப்பேச வேண்டும். அப்போது தான் இவர்கள் எனக்கு வேலை தெரியும் என்று நினைத்துக் கொள்வார்கள். இல்லாவிட்டால் இவர்கள் எனக்கு அடங்கி நடக்க மாட்டார்கள். நான் முதலாளியின் மைத்துனனாயிருப்பதால்தான் இந்த வேலை எனக்குக் கிடைத்திருக்கிறது என்று நினைத்துக் கொள்வார்கள். என் காது கேட்க என்னைப் பற்றித் தங்களுக்குள் கேலியாகப் பேசிக்கொள்வார்கள். நான் இங்கே வந்தால் எப்போதும் சிடுசிடுத்த முகத்துடன் இருப்பேன். நான் நினைத்தால் இவர்களுடைய வேலையில் குற்றங்கண்டு பிடித்து வேலையை விட்டு நீக்கிவிட முடியும் என்பதைக் குறிப்பாக உணர்த்துவேன். நானும் இவர்களைப்போல் மிகவும் சாதாரண மனிதன்தான் என்பதை இவர்கள் தெரிந்து கொண்டுவிட்டால் எனக்கு ஆபத்துத்தான். என்னால் இந்த வேலையில் நிலைக்க இயலாது. பிறரை அதட்டி விரட்டுவதுதான் வேலையைக் காப்பாற்றிக் கொள்ளச் சரியான வழி என்பதை நான் கற்றுக் கொண்டுவிட்டேன்.

நன்றாக முகத்தைக் கழுவிக்கொண்டு அச்சகத்திலிருந்து கிளம்பினேன். வெளியில் ஒரு கைக்குட்டை வாங்கினேன். பெரிய, வெள்ளைக் கைக்

குட்டை. அதைக் கொண்டு மறுபடியும் முகத்தை அழுத்தித் துடைத்துக் கொண்டதில் கைக்குட்டை அழுக்காகி விட்டது. முகத்தில் இவ்வளவு அழுக்கு எங்கிருந்து வந்தது? கண்ணாடியில் பார்க்கும்போது முகம் அழுக்காகத் தெரியவில்லையே! கைக்குட்டையில் திட்டுத்திட்டாக அழுக்கு. அதைத் தூக்கியெறிந்துவிடலாம் போலிருந்தது. அழுக்குக் கைக் குட்டையைப் பையில் வைத்துக் கொள்ளப் பிடிப்பதில்லை எனக்கு. சில பேர் கைக்குட்டையில் மூக்குச் சளியைத் துடைத்துவிட்டுப் பிறகு அதை மடித்துப் பையில் வைத்துக் கொள்கிறார்கள். இதை நினைத்துப் பார்த்தாலே எனக்கு வாந்தி வருகிறது. அது போகட்டும். இந்தக் கைக்குட்டையின் இன்னொரு பக்கத்தை இன்னும் ஒரு தடவை முகத்தைத் துடைத்துக்கொள்ள உபயோகப்படுத்திக் கொள்ளலாம். எப்படியும் இன்னொரு தடவை முகத்தைத் துடைத்துக்கொள்ளத்தானே வேண்டும்!

இன்னும் கையில் இரண்டு மணிநேரம் இருக்கிறது. இந்த நேரத்துக்குள் சினிமா பார்க்க முடியாது. நான் ஒரு நல்ல உணவு விடுதிக்குப்போய் உல்லாசமாக உட்கார்ந்து கொண்டு டீ குடித்தேன். பிறகு சிறிது நேரம் சிகரெட் பிடித்தேன். தனியே உட்கார்ந்து கொண்டு சிகரெட் பிடிப்பது மகிழ்ச்சியாயிருந்தது. வெகுகாலமாக நான் இவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கவில்லை. மாலை நேரத்தில் தனியாக இருப்பதைப் போல் துன்பம் வேறொன்றுமில்லை. எனக்கு சுவிமலின் நிலை புரிகிறது. மாலை நேரங்களில் டியூஷன் சொல்லிக் கொடுக்காதவர்கள், காதல் பொழுது போக்கில் ஈடுபடாதவர்கள், வீட்டுக்கு வெளியில் தோட்டம் போட நிலமில்லாமல் தமக்கென ஓர் அறை மட்டும் வைத்திருப்பவர்கள்— இவர்களெல்லாரும் மாலை நேரத்தை எப்படிக் கழிக்கிறார்கள்? விளையாட்டிலா? கல்கத்தாவில் விளையாட்டு என்பது மிகவும் சிரமமான விஷயம். விளையாடுபவர் களெல்லாருமே விளையாட்டு வீரர்களாக ஆசைப்படுகிறார்கள். இங்கே யாரும் சும்மா பொழுது போக்குவதற்காக விளையாடுவதில்லை. இதனால் விளையாட்டு என்பதே மோசம். பொழுது போக்க ஏற்ற ஒரே விளையாட்டு சீட்டுத்தான். ஆனால் அதிலுங்கூடத் தேர்ச்சி பெற்றவர்கள் போட்டிகளில் கலந்து கொள்ளத் தொடங்குகிறார்கள். போட்டியில்லாமல் சும்மா சீட்டு விளையாடினால் அலுப்பு உண்டாகும். இந்த அலுப்பைப் போக்கத்தான் காசு வைத்து விளையாடுவது—'ஃபிஷ்' அல்லது 'மூணுசீட்டு' விளையாடு பவர்கள் இளைஞர்களாயிருந்தால் அவர்களிடையே சண்டை வந்து விடுகிறது. சூதாட்டத்தோடு கூடவே மதுபானம்... பிறகு அத்துடன்... அடேயப்பா!

ஆனால் வேண்டுமென்றே தனியாயிருப்பதில் ஒரு சுகம் இருக்கிறது. நான் விரும்பினால் சுவிமல்-அவிநாஷோடு சேர்ந்து கொண்டு கும்மாளம் போடமுடியும். அப்படிச் செய்யாமல் பார்க் தெருவில் ஒரு உணவுவிடுதியில் தனியே உட்கார்ந்து கொண்டு சிகரெட் பிடிப்பதும் சுகமாகத்தானிருக்கிறது. ஆனால் மாலைநேரம் மங்கலாகத்தானிருக்கிறது. உரிய நேரத்துக்கு முன்பே இருட்டத் தொடங்கிவிட்டது. இப்போது நான் என்ன வேண்டுமானாலும் செய்யலாம். விரும்பினால் ஒரு ஓவியக் கண்காட்சிக்குக் கூடப் போகலாம்...

உண்மையிலேயே நான் கடைசியில் ஒரு கண்காட்சியில் நுழைந்து

விட்டேன். தாடி வைத்த உயரமான இளைஞன், அவன் முகத்தில் வர வேற்கும் புன்சிரிப்பு—அவன்தான் ஓவியனாயிருக்க வேண்டும். சுமார் இருபத்தைந்து ஓவியங்கள். அவற்றில் சித்திரங்களைக் காணோம். வெறும் கோடுகளும் வர்ணங்களுந்தான். பெண்மையின் அழகை இந்த ஓவியங்களில் காணமுடியவில்லை என்னால். எந்தப் பொருள்களில் பெண்மையின் அழகு இல்லையோ அவற்றை நான் அழகாகவே கருதுவதில்லை. இதே காரணத்தால் எண்ணற்ற அழகான பெண்கள்கூட எனக்கு அழகாகத் தோன்றுவதில்லை.

ஒருவன் ஒரு புத்தகம் விற்றுக் கொண்டிருந்தான்— ஓவிய விளக்கமாம். விலை ஒரு ரூபாய். பொழுது போக்க வந்திருக்கிறேன். காசு எதற்குச் செலவு செய்ய வேண்டும்? ஓவியங்களின் தலைப்புகளைத் தெரிந்து கொள்ள வேண்டிய அவசியமில்லை எனக்கு.

கண்காட்சி பார்க்க வந்தவர்களில் பலர் ஓவியர்கள் போலத் தோற்றமளித்தார்கள். கூடைமாதிரி தலைமுடி, முள் போல் தாடி. தோளில் பை. இவர்களுடன் சில யுவதிகளும் இருந்தார்கள். இந்த வங்காளத்திலும் பல பணக்கார வீட்டுப்பெண்கள் ஓவியர்களோடு நட்புக் கொள்கிறார்கள். அவர்களை ஈர்ப்பது எது? ஓவியர்கள்தாம் பெண்ணின் அழகின் உண்மையான ரகசியத்தை உணரக் கூடியவர்கள் என்று அவர்கள் நினைக்கலாம். பெண்களின் தற்காலிகமான அழகை நிலைத்திருக்கச் செய்ய ஓவியர்களால்தான் முடியும். தோலில் இடம் பெற்றுள்ள அழகை அவர்கள் சுவரில், கல்லில் அல்லது துணியில் தீட்டி அது காலத்தை வெல்லும்படி செய்து விடுவார்கள்… ஆனால் இப்போது அந்தக் காலம் மலையேறிவிட்டது. இப்போதெல்லாம் ஒரு அழகிய பெண்ணை நிர்வாணமாக முன்னால் நிறுத்தி வைத்தாலும் ஓவியன் தாறு மாறாகக் கோடுகளைக் கிழித்து வர்ணங்களை அப்பிவிடுகிறான். இதற்குப் பெயர் காம்போசிஷனாம்.

"சுநீல், நீ தனியா வந்திருக்கியா?

பிசாசைப் பார்த்தவன் மாதிரி திடுக்கிட்டேன் நான். இங்கே வந்து கூடத் தெரிஞ்சவங்க கிட்டே அகப்பட்டுக்கணுமா?

திரும்பிப் பார்த்தேன்—பரீட்சித், நூருல், ஓர் அமெரிக்க இளைஞன். அந்த இளைஞனும் தாடி வைத்திருந்தான். அழுக்கு உடை அணிந்திருந்தான். அவன் தோளிலும் ஒரு பை.

"சேகர் பாபுவைப் பார்த்தீங்களா? அவர் உங்களைத் தேடிக்கிட் டிருக்கார்" நூருல் சொன்னான்.

நான் சற்றும் தயங்காமல் பொய் சொன்னேன். "ஆமா, பார்த்துட்டேன்."

பரீட்சித் கேட்டான், "எங்கே பார்த்தே?"

"இப்பத்தான்… நாலு மணிக்குப் பார்த்தேன்."

"சேகர் என்ன பண்ணிட்டான் பார்த்தியா…! அவனுக்குக் கிறுக்குத் தான் பிடிச்சுப் போச்சு."

"ஆமா, ஆமா… அவன் எதைப் பத்தியும் கவலைப்படறதில்லை. பாத்ரூம் எங்கே இருக்கு?"

"தெரியாது… நீங்க அன்னிக்கு ஏன் பாரீனோடே சண்டை போட்டீங்க?

உன்னை நல்லா உதைச்சுட்டானாமே?"

"சீ! நான் அவிநாஷும் பாரீனும் சண்டை போடறதைத் தடுக்கப் போனேன்...! "அது போகட்டும், பாரீனுக்கு உன்மேலே ஒரு கோபமும் இல்லே... நீ ஏன் இன்னிக்கு இங்கே தனியா வந்திருக்கே?"

"இந்த ஓவியங்களைத் தீட்டினவன் என் சின்ன அக்காவோட மச்சினன்... வரச் சொல்லி ரொம்பக் கேட்டுக்கிட்டான்... வாங்க, உங்களுக்கு அறிமுகப்படுத்தி வைக்கறேன்..."

"தேவையில்லே. நாங்க இங்கே வந்தது இந்த இளைஞனுக்காக. உனக்கு அறிமுகப்படுத்தி வைக்கறேன். இவன்தான் என் நண்பன் சேண்டி க்ரோவர்-ஓவியன். இவனுக்கு சேகர்தான் முதல்லே பழக்கம்."

நான் அவனுடன் கைகுலுக்கக் கையை நீட்டினேன். அவன் கைகூப்பி வணக்கம் தெரிவித்தான். "க்ளாட்டுமீட் யூ" என்று நான் சொல்ல, அவன் "நமஸ்கார்" என்று சொன்னான்.

ஓ. இதற்குள் நாலு வங்காளி வார்த்தையும் கற்றுக் கொண்டு விட்டானா! இனிமேல் பைஜாமா போட்டுக் கொள்வான், இடது கையால் சாப்பிடுவான்... இந்த மாதிரிப் பேர்வழிகளை நிறையவே தெரியும் எனக்கு.

"வா, சேகரைப் பார்க்கப் போகலாம். சேண்டியும் நம்மளோடே வருவான்" பரீட்சித் சொன்னான்.

நான் உற்சாகமாகச் சொன்னேன், "எங்கே? அஞ்சாம் நம்பர் வீட்டுக்கா? இப்போ எனக்கு வேறே ஒண்ணும் வேலையில்லே. கொஞ்சம் இரு. நான் பாத்ரூம் போயிட்டு வரேன். அதுவரையிலே நீங்க ஓவியங்களைப் பார்த்துக்கிட்டு இருங்க..."

நான் ஹாலிலிருந்து வேகமாக வெளியேறிப் பார்க் தெருவுக்கு வந்து ஒரு காலி டாக்சியில் ஏறிக்கொண்டேன்.

உரிய இடத்தில் டாக்சியிலிருந்து இறங்கினேன். இன்னும் நேரமாக வில்லை. பெண்கள் இன்னும் வெளியே வரவில்லை. நான் ஒரு மரத் தடியில் நின்றேன். ரஸ்தாவில் மக்கள் நடமாட்டத்துக்குக் குறைவில்லை. இருந்தாலும் அந்தக் காட்சி உற்சாகமளிப்பதாக இல்லை. பாட்டு வகுப்பு முடிந்ததும் ரஸ்தாவுக்குக் களை கட்டிவிடும். அந்த மரமும் இருபுறமும் இருந்த வீடுகளும் என்போலவே பாட்டு வகுப்பு முடிவதற்குக் காத்திருப்பதாய்த் தோன்றியது.

நாலைந்து நிமிடங்களில் அவர்கள் கலகலப்பாகப் பேசிக்கொண்டு பாட்டு வகுப்பிலிருந்து வெளியே வந்தார்கள்.

முதலிலேயே யமுனா என் கண்ணில் பட்டுவிட்டாள். இன்று அவள் நன்றாக ஒப்பனை செய்து கொண்டிருந்தாள். தலையில் கொண்டை, கையில்லாத ரவிக்கை, வாழைக்குருத்து நிறப் புடவை விலையுயர்ந்தது என்பதில் சந்தேகமில்லை. ஆனால் இந்த அதிக அலங்காரத்தால் அவளுடைய அழகு கூடிவிடவில்லை. உண்மையான அழகு அலங்காரம் செய்வதால் கூடிவிடாது. அலங்காரமில்லாமல் குறையாது.

யமுனா என்னை எப்போது பார்ப்பாள் என்று கவனித்துக் கொண்டிருந்தேன். பெண்கள் எல்லாரும் ஒரே சமயத்தில் பேசிக்

கொண்டிருந்தார்கள். யார்-யாரிடம், என்ன சொல்கிறார்கள் என்று தெரியவில்லை. பெண்களின் இந்தக் கலகலப்பான பேச்சைக் கேட்டுத் தெருவில் செல்லும் இளைஞர்கள் அவர்கள் பக்கம் திரும்பிப் பார்த்தார்கள்.

யமுனா கூட்டத்திலிருந்து பிரிந்து பஸ் ஸ்டாப்பை நோக்கி வந்தபோது என்னைப் பார்த்தாள்.

"நீங்களா..? எப்போ வந்தீங்க?"

"இப்பத்தான். பஸ்ஸிலே போயிக்கிட்டிருந்தேன். உன்னைப் பார்த்ததும் இறங்கிட்டேன்."

"நீங்க அன்னிக்கு வரல்லியே!"

"என்னிக்கு?"

"நாம் சந்திச்சோமே, அதுக்கு அடுத்த பாட்டு கிளாஸ் அன்னிக்கு..."

"நான் அன்னிக்கு வரதாச் சொல்லலியே"

"சொன்னீங்க... நான் உங்களுக்காகக் காத்துக் கிட்டிருந்தேன்."

"மறுநாளே வரதா நான் சொல்லலே. அப்பறம் ஒரு நாள் வரேன்னு சொன்னேன்... நீ எனக்காகக் காத்திருந்தியா?"

"ஆமா... ரொம்ப நேரம்! நீங்க அன்னிக்கு வருவீங்கன்னு எனக்குத் தோணிச்சு..."

யமுனா எனக்காகக் காத்திருந்தாள் என்ற நினைப்பில் என் உடம்பு தண்ணீர் மாதிரி லேசாகி விட்டது. ஓர் இன்ப அதிர்ச்சி- ஓர் இளம் பெண் எனக்காகக் காத்திருந்திருக்கிறாள். ஆகா, என்ன இனிமையான குரலில் சொல்கிறாள்— "நான் உங்களுக்காகக் காத்திருந்தேன்" என்று. உண்மையைக் கூட இவ்வளவு தெளிவாக என்னால் சொல்ல முடியாது... யாராலும் சொல்ல முடியாது... யாரும் சொல்லி நான் கேட்டதில்லை. உலகத்தில் யமுனாவைத் தவிர எல்லாருக்கும் வயதாகி விட்டது.

"யமுனா, நிசமாவே அன்னிக்கு வரணும் போலதான் இருந்தது எனக்கு... உன்னைத் திடீர்னு பார்த்ததிலே எனக்கு ரொம்ப சந்தோஷமா யிருந்தது... தினந்தினம் உன்னைப் பார்க்கணும் போல இருக்கு. நாம் ரெண்டு பேரும் இனி சிநேகிதம். சரிதானே... அன்னிக்கு நான் ஏன் வரலே தெரியுமா; அதுக்கு முதல்நாள் என் தாத்தா செத்துப் போயிட்டார்...

"அப்படியா... அப்படீன்னா நீங்க ஏன் தோல் செருப்பு போட்டுக் கிட்டிருக்கீங்க? உங்களுக்கு தீட்டு இல்லே?"

"அம்மாவைப் பெத்த தாத்தா செத்துப் போனா மூணு நாள்தான் தீட்டு. அது கழிஞ்சாச்சு... வா, நாம் ரெண்டு பேரும் பேசிக்கிட்டே மெதுவா நடந்து போவோம் உங்க வீட்டு வரைக்கும்..."

"ஊஹூம், இன்னிக்கு முடியாது. நேரமாயிடும்."

"அப்படி என்ன நேரமாயிடும்?"

"இல்லேயில்லே, இன்னிக்கு வீட்டிலே நாங்க எல்லாரும் நைட்ஷோ சினிமாவுக்குப் போறோம். வீடுபோனதும் சாப்பிட்டுக் கிளம்பணும். இன்னிக்குப் பாட்டுக் கிளாசுக்கே போக வேண்டாம்னு அம்மா சொன்னா. நான்தான் கேக்கலே. எனக்குப் பாட்டுப் பரீட்சை பரீட்சை அடுத்த மாசம்."

"நல்ல வேளை, நீ வந்ததால உன்னைப் பார்க்க முடிஞ்சுது."

"ஏன், நீங்க எங்க வீட்டுக்கு வரக்கூடாதா? அன்னிக்கு உங்களைப்

பார்த்ததை அம்மாகிட்டச் சொன்னேன். மறுபடியும் உங்களைப் பார்க்கற போது கட்டியிழுத்துக்கிட்டு வரச் சொல்லியிருக்கா. அவளை உங்களுக்கு ஞாபகமிருக்கான்னு அக்கா கேட்டா?"

"உன்னோட அக்கா பேரு சரஸ்வதிதானே? ஞாபகமில்லாம என்ன!"

சரஸ்வதியின் முகம் நினைவுக்கு வந்ததும் எனக்குச் சற்று சங்கட மாயிருந்தது. தன் சுகத்துக்காகப் பிறருக்குத் துன்பமளிக்கத் தயங்காத சுயநலக்கார முகம் அது. அவளை என்றுமே எனக்குப் பிடிக்காது. யமுனா வுக்கு அக்காவாக இருக்கச் சற்றும் தகுதியில்லை அவளுக்கு.

"இன்னிக்கு வாங்களேன்" யமுனா சொன்னாள்.

"இன்னிக்கு வந்து என்ன பிரயோசனம் நீங்க எல்லாருந்தான் சினிமா வுக்குப் போறீங்களே!"

"ஆமா ஆமா... அப்படீன்னா என்னிக்கு வருவீங்க?"

"நாளன்னிக்கு உனக்குப் பாட்டுக் கிளாஸ் உண்டில்லையா?"

"ஆமா... ஆறரையிலேருந்து எட்டுமணி..."

"அதோ பஸ் வருது– பஸ்ஸிலே ஏறிக்க... நானும் ஏறிக்கறேன். நானும் அந்தப் பக்கந்தான் போறேன்..."

"வாங்க, சீக்கிரம் ஏறுங்க... அப்பா என்ன கூட்டம்"

உண்மையிலேயே பஸ்ஸில் நல்ல கூட்டம். எப்போது பார்த்தாலும் ஏன் இவ்வளவு ஜனங்கள் பஸ்ஸில் ஏறி இடத்தை அடைத்துக் கொள் கிறார்கள் என்று எனக்குப் புரியவில்லை. இவர்கள் ஏன் இப்படி அலை கிறார்கள்? இவர்களுக்கு எப்போதும் ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்துக்குப் போய்க்கொண்டே இருக்க வேண்டுமா? பஸ் கூட்டத்தைப் பார்த்து எனக்கு ஒரே எரிச்சல். ஆனால் யமுனா கிடுகிடுவென்று கூட்டத்தில் புகுந்து பஸ்ஸில் ஏறிவிட்டாள். நான் அவளை மாடிக்குப் போகச் சொன்னேன். கூட்டம் அவளுக்குப் படியேற வழிவிட, நானும் அந்த இடை வெளியில் அவளுடன் மேலே ஏறிவிட்டேன். யாராவது பண்பில்லாமல் அவளைத் தொட்டுவிட்டால் ஆணிகள் பதித்த என் ஷூவால் அவனுடைய காலை நசுக்கிவிடத் தயாராயிருந்தேன். மாடியிலும் நல்ல கூட்டந்தான். மகளிர் சீட்டில் ஒரு பெண்ணும் ஓரிளைஞனும் உட்கார்ந்திருந்தார்கள். யமுனாவைக் கண்டதும் இளைஞன் எழுந்து அவளுக்குத் தன் இடத்தைக் கொடுத்துவிட்டு என் பக்கத்தில் நின்றான். நாங்களிருவரும் ஒருவரை யொருவர் எரிச்சலுடன் பார்த்துக் கொண்டோம். யமுனாவின் சீட்டில் அவளுடைய தலைக்குப் பக்கத்தில என் கையை வைத்துக் கொண்டேன்.

பஸ் யமுனாவின் வீட்டருகில் வந்ததும் யமுனா எழுந்து "நீங்க இறங்கலியா?" என்று கேட்டாள்.

"இல்லை. நீ இறங்கிக்க. நாம அப்பறம் சந்திப்போம்."

"நிச்சயம் வரணும்!"

அப்போது இன்னொரு சீட் காலியாகவே நான் அதில் உட்கார்ந்து கொண்டு குனிந்து தெருப்பக்கம் பார்த்தேன். யமுனா ஒரு சிறு குதி குதித்து இறங்கிச் சற்று ஓடினாள். பிறகு மேலே நிமிர்ந்து பார்த்தாள். என்னைப் பார்த்து மலரும் பூப்போல் சிரித்தாள். நான் ஜன்னல் வழியே கையை நீட்டி என் மகிழ்ச்சியை அவளுக்கு அனுப்பினேன்.

அந்த பஸ்ஸில் வெகு நேரம் உட்கார்ந்திருக்கத் தோன்றியது எனக்கு. அப்படியே செய்தேன். பஸ் டெப்போவுக்குள் நுழைந்த பிறகும் நான் பேசாமல் மேலே உட்கார்ந்திருந்தேன். இப்போது சிகரெட் பிடித்தாலும் ஆட்சேபிக்க ஆளில்லை. பஸ் மறுபடி புறப்பட்டபோது எனக்குச் சிறிது தூக்க மயக்கம். இந்த மயக்கத்திலேயே வெகுநேரம் பிரயாணம் செய்து கடைசியில் வீடு போய்ச் சேர்ந்தேன். வீட்டில் நுழையும்போது திருப்தியாக ஒரு பெருமூச்சுவிட்டேன்...

டெலிபோன் பெரியக்கா புருஷனின் அறையில் இருந்தது. அங்கேயிருந்து நண்பர்களுடன் பேசுவது சங்கடம். ஆகையால் அவர்கள் இரவு நேரத்தில் எனக்கு டெலிபோன் செய்யக் கூடாது என்று சொல்லி வைத்திருந்தேன். ஏதாவது பார்ட்டி அல்லது வேறு வேலை இல்லாத நாட்களில் பெரியக்கா புருஷன் மாலையில் வீடு திரும்பி தன் அறையில் உட்கார்ந்து கொண்டே ஆபீஸ் வேலை பார்ப்பார். விளம்பரத் துறையிலிருந்த தால் அவர் அடிக்கடி பார்ட்டிகளுக்குப் போவார். இவ்வாறு அவருக்குக் குடிப்பழக்கம் ஏற்பட்டுவிட்டது. அவர் அறையிலேயே மது போத்தல் இருக்கும். வேலை செய்து கொண்டே கொஞ்சங் கொஞ்சம் குடிப்பார். அந்த சமயத்தில் அவரை யாரும் தொந்தரவு செய்யக்கூடாதென்பது பெரியக்காவின் கடுமையான கட்டளை.

இரவு மணி பதினொன்றரை இருக்கும். பெரியக்கா என் அறைக் கதவைத் தட்டி, "என்ன, தூங்கறியா? யாரோ உன்னை டெலிபோன்ல கூப்பிடறாங்க" என்றாள்.

நான் என் படுக்கையில் பிரித்து வைத்திருந்த காகிதங்களை அப்படியே வைத்துவிட்டு எழுந்து வந்தேன். இந்த அகாலத்தில் யார் எனக்கு டெலிபோன் செய்கிறார்கள்? இந்த சமயத்தில் பெரியக்கா கணவரைத் தொந்தரவு செய்ய எனக்கு வெட்கமாயிருந்தது. நல்ல வேளை, அவர் தூங்கிக் கொண்டிருந்தார். படுக்கையில் அவருடைய ஒரு கை தலையைப் பிடித்துக் கொண்டிருந்தது. வேலை செய்யும்போது ஏதோ யோசனை செய்தவாறே அவர் தூங்கிவிட்டிருக்கவேண்டும். அக்கா மது போத்தல்களையும் டம்ளர்களையும் மேஜையிலிருந்து அப்புறப்படுத்தி விட்டாலும் அறைக்குள் ரம்மின் மெல்லிய வாடை பரவியிருந்தது.

நான் டெலிபோனை எடுத்துத் தணிந்த குரலில் "யார்?" என்று கேட்டேன்.

பெர்ஹாம்பூரில் என் சிறுவயதில் அதிகாலையில் சேகர் என் அறை ஜன்னல் பக்கத்திலிருந்து கிசுகிசுப்பானே அந்த குரலில் சொன்னான், "சுநீல், இவ்வளவு சீக்கிரம் வீட்டுக்குப் போய் என்ன பண்றே...? ஏன் இங்கே வரலே?"

வெகுநாட்களுக்குப் பிறகு சேகரின் குரலைக் கேட்கிறேன். அவன் ஏதோ ஒரு புதிய ரகசிய விவகாரத்தில் நுழைந்து கொண்டு திளைத்திருக் கிறான் என்று தோன்றியது. எனக்கு எரிச்சல் ஏற்பட்டது. சட்டென்று திரும்பிப் பார்த்துக் கொண்டேன். அக்கா அறையில் இல்லை. அக்கா கணவர் தூங்கிக் கொண்டிருந்தார்.

"நீ எங்கேயிருந்து பேசறே?" நான் கேட்டேன்.

"அஞ்சாம் நம்பர் வீட்டிலே... வீணாகிட்டே. இங்கே ரொம்ப மஜாவா இருக்கு. உடனே வா!"

"இப்பவா...? ஊஹூம்..."

"சீ...! வாடான்னா! நீ நினைச்சிருக்கவே முடியாது, அந்த மாதிரி விஷயமெல்லாம் பார்ப்பே! உன் ஆபீசுக்கு போன் பண்ணினேனே... உனக்குச் செய்தி கிடைக்கல்லியா?"

"கிடைச்சது... ஆனா ஒரு முக்கிய வேலை இருந்தது..."

"இங்கே ரொம்பப் பேர் இருக்காங்க... உடனே வாயேன்!"

"எனக்கு ரொம்பத் தலைவலி... நூத்தி மூணு டிகிரி ஜுரம்..."

"நீ ஏன் சாயங்காலம் பரீட்சித்தை ஏமாத்திட்டு ஓடிப்போயிட்டே?"

"அதான் சொன்னேனே, உடம்பு சரியில்லேன்னு. அப்பவே எனக்குக் காய்ச்சல் வந்துடுச்சு..."

"நீ இங்கே வா. நான் கொடுக்கற சரக்கிலே உன் ஜுரம் பறந்து போயிடும். நிசமாத்தான்! வந்து பாரேன்!"

"ஏன் தொந்தரவு பண்றே? நான்தான் வரல்லேன்னு சொல்றேனே!"

"இரு, இரு! டெலிபோனை வச்சுடாதே! நாளை சாயந்திரம் நேரே ஆபீசிலேருந்து வந்துடு!"

"சரி..."

"நிச்சயம் வரணும்! இங்கே நூர்ஜஹான் வந்திருக்கா... ரொம்ப சுவையான விவகாரம்!"

"நூர்ஜஹான் யாரு?"

"உனக்கு ஞாபகமில்லையா? வீணாவோட அக்கா. கொஞ்ச நாளா நான் அவளோட அழுகையைத்தான் கேட்டுக்கிட்டிருந்தேன். ஒரு அழகி அழறதைப் பார்த்தா ரொம்ப நல்லாயிருக்கு..."

"சரி சரி... நான் இப்போ டெலிபோனை வைக்கறேன்."

"நீ இன்னிக்கு வராமப் போயிட்டியே! நாளைக்கு அவசியம் வரணும்! நாளை சாயங்காலம் உன் ஆபீசுக்கு போன் பண்றேன்..."

"வீட்டுக்குத் தெரியாம இன்னொரு இடத்திலே ராவைக் கழிச்சுக் கிட்டு... இதென்ன அசட்டுத்தனம் பண்றே நீ!"

சேகர் ஒரு மர்மச் சிரிப்பு சிரித்தான். "அசட்டுத்தனம் ஒண்ணுமில்லே. நீ வந்து பார்த்தாத் தெரியும்!"

"சரி, இப்போ டெலிபோனை வைக்கறேன்..."

"நாளைக்கு நிச்சயம்..."

அன்றிரவு நான் பல கெட்ட கனவுகள் கண்டேன். கனவு கண்டு தூக்கம் கலைந்து அலுத்துப் போய்த் திரும்பிட ந்தால் இன்னொரு கனவு... கிழக்கு வங்களாத்தில் எங்கள் கிராமத்தில பாம்பு வாழும் ஆல மரத்துக் கிளையில் ஒருவன் அந்தப் பாம்பையே கயிறாகப் பயன்படுத்தித் தூக்குப் போட்டுக கொள்கிறான்... மனீஷா சிரித்துக் கொண்டே சேகரின் சீட்டைத் தொட்டுத் தருகிறாள்... "இந்த மனீஷாவை வைச்சுக்கிட்டு என்ன செய்யறது, ஒரு பைத்தியக்கார ஆஸ்பத்திரிலேயும் இடங் கிடைக்கல்லே" என்று நான் அருணிடம் சொல்ல, அருண், "அவளை அந்தமானுக்கு அனுப்பிடலாம்னு பார்க்கறேன்" என்று பதில் சொல்லுகிறான்... பாரீன்

ஒரு இரும்புத் தடியால் என் மண்டையில் அடிக்க என் மூளை சிதறிப்போய் அவிநாஷின் மேல் விழுகிறது. அவிநாஷ் சொல்லுகிறான், "கவலைப்படாதே! நான் பாரீனுக்குச் சரியான பாடம் கற்பிக்கறேன்" நான் கதவைத் தாழ்ப்பாள் போட மீண்டும் மீண்டும் முயற்சிக்கிறேன். ஒவ்வொரு தடவையும் தாழ்ப்பாள் கீழே விழுந்து விடுகிறது. யாரோ வெளியிலிருந்து பலமாகக் கதவைத் தள்ளி உள்ளே வர முயற்சிக்க நான் அதை அழுத்திப் பிடித்துக் கொண்டிருக்கிறேன்... இனியும் என்னால் சமாளிக்க முடியாது. வெளியிலிருப்பவர்கள் உள்ளே நுழைந்து விடுவார்கள்... தாபஸ் சொல்கிறான், "சாயா ரொம்ப வருத்தமா இருக்கா... அவளோட தோலிலே வெள்ளை பரவிக்கிட்டு வருது. அவ மூலமா எனக்கும் இந்த வியாதி பரவிடும்னு பயப்படறா..." தபால்காரன் கடிதம் கொண்டு வருகிறான். அவன் உடம்பில் திட்டுத் திட்டாக வெள்ளை. அவன் கடிதத்தைக் கொடுக்கக் கை நீட்டும்போது கை குஷ்டத்தால் அழுகியிருப்பதைப் பார்க்கிறேன். நான் "எனக்குக் கடிதம் வேண்டாம்" என்று சொல்ல, அவன் "கடிதத்தை மறுக்க உங்களுக்கு உரிமையில்லை" என்று சொல்லிக் கடிதத்தை வீசியெறிய அது பறக்கத் தொடங்கி விடுகிறது...

சீ, என்ன அசட்டுக் கனவுகள்! நான் படுக்கையிலிருந்து எழுந்து 'மடக் மடக்'கென்று தண்ணீர் குடித்தேன். தண்ணீர் அவ்வளவு சுவையாக இல்லை. இரவில் நிறைய மது அருந்திவிட்டு மறுநாள் காலையில் தண்ணீர் குடித்தால் அந்தத் தண்ணீரின் சுவையே சுவை! வாழ்க்கையில் மது அருந்தாதவர்கள் தண்ணீரின் உண்மையான சுவையை அறிய முடியாது. இரவில் கனவு கண்டு கண்விழித்து விளக்குப் போட்டால் மறுபடி கனவு வராது என்று கேள்விப்பட்டிருக்கிறேன். பரவாயில்லை. கனவு வந்தால் வரட்டும்.

அப்பாவும் அம்மாவும் பெர்ஹாம்பூருக்குப் போய்விட்டார்கள். அப்பாவுக்காகப் போட்ட கட்டில் இன்னும் என் அறையில்தான் இருக்கிறது. நான் இருட்டிலேயே என் படுக்கையை விட்டு எழுந்து அப்பாவின் படுக்கையில் படுத்தேன். படுக்கையை மாற்றித்தான் பார்ப்போமே! இந்த பயங்கரக் கனவுகளுக்குப் பதிலாக யமுனா பற்றி ஒரு சுகமான கனவு காண முடியாதா, பார்க்கலாமே...! நான் கண்களை மூடிக் கொண்டு யமுனாவின் முகத்தை நினைத்து அவளைக் கனவில் அழைக்க முயற்சி செய்தேன்... ஊஹூம், கனவே வரலை. நல்ல தூக்கம் வந்துவிட்டது.

தூங்கியெழுந்ததும் என் முதல் கவலை, சேகரை எப்படித் தவிர்ப்பது என்பதுதான். நானும் சேகரும் நன்றாகத் தான் வாழ்க்கையைத் தொடங் கினோம்; ஆனால் அதற்காக வாழ்க்கை முழுவதும் இருவரும் ஒன்று சேர்ந்தே இருக்க வேண்டுமா? நான் களைத்துப் போய்விட்டேன்; அல்லது அந்த மாதிரி வாழ்க்கை எனக்கு இப்போது பிடிக்கவில்லை. சேகர் போல் புதிய புதிய ரொமான்ட்டிக் அனுபவங்களைத் தேடிப் போக விருப்பமில்லை எனக்கு. உண்மையில் ரொமான்ஸ் என்று எதுவுமில்லை. எனக்கு இப்போது ஆச்சரியமே ஏற்படுவதில்லை. இருட்டில் . பிசாசாகத் தோன்றுவது விளக்கைப் போட்டதும் வில்வ மரமாக மாறிவிடுவது போல், நான் ஒரு மனிதனைக் கூர்ந்து பார்த்தால் அவனுடைய வேடங்கள் கழன்று விடு

கின்றன. அவன் வெட்கத்தோடு ஒப்புக் கொள்கிறான், "ஆமா, நானும் உன் மாதிரி ஒரு சாதாரண மனிதன்தான்" என்று. மற்ற மனிதர்களும் என் மாதிரிதான் என்று தெரிந்து கொள்வதில் லாபமில்லைதான். ஆனால் அவர்களுடன் இன்னும் நெருங்கி வருவதில் சற்று ஆறுதல் ஏற்படுகிறது. பிறரிடமிருந்து என்னைக் காப்பாற்றிக் கொள்ள முயற்சி தேவைப்படு வதில்லை. பயமின்றி மண்ணின் மேல் நிலைத்து நிற்க முடிகிறது. ஒரு பூனையைத் தரையிலிருந்து தூக்கினால் அதன் நகங்கள் உடனே வெளிப்படு கின்றன. அதுபோலத்தான் நானும். நான் கிழக்கு வங்காளத்தைச் சேர்ந்தவன்; மேலும், வீடுவாசலையிழந்த அகதி. ஆகவே புதிய சூழ்நிலையில் தள்ளப்பட்டபோது நானும் போருக்குத் தயாராக என் நகங்களைத் துருத்திக் கொண்டேன். இது பெரிய பட்டணந்தான். அதனால் என்ன! தன்னை எதிர்த்து வரும் நாய் தன்னைவிடப் பத்து மடங்கு பலம் வாய்ந்ததாயிருந்தாலும் பூனை அதைப்பார்த்துச் சீறுவதில்லையா? இந்தப் பட்டணம் ஒரு பைத்தியக்கார உலகம் என்பதைக் கண்டுபிடித்துவிட்டேன். நஜ்ருல் இஸ்லாம் போல் இந்த நகரமும் தன் கௌரவத்தைப் பற்றியோ தன்னை எதிர்கொள்ளும் ஆபத்தைப் பற்றியோ சற்றும் கவலைப்படுவ தில்லை. இங்கே எனக்கு ஆபத்து ஒன்றுமில்லை. என் பிரச்சினை எனக்குரிய இடத்தைத் தேடிக்கண்டுபிடித்துக் கொள்வதுதான். இந்தப் பிரச்சினை சேகருக்கு இல்லை. அவனுடைய பிரச்சினை, அவனுக்குரிய இடத்திலிருந்து வெளியேறி வேறு எங்கே போவது என்பதுதான். நான் இதுவரை செய்து வந்த சோதனைகள் எல்லாம் எனக்குரிய இடத்தைக் கண்டுபிடிக்கத்தான்.

சேகரிடமிருந்து தப்புவது அவ்வளவு எளிதல்ல. நான் எங்கிருந்தாலும் அவன் என்னைத் தேடிக் கண்டுபிடித்துவிடுவான். சேகர் மட்டுமா? சுவிமல், தாபஸ், பரீட்சித் இவ்வளவு பேர் என்னைப் பிடித்துக் கொள்ளத் தயாராயிருக்கிறார்கள். எனக்குப் பிடிபட விருப்பமில்லை. ஆனால் நான் எங்கே ஓடுவேன்? தனியாகப் போய் ஆற்றங்கரையில் உட்கார்ந்திருக்க முடியாது என்னால். அங்கே போனால் வேர்க்கடலைக்காரன்கூட என்னைப் பார்த்துச் சிரிப்பான்.

சுவிமல் வருவதற்கு முன்னால், பிற்பகல் இரண்டரை மணிக்கு அச்சகம் போகும் சாக்கில் நான் ஆபீசிலிருந்து கிளம்பி ஒரு சினிமா தியேட்டரில் நுழைந்தேன். என் நடத்தைக்கு ஒரு காரணமும் கற்பித்துக் கொண்டேன். அந்தத் தியேட்டரில் இங்க்ரிட் பெர்க்மேன் நடித்த ஒரு திரைப்படத்தின் கடைசி நாள் அன்றுதான். அவர் நடித்த மற்ற எல்லாத் திரைப்படங்களையும் நான் பார்த்திருக்கிறேன். இந்தத் திரைப்படத்தை மட்டும் பார்க்காமலிருப்பதில் அர்த்தமில்லை. தனியாகத் திரைப்படம் பார்ப்பது குற்றமா? சுவிமலைக் கூப்பிட்டாலும் வரமாட்டான். அவனுக்கு சினிமா பிடிக்காது. அவன் நான் போவதையும் தடுத்துவிடுவான்.

சுவிமல் நேற்று என் ஆபீசுக்கு வரவில்லை, இன்றும் வராம லிருக்கலாம்.

சினிமா பார்த்துக் கொண்டிருக்கும்போதே முடிவு செய்துவிட்டேன். இன்று சாயங்காலம் யமுனாவின் வீட்டுக்குப் போவதென்று. இன்று

பாட்டு வகுப்பு இல்லை. ஆகையால் யமுனாவின் வீட்டுக்குப் போகாமல் அவளைப் பார்க்க முடியாது. செய்திப் பத்திரிகை அலுவலகத்துக்குப்போய் சசாங்கனோடு அரட்டையடிக்கலாம் என்று முதலில் நினைத்தேன். அதுகூட வெகுநேரம் பேச முடியாது. சிறிது நேரங்கழித்து சகாங்கன், "கொஞ்சம் இரு, நான் கைவேலையை முடிச்சுட்டு வரேன்" என்று சொல்லுவான்... ரஞ்சனுடைய கிளப்புக்குப் போகலாம். அங்கே நாடக ஒத்திகை அல்லது சீட்டுக் கச்சேரி நடந்து கொண்டிருக்கும். ஆனால் இப்போதெல்லாம் எனக்குச் சீட்டு என்ற பெயரைக் கேட்டாலே எரிச்சல் வருகிறது. விமலேந்துவின் வீட்டிலும் ஒரு சிறிய கூட்டம் கூடும் அரட்டையடிக்க. விமலேந்து மது அருந்துவதில்லை. மது அருந்துபவர்களை வெறுக்கிறான். அவன் பிரெஞ்சு கற்றுக் கொள்கிறான். எல்லாம் ஒன்றுதானே! நீ பிரெஞ்சு கற்றுக் கொள்வதற்காக நான் உன்னை வெறுக்கிறேனா? நான் மது அருந்துவதற்காக என்னை ஏன் வெறுக்கிறாய்? நான் மது அருந்தாமல் சுத்தமாக இருக்கிற நாளில்கூட விமலேந்து என்னைப் பார்த்தால் குடியின் கேட்டைப் பற்றி ஒரு பிரசங்கம் செய்துவிடுவான். எனக்குப் பிரெஞ்சு மொழியின் சுவை தெரியாது. ஆகையால் நான் அதை இகழ்வதில்லை. மதுவின் சுவை அறியாத நீ மட்டும் மதுவை எப்படி இகழலாம்? மதுவை வெறுத்துக் கொண்டு பிரெஞ்சு கற்றுக் கொள்கிறான்! ஒரு போதும் கற்றுக் கொள்ள முடியாது அவனால். பிரெஞ்சுக்காரர்கள் கேட்டால் சிரிப்பார்கள்.

மகிதோஷ், விமான் இவர்கள் வீட்டுக்குப் போகும் பேச்சே எழவில்லை. அங்கு எப்போதும் சூடான அரசியல் விவாதந்தான். அவர்களுக்கு என்னைப் பிடிக்காது. நான் ஒரு எஸ்கேபிஸ்டாம். நாட்டின் பிரச்சினைகளைப் பற்றி நான் கவலைப்படுவதில்லையாம். உண்மைதான். நான் கவலைப் படுவதில்லைதான். எவ்வளவோ பேருக்கு உண்ண உணவில்லை என்று தெரிந்தும் நான் நன்றாகச் சாப்பிடுகிறேன், பலர் உடுக்கத் துணியில்லாமல் தவிக்கிறார்கள் என்று தெரிந்திருந்தும் எனக்குச் சட்டையில் மடிப்பு கலைந்திருந்தால் அதை அணிந்து கொள்ளப் பிடிக்காது. ஆயிரக்கணக்கான மனிதர்கள் நடைபாதையில் படுத்திருக்கிறார்கள். என் மாடியறையில் என் படுக்கையில் போர்வை சற்று அழுக்காயிருந்தால் எனக்குப் பிடிக்காது. ஆமாம், நான் சுயநலக்காரன், குற்றவாளி, கொடூரமானவன், மனிதத் தன்மையற்றவன். நான் எவ்வளவோ பேரைச் சுரண்டித்தான் இவ்வளவு சௌக்கியமாக வாழ்கிறேன். இருந்தாலும் நான் என் வசதிகளில் ஒன்றைக் கூடத் துறக்கத் தயாரில்லை. மகிதோஷ், விமான் ஆகியோர் மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். ஏனென்றால் அவர்கள் நாட்டின் பிரச்சினைகளை ஆராய்ந்து பார்க்கிறார்கள். அவற்றைத் தனித்தனியாகத் தீர்த்து வைக்க வாதங்களைத் தேடுகிறார்கள். யாரும் ஒரு போதும் வெறும் வாதங்களால் இந்தப் பிரச்னைகளைத் தீர்க்க முடியாது என்று எனக்கு நன்றாகத் தெரியும். நாட்டில் எப்போதாவது போரோ புரட்சியோ ஏற்பட்டால் நான் எல்லாப் பாசங்களையும் துறந்து கையில் துப்பாக்கியுடன் தெருவுக்கு வந்துவிடுவேன்... நான் இப்படிச் சொன்னால் அவர்கள் ஏளனமாகச் சிரிக்கிறார்கள். இதெல்லாம் ரொமான்ட்டிக்

கருத்தாம்! ரொமான்ட்டிக் கொள்கைக்காரர்களைத் தவிர வேறு யார் உலக வரலாற்றை மாற்றியிருக்கிறார்கள்? கொஞ்சங் கொஞ்சமாக நாட்டைச் சீர்திருத்தும் கொள்கையில் எனக்கு நம்பிக்கையில்லை. நான் இறந்த பிறகுதான் நாட்டில் முன்னேற்றம் ஏற்படும் என்றால் அந்த முன்னேற்றத்தில் எனக்கு எந்தவித அக்கறையுமில்லை. வரும் தலைமுறைகளின் சுகத்துக்காக என் வசதிகளைக் குறைத்துக் கொள்ள நான் தயாரில்லை. தெளிவாகச் சொல்லிவிட்டேன்! நீங்கள் என்னைப் பற்றி என்ன வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளுங்கள்! இந்தத் தலைமுறை முழுவதும் சோறு இல்லாமல், மெலிந்து, தேய்ந்து, அழுகி உயிர் வாழ்ந்து கொண்டு, இதே போல இன்னொரு தேய்ந்த, அழுகிய தலைமுறையை வைத்துவிட்டுப் போகிறது. இதற்குப் பிறகு நாட்டு முன்னேற்றமா? நான் சுயநலக்காரன்தான். நான் உயிரோடிருக்கும் வரை சுகமாக வாழ விரும்புகிறேன். போர் செய்து உயிரைவிடுவதற்கு மட்டும் நான் தயார். போரில் மரணமடைந்தால் கஷ்டமிருக்காது. அந்த மரணம் சுகமான மரணம், ரொமான்ட்டிக் மரணம்.

திருஷ்டத்யும்னன் அசுவத்தாமனிடம் சொன்னான், "என் கழுத்தை நெறித்துக் கொல்லாதே, உன் உடைவாளால் வெட்டிக் கொல். அப்படியானால் நான் சுவர்க்கத்துக்குப் போவேன்..."

ஆகவே மாலை நேரத்தில் எனக்குப் போக இடமில்லை. ஆச்சரியம் என்னவென்றால், அருண் வீட்டுக்குப் போய் மனீஷாவைப் பார்க்கச் சிறிதும் விருப்பம் ஏற்படவில்லை எனக்கு. மனீஷாவின் நினைவு வந்ததும் அவளது முகம் என் மனக்கண்ணில் தோன்றியது. அந்த முகம் மலர்ந்திருந்தது. நானும் கற்பனையில் மலர்ந்த முகத்துடன் அவளைப் பார்த்தேன்-மனீஷா விஷயத்தில் எனக்கு வருத்தமொன்றும் இல்லை. யமுனாவின் நினைவுதான் எனக்கு அடிக்கடி வருகிறது. அப்போதுதான் துன்பம் ஏற்படுகிறது. அவளை நினைத்து நினைத்து உடனே பார்க்க வேண்டுமென்ற தீவிர விருப்பம் தோன்றியது. சினிமா முடிவதற்கு முன்னாலேயே கிளம்பிப் போய்விடலாமா என்று கூட நினைத்தேன். ஆனால் ஆபீஸ் முடிவதற்கு முன்னால் அவளைப் பார்க்கப் போனால் நன்றாயிருக்காது. ஆகையால் திரைப்படம் முடிந்த பிறகு ஒரு கடையில் டீ வாங்கிக் குடித்து சிறிது பொழுதைக் கழித்தேன்.

யமுனா வீட்டார் எங்களுக்கு ஏதோ தூரத்து உறவு. மூன்றாவது சித்தப்பா வீட்டில் நான் யமுனாவின் அம்மாவையும் வருணையும் பார்த்திருக்கிறேன். யமுனாவையும் ஓரிரு முறை பார்த்திருக்கிறேன். ஆனால் அப்போது அவள் ரொம்பச் சிறிய பெண், ஆகையால் அவ்வளவாகக் கவனிக்கவில்லை. யமுனாவின் அக்கா சரஸ்வதியுடனும் ஒரு சமயம் பரிச்சயமேற்பட்டது. ஆனால் அவளை எனக்குப் பிடிக்கவில்லை. அவளுடைய உடம்பை என் கையால் தொட்டால் கை அறுந்துபோய்விடும் என்ற உணர்வு ஏற்பட்டது எனக்கு. சித்தியின் திதியன்று அவள் என் அறைக்குள் வந்து சொன்னாள், "என் கையிரண்டும் எரிச்சலாயிருக்கு, என் பிளவுசோட முதுகுப் பொத்தான் இப்பத்தான் உடைஞ்சு போச்சு. அங்கே ஒரு சேஃப்டிபின் போட்டுவிடுங்களேன்." அப்போது புத்தகம் படித்துக் கொண்டிருந்த நான் நிமிர்ந்து பார்த்தேன். அவள் முதுகுப்பக்கம் பின்

குத்தவேண்டுமாம். எனக்குத் தன் மார்பைக் காட்டிக் கொண்டு நிற்கிறாள்! அவள் இப்படி நின்று கொண்டிருந்தால் அவள் முதுகுப் பக்கம் பின் குத்துவது எப்படி? நான் என் கையால் அவளைப் பிடித்துத் திருப்ப வேண்டும் என்று விரும்புகிறாளா?

"என்கிட்டே ஏது சேஃப்டி பின்?" என்று கேட்டேன்.

அவள் சொன்னாள், "உங்ககிட்டே ஒண்ணும் இல்லையா? என் வளையல்லே ஒரு பின் கோத்து வச்சிருக்கேன். அதை எடுத்துக்குங்க." பிறகு குறும்பாகச் சிரித்துக் கொண்டு அதட்டினாள், "என்ன பார்த்துக்கிட்டு இருக்கீங்க? சீக்கிரம், சீக்கிரம்...! எனக்குச் சமையலறையிலே வேலை இருக்கு..."

நான் ஒரு நாளும் அவள் மார்பின் மேல் சாய்ந்து கொண்டதில்லை. அவள் ஏன் முதுகுப் பக்கத்தில் என்னைப் பின் போடச் சொல்லுகிறாள்? அவளுடைய பேச்சு எனக்குப் பிடிக்கவில்லை.

என் சித்தப்பா சரஸ்வதியின் சித்தி புருஷனாம். அப்படியானால் அவளுடைய அம்மா என் சித்தியின் தங்கை. ஆகவே யமுனா வீட்டார் எனக்கு நேரிடையாக உறவில்லை. நான் யமுனாவின் அம்மாவை எந்த உறவு முறையும் சொல்லி அழைத்ததில்லை. இன்று அவரைச் 'சித்தி' என்று அழைக்கப் போகிறேன்...

"சித்தி, ரொம்ப நாளாச்சு உங்களைப் பார்த்து!"

"அடே! வா, வா... நீ ரொம்ப மாறிப்போயிட்டே. உன்னை அடையாளமே தெரியலே."

"நீங்க எப்படி இருக்கீங்க...? ஒரு நாள் யமுனாவை அகஸ்மாத்தாப் பார்த்தேன்"

"ஆமா, முன்னி சொன்னா உன்னைப் பார்த்ததா. உன்னை ஏன் இங்கே இழுத்துக்கிட்டு வரல்லேன்னு அவளைக் கேட்டேன்... நீ எங்களை மறந்தே போயிட்டே! ஷூவைக் கழட்ட வேண்டாம். இங்கே எல்லாரும் ஷூ போட்டுக்கிட்டுத்தான் வருவாங்க... அம்மா எப்படி இருக்காங்க?"

"நல்லாயிருக்காங்க. அடிக்கடி உங்களைப் பத்திப் பேசுவாங்க"

"அம்மாவை ஏன் கூட்டிக்கிட்டு வரல்லே...? நான் மாப்பிள்ளையைப் பார்த்தும் ரொம்ப நாளாச்சு..."

"இப்போ சித்தப்பா ரொம்பப் பூஜை புனஸ்காரத்திலே முழுகிப் போயிட்டார்..."

"நீ கொஞ்சம் முன்னால வந்து ஃபேனுக்குக் கீழே உக்காந்துக்க. என்ன புழுக்கம் இன்னிக்கு! இரு, சதியைக் கூப்பிடறேன்..."

அந்தக் காலத்து 'பாரத்வர்ஷ', 'பிரபாஸி' பத்திரிகைகளில் புதுமைப் பெண்களின் படங்கள் வரையப்பட்டிருக்குமே, அந்தப் பெண்களுக்கு வயது முதிர்ந்தால் எப்படித் தோற்றமளிப்பார்களோ அப்படி இருந்தார் யமுனாவின் அம்மா. தங்க பிரேம் போட்ட மூக்குக் கண்ணாடி, தளரக் கொண்டையிடப்பட்ட சுருட்டைமுடி, பூவின் சித்திரம் வரைந்த அகல பார்டருடன் வெள்ளைப் புடைவை. அதை அணிந்திருக்கும் விதமும் சற்று வித்தியாசமாயிருந்தது. காலில் மான்தோல் செருப்பு. பார்க்க நடுவயதுப் பெண்மணி மாதிரியும் இருக்காது. ரொம்ப புது மோஸ்தராகவும் தோன்றாது.

அவரைப் பார்க்கக் கண்ணுக்குக் குளிர்ச்சியாயிருக்கும். அந்த வீட்டின் ஃபர்னிச்சரிலும் ஒருவகை நளினம் இருந்தது...

யமுனா எங்கே? சுவரில் மாட்டப்பட்டிருந்த ஒரு பெரிய போட்டோவில் யமுனா பூக்களால் அலங்காரம் செய்து கொண்டு நாட்டியத் தோற்றத்தில் நின்று கொண்டிருந்தாள். யமுனாவுக்குப் பாட்டு மட்டுமல்ல, நாட்டியமும் தெரியும் போலும்! யமுனாவின் போட்டோவுக்குப் பக்கத்தில் ஓவியர் ஜாமினிராய் வரைந்த பூனையின் சித்திரம், சுவரின் மற்ற பகுதியெல்லாம் கண்ணாடி ஜாடிகளிலிருந்து வெளிப்பட்ட மணி பிளாண்ட் வியாபித்திருந்தது. யமுனாவின் அப்பா அசிஸ்டெண்ட் போலீஸ் கமிஷனர். அவர் லஞ்சம் வாங்குவதில்லை என்று நினைக்கிறேன். அவர் லஞ்சம் வாங்கினால் வீட்டில் இந்த மாதிரி ஒரு நல்ல சூழ்நிலை இருக்குமா? யமுனாதான் இவ்வளவு கள்ளங்கபடற்ற பெண்ணாக இருப்பாளா?

யமுனா எங்கே?

புத்தக ஷெல்புக்கு மேலே வரிசையாகச் சித்திரப் போஸ்ட் கார்டுகள். வருண் அமெரிக்காவிலிருந்து அனுப்பியிருக்கலாம்.

யமுனா எங்கே?

சரஸ்வதியும் யமுனாவின் அம்மாவும் அறைக்குள் வந்தார்கள். கையில் சிற்றுண்டித்தட்டு, எலுமிச்சை சர்பத் டம்ளர். வீட்டில் நிச்சயம் ஃபிரிட்ஜ் இருக்கும். சரஸ்வதியின் வகிட்டில் சிந்தூரம் இல்லை. ஏன் இன்னும் கலியாணமாகவில்லை இவளுக்கு? யமுனா எங்கே? பக்கத்து வீட்டுக்குப் போயிருக்காளா?

நான் நாற்காலியிலிருந்து சிறிது எழுந்திருப்பதுபோல் பாவனை செய்து, "என்னைத் தெரியுதா?" என்று கேட்டேன்.

சரஸ்வதி புன்சிரிப்போடு சொன்னாள், "தெரியாம என்ன! நீங்கதான் தெரிஞ்சுப்பீங்களான்னு சந்தேகமாயிருந்தது– அவசியம் வரணும்னு முன்னி வற்புறுத்தினதாலேதான் வந்திருக்கீங்க!"

"இல்லேயில்லே, நானாத்தான் வந்தேன். இந்தப் பக்கம் வர வாய்ப்பில்லே... நீங்க கொஞ்சம் மெலிஞ்சு போயிட்டீங்க."

"வேணும்னுதான் மெலிஞ்சுக்கிட்டிருக்கேன்... பார்க்க மோசமா யிருக்கா?"

"இல்லையில்லே– உங்களைப் பார்த்து ரொம்ப நாளாச்சு இல்லியா–?"

(யமுனா எங்கே)

யமுனாவின் அம்மா சிரித்துக் கொண்டு சொன்னார், "நீ சரஸ்வதியை 'நீங்க'ன்னு கூப்பிடறியா? இவ உன்னை விட ரொம்பச் சின்னவ–"

"முன்னாலே 'நீ'ன்னுதான் கூப்பிடுவார். இப்போ அதை மறந்து போயிட்டார்..." சரஸ்வதி சொன்னாள்.

முன்பு அவளை 'நீ' என்றா அழைத்துக் கொண்டிருந்தேன்? எனக்கு ஞாபகம் வரவில்லை... யமுனா எங்கே...? சுத்தமான இந்த அறையில் உட்கார்ந்து கொண்டு எலுமிச்சை சர்பத் குடித்தவாறு வெட்டிப் பேச்சு பேசிக் கொண்டிருக்கவா நான் இங்கே வந்திருக்கிறேன்?

நான் அப்போதுதான் சட்டென்று நினைவு வந்தாற்போல் கேட்டேன்,

"யமுனாவைக் காணலியே! அவ எங்கே?"

யமுனாவின் அம்மா சொன்னார், "அவ நாடக ஒத்திகைக்குப் போயிருக்கா. நீ என் மாமாபிள்ளை ரணேன்மைத்ரா பேரைக் கேட்டிருக்கியா? அவன் ஒரு புது நாடகம் எழுதியிருக்கான்-"

"ஆமா, ஆமா பேர் கேள்விப்பட்டிருக்கேன்" என்றேன் நான். அந்த ஆள் யாரோ?

"அந்த நாடகத்திலே ஒரு நாட்டியப் பாத்திரம் இருக்கு. அதிலே யமுனா நடிக்கறா. நீ வர்ரதுக்குக் கொஞ்சம் முன்னாலேதான் கிளம்பிப் போனா-"

என் முகம் வெளுத்துவிட்டது... "ஒத்திகைக்குப் போயிட்டாளா?"

"அவ உன்னை இன்னிக்கு வரச் சொல்லியிருந்தாளா...? இன்னிக்கு ஒத்திகை இருக்குன்னு அவளுக்குத் தெரியுமே!"

நான் என்னைச் சமாளித்துக் கொண்டு சொன்னேன், "இல்லையில்லே-அவ வரச் சொல்லலே... யமுனா நாட்டியம், பாட்டு ரெண்டும் கத்துக் கிட்டிருக்கா போலிருக்கு- இப்போ என்ன படிக்கறா?"

"ப்ரீ—யுனிவர்சிட்டி பாஸ் பண்ணிட்டு இந்த வருஷம் பிராபோர்ன் காலேஜிலே பி.ஏயிலே சேர்ந்திருக்கா. நாட்டியம் நல்லாக்கத்துக்கிட்டிருக்கா. இந்த போட்டோ அகில வங்காள கான்ஃபரன்சிலே எடுத்தது- இன்னும் நிறைய போட்டோ இருக்கு... சதி, ஆல்பத்தைக் கொண்டு வந்து காமி-"

எனக்கு ஒன்றும் பிடிக்கவில்லை. புதிதாக ஒரு படிப்பினை கற்றுக் கொண்டேன்—தானாகத் தோன்றுகிற ஆசையை அடக்கி வைத்தால் அதன் விளைவு நல்லதாக இருக்காது. பாதி சினிமா நடந்து கொண்டிருக்கும் போது எனக்கு உடனே போய் யமுனாவைப் பார்க்கத் தோன்றியதே, அப்போதே புறப்பட்டு வந்திருந்தால் அவளைச் சந்தித்திருக்கலாம். யமுனாவைப் பார்க்க முடியாது என்று தெரிந்ததும் அந்த மாலை நேரமே சுவையற்றுப் போய்விட்டது. மனதில் அதிருப்தி தோன்றியது. எனக்கு இந்த மாதிரி அதிருப்தி ஏற்பட்டால் கூடவே கோபமும் பிறந்துவிடும். சரஸ்வதி போட்டா ஆல்பத்தின் பக்கங்களைத் திருப்பிக் கொண்டிருந்தாள். அந்த ஆல்பத்தைப் பிடுங்கித் தூக்கியெறிய வேண்டும் போலிருந்தது எனக்கு.

யமுனாவுக்காகக் காத்திருக்கலாமா? ஆனால் இந்தப் பாடாவதி நாடக ஒத்திகைகள் சீக்கிரம் முடிவதில்லை. இந்த நாடகம் எழுதும் மாமா பிள்ளைகளும் பெரிய போக்கிரிகள். யமுனாவின் அம்மாவும் யமுனாவை இந்த மாதிரி நாடக ஒத்திகைகளுக்கு அனுப்புவது சரியில்லை. அந்தச் சூழ்நிலை இவ்வளவு சிறிய பெண்ணுக்குச் சற்றும் ஏற்றதில்லை. எனக்கு இதெல்லாம் பிடிக்கவில்லை.

நான் எவ்வளவு நேரம் உட்கார்ந்திருப்பேன்? பேச விஷயமும் இல்லை எனக்கு. முதல் தடவையாகப் பார்க்க வந்துவிட்டு வெகு நேரம் உட்கார்ந்திருந்தால் நன்றாயிருக்காது. மேலும் ஆங்கில மரபுப்படி ஆல்பத்தைப் பார்க்கச் சொன்னால் 'நீ போகலாம்' என்று அர்த்தமில்லையா? இந்த மரபுகள் எல்லாம் எனக்குப் புரிவதில்லை. ஒருநாள் ஜோத்பூர் பார்க்கில் ஒரு நண்பன் வீட்டுக்குப் போயிருந்தேன். இரவு மணி ஒன்பது ஆனதும் நண்பனின் தாயார், "இன்னிக்கு ராத்திரி எங்களோட

சாப்பிட்டுட்டுப்போ" என்றார். "பெரிய விருந்து ஒண்ணுமில்லே, சாதமும் பருப்புந்தான். பேசிக்கிட்டே சாப்பிடலாம். கூச்சப்படாதே. இது உங்க வீடு மாதிரி..." எனக்கு சங்கடமாகத்தானிருந்தது. இருந்தாலும் அவருடைய வேண்டுகோளை மறுக்க முடியாமல் அவர்களோடு உட்கார்ந்து சாப்பிட்டேன்.

பின்னால் ஒரு நாள் இதைக் கேட்டுச்சிரித்து விட்டான் சேகர். அவன் சொன்னான், "என்ன காரியம் பண்ணினேடா! நீ சரியான அசடு! அந்த மாதிரி சொன்னா, யாராவது சாப்பிட உக்காந்துடுவாங்களா? அந்த அம்மா சொன்னதுக்கு அர்த்தம் என்னன்னா, இப்போ நீ போயிடு, இது எங்க சாப்பாட்டு நேரம். அவங்க ரொம்ப வற்புறுத்தினா நீ உடனே போயிடுன்னு அர்த்தம். யாரை வேணும்னாலும் எப்ப வேணும்னாலும் சாப்பிடச் சொல்ற நிலைமையா இருக்கு வங்காளத்திலே...?"

ஆமாம், நான் அப்போது அசடாகத்தானிருந்தேன். இப்போது புத்தி சாலியாகிவிட்டேன். ஆனால் என் கொள்கை என்ன வென்றால்—இந்த மாதிரி வேஷம் போடுபவர்களை இக்கட்டில் மாட்டிவிட வேண்டும். இப்போது யமுனாவின் அம்மா என்னைச் சாப்பிடச் சொன்னால் சாப்பிட உட்கார்ந்துவிடுவேன். பிறர் வீட்டுச் சாப்பாட்டு ருசியே அலாதிதான்.

சரஸ்வதி என்னருகில் உட்கார்ந்து கொண்டு எனக்கு ஆல்பத்தைக் காட்டிக் கொண்டிருக்கிறாள். அவளுடைய சேலைத் தலைப்பு அடிக்கடி நழுவி விழுகிறது. பெண்களின் சேலைத் தலைப்பு காரணமில்லாமல் நழுவுவதில்லை என்பது யாருக்குத்தான் தெரியாது? பெண்களுக்கு விருப்பமில்லாவிட்டால் ஆடிக்காற்றில் கூட அவர்களுடைய சேலைத் தலைப்பு நழுவாது... ஆனால் எனக்கு சரஸ்வதியைப் பார்க்கப் பிடிக்க வில்லை. எவ்வளவோ பேர் அவள் அழகி என்றுதான் சொல்வார்கள். ஆனால் அவள் யமுனாவின் நகத்துக்குக் கூட ஒப்பாக மாட்டாள் என்பது என் கருத்து. அவளது முகத்தில் தெளிவு இலலை. அவள் தன் முகபாவத்தில் மர்மக் கவர்ச்சியை வெளிப்படுத்த முயல்கிறாள். ஆனால் அவள் போன்ற சில பெண்களால் வெறும் பாசாங்கைத்தான் வெளிப்படுத்த முடிகிறது. அவளுக்கு ஏதோ ரகசிய அதிர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. அந்தத் துன்பத்தை அவள் மறைக்க முயல்வது அவளது முகத்தில் தெரிகிறது. காதலில் தோல்வியோ அல்லது ஏதோ ஒரு குற்ற உணர்வோ அவளைப் பாதித் திருக்கிறது. அவளுக்கு இவ்வளவு நாள் கலியாணமாகாதிருப்பதற்கு இதுவே காரணமாயிருக்கலாம். நேற்று மாலையில் யமுனா "நான் உங்களுக்காகக் காத்துக் கொண்டிருந்தேன்" என்று என்னிடம் சொன்னதி லிருந்து நான் வேறெந்தப் பெண்ணையும் ஏறிட்டுப் பார்க்கவில்லை. தினந்தோறும் தெருவில் தென்படும் பெண்களையெல்லாம் பார்க்க வேண்டுமென்பதுதான் என் கொள்கை. இது நானே ஏற்றுக் கொண்டுள்ள பெரும் பொறுப்பு. நான் எந்தப் பெண்ணின் முகத்தையாவது பார்ப் பதற்குள் என்னை அவள் கடந்து விட்டால், அவள் ஒரு தடவையாவது திரும்பிப் பார்க்கமாட்டாளா என்ற நப்பாசையில் நான் நின்று கொண்டி ருப்பேன்... அப்படிப்பட்ட நான், நேற்றிலிருந்து வேறெந்தப் பெண்ணையும் நிமிர்ந்து பார்க்கவில்லை. சரஸ்வதி இவ்வளவு அருகிலிருந்தும் அவளைப்

பார்க்கப் பிடிக்கவில்லை எனக்கு.

"உன் சிநேகிதன் யாராவது அமெரிக்காவிலே இருக்கானா, சுநீல்?" யமுனாவின் அம்மா கேட்டார்.

"ஏன்?"

"எனக்கு ஒரு தகவல் வேணும்."

"எதுக்கும்மா இதெல்லாம்!" சரஸ்வதி சொன்னாள்.

நான் சொன்னேன், "வருண்தான் இந்த செப்டம்பர்லே திரும்பி வந்துடப்போறானே!"

"அப்படித்தான் பேச்சு... ஆனா நான் வேறே விதமாக் கேள்விப் படறேன்..."

"அம்மா! நீ ஏன் வீணா..." சரஸ்வதி இடைமறித்தாள்.

"ஏன், இவன் கிட்டே சொன்னா என்ன...? வருண் அங்கே கலியாணம் பண்ணிக்கிட்டதாக் காதிலே விழுந்தது..."

"வங்காளிப் பெண்ணா, இல்லே வெளிநாட்டுப் பெண்ணா?"

"ஸ்பானிஷ்காரியாம்... அவன் எங்களுக்கு ஒண்ணும் எழுதலே. அவனோட சிநேகிதன் ஒருத்தன் தகவல் சொன்னான்... எனக்குப் பயமா யிருக்கு—நெசமாவே அப்படியிருந்தா..."

சரஸ்வதி சொன்னாள், "இதிலே பயப்பட என்ன இருக்கும்மா? அண்ணன் சின்னக் குழந்தையில்லே, அசட்டுத்தனமா ஒரு காரியம் செய்ய. அந்தப் பெண் நல்ல பெண்ணாயிருக்கலாம்..."

யமுனாவின் அம்மா அவளை அதட்டினார்—"சின்னப் பிள்ளையா இல்லாட்டியும் எல்லாருக்கும் எல்லா சமயத்திலேயும் தங்களோட நல்லது கெட்டது தெரியாது. நான் எவ்வளவோ பார்த்திருக்கேனே!"

சரஸ்வதி ஒரு நிமிடம் தன் முகத்தை வேறுபக்கம் திருப்பிக் கொண்டாள். பிறகு அவள் திரும்பியபோது அவள் முகம் இயல்பாக இருந்தது. அவளுடைய கண்கள் அவள் அம்மாவின் கண்களுடன் ஏதோ பரிமாறிக் கொண்டன. அவர்களுக்கிடையே ஏதோ ஒரு பழைய தகராறு போலும். அம்மாவின் கண்களில் அவமானம், வேதனை. சரஸ்வதி அமைதியாக குரலில் சொன்னாள், "நீ உன்பிள்ளை பெண்களுக்காகக் கவலைப்பட்டுக் கவலைப்பட்டே உடம்பைக் கெடுத்துக்கிட்டே. இந்தக் கவலை அனாவசியம்."

இந்த உலகத்தில் கள்ளங்கபடு அற்றவள் யமுனா ஒருத்திதான் என்று நான் நினைத்தது சரிதான். இந்த வீட்டில் நிறைய சிக்கல் இருக்கிறது.

"சித்தி, நான் கிளம்பறேன். எனக்கு இன்னொரு இடத்துக்குப் போகணும்."

"இந்தத் தகவல் கிடைக்க ஏற்பாடு செய்ய முடியுமா உன்னாலே?"

"தகவல் கொடுக்கக் கூடிய சிநேகிதன் ஒருத்தனும் நினைவுக்கு வரல்லே. அமெரிக்கா இங்கிலாந்து போற பசங்க நம்மை லட்சியம் பண்றாங்களா...? எதுக்கும் நான் விசாரிச்சுப் பார்க்கறேன், தெரிஞ்சவங்க யாராவது அங்கே இருக்காங்களான்னு."

"முயற்சி பண்ணுப்பா... வருண் இருக்கறது சான்பிரான்சிஸ் கோவிலே..."

சிரித்துக் கொண்டே சொன்னாள் சரஸ்வதி, "நீ நல்ல ஆளைத்தான் தேடிப்பிடிச்சிருக்கே, அம்மா, தகவல் சொல்ல! மறுபடி இந்த ஆளைப் பார்க்க முடியுமா...? உங்க வீட்டிலே டெலிபோன் இருக்கா?"

இந்த சமயத்தில் மாடிப்படியில் அழுத்தமாகக் கால் வைத்து ஏறி அந்த அறைக்குள் வந்தார் யமுனாவின் தந்தை ஜகதீஷ்ராய். கவர்ச்சி மிக்க, வலிமையான தோற்றம்; முரட்டு மீசைதான் அவர் போலீஸ்காரர் என்பதை உணர்த்தியது. அவர் என்னை ஊடுருவிப் பார்த்துவிட்டு மௌனமாகத் தன் டை முடிச்சை அவிழ்க்கத் தொடங்கினார்.

"இவனைத் தெரியுதா?" யமுனாவின் அம்மா கேட்டார்.

"இவன்தான் சுநீல், நடு அக்காவோட மச்சினர் பிள்ளை"

ஜகதீஷ்ராய் என்னை மறுமுறை பார்க்காமலேயே, "உம், தெரியுதே... ரொம்பச் சின்னப் பையனா இவனைப் பார்த்திருக்கேன்."

பொய், இவர் என்னைப் பார்த்திருக்கிறாரா என்பது சந்தேகந்தான்.

நான் சற்று நேரம் நின்று கொண்டிருந்துவிட்டுப் பிறகு பணிவாகச் சொன்னேன், "நான் வந்து ரொம்ப நேரமாச்சு. போயிட்டு வரேன்."

ஜகதீஷ்ராய் அந்த அறையின் நடுவில் ராஜாமாதிரி நின்று கொண்டிருந்தார். பிறகு தன் கோட்டைக் கழற்றினார். நான் அங்கிருப்பதைச் சற்றும் பொருட்படுத்தாமல், "ஏழு மணிக்கு எனக்கு ஏதாவது டெலிபோன் வந்ததா?" என்று கேட்டார்.

"இல்லையே" அவருடைய மனைவியின் பதில்.

"சரி, நான் ரெண்டு நாளுக்காக ஜம்ஷெட்பூர் போறேன். சூட்கேசிலே என் துணிமணிகளை எடுத்துவை. நாளை விடியற்காலையிலே எனக்குப் பிளேன்."

நான் சங்கடத்தோடு இன்னும் அங்கே நின்று கொண்டிருந்தேன். இப்போது குரலை உயர்த்தி, "சித்தி, நான் போயிட்டு வரேன்" என்றேன். பிறகு அவர்கள் மூவரையும் பார்த்து "நான் வரேன்" என்று சொன்னேன். கீழே குனிந்து கொண்டு தன் ஷூவின் நாடாவை அவிழ்த்துக் கொண்டிருந்த ஜகதீஷ் ராய் என்னைப் பொருட்படுத்தவில்லை. அவருடைய மனைவி, "சரிப்பா, மறுபடியும் அவசியம் வரணும்" என்று சொன்னார்.

சரஸ்வதி என்னை வழியனுப்ப வந்தாள். ஆனால் நான் சற்றும் பின்னால் திரும்பாமல் வேகமாகப் படியிறங்கி அந்த வீட்டைவிட்டு வெளியே வந்தேன். வெளியேறும்போது வாசல் கதவைப் படீரென்று சாத்த வேண்டும், வாசலிலிருந்த லெட்டர் பாக்சை உடைத்தெறிய வேண்டும் என்றெல்லாம் தோன்றியது எனக்கு. தெருவில் தென்பட்ட ஒரு பூனையைக் காலால் உதைக்க விரும்பி அதைத் துரத்திக் கொண்டு சிறிது தூரம் ஓடினேன். நடைபாதையையொட்டி ஒரு மோட்டார் கார் நின்று கொண்டிருந்தது. அதன் கண்ணாடி ஜன்னலைப் பலமாகக் குத்தினேன். கண்ணாடி உடையவில்லை. என் கைதான் வலித்தது. அருகிலேயே தீயணைப்பு இலாகாவின் பெட்டியொன்று இருந்தது. அதன் கண்ணாடியை உடைத்து உள்ளேயிருந்த கைப்பிடியைச் சுற்றித் தீயணைக்கும் வண்டியை வரவழைக்கத் தோன்றியது. ஆனால் அதற்கருகில் இரண்டு முரடர்கள் நின்று கொண்டிருந்தார்கள்.

யமுனாவைப் பார்க்க முடியவில்லையே என்ற வருத்தம் கோபமாக மாறிக் கொண்டிருந்தது. இரவு ஏழரை மணிக்கு ரஸ்தாவில் தனியாக நடக்கும்போது யாராலோ ஏமாற்றப்பட்டாற் போன்ற உணர்வு ஏற்பட்டது. இந்த நேரத்தில் மிகவும் அபூர்வமான ஒரு பொருள் எனக்குக் கிடைத்திருக்க வேண்டும். அதற்குப் பதிலாக இப்போது நான் காற்றில் பறக்கும் சருகு போல் அல்லாடிக் கொண்டிருக்கிறேன். ஹூம், இந்த மாதிரி நல்ல பிள்ளையாக இருப்பதெல்லாம் நமக்குக் கட்டி வராது. சேகரும் மற்ற நண்பர்களும் மஜாவாகப் பொழுது போக்கிக் கொண்டிருக்க, நான் மட்டும் இப்படித் தனியாகத் திரிய வேண்டுமா? வீணா வீட்டுக்குப் போகத் தீர்மானித்து, உடனே ஒரு டாக்சியைக் கூப்பிட்டேன். பையில் கையை விட்டுப் பார்த்தேன். டாக்சி வாடகை கொடுக்கக் காசு இருந்தது.



உடம்பில் பனியனும் தட்டுச் சுற்று வேஷ்டியுமாக சேகர் காலைத் தொங்க விட்டுக் கொண்டு கட்டிலில் உட்கார்ந்திருந்தான். ஏதோ அவன்தான் அந்த வீட்டுக்காரன் போலவும் அங்கே வெகு காலமாக வசிப்பது போலவும் இருந்தது அவனிருந்த தோரணை. கண்ணாடிக்கு முன்னால் வீணா உட்கார்ந்திருந்தாள். அவிநாஷ் ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தான். அவனுக்குப் பக்கத்தில் எனக்குப் பரிச்சயமில்லாத இரண்டு நடுவயதுக்காரர்கள். கட்டிலின் இன்னொரு பக்கத்தில் வேறொரு பெண்மணி. சிந்தாமணி பாவுவைக் காணவில்லை.

நான் திரையை அகற்றிக் கொண்டு அறைக்குள் நுழைந்தபோது ஏதோ ஹாஸ்யப் பேச்சைக் கேட்டு எல்லோரும் ஹோஹோவென்று சிரித்துக் கொண்டிருந்தார்கள்.

வீணாதான் முதலில் என்னைப் பார்த்தாள். 'அப்பாடி! வந்துட்டார். இவரைத் தேடிப்பிடிக்க எவ்வளவு சிரமம்!"

சேகர் என்னைத் திரும்பிப் பார்த்தான். "ஒரு வழியா வந்தியா! உன்னைத் தேடித்தேடித் திண்டாடிப் போயிட்டேன்!"

நான் சொன்னேன், "நீ என்ன இப்படிச் சொல்றே? நாங்கள்ல இவ்வளவு நாளா உன்னைத் தேடிக்கிட்டிருந்தோம்!"

"ஒரு நாளாவது இங்கே வந்து தேடினியா?"

"நீதான் இங்கே வர்ரதில்லையே!"

"ஆமா, ஆனா ஒரு நாளும் வரமாட்டேன்னு சொன்னேனா? நீ நேத்திக்கு வரல்லியே! ஒரு அபூர்வமான விஷயத்தை மிஸ் பண்ணிட்டே. நேத்தி வரையிலே உனக்காக வச்சிருந்தேன்..."

"நீ இங்கே என்ன பைத்தியக்காரத்தனம் பண்ணிக்கிட்டு இருக்கே! உன் அம்மா ரொம்பக் கவலைப்பட்டுக்கிட்டு இருக்காங்க.. அடடே, உன் உடம்பும் ரொம்பக் கெட்டுப் போயிடுச்சே!"

அவிநாஷ் சொன்னான், "ஆமா, வாத்தியார் சார் வந்துட்டார். இப்போ பெரிசா லெக்சர் பண்ணுவார்...! நீ என்ன பண்ணிக்கிட்டிருக் கேன்னு எங்களுக்குத் தெரியாதுன்னு நினைச்சியா?"

சேகர் காலையாட்டிக் கொண்டே சொன்னான், "நீ ஒண்ணும் எனக்காகக் கவலைப்பட வேண்டியதில்லே. நான் அம்மாவை ஒரு தடவை பார்த்துட்டு வந்துட்டேன். நான் கல்கத்தாவுக்கு வெளியே போறேன், திரும்ப ரெண்டு மூணு வாரம் ஆகும்னு சொல்லிட்டு வந்துட்டேன்..."

"ரெண்டு மூணு வாரமா? அவ்வளவு நாள் இங்கே உக்காந்துக்கிட்டு என்ன செய்யப்போறே?"

"ஒண்ணும் செய்யப்போறதில்லே. சும்மா இருப்பேன். வீட்டிலேருந்து கொஞ்ச நாளைக்கு லீவு எடுத்துக்கிட்டிருக்கேன். ஜனங்க ஒரு மாறுதலுக்காக வேற ஊர் போறதில்லையா? அது மாதிரி நானும் ஒரு மாறுதலுக்காக இங்கே வந்திருக்கேன்.

"அந்தப் பேச்சை விடு. இப்போ ஆகவேண்டிய காரியத்தைப் பார்ப்போம்... அஜய் பாபுவோட வீடு எங்கே?" என்றான் அவிநாஷ்.

வீணா சொன்னாள், "மாப்பிள்ளை இருக்கறது தில்ஜலாவிலே. நாலாம் நம்பர் கேட்டுக்குப் பக்கத்திலே. எலெக்ட்ரிக் ஆபீசுக்குப் பக்கத்துத் தெரு... அங்கேதான் இருந்தார் முந்தி..."

அவிநாஷ் சொன்னான், "இப்போ அவர் அங்கே இல்லாட்டியும் புதுவிலாசத்தைக் கண்டுபிடிச்சுடலாம்."

நான் கட்டிலில் சேகருக்குப் பக்கத்தில் உட்கார்ந்தேன். அவனுடைய வலது புஜத்தில் ஒரு பெரிய வெள்ளித் தாயத்து. அதை நான் இதற்கு முன் பார்த்ததில்லை.

நான் சிரித்துக் கொண்டே, "இது என்ன?" என்று கேட்டேன்.

சேகரும் சிரித்துக் கொண்டே பதில் சொன்னான், "அம்மா கட்டி விட்டிருக்கா. எல்லா ஆபத்திலேருந்தும் என்னைக் காப்பாத்துமாம். இருக் கட்டுமே! அம்மாவுக்குத் திருப்தி ஏற்பட்டா, தாயத்தைக் கட்டிக்க ஏன் மறுக்கணும்?"

அங்கிருந்த இன்னொரு பெண், "தாயத்தோட டிசைன் ரொம்ப அழகாயிருக்கு!"

தாயத்தைக் குறிக்க அவள் 'தாகா' என்ற சொல்லைப் பயன் படுத்தினாள்.

"ஓ, இதைத் 'தாகா'ன்னு சொல்லுவாங்களா?" ஏளனமாகக் கேட்டான் சேகர். "இதெல்லாம் கிழக்கு வங்காளத்துப் பேச்சு. பேரைக் கேக்கவே நல்லாயில்லே... நாங்க இதை 'மாதுலி'ன்னு சொல்லுவோம்."

"கழுத்திலே போட்டுக்கறதுதான் மாதுலி."

"உனக்கொண்ணும் தெரியாது! நிறுத்து...! சுநீல், உனக்கு இவரைத் தெரியாது? இவர்தான் வீணாவோட அக்கா சாதனா. புகழ்பெற்ற நூர்ஜஹான் பேகம் இவங்கதான்."

நான் அவளுக்கு வணக்கம் தெரிவித்துச் சொன்னேன், "உங்க பேர் கேள்விப்பட்டிருக்கேன்..."

அவள் பதில் வணக்கம் செய்துவிட்டுச் சொன்னாள், "உங்க சிநேகிதர் உங்களைக் கொஞ்ச நாளா வலைபோட்டுத் தேடறாரு..."

"அதுதானே வேடிக்கை! நான் அவனைத் தேடறேன், அவன் என்னைத் தேடறான்! ஆனா வீட்டைவிட்டு ஓடிப்போனவன் நான்

இல்லே, அவன்தான்" நான் சொன்னேன்.

"உங்க சிநேகிதர் விசித்திரமான ஆளுதான். நேத்திக்கு என்ன அமர்க்களம் பண்ணிட்டாரு!"

நான் ஒன்றும் புரியாமல் சேகரைப் பார்த்தேன்.

அவன் சொன்னான், "நேத்திக்கு நீ வரல்லியே! நான் உனக்காக நேத்து வரையிலே ஒரு சாமான் வச்சிருந்தேன். நேத்திக்கு பரீட்சித் அதைக் காலி பண்ணிட்டான். இந்த மாதிரி சான்ஸ் உனக்கு வாழ்க்கையிலே இனிமேல் கிடைக்குமாங்கறது சந்தேகம்..."

"என்ன அது?"

"எல்.எஸ்.டி"

"எல்.எஸ்.டியா? உனக்கு எங்கே கிடைச்சுது...? அது ஒண்ணும் அப்படி ரொம்ப அபூர்வமான சாமான் இல்லே. எனக்கு அதிலே ஆசையும் இல்லே."

"நீங்க சாப்பிடாதது நல்லதுதான். ரொம்ப மோசமான சாமான் அது" சாதனா சொன்னாள்.

"நீங்களும் சாப்பிட்டீங்களா?"

அவளது முகத்தில் சோகம் படர்ந்தது. முகத்தைத் திருப்பிக் கொண்டு ஜன்னலைப் பார்த்தவாறு சொன்னாள், "ஒரு மாத்திரை சாப்பிட்டேன்... மனுசனுக்கு ஏற்கனவே இவ்வளவு துக்கம், அதிலே இந்த மாத்திரையையும் சாப்பிட்டு இன்னும் சோகக் காட்சிகளைப் பார்க்கணுமா?"

சேகர் கேட்டான். "உனக்கு வெறும் துக்கந்தான் கிடைச்சுதா? கொஞ்சங்கூட சந்தோஷம் கிடைக்கலியா?"

"இல்லே."

"எனக்குக் கிடைச்சுது... ஆகா, என்ன அபூர்வமான அனுபவம்! உடம்பே லேசாப்போயி அப்படியே பறந்து மறைஞ்சு போச்சு..."

நான் சேகரை இடைமறித்துச் சொன்னேன், "நான் எல்.எஸ்.டியைப் பத்திக் கேள்விப்பட்டிருக்கேன், ஆனா சாப்பிட்டதில்லே. சாப்பிட்டா என்ன ஆகும்?"

"இது உண்மையிலே ஒரு மருந்து. இப்பவும் பரிசோதனை ஸ்டேஜிலே தான் இருக்கு. பைத்தியத்துக்கு சிகிச்சை பண்ண இதைப் பயன்படுத்தறாங்க. இது பழைய நினைவுகளைத் திருப்பிக் கொண்டு வருது. இந்த குணத் துக்காகத்தான் இதைப் போதைக்குப் பயன்படுத்தறாங்க..."

"பைத்தியத்துக்கு மருந்தா? நல்லவேளை, நான் சாப்பிடலே!"

"ஒரு மாத்திரை சாப்பிட்டுப் பார்த்தாத் தெரியும் உனக்கு! ஒரு சின்ன மாத்திரை சாப்பிட்டதும் உடம்பே மாறிப் போகுது. விதவிதமான கனவுகள் தோணுது, பயங்கரக் கனவுகள் ஒவ்வொண்ணா வருது..."

நான் உரக்கச் சிரித்தேன், "கனவு காண மாத்திரை சாப்பிடணுமா? நீங்க நேத்திக்கு சாப்பிட்டீங்களாக்கும்? நான் மாத்திரை சாப்பிடாமயே என் ரூமிலே படுத்துக்கிட்டு அசட்டுக் கனவு நிறையப் பார்த்துகிட்டு இருக்கேன்."

சேகர் சற்றும் அடங்கவில்லை. அவன் அபத்தமாகச் சொன்னான். "இது வேறே மாதிரிடா! நீ சாப்பிடாததால உனக்கு நம்பிக்கை ஏற்படலே.

நீயும் நானும் எவ்வளவோ பொருள்களைச் சாப்பிட்டிருக்கோம். ஆனா இது முற்றிலும் வேற மாதிரி. நிசமாச் சொல்றேன், வாழ்க்கையே மாறிப் போயிடுச்சு!"

"வாழ்க்கையை மாத்திக்க ஏன் இவ்வளவு ஆசை உனக்கு?"

"ஏய், பொய் சொல்லாதே! உனக்கு ஆசையில்லே...? இப்ப நாம வாழறோமே, இது தான் வாழ்க்கையா?"

"மாத்திரை சாப்பிட்டு உன் வாழ்க்கை எப்படி மாறியிருக்கு?"

"கொஞ்ச நேரத்துக்குத்தான்னாலும் மாறித்தான் போனேன்... ரொம்பப் பயமாயிருந்தது. தூரத்திலேருந்து நானே என்னைப் பார்த்துக்கற மாதிரி இருந்தது. எனக்குத் தூக்கம் வரலே, நினைவு தப்பலே, கை கால்களை அசைக்க முடிஞ்சுது, கண்ணுக்கு முன்னாலே வரிசையாகச் சித்திரங்கள்... அதுகளை ஓரளவு புரிஞ்சுக்கவும் முடிஞ்சுது... நான் எப்பவோ மறந்து போன நினைவெல்லாம் எப்படியோ திரும்பி வந்தது. மறந்த நினைவு திரும்பி வந்தா உடம்பு மயிர்க்கூச்செறியுது. உன்கிட்டே இதைப் பத்திச் சொல்றபோதுகூட எனக்கு மயிர்க்கூச்சம் ஏற்படுது பாரு...! இதிலே ரொம்ப ஆச்சரியமான விஷயம் என்னன்னா, நம்ம உருவமே இரண்டு விதமாத் தெரியுது!

"ரெண்டு விதம்னா எப்படி?"

"வெவ்வேறு வயசுத் தோற்றம்... ஒரு சமயம் என்னோட நாலு வயசுத் தோற்றம் தெரிஞ்சுது. ஒரு சின்னப் பையன் காலிலே முள் குத்திட்டது. அவன் தரையிலே உக்காந்து அழறான்.. அவனை அடையாளங்காண முடிஞ்சுது என்னாலே. அவன் நான்தான்! அவனுக்குப் பக்கத்திலே நின்னுக்கிட்டிருக்கான் இன்னாருத்தன். அவன் யாரு தெரியுமா? இப்போ முப்பத்திரண்டு வயசான நான்! என்னோட ரெண்டு உடம்பு தனித்தனியா– சொப்பனம் இல்லே. கற்பனையில்லே. கண்ணுக்கு நேரே தெரியுது ரெண்டு உருவம்! ரெண்டுக்கும் நடுவிலே இருபத்தெட்டு வயசு வித்தியாசம்– என் சின்ன வயசுத் தோற்றத்தைப் பார்க்கறபோது முன்னூறு வருஷத்துக்கு முன்னாலே போயிட்டதாகத் தோணுது! நீ நம்பவே மாட்டே. இந்த மாதிரி அனுபவத்திலே எவ்வளவு சந்தோஷம், கூடவே எவ்வளவு கஷ்டம், தெரியுமா...? நாலு மாத்திரை லைசர்ஜிக் சாப்பிடறவங்க அம்மாவோட கர்ப்பத்துக்குள்ளே அவங்க இருக்கற காட்சியைக் கூடப் பார்க்க முடியுமாம்!

"எனக்கு அந்தக் காட்சியைப் பார்க்க விருப்பமில்லே..."

"உனக்கு விஷயம் புரியலே... நீ எதை இழந்திருக்கேன்னு உனக்குத் தெரியலே. நேத்தி வரையிலே உனக்காக வச்சிருந்தேன்... ஆனா நேத்திக்கு வேறே விதமான அனுபவம்..."

வீணாவின் அக்கா சேகரின் பேச்சைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள். அவளது முகம் வறண்டிருந்தது. அவள் சொன்னாள். "நான் இனிமே அதை ஒருநாளும் சாப்பிடமாட்டேன்! எனக்கு எவ்வளவு கஷ்டமாயிருந்தது தெரியுமா? மறக்க வேண்டிய விஷயங்களை மறந்துடறதுதான் நல்லது... நேத்திக்கு நீங்க பண்ணின ஆர்ப்பாட்டத்திலே நான் பயந்தே போயிட்டேன்."

"உனக்கு எல்.எஸ்.டி எங்கே கிடைச்சுது? நம்ம நாட்டிலே கிடைக்குதா?" நான் சேகரைக் கேட்டேன்.

"சேண்டின்னு ஒரு அமெரிக்கப் பையன் இல்லே, கனடாப் பையன். அவன் கிட்டே வாங்கினேன். ஆறு மாத்திரை விலை முன்னூறு ரூபா."

"சொப்பனம் பார்க்கறதுக்கு முன்னூறு ரூபாயா? நிசமாவே உனக்குப் பைத்தியந்தான் பிடிச்சிருக்கு. நீ ஏன் இந்தப் பைத்தியக்கார மருந்தெல்லாம் சாப்பிடணும்?"

"பிரயாணிகளை ஏத்திக்கிட்டு சந்திரனுக்கு ராக்கெட் போறதுக்கு ஒரு டிக்கெட் என்ன விலை, தெரியுமா? அம்பது லட்ச ரூபா! யாரும் அவ்வளவு காசு கொடுத்துப் போகமாட்டாங்கன்னு நினைக்கிறியா?"

"அது கிடக்கு, அந்தக் கனடாக்காரனை எங்கே பிடிச்சே?"

"சொல்றேன்... முதல்லே பாத்ரூமுக்குப் போயிட்டுவரேன். வீணா, கொஞ்சம் டீ போடேன்! டீ குடிக்கிறியா, இல்லே ஒயினா?"

"டீயே குடிக்கறேன்."

அவிநாஷ் சொன்னான், "ஐயோ, ராத்திரி எட்டரை மணிக்கு டீயா? கல்லீரலைக் கெடுத்துக்கப் போறியா?"

"நான் டீயே குடிக்கறேன். வீணா கையாலே டீ குடிச்சாலே எனக்குப் போதை வந்துடும்" நான் சொன்னேன்.

வீணா சொன்னாள், "என்கிட்டே சீனி தீர்ந்து போயிடுச்சு. ரேணுகிட்டே இருக்கான்னு பார்க்கறேன்."

நான் ஆச்சரியத்தோடு கேட்டேன், "இதென்ன, சீனித் தொழிற்சாலை முதலாளி வீட்டிலே சீனி இல்லையா?"

அங்கிருந்த எல்லோரும் அமுக்கமாகச் சிரிக்கத் தொடங்கினார்கள். வீணா எனக்கு அழகு காட்டிவிட்டு வெளியே போனாள்.

வீணாவின் உண்மையான எஜமானர் சிந்தாமணி பாபு. அவர் ஒரு வேடிக்கையான மனிதர். அவருடைய எல்லாக் காரியங்களுமே வேடிக்கை தான். ராக்கிட் அண்ட் ராக்கிட் கம்பெனியில் அரைப் பங்கு அவருடையது. அந்தக் கம்பெனிக்கு மூன்று சீனித் தொழிற்சாலைகள் உண்டு. அவரே சொல்லுவார், "எங்க அப்பா சீனி மில் தொடங்கினதோடு நிறுத்திக்கலே. 'சீனி கொண்டு வருவான் சிந்தாமணி'ங்கற பழமொழிக்கேற்ப எனக்கும் சிந்தாமணின்னு பேர் வச்சுட்டார். என் குடும்பப் பெயர் 'ரட்சித்' அந்தப் பேரைக் காப்பாத்திக்கறதுக்காக நானும் ஒரு 'ரட்சிதா' (வைப்பாட்டி) வச்சுக்கிட்டிருக்கேன். என் பெண்டாட்டியும் சரியான சமயத்திலே செத்துப்போயிட்டா... என் அப்பாவும் வைப்பாட்டி வச்சுக்கிட்டிருந்தார்."

வைப்பாட்டி விஷயத்திலும் சிந்தாமணி பாபுவின் வழி தனிதான். அவர் ஒவ்வொரு வாரமும் சனிக்கிழமை மட்டுந்தான் வீணாவுடன் இரவைக் கழிப்பார். ஒரு மாதத்தில் ஐந்து சனிக்கிழமைகள் இருந்தால் வீணாவுக்கு ஆயிரம் ரூபாய் கொடுப்பார். நான்கு சனிக்கிழமைகள் இருந்தால் எண்ணூறு ரூபாய். சனிக்கிழமைகளில் வேறு எந்த ஆண் பிள்ளையும் வீணாவை நெருங்கக் கூடாது. மற்ற நாட்களில் யார் வேண்டு மானாலும் அவளிடம் வரலாம். சனியல்லாத மற்ற கிழமைகளிலும் எப்போதாவது அவர் வீணாவின் அறைக்கு வருவதுண்டு. அப்போது

அங்கே வேறு ஆண்பிள்ளைகள் இருந்தால் அவர்களிடம் சாதாரணமாகப் பேசிக் கொண்டு மது அருந்துவார். இரவு பத்துமணிக்கு வீடு திரும்புவார். அந்த நாட்களில் அவர் வீணாவைத் தொடுவதுகூட இல்லை.

சிந்தாமணி பாபுவை எனக்குப் பிடிக்கும். ஏனென்றால் அவர் எனக்குப் பழைய கல்கத்தாவின் வர்த்தக சமூகத்தின் பிரதிநிதியாகத் தோன்றினார். இப்போதெல்லாம் 'வியாபாரி' என்றாலே ஒரு மார்வாரியின் முகம் அல்லது வேறொரு பூசணி முகம் நினைவுக்கு வருகிறது. ஆனால் சிந்தாமணி பாபுவின் குடும்பம் பல தலைமுறைகளாகவே வாணிகத்தில் ஈடுபட்டிருக்கிறது. சுத்தமான மனிதர், எதிலும் மிகையில்லை. வாழ்க்கையை மிகவும் அமைதியாக ஏற்றுக் கொள்கிறார். படிப்பறிவில்லாதவரல்ல, சிலசமயம் வைஷ்ணவக் கவிதையிலிருந்து மேற்கோள்கள் காட்டுவார். தலையின் முன்பக்கம் வழுக்கை; பின்புறத்து முடியை முன்னால் வாரிக் கொண்டு வந்து வகிடு எடுத்திருப்பார். எப்போதும் புன்சிரிப்பு தவழும். தாடி மீசை அதிகம் வளராத முகம். வயது ஐம்பது ஐம்பத்திரண்டுக்கு மேலிருக்காது. ஆனால் ஏதோ சிராஜ்-உத்-தௌலா காலத்திலிருந்து வாழ்பவர் போல, "எங்க காலத்திலே..." என்று பேசுவார்.

நிறைய உழைத்துவிட்டுப் பிறகு நிம்மதியாக ஒரு டம்ளர் தண்ணீர் குடிப்பதுபோல், அவர் வாரம் முழுதும் தொழிலைக் கவனித்துவிட்டுச் சனிக்கிழமை வீணாவிடம் வருவார். அன்று அவருக்கு முழு ஓய்வு தேவை. மற்ற நாட்களில் அவர் வருவது சிறிது நேரம் பொழுது போக்க அல்லது அரட்டையடிக்க வருவது போல். அத்தகைய நாட்களில் நானும் சேகரும் அவருடன் பேசியிருக்கிறோம். பஞ்சகச்ச வேஷ்டியும் கவனமாக இஸ்திரி செய்யப்பட்ட ஜிப்பாவும் அணிந்து கொண்டு நிதானமாக வருவார். ஜிப்பா பையிலிருந்து வெள்ளி வெற்றிலை டப்பாவை எடுத்து முன்னால் வைத்துக் கொண்டு வசதியாக உட்கார்ந்து கொள்வார். பிறகு சொல்வார், "வீணா, நாலு ஊதுபத்தி கொளுத்திவை... சின்ன வயசிலேருந்தே எனக்கு ஊதுபத்தி வாசனை முகர்ந்து பழக்கம். என் ஆபீசிலே எப்போதும் ஊதுபத்தி புகைஞ்சுக்கிட்டிருக்கும். வீட்டிலேயும் அப்படித்தான். சாயங்கால வேளையிலே ஊதுபத்திப் புகையில்லாம என்னாலே இருக்க முடியாது... கண்ணுக்கு மை இட்டுக்கிட்டிருக்கியா... ரொம்ப அழகாயிருக்கு...!"

அந்த நாட்களில் அவர் வீணாவை ஒரு பரிவுமிக்க தந்தைபோல் நடத்துவார்.

கல்கத்தா நகர சமூகத்தின் வாழ்க்கையின் ஒரு அம்சத்தை நான் சிந்தாமணி பாபுவிடம் கண்டேன். அவர் தொழிலில் கெட்டிக்காரர். வீட்டில் பொறுப்பு மிக்க தந்தை. அவருடைய பிள்ளையைப் பொறியியல் படிப்புக்காக ஜெர்மனிக்கு அனுப்பியிருந்தார். அவர் தம் பெண்ணைக் கண்ட பேருடன் சினிமாவுக்கு அனுப்பமாட்டார். அந்தப் பேட்டை துர்க்காபூஜைக் கமிட்டியின் நிரந்தரத் துணைத்தலைவர்; உடற்பயிற்சி நிலையத்தின் ஆண்டுவிழாவில் அழகாக உரையாற்றுவார்; நேதாஜி திரும்பி வந்தால் நாட்டின் நிலைமை இரவோடிரவாகத் திருந்திவிடும் என்பது அவரது உறுதியான நம்பிக்கை. ஒரு தடவை பக்கத்து வீட்டுத் திருமணத்தில் புரோகிதருக்கு மறந்துபோன மந்திரத்தை அவர் சொல்லிக் கொடுத்தார்.

இப்படிப்பட்டவர் ஒவ்வொரு சனிக்கிழமை இரவையும் வைப்பாட்டி வீட்டில் கழித்தார். இதில் தவறேதும் இருப்பதாகவே அவர் நினைக்க வில்லை. அவருடைய ஆதரவில் வீணாவும் சௌக்கியமாக இருந்தாள்.

வீணாவின் அக்கா சாதனா கட்டிலில் பாதி சாய்ந்தவாறு கிடந்தாள். அவளுடைய கால் என் உடம்பில் இடித்தது எனக்கு எரிச்சலாயிருந்தது. ஒருவருடைய கால்— அவர் ஒரு அழகான பெண்ணாயிருந்தாலும் சரி- என் உடம்பில் படுவது எனக்குப் பிடிக்காது. நான் சற்று நகர்ந்து கொண்டு அவளை ஓரக்கண்ணால் பார்த்தேன். பார்த்ததுமே தெரிந்தது. பல ஆண்கள் அவளுடைய கால்களைப் பிடித்துப் பிடித்து அவளுக்குப் பழகி விட்டது என்று. வீணா அப்படியொன்றும் அழகியல்ல. ஆனால் வீணாவின் அக்கா அழகியென்றுதான் சொல்ல வேண்டும். இல்லை, அழகு அவளிடம் பரவியிருந்தது. ஆனால் சில இடங்களில் சற்று மிகையாக இருந்தது. அவள் கருநீலநிறத்தில் ஜரிகை போட்ட மெல்லிய சில்க் சேலை அணிந்திருந்தாள். இந்தக் காலத்தில் கல்கத்தாப் பெண்கள் இந்த மாதிரி ஜரிகை பதித்த சேலை அணிவதில்லை. அடர்த்தியான தலைமுடி, மிகவும் மிருதுவான முகம், நல்ல சிவப்பு, உதடுகளும் மூக்கும், இமைகளும் புருவங்களும் ஓவி யத்தில் வரைந்தவை போலிருந்தன. உண்மையில் இவற்றுள் சில வரையப் பட்டவைதானோ என்னவோ! கையால் தொட்டுப் பார்க்காததால் எனக்குத் தெரியாது. அவளுடைய ஆடையணிகளில் விசேஷமாக என்ன இருக்கிறதென்று சொல்லத் தெரியவில்லை எனக்கு. ஆனால் அவளுடைய முகபாவத்தில் ஒரு முஸ்லிம் பெண்ணின் சாயலை வரவழைத்துக் கொண்டிருப்பது தெரிந்தது. நான் அவளைக் கேட்டேன், "எப்போ வந்தீங்க?"

"ஏழெட்டு நாளாச்சு... போன திங்கள் கிழமை வந்தேன்."

"எப்படி வந்தீங்க?"

"கொழும்பு வழியா, பிளேன்லே..."

"இங்கே கொஞ்ச நாள் இருப்பீங்களா?"

"தெரியலே... ரொம்ப முக்கியமான காரியமா வந்தேன்... வராம இருக்க முடியலே..."

"நீங்க இங்கே இருக்கறது ஆபத்து. உங்க புருஷனுக்குத் தெரிஞ்சா..."

"என்ன ஆயிடும்...? எனக்கு மனசு ரொம்பச் தவிச்சுக்கிட்டிருக்கு... கட்டிலுக்குக் கீழேயிருந்து பிராந்தி பாட்டிலை எடுத்துக் கொடுக்கறீங்களா?"

அங்கே இருந்த எனக்குப் பரிச்சயமில்லாத இருவரில் ஒருவன் எழுந்திருந்து, "நான் எடுத்துத் தரேன்" என்று சொன்னான்.

சாதனா அவனை எனக்கு அறிமுகப்படுத்தினாள், "இவருதான் இப்போ என் புருஷன். பேரு அப்துல் ஹாலிம். இன்னொருத்தர் சஹீத் சௌதிரி, என் சிநேகிதர்."

இருவரும் விலையுயர்ந்த சூட் அணிந்திருந்தார்கள். அவர்கள் சிரமப்பட்டுப் புன்சிரிப்பை உதிர்த்தார்கள்.

நான் இரண்டு கைகளையும் கூப்பி வணக்கம் செலுத்தப்போனேன். பிறகு ஏதோ நினைவு வந்து ஒரு கையைத் தூக்கினேன். அவர்களும் ஆளுக் கொரு கையைத் தூக்கி நெற்றியில் வைத்துக் கொண்டார்கள்.

ஒரு விஷயத்தை நினைக்க எனக்கு வேடிக்கையாயிருந்தது. சற்று நேரத்துக்கு முன் வீணா அஜய்பாபுவை 'மாப்பிள்ளை' என்று குறிப்பிட்டாள். பாவம், அவன் எப்போதோ அந்தப் பதவியை இழந்துவிட்டான். இருந்தாலும் பழக்கங் காரணமாக வீணா அவனை இன்னும் மாப்பிள்ளை என்றே குறிப்பிடுகிறாள்.

சஹீத் சௌதுரி எனப்பட்டவன், "இப்போ நாம கிளம்ப வேண்டியதுதான்" என்றான்.

சாதனா அவனை அதட்டும் குரலில், "இரேன், என்ன அவசரம்?" என்று சொன்னாள்.

"அவசரம் ஒண்ணுமில்லே. ஆனா நாங்க இடத்தை அடைச்சுக்கிட்டு உக்காந்திருக்கோம். இவங்களுக்கு அசௌகரியமா இருக்குமேன்னுதான். இவங்களுக்கு ஏதாவது சொந்தவேலை இருக்கலாம்..."

அவிநாஷ் இதைக்கேட்டு 'ஹோஹோ' என்று சிரித்தான். "இல்லேயில்லே, எங்களுக்கு ஒண்ணும் ரகசியக்காரியம் இல்லே. நாம எல்லாரும் ஒண்ணுதான். உக்காந்திருங்க."

அப்போது டீ எடுத்து வந்து வீணா சொன்னாள், "இதென்ன, நீங்க எல்லாரும் பிராந்தி குடிக்க ஆரம்பிச்சுட்டீங்க! பின்னே நான் எதுக்கு டீ போட்டுக்கிட்டு வரணும்?"

"எனக்கு டீ கொடு. நான் டீ தான் குடிப்பேன்" நான் சொன்னேன்.

பாத்ரூமிலிருந்து திரும்பி வந்த சேகரும், "எனக்கும் டீயே கொடு. எனக்கு இன்னும் தலை சுத்துது" என்று சொன்னான்.

நிஜமாகவே சேகர் வெகுநாளாக நோய்வாய்ப்பட்டவன் போல் சுவரைப் பிடித்துக் கொண்டு நடந்து வந்தான்.

நான் அவனைக் கேட்டேன், "உனக்கு என்ன ஆச்சு?"

"நேத்திக்கு மூளையிலே ஏதோ குழப்பம் ஏற்பட்டிடுச்சு. அதிலேருந்து உடம்பு சரியில்லே. இப்போ சரியாப்போச்சு."

வீணா கோபமாகச் சொன்னாள், "எவ்வளவு கெஞ்சினேன், கண்ட மருந்தைத் திங்காதீங்கன்னு! கேக்காம தின்னீங்க!"

சேகர் கட்டிலை நெருங்கி அதைப் பிடித்துக் கொண்டு நின்றவாறு இன்னொரு கையால் வீணாவைக் கட்டிப்பிடித்துக் கொண்டு சொன்னான், "சீ பைத்தியமே! ஏன் பயப்படறே?"

வீணா சற்று நெளிந்தாள். "என்ன செய்யறீங்க இவ்வளவு பேருக்கு முன்னாலே!"

சேகர் உணர்ச்சி மேலிடச் சொன்னான், "இங்கே ஒருத்தரும் இல்லே. நீ கண்ணை மூடிக்கிட்டா, ஒருத்தரும் உன்னைப் பார்க்க முடியாது. வா, என்னை ஒரு முத்தங் கொடுக்க விடு— இதென்ன, என்னைத் தள்ளிவிடாதே! ஏற்கனவே என்னால நிற்க முடியலே..."

வீணா தன்னை விடுவித்துக் கொள்ள முயன்றாள்—"இல்லே இல்லே, இப்ப இல்லே... அப்பறம்..."

"அப்பறம் இல்லே, இப்பத்தான்! இப்பத்தான் வேணும் எனக்கு!"

"ஊஹூம், ஊஹூம்..."

நான் என் பார்வையைத் திருப்பிக் கொண்டேன். அந்த அறையின்

சூழ்நிலையும் உரையாடல்களும் எனக்குச் சங்கடமாயிருந்தன. முன்பு நான் சேகருடன் இங்கு வரும்போது கூத்தும் கும்மாளமுமாயிருக்கும். ஒரு சமயம் வீணா நிறைய மது அருந்திவிட்டுப் போதையில் நடனமாடத் தொடங்கிவிட்டாள். அவளுக்கு நடனம் தெரியாது. ஆடின ஆட்டத்தில் அவள் அலமாரிமேல் விழுந்து அதன் கண்ணாடிக் கதவை உடைத்து விட்டாள். கண்ணாடி உடையும் ஒலி. பெண்களுக்கும் கண்ணாடி உடையும் ஒலிக்கும் ஒரு பொருத்தம் உண்டு. ஆகவே அந்த ஒலியைக் கேட்டு எனக்கும் குஷி உண்டாகி, நான் ஆஷ்டிரேயை எடுத்து அலமாரிமேல் எறிந்து அதன் எஞ்சியிருந்த கண்ணாடியையும் உடைத்துவிட்டேன்.

இன்றோ இங்கு பலவகை மனிதர்கள். ஏதோ கூட்டம் நடை பெறுவதுபோல் தோற்றம். யமுனாவின் வீட்டில் அவளைப் பார்க்க முடியாததால் எனக்கு அதிருப்தி ஏற்பட்டிருந்தது. அது கோபமாக மாறியது. போதிய காரணமின்றிக் கோபம் ஏற்பட்டால் எதையாவது உடைக்கத் தோன்றும். உலகத்தில் உடையக் கூடிய பொருள்களில் மிகவும் கவர்ச்சிகரமானது சமூகவிதி. அந்த விதியை மீறவேண்டும் என்ற வெறியோடுதான் நான் இங்கே வந்தேன். யமுனாவைப் பார்க்க முடியாததால் எனக்கேற்பட்ட ஏமாற்றத்துக்கு ஒரு மாற்று எனக்குத் தேவைப்பட்டது.

யமுனா, நீ எனக்குத் தேவை! நீ என்னைக் கைவிட்டுவிடாதே! நான் இங்கு வந்தது தவறு. இனி ஒரு போதும் வரமாட்டேன்! இங்கு நிகழும் நிகழ்ச்சிகளுடன் எனக்கு ஒரு தொடர்பும் இல்லை...

சேகர் வீணாவுக்கு அழுத்தமாக முத்தம் கொடுத்தான். அவனுடைய இரு கைகளும் வீணாவின் தலை முடிக்குள் பதிந்திருந்தன. சிறிது நேரத் துக்கு முன் அவள் இவ்வளவு சிரமப்பட்டுக் கட்டியிருந்த கொண்டை கலைந்து போய் விட்டது. அவள் தன்னை அவனிடமிருந்து விடுவித்துக் கொண்டு, "அப்பா! ராட்சசன்!" என்றாள்.

அவிநாஷ், "வீணா இங்கே வா. நானும் உனக்கு ஒரு முத்தம் கொடுக்கறேன்" என்று சொன்னான்.

"ஆசை, ஆசை!" என்று வீணா அவனுக்கு அழகு காட்டினாள்.

அவிநாஷ் ஓநாய்போலப் பாய்ந்து அவளைக் கட்டிப்பிடித்துக் கொண்டான். அவர்களிடையே சற்றுநேரம் போராட்டத்துக்குப் பிறகு அவிநாஷ் அவளை முத்தமிட்டு ஒலியெழுப்பினான்.

வீணா கோபங்கொண்ட பூனைபோல் சிலிர்த்துக் கொண்டு என்னிடம் வந்து சொன்னாள், "நீங்க மட்டும் ஏன் மிச்சம் இருக்கணும், வாங்க!"

நான் சிரித்துக் கொண்டு, "மூஞ்சியை அலம்பிக்கிட்டுவா" என்றேன்.

"ஏன் அலம்பிக்கணும்?"

"அவிநாஷோட எச்சிலை நான் ஏன் சாப்பிடணும்?"

"ராஸ்கல்!" அவிநாஷ் என்னைத் திட்டினான்.

கட்டிலிலிருந்த சாதனா பைத்தியம் போல் சிரித்துக் கொண்டு, "என் மூஞ்சி எச்சலில்லே, வாங்க... வாங்களேன்!" என்று சொல்லி என் பக்கம் கை நீட்டினாள். பிறகு அப்துல் ஹாலிமைக் குறும்புப் பார்வை பார்த்து மறுபடியும் பைத்தியக்காரச் சிரிப்பு சிரித்தாள்.

நான் சட்டென்று கட்டிலிலிருந்து இறங்கி, "சரிதான், அப்பறம் நான் சாக வேண்டியதுதான்" என்று சொன்னேன்.

சாதனா கொஞ்சும் குரலில் அப்துல் ஹாலிமிடம் சொன்னாள், "அப்துல், இந்த ஆளைப்பிடிச்சு என்கிட்டே கொண்டுவா. எனக்கு இவரை முத்தமிட்டுத்தான் ஆகணும்!"

நான் ஓட முற்படுபவன் போல் பாவனை செய்து, "என்னை யாரும் தொடக்கூடாது!" என்று எச்சரித்தேன்.

என் அருகிலேயே நின்று கொண்டிருந்த அப்துல், "நீங்க பயந் திட்டீங்களா?" என்று கேட்டான்.

நான் அவனுடைய காதுக்கருகில் என் வாயை வைத்து, "பயமில்லை, அருவருப்பு" என்று கிசுகிசுத்தேன்.

அப்துலின் முகம் வறண்டு போயிற்று. என் பேச்சு அவனைக் குழப்பி விட்டிருக்கலாம்.

"நூர்ஜஹான் பேகம், எனக்கு ஒரு சான்ஸ் கொடுப்பியா?" அவிநாஷ் கேட்டான்.

பிராந்தி குடித்துக் கொண்டிருந்த சாதனா அதைக் குடித்து முடித்துவிட்டு, "எனக்கு நெஞ்சு வலிக்குது" என்றாள்.

"இப்போ ஓட்டலுக்குத் திரும்பிப் போகலாமா?" அப்துல் கேட்டான்.

"இல்லே, இன்னுங் கொஞ்ச நேரம் இங்கேயே படுத்திருக்கேன். நீயும் உக்காரு."

வீணா சொன்னாள், "நீ இனிமே பிராந்தி குடிக்காதே, அக்கா. ஏற்கெனவே உனக்கு உடம்பு சரியில்லே..."

திடீரென்று சாதனாவின் குரல் மாறிவிட்டது. அவள் கேவினாள், "என் உடம்புக்கு ஒண்ணுமில்லே. மனசுதான் சரியில்லே...!"

சேகர் என் கையைப் பிடித்துக் கொண்டு சொன்னான். "சுநீல், வா, மொட்டைமாடிக்குப் போகலாம். இங்கே ஒரே வெக்கை. மொட்டை மாடியிலே காத்துவரும். அங்கே ஒரு சின்ன, அழகான ரூம் இருக்கு. சனிக் கிழமை சிந்தாமணி பாபு வந்திருந்தார். நான் மாடி ரூமிலேதான் அன்னிக்குத் தங்கினேன். ரொம்ப சுகமாயிருந்தது. நான் ஏதோ வெளி நாட்டுக்கு உல்லாசப் பயணம் போயிருக்காப்பலே..."

அவிநாஷ் சொன்னான், "சரி, வாங்க, பிராந்தி பாட்டிலை எடுத்துக் கிட்டுப் போவோம். சுநீல், வெளிநாட்டுச் சரக்கு இது. கொஞ்சம் டேஸ்ட் பண்ணிப்பாரு."

மொட்டை மாடிக்குப் போனதும் நான் சேகரைக் கேட்டேன், "இவங்க எங்கேயிருந்து வந்து சேர்ந்தாங்க?"

"ஏன், உனக்குப் பிடிக்கலியா?"

"கொஞ்சங்கூடப் பிடிக்கலே...!"

"இவ்வளவு பெரிய பிலிம் ஸ்டார் உனக்கு முத்தங்கொடுக்க ஆசைப் பட்டா, நீ முடியாதுன்னிட்டியே! எவ்வளவுபேர் இந்த சான்சுக்காக ஏங்கறாங்க தெரியுமா?"

நான் எரிச்சலோடு சொன்னேன், "என்ன சிறுபிள்ளைத்தனம் இது! பெரீய்ய பிலிம்ஸ்டார்! இவளை இங்கே யாருக்குத் தெரியும்...? அதைத்

தவிர ஒரு இந்துப் பெண் ஒரு முஸ்லீமைக் கலியாணம் பண்ணிக்கறது எனக்குப் பிடிக்கல..."

"நீ வகுப்பு வாதியா ஆயிட்டே!"

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. எனக்குப் பிடிக்கலேன்னாப் பிடிக்கலேதான்! ஜாதிமதத்தைப் பத்தின விஷயமில்லே இது. அந்தப் பொம்பளைக்கு உடம்பு பூரா ஆசை தவிர வேறொண்ணும் இல்லே. இந்த மாதிரிக் கொஞ்சிக் கொஞ்சிப் பேசற பொம்பளைங்களை எனக்குக் கட்டோடு பிடிக்காது. சினிமா சான்சுக்காகப் புருஷனை விட்டு ஓடிப்போய் ஒரு முஸ்லிமைக் கலியாணம் பண்ணிக்கிட்டிருக்கா..."

அவிநாஷ் சொன்னான், "ஒண்ணு இல்லே, மூணு! இந்த அப்துல் ஹாலிம் அவ நிக்காஹ் பண்ணிக்கிட்டிருக்கற மூணாவது புருஷன்."

"ஒவ்வொரு மனுஷனுக்கும் தன்னிஷ்டப்படி நடந்துக்க உரிமையுண்டுங்கறதை நீ ஒப்புத்துக்கலியா?" சேகர் என்னைக் கேட்டான்.

"ஒப்புத்துக்கறேன். ஆனா ஒருத்தன் செய்யற காரியமெல்லாம் எனக்குப் பிடிச்சிருக்கணுமா...? ஆசையே உருவான ஒரு உடம்பு. அதைப் பார்த்தாலே வெறுப்பாயிருக்கு எனக்கு. அவகிட்டே இரக்கம், அன்பு ஒண்ணும் கிடையாது."

சேகர் சொன்னான், "ஒரு பொண்ணு வெறும் ஆசைப்பிண்டமா இருந்தா எனக்குந்தான் பிடிக்காது. ஆனா அவகிட்டே ஒரு விசித்திரமான பலவீனம் இருக்கு. இந்த மாதிரி ஒருத்திகிட்டே எதிர்பார்க்கவே முடியாத ஒரு குணம்..."

"அவ பேச்சை விட்டுத்தள்ளு! நீ ஏன் திடீர்னு இங்கே வந்து ஒளிஞ்சுக்க முடிவு பண்ணினே? முதல்லேயிருந்து சொல்லு. எல்.எஸ்.டி சாப்பிடறதுக்காக இங்கே வந்து நாள் கணக்கா உக்காந்திருக்கியா?"

அவிநாஷ் தான் கொண்டு வந்திருந்த ஓரே கண்ணாடி டம்ளரில் நிறையப் பிராந்தியை ஊற்றினான். நூர்ஜஹான் பேகம் கொண்டு வந்திருந்த விலையுயர்ந்த பிரெஞ்சு பிராந்தி. அதில் ஒரு வாய் குடித்துவிட்டு, "நீயும் கொஞ்சம் ருசி பார்க்கறியா?" என்று கேட்டான். நான் டம்ளரை அவனிடமிருந்து வாங்கி அவ்வளவு பிராந்தியையும் ஒரே மூச்சில் குடித்து விட்டேன். பிராந்தி நாக்கில்படாமல் நேரே தொண்டை வழியே வயிற்றுக்குள் இறங்கிவிட்டது. வறண்டிருந்த தொண்டை எரியத் தொடங்கிவிட்டது. நன்றாக எரியட்டும்! பிறகு எரிச்சல் நெஞ்சுக்கு இறங்கி வந்தது. அதன்பின் பாம்பு மாதிரி நெளிந்து நெளிந்து வயிற்றுக்கும் வரும்— தொண்டை, நெஞ்சு, வயிறு எல்லாம் எரியட்டும்! எரிச்சல் ஏற்படும் வரை இவை இருப்பதையே மறந்து போயிருந்தேன். இப்போது எரிச்சல் ஏற்பட்ட பிறகுதான் இவை இருப்பது தெரிய வருகிறது... இன்னும் எரியட்டும்!

"இன்னுங் கொஞ்சங் கொடு!" நான் அவிநாஷிடம் சொன்னேன்.

சேகர் சொன்னான், "எனக்கு வேண்டாம்."

என் மூளைக்குள் அப்போதும் ஏதோ இரைச்சல்.

"நீயும் கொஞ்சம் குடியேன்!" அவிநாஷ் சேகரை வற்புறுத்தினான். "உடம்பு சரியில்லேன்னா பிராந்தியை மருந்து மாதிரி சாப்பிடறதுண்டே! நீ ஏன் நேத்திக்கு ரெண்டு மாத்திரையை ஒரே சமயத்திலே சாப்பிட்டே?"

"சாப்பிட்டா என்ன ஆறதுன்னு பார்க்கலாமேன்னுதான்!.. அதிசயக் காட்சி ஏதாவது பார்க்கலாம்னு நினைச்சேன்... ஐயோ, நேத்து ராத்திரி என்ன அவஸ்தைப்பட்டேன்!"

"எப்படி உனக்குக் கிடைச்சதுன்னு சொல்லேன்...! இந்தப் பக்கத்திலே யாரும் எல்.எஸ்.டி சாப்பிட்டதாகக் கேள்விப்பட்டதில்லையே..." நான் சொன்னேன்.

"முதல்லே நான் வாங்க விரும்பலே. வேண்டாம்னுதான் சொன்னேன். அப்பறம் திடீர்னு மனசு மாறிடுச்சு... என்ன ஆச்ச தெரியுமா? போன வாரம் திங்கள்கிழமை. நான் காலையிலே வழக்கம் போலே டிரஸ் பண்ணிக்கிட்டு ஆபீசுக்குப் புறப்பட்டேன். பாலிஷ் பண்ணின ஷூவும், கழுத்திலே டையுமா. என் மனசிலே எந்த விதமான கஷ்டமும் இல்லே. குஷியா இருந்தேன். சீட்டி கூட அடிச்சுக்கிட்டிருந்தேன். வீட்டை விட்டு வெளியே வர்றபோது நிலைப்படியிலே தடுக்கி விழப்போனேன். 'நல்ல சகுனமில்லே, உள்ளே போய் உக்காந்துட்டு அப்புறம் போ'ன்னு அம்மா சொன்னார். நான் இந்த மாதிரி விஷயத்திலே அம்மா மனசைப் புண் படுத்தறதில்லே. என் ரூமுக்குப் போய் நாற்காலியிலே உக்காந்தேன். நூறு மட்டும் எண்ணிட்டு அதுக்கப்புறம் புறப்படலாம்னு முடிவு பண்ணினேன். ஆனா நூறு வரை எண்ணறது எவ்வளவு சிரமமாயிருந்தது தெரியுமா? ஒவ்வொரு நம்பரை எண்ணறபோது தலையிலே யாரோ சுத்தியலாலே மடார்னு அடிக்கறமாதிரி இருக்கு. எப்படியோ ஒரு வழியா எண்ணி முடிச்சுட்டு எரிச்சலோட கிளம்பினேன். ரஸ்தாவுக்கு வந்தேன். டிராம், பஸ்ஸிலே ஒரே கூட்டம். மத்த நாளிலேயும் கூட்டமாதானிருக்கும். ஆனா அன்னிக்கு என்னமோ எனக்கு ஒரே கோபம் வந்தது. டையை இறுக்கிக்கிட்டு தற்கொலை பண்ணிக்கலாம் போல இருந்தது. என் நிலை உனக்குப் புரியுதா?"

அவிநாஷ் சொன்னான், "இது ரொம்ப இயற்கையான விஷயந்தான். சில சமயம் மனசிலே எரிச்சல் உண்டாகுது, காரணம் என்னன்னு தெரியாமலே. மனசிலே சேர்ந்து குவிஞ்சுக்கிட்டு எப்படி வெளியே வரலாம்னு பார்க்குது..."

நானும் அவிநாஷின் பேச்சை ஆதரித்தேன். "ஆமா, சில சமயம் கண்ணாடி டம்ளரிலே தண்ணி குடிச்சப்பறம் டம்ளரைத் தூக்கியெறிஞ்சு உடைக்கணும் போலத் தோணுது—அதுக்குக் காரணம் காலம்பறப் பேப்பரிலே வியட்நாம் போரைப்பத்தின செய்தியைப் படிச்சதா இருக்கலாம். ஒரிஸ்ஸாவிலே பஞ்சத்திலே நாலுபேர் செத்துப்போன செய்தியைப் படிச்ச அன்னிக்கு சாயங்காலம் ஒரு பொண்ணோட சண்டை வந்துடுது... நீ அன்னிக்குப் பாரினை அடிக்கப் போனியே அதுக்குக் காரணம் உன் உண்மையான கோபம் பாரின் மேலே இல்லாமே, கல்கத்தா கார்ப்பரேஷன் மேலே இருந்திருக்கலாம்..."

அவிநாஷ் பக்கென்று சிரித்துவிட்டுச் சொன்னான், "இந்த விஷயத்தை அவ்வளவு சுலபமா விளக்கிட முடியாது. நான் ஒண்ணும் பிறத்தியாரோட கஷ்டத்துக்காகக் கவலைப்படறவன் இல்லே. யோசிச்சுப் பார்த்தா, மத்த எவ்வளவோ பேரைவிட நாம எல்லாரும் நல்ல

நிலைமையிலேதான் இருக்கோம். நமக்கு வேலை இருக்கு, உடல் நிலைமையும் மோசமில்லே, வசதியா், கவலையில்லாமே வாழ்க்கையை நடத்த முடியும். இருந்தாலும் உள்ளூர நமக்கு ஏன் இந்தத் தவிப்புன்னு புரிய மாட்டேங்குது..."

சேகர் சொன்னான், "அப்புறம் நடந்ததைக் கேளு... ஆபீசுக்குப் போனேன். அங்கே எங்க கோடௌன் இன்ஸ்பெக்டர் ஆங்கிலோ இந்தியன்—லாரின்னு பேரு. அவன் பக்கத்திலே ஒரு ஐரோப்பிய இளைஞன் உக்காந்திருந்தான்... லாரியை உனக்கு ஞாபகமிருக்கா? ஒரு நாள் நம்மளை ஹௌராவிலே சீட்டாட்டத்துக்குக் கூட்டிக்கிட்டுப் போனானே...!"

"அவனா? அவன் பெரிய மோசக்காரனில்ல...! அன்னிக்கு நம்மை ஏமாத்திப் பணம் பிடுங்கப் பார்த்தான். உங்க ஆபீஸ்காரன்னுதான் அவன் பல்லை உடைக்காம விட்டேன்" அவிநாஷ் சொன்னான்.

"லாரி அந்த இளைஞனை எனக்குப் பரிச்சயம் பண்ணி வச்சான். அவன் கனடாவைச் சேர்ந்தவன். பேரு சேண்டி க்ரோவர், அமெரிக்காவிலே வசிக்கறான். ஓவியன், உலகம் பூராச் சுத்திப் பார்க்கப் புறப்பட்டிருக்கான். நாடோடிகளாகத் திரியறாங்களே, பீட்டுகள், அவங்க மாதிரி... லாரி என்கிட்டே கிசுகிசுத்தான். 'உனக்கு எல்.எஸ்.டி வேணுமா? வேணும்னா இவன்கிட்டேயிருந்து வாங்கிக்கலாம்'. சேண்டி நிறைய எல்எஸ்டி மாத்திரை கடத்திக்கிட்டு வந்திருக்கான். அவனோட சொந்த உபயோகத்துக்காக. அவனுக்கு அந்தப் பழக்கம் உண்டு. அவனுக்கு ஹாங்காங் போகப் பிளேனுக்குக் காசு இல்லையாம். முன்னூறு ரூபாய்க்கு ஆறு மாத்திரை கொடுக்கத் தயாராயிருந்தான். நான் எனக்கு வேண்டாம்னு சொல்லிட்டேன். அவன் ஏதோ போலிச் சரக்கை என் தலையிலே கட்டப் பார்க்கறான்னு நினைச்சேன்... ஆனா கடைசியிலே அதை வாங்க வேண்டியதாப்போச்சு. யார் என்னை வாங்கும்படி கட்டாயப்படுத்தினாங்கன்னு எனக்கே தெரியாது... ஒரு விஷயம் கவனிச்சியா? நம்ம மனத்திடம் அதாவது 'வில் பவர்' இப்போ ரொம்பக் குறைஞ்சுபோச்சு. நம்ம விருப்பங்கள் நிமிஷத்துக்கு நிமிஷம் மாறிப்போகுது."

அவிநாஷ் விளக்கினான்—"அப்படியில்லே. நம்ம மனசுக்குள்ளே ஒரு தீவிர ஆசை இருக்கும். நாம அதை மறுக்கறதுக்குப் பலவித வாதங்களைப் பயன்படுத்தறோம். ஆனா அந்த ஆசை வாதங்களையெல்லாம் மீறிச் செயல்படுது."

"... பகல் சாப்பாட்டு நேரம் வரையிலே சரியாத்தான் இருந்தேன். காலையிலே எனக்கு ஏற்பட்ட கோபம் சற்றுக் குறைஞ்சிருந்தது... இந்த சமயத்திலே ரெண்டு நிகழ்ச்சிகள்... எங்க ஆபீசிலே ஒரு ரிகார்டு சப்ளையர் இருக்கான். 'விஷ்டுபத்'ன்னு பேரு. ஒல்லியா, குச்சி மாதிரி இருப்பான். நான் சாப்பிட வெளியே புறப்பட்டுக்கிட்டிருக்கேன். அவன் என் முன்னால வந்து கையைப் பிசைஞ்சுக்கிட்டு நிக்கறான்— 'சார், உங்க கிட்டே ஒரு காரியம்...' 'என்ன விஷயம், சீக்கிரம் சொல்லுங்க.. நான் வெளியிலே போயிக்கிட்டிருக்கேன்'னு சொன்னேன்."

"அவன் சொன்னான், சார், எனக்கு இருவது ரூவா கொடுங்க...! வேறே வழியில்லாம உங்ககிட் டே வந்திருக்கேன். மூணு நாளா வீட்டிலே

சமையல் இல்லே... எனக்கு அஞ்சு குழந்தைகள்... நேத்திலேருந்து எல்லாரும் முழுப் பட்டினி... 'எனக்கு எரிச்சல் வந்தது. இந்த மாதிரி கடன் கொடுக்க எனக்குப் பிடிக்காது'ன்னு சொன்னேன்."

". . .கடனில்லே சார், தானமாகக் கேக்கறேன். ஆபீசிலே எனக்கு வரவேண்டிய பணம் ஒண்ணுமில்லே. வித்துப் பணம் புரட்டும்படியா வீட்டிலே ஒரு சாமானுமில்லே. ஆபீசிலே ரொம்பப் பேர்கிட்டே கடன் வாங்கியாச்சு. அதைத் திருப்பிக் கொடுக்காததால இனிமே யாரும் கடன் தரமாட்டாங்க... ஆபீசிலே நீங்க ஒருத்தர்தான் நல்ல மனுஷர். அதனாலே முதல் முதலா உங்ககிட்டே தானம் கேட்டு வந்திருக்கேன். குறைஞ்சது இருவது ரூவாயாவது இல்லாமே இந்த மாசத்தைக் கழிக்க முடியாது..."

"பார்த்தியா, என் ஆபீசிலே தானம் கொடுக்க ஏத்த ஆளு நான்தான்னு வந்திருக்கான். கேட்டா எரிச்சல் வராதா சொல்லு! அவன் வெக்கமில்லாம கேட்டது எனக்கு அருவருப்பாயிருந்தது. அவன் மூணு நாலு நாளா ஷேவ் பண்ணிக்கலே. அவன் மூஞ்சியிலே மீசையுந்தாடியுமா, பார்க்கக் கொடூரமா யிருந்தது. இந்த மாதிரி ஆளுக தற்கொலை பண்ணிக்கிற டைப். நான் சாப்பிடப் புறப்படறபோது ஒருத்தன் பட்டினின்னு பிச்சை கேக்க வர்றது ரொம்ப அசிங்கம். என்கிட்டே இருந்ததே இருபது ரூபாதான். அதை அவன்கிட்ட கொடுத்துட்டா நான் சாப்பிட முடியாது. ஆனா இதை அவன் கிட்டே சொல்ல முடியுமா? அவன் அங்கேயே நின்னுக்கிட்டு என்னைப் புகழாமே இருக்கணும்னா உடனே அவனை அனுப்பியாகணும். வேறே வழியில்லாமே ஒரு அசிங்கமான சாமானை எடுக்கற மாதிரி என் பையிலேருந்து ரெண்டு விரலாலே ரூவா நோட்டை எடுத்து அவன கிட்டே கொடுத்து, 'சிவப்பு நாடா போட்டுக் கட்டின பைலையெல்லாம் உடனே கொண்டு போய்ப் பெரியவர் ரூமிலே வையுங்க'ன்னு கடுமையாச் சொன்னேன். நாம யாருக்காவது உபகாரம் பண்ணினா சாதாரணமாக் கர்வம் தோணும். ஆனா எனக்கு எரிச்சல்தான் வந்தது."

"அதுக்காக நீ முன்னூறு ரூபா செலவு செஞ்சியாகணும்!" அவிநாஷ் சொன்னான்.

நான் சொன்னேன், "சேகர் ரெண்டு நிகழ்ச்சி இருக்குன்னானே! அந்த இன்னொரு நிகழ்ச்சி என்னன்னு சொல்லேண்டா."

"அதை ஒரு நிகழ்ச்சின்னு சொல்ல முடியாது. விஷ்டுபதவுக்குப் பணம் கொடுத்துட்டு மூஞ்சி, கை கழுவிக்கப் பாத்ரூமுக்குப் போனேன். ஒரு அசிங்கமான பொருளைத் தொட்டுட்ட மாதிரி எனக்கு உடம்பெல்லாம் ஒருவித அருவருப்பு... இந்த சமயத்திலே நிசமாவே அப்படிப்பட்ட ஒரு பொருளைத் தொட்டுட்டேன். பாத்ரூம் கதவோட கைப்பிடியிலே ஒரு பல்லி உக்காந்திருந்திருக்கு. கதவைச் சாத்தப் போனவன் பல்லியைக் கவனிக்காமே அதைத் தொட்டுட்டேன். பல்லியைத் தொட்டா எவ்வளவு அருவருப்பாயிருக்கும் தெரியுமா? உங்களுக்கு அந்த அனுபவம் ஏற்பட்டிருக்கா இல்லையா தெரியாது. பல்லியோட குளிர்ச்சியான உடம்பைத் தொட்டதும் என் உடம்பு அப்படியே சிலித்துப் போச்சு. பல்லி சதக்குனு தரையிலே விழுந்தது. எனக்கு ஒரே கோபம். நான் பல்லை நறநறன்னு கடிச்சுக்கிட்டு, 'சனியனே!'ன்னு திட்டிக்கிட்டு ஷூக்காலால நசுக்கப்

போனேன். பல்லியைக் கொல்றது சுலபமில்லை. அது சட்டுனு நகர்ந்து சுவர்மேலே ஏறிக் கொஞ்ச தூரம் என்னை மலங்க மலங்கப் பார்த்தது. அதை அடிக்க வாகா ஒரு பொருளும் பாத்ரூமிலே இல்லே. கேவலம் ஒரு பல்லியை ஒண்ணும் செய்ய முடியலியேன்னு எனக்கு என் மேலேயே கோபம் வந்தது. நான் குவளையிலே தண்ணீர் எடுத்து அது மேலே அடிச்சேன். அது கொஞ்சங்கூட அசையல்லே. அதைக் கொல்லல் லேன்னா என் கோபம் தீராது போலிருந்தது. ஆனா கொல்ல வழியில்லே. எனக்கு அழுகை வந்துடும்போலே இருந்தது.

"நான் பாத்ரூமிலேருந்து வந்தபோது வெளியிலே விஷ்டுபத நின்னுக் கிட்டிருக்கான்! என்னைப் பார்த்ததும், 'சார், பெரிய துரை சொன்னாரு-'ன்னு ஏதோ சொல்ல ஆரம்பிச்சான். நான் அவனைக் கோபமாப் பார்த்து 'டாமிட்!'னு சொல்லித் திட்டிட்டு நேரே கேஷுக்குப் போனேன். என் கூட்டுறவு சேமிப்புப் பணம் ஐநூறு ரூபா எடுத்துக்கிட்டு நேரே லாரிகிட்டே வந்து, 'உன் சிநேகிதன் எங்கே? நான் மாத்திரை வாங்கிக்கறேன்'னு சொன்னேன்... என் நடத்தைக்குச் சரியான காரணமில்லேன்னு நீங்க சொல்லலாம். நீங்க சொல்றது சரியாயிருக்கலாம், ஆனா எனக்கு அங்கே யிருந்து எங்கேயாவது போயிடணும்னு தோணிச்சு... என்னோட அந்த நிலையை உங்களாலே புரிஞ்சுக்க முடியுதோ என்னவோ..."

"என்னாலே புரிஞ்சுக்க முடியுது. அப்புறம் சொல்லு" என்றான் அவிநாஷ்.

"சேண்டி தங்கியிருந்தது ஆங்கிலோ இந்தியர்கள் வசிக்கற எலியட் ரோடிலே ஒரு ஹோட்டல்ல. நான் அவனைத் தேடிக் கண்டுபிடிச்சேன். அவன் சொன்னான், 'இந்த மாத்திரையைக் கண்ட இடத்திலே சாப்பிடக் கூடாது. பத்திரமான இடத்திலே சாப்பிட்டுப் படுக்கையிலே படுத்துக்கணும். பக்கத்திலே கவனிச்சுக்க எப்போதும் ஒரு ஆள் இருக்கணும். தாகம் எடுத்தா அந்த ஆள் தண்ணி எடுத்துக் கொடுக்கணும். தூக்கமா வந்தாப் பேச்சுக் கொடுத்துத் தூக்கத்தைக் கலைக்கணும். பாதத்தைக் கையாலே தேச்சு விடணும். இந்த மாத்திரை சாப்பிட்டா நினைவு முழுக்கத் தப்பிடாது, ஆனாப் பெத்திட்ரின் சாப்பிட்ட மாதிரி போதை ஏற்படும். தனியா இருந்து மாத்திரையை சாப்பிட்டா செத்துப் போயிடுவோமோன்னு பயமாயிருக்கும்'.

"அப்போ எனக்குத் தோணிச்சு, வீணாவோட வீடுதான் இதுக்குப் பொருத்தமான இடம்னு. அப்போ எனக்கு உங்க நினைவே வரலே. நான் ஒருத்தனேதான் இந்த சுகத்தை அனுபவிக்கணும்னு நினைச்சேன். ஆனா மாத்திரை சாப்பிட்டப்பறம் புரிஞ்சுது, இதிலே சுகம் மட்டுமில்லே, துக்கமும் இருக்குன்னு. மறந்து போன விஷயங்களை மறுபடி நினைச்சுப் பார்க்கறதிலே பெரிய துக்கம் இருக்கு. இதைத் தெரிஞ்சுக்கிட்டதும் உங்களுக்கும் இந்த மாத்திரையைக் கொடுக்கணும்னு தீர்மானிச்சேன். சுநீலுக்காக ஒரு மாத்திரையை வச்சிருந்தேன் நேத்து வரையிலே..."

"நேத்திக்கு என்ன நடந்தது?"

"முதல் நாள் சாயங்காலம் வீணா வீட்டுக்கு வந்தபோது அங்கே ஒரு ஆள் இருந்தான். அவன் புறப்பட்டுப் போறபோது ராத்திரி மணி

ஒன்பது. நான் ஒரு மாத்திரை சாப்பிட்டுட்டுப் படுக்கையிலே படுத்தேன். வீணா என்னை நல்லாப் பார்த்துக்கிட்டா. என் போதை தெளிஞ்சபோது ராத்திரி மணி ஒண்ணரை. உடம்பிலே ஒரே தளர்ச்சி. அந்த நிலையிலே வீடு திரும்ப முடியல்லே. மறுநாள் காலையிலேயே நூர்ஜஹானும் அவளோட ஆளுங்களும் வந்துட்டாங்க. அதிலேருந்து இங்கே ஒரே கும்மாளமும் கோலாகலமுந்தான். ரொம்ப மஜாவாயிருந்தது. வீட்டுக்குத் திரும்பிப்போய் என்ன செய்யப் போறோம்? வீட்டிலேருந்தும் ஆபீசிலேருந்தும் லீவு எடுத்துக்கிட்டு ஒரு மாறுதலுக்காக இங்கேயே கொஞ்சநாள் இருக்கலாமேன்னு தோணிச்சு... ஒரு பொம்பளை வீட்டுக்கு ராத்திரி வேளையிலே போறது வேற. அவ வீட்டிலேயே நாள் பூராத் தங்கிடறது வேறே. பரிவு, கோபம் போன்ற எல்லா உணர்ச்சிகளையும் இயற்கையா, ஒருவிதக் கட்டுப்பாடும் இல்லாமே அனுபவிக்கலாம். ஒரு அற்புதமான, சுகமான அனுபவம் இது! இந்த மாதிரி அனுபவம் இதுக்கு முன்னால ஏற்படல்லே எனக்கு. மறுநாள் ராத்திரி நானும் நூர்ஜஹானும் ஆளுக்கொரு மாத்திரை சாப்பிட்டோம். வீணா சாப்பிட மாட்டேன்னுட்டா-மாத்திரை சாப்பிட்டுட்டு நூர்ஜஹான் என்ன அழுகை அழுதா தெரியுமா? அவ உடம்பிலே பேராசை தவிர வேறே ஒண்ணும் இல்லேன்னு சொல்றியே! அவ அழுகையை நீ பார்த்திருந்தா? அவளுக்கு என்னென்ன பழைய நினைவுகள் வந்ததோ தெரியலே. அவ எங்ககிட்டே ஒண்ணும் சொல்லலே, ஆனா மறுநாளும் அழுதுக்கிட்டேயிருந்தா...

"அதுக்கப்பறந்தான் உங்களைத் தேட ஆரம்பிச்சேன். உன்னைப் பிடிக்க முடியல்லே. உங்க வீட்டிலே யாரோ செத்துப் போயிட்டாங்கன்னு கேள்விப்பட்டேன்... யாரு?"

"என் தாத்தா."

"உன் பெர்ஹாம்பூர் தாத்தாவா? அட, பாவமே, ரொம்ப நல்ல மனுஷராச்சே!"

கீழேயிருந்து ஏதோ சத்தம் கேட்டது. யாரோ சேகரைப் பெயர் சொல்லி அழைத்தார்கள்.

"நான் பார்த்துட்டு வரேன்" என்று சொல்லிவிட்டு சேகர் கீழே போனான்.

காற்று சுகமாக வீசியது. ஹௌரா பாலத்தின் உச்சியில் சிவப்பு விளக்கு எரிவது கண்ணுக்குத் தெரிந்தது. அவிநாஷ் பிராந்தியை அநேகமாகக் காலி செய்துவிட்டான். என்னைக் கேட்டான், "கொஞ்சூண்டு மிச்சம் இருக்கு. குடிக்கறியா?"

நான் அதைக் குடிக்கும்போது அவன் கேட்டான், "அந்தச் சின்னப் பொண்ணை என்ன பண்ணிக்கிட்டிருக்கே, சொல்லு!"

நான் திடுக்கிட்டேன்— "எந்தச் சின்னப் பொண்ணு?"

"எனக்குத் தெரியாதுன்னு நினைச்சியா? எல்லாம் தெரியும்! உன்னை எச்சரிக்கை பண்றேன்—சின்னப் பொண்ணுங்க ரொம்ப ஆபத்து—! நான் சாந்தாவைத் தொடப் போனேன். என் கை ரெண்டும் இன்னும் பொசுங்கிக் கிடக்கு, பாரு!"

"நீ யாரைப் பத்திப் பேசறே?"

"என்கிட்டே மறைக்காதே! நேத்திக்கு நீ ஒரு சின்னப் பொண்ணோட பவானிபூரிலே பஸ்ஸிலே ஏறினே... உன் மூஞ்சியைப் பார்த்ததுமே புரிஞ்சுக்கிட்டேன். நீ ஏதோ பிளான் பண்ணிக்கிட்டிருக்கேன்னு. நான் எச்சரிக்கை பண்றேன்—சின்னப் பொண்ணுகள் எல்லாருமே ஆபத்து! அவங்க எதையும் நம்பிடுவாங்க. அதனாலயே அவங்ககிட்டே பொய் சொல்லித் தப்பிக்க முடியாது"

"பிளீஸ், அவிநாஷ், நீ அந்தப் பெண்ணைப் பத்திப் பேசாதே!"

அவிநாஷ் ஆச்சரியத்தோடு கேட்டான், "ஏன் என்ன விஷயம்?"

"என்னை ஒண்ணும் கேக்காதே...! நான் இந்த ஒரு விஷயத்தை மட்டும் எல்லார்கிட்டேயிருந்தும் ரகசியமா வச்சுக்க விரும்பறேன்."

"ரகசியமாவா?" போதை கலந்த குரலில் அசிங்கமாகச் சிரிக்கத் தொடங்கினான் அவிநாஷ். "ரகசியமா வச்சுக்க முடியுமா உன்னாலே?"

"நீ என்னை வேவு பார்க்காமே இரு, அதுவே போதும்... எனக்குக் கொஞ்சம் பணம் கொடுக்கறியா? நான் இங்கேயிருந்து போயிடறேன். எனக்கு இந்த இடம் பிடிக்கலே..."

சேகர் மேலே வந்து சொன்னான், "நூர்ஜஹான் மயக்கமாயிட்டா."

இந்தச் செய்தியை நான் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. எனக்குச் சிரிப்புதான் வந்தது. ஆனால் அவிநாஷ் எழுந்திருந்து "என்ன ஆச்சு?" என்று கேட்டான்.

சேகர் அவனுடைய கையைப்பிடித்து உட்கார்த்தி வைத்துச் சொன்னான், "ஆபத்து ஒண்ணுமில்லே, நீ உக்காரு. நூர்ஜஹான் நெஞ்சு வலிக்குது, உடம்பு என்னவோ செய்யுதுன்னு சொன்னா. பிறகு துடி துடிச்சுக்கிட்டுப் படுக்கையிலே புரண்டுக்கிட்டே துணிமணிகளைக் கழட்ட ஆரம்பிச்சா பைத்தியம் மாதிரி. அப்பறம் மயக்கமாயிட்டா. வீணாவுக்கு ரொம்பப் பயமாயிடுச்சு. ஆனா, கூட இருக்கற ரெண்டு பேரும் சொன்னாங்க—ஒருவருஷமா அவளுக்குச் சில சமயம் இந்த மாதிரி மயக்கம் வருதாம். கொஞ்ச நேரம் தூங்கினாச் சரியாயிடுமாம். இதுக்காகத் தான் அவளை ரொம்பக் கஷ்டப்பட்டுக் கல்கத்தாவுக்குக் கூட்டி வந்திருக் காங்களாம்."

நான் கேட்டேன், "ஏன் டாக்காவிலே வைத்தியம் செய்ய முடியாதா? இது நிசமாவே வியாதிதானா, இல்லே வெறும் பாசாங்கா?"

சேகர் சொன்னான், "சுநீல். நீ பூரா சமாசாரமும் தெரிஞ்சுக்காம ஏதோ தப்புக்கணக்குப் போடறே... நூர்ஜஹான் அவளோட பிள்ளையைக் கூட்டிக்கிட்டுப் போறதுக்காக வந்திருக்கா.

"அவளுக்குப் பிள்ளை வேறே இருக்கானா இங்கே?"

"அஜய் பாபுவுக்குப் பிறந்த பிள்ளை ஒருத்தன் இருக்கானே! அவன் அஜய் பாபுகிட்டேதான் இருக்கான். அவனுக்காக ஏக்கத்திலேதான் அவளுக்கு இந்த வியாதி. அவனைக் கூட்டிக்கிட்டுப் போகாமே டாக்காவுக்குத் திரும்ப மாட்டாளாம்."

"அஜய் பாபு பையனைக் கொடுக்க மறுக்கறாரா?"

"ஆமா. அதுதானே இப்பப் பிரச்னை!"

முன்னாலேயே எனக்கு வீணா, சாதனாவின் பழைய வரலாறு

கொஞ்சம் தெரியும். இப்போது சேகரைக் கேட்டு முழு விவரம் தெரிந்து கொண்டேன். அவர்கள் மூன்று சகோதரிகள், ஒரு சகோதரன், வயது முதிர்ந்த தாய் தந்தையர். அவர்கள் குடும்பம் கிழக்குப் பாகிஸ்தானிலிருந்து கல்கத்தாவுக்கு வந்தது. வீணாவின் அப்பாவுக்குக் கல்வியறிவு இல்லை. அவர் பேல்கரியாவில் ஒரு பலசரக்குக் கடையில் வேலை பார்த்தார். வீணாவின் சகோதரன் ரயிலில் பொரி கடலை விற்று வந்தான். ஒருநாள் அவன் ரயிலில் அடிபட்டு இறந்து போய்விட்டான். பிறகு இத்தகைய குடும்பங்களுக்கு சாதாரணமாக என்ன நேருமோ அதுவே நேர்ந்தது. அந்த மூன்று இளம் பெண்களைச் சுற்றியலைய ஆட்களுக்குப் பஞ்சமில்லை. இவர்களும் விளையாடத் தயார்தான். கிழக்கு வங்காளத்துக் கிராமத்துப் பெண் கல்கத்தாவுக்கு வந்தால் கிறங்கிப் போவது இயற்கைதான். நானே முதல் முதலில் கல்கத்தா வந்தபோது பிரமித்துப் போனேனே! ஆகவே அவர்களைக் குற்றஞ்சொல்லிப் பிரயோசனமில்லை. ஏழைக் குடும்பம், வீட்டில் எப்போதும் திட்டு, வசவு. ஆனால் அவர்கள் வெளியில் வந்தால் நல்ல உடையணிந்தவர்கள் அவர்களுடன் வலுவில் வந்து பேசினார்கள், சிரித்தார்கள், புகழ்ந்தார்கள். ஆகையால் அவர்கள் மயங்கிப்போக நேரமாக வில்லை. பெரியவள் ஜோத்ஸ்னா ஒரு நாளிரவு வீடு திரும்பவில்லை. போனவள் போனவள்தான். சாதனா கொஞ்சம் அதிருஷ்டசாலி. அவளுக்கு ஒரு சோப்புக் கம்பெனியில் சேல்ஸ்கேர்ளாக வேலை கிடைத்தது. அங்கேதான் அஜய் சென்குப்தாவைச் சந்தித்தாள். அஜய்பாபு அவளைக் கல்யாணம் செய்துகொண்டார். சாதனா கொஞ்ச காலம் சுகமாகத் தானிருந்தாள், தன் அப்பா அம்மாவுக்கும் பண உதவி செய்தாள். வீணா வையும் தன்னோடு வைத்துக் கொண்டு அவளுக்குப் படிப்பு கற்றுக் கொடுக்கவும் ஏற்பாடு செய்தாள். அவள் இயற்கையிலேயே நல்ல அழகி. நல்ல உடையணிந்ததும் அந்த அழகு இன்னும் பிரகாசித்தது. அப்படிப்பட்ட அழகைத் தில்ஜலாப் பகுதியில் ஒரு குறுகிய சந்துக்குள் அடக்கி வைத்திருக்க முடியுமா? எல்லாரும் அனுபவிக்கத்தானே அழகு! அஜய் பாபு தன் அழகு மனைவியை சினிமாவில் சேர்த்துவிட முயன்றார். அவருடைய போட்டோக் கார நண்பன் அவருக்கு ஆசைகாட்டி சாதனாவைக் கூட்டிக் கொண்டு அலைந்தான். அவளுக்குச்சில அமெச்சூர் நாடகங்கள், சினிமாக்களில் சில்லறை வேஷம் கிடைத்தது. அஜய்பாபுவுக்குக் கிடைத்தது பணத்தின் ருசி, சாதனாவுக்கு வெற்றியின் போதை. இதெல்லாம் சாதாரணமாக நடப்பதுதான். கல்கத்தாவில் இந்த நிமிஷத்தில் குறைந்தது முப்பது போட்டோகிராபர்கள் அல்லது சினிமாத் தரகர்கள், டீ குடித்துக் கொண்டே முப்பது அழகிய யுவதிகளிடம், "ஆகா உங்க அழகுக்குக் கதாநாயகி பாத்திரம் ரொம்பப் பொருந்தும். நீங்க மட்டும் சினிமாவில சேர்ந்தா..." என்றெல்லாம் சொல்லிப் போதையேற்றிக் கொண்டிருப்பார்கள். அந்த இளம் பெண்களில் பெரும்பாலோர் இறுதியில் சினிமாவில் நல்ல வாய்ப்புப் பெறுவதில்லை, அவர்களுடைய சித்திரங்கள் சுவர்களில் ஒட்டப்படுவதில்லை.

சாதனாவுக்கும் அதே கதி ஏற்பட்டிருக்கலாம். ஆனால் ஒரு திடீர்த் திருப்பம். அவளது வாழ்க்கையை மாற்றிவிட்டது—

கிழக்குப் பாகிஸ்தானில் அப்போதுதான் திரைப்படத் தொழில் துவங்கியிருந்தது. பெண் பாத்திரங்களுக்கு—குறிப்பாகக் கதாநாயகி வேடத்துக்குப் பொருத்தமான நடிகைகள் கிடைக்கவில்லை. டாக்காவி லிருந்து சினிமாக்காரர்கள் சிலர் நடிகைகளைத் தேர்ந்தெடுக்க கல்கத்தா வந்தார்கள். அஜய்பாபுவின் போட்டோக்கார நண்பன் சாதனாவை அவர்களிடம் கொண்டு போய்விட்டான். சில நாட்கள் அஜய்பாபுவும் சாதனாவும் அவர்களுடன் ஹோட்டல்களில் பொழுது போக்கினார்கள். அஜய்பாபு பை நிறைய பணமும் வயிறு நிறைய மதுவுமாக வீடு திரும்பினார். நேரு-லியாகத் ஒப்பந்தம் அப்போதும் அமுலில் இருந்தது. இரு நாடுகளுக்குமிடையே வர்த்தகத் தடை எதுவுமில்லை. திரைப்படத்தை கல்கத்தாவிலேயே தயாரிக்க முடிவாயிற்று...

ஆனால் திடீரென்று ஒரு நாள் பாகிஸ்தான் ஆசாமிகள் சாதனாவுடன் டாக்காவுக்கு ஓடிப்போய்விட்டார்கள்.

இதற்குள் வீணாவுக்கும் நல்ல காலம் பிறந்து விட்டது. திரைப்படத் தரகர்கள் நடமாடும் வீட்டில் ஓர் அழகான இளம்பெண் எவ்வளவு நாள் பத்திரமாயிருக்க முடியும்? இன்னொரு போட்டோகிராபர் அவளைக் கல்யாணம் செய்து கொள்வதாகக் கடத்திக் கொண்டு போனான். காளிகாட் கோவிலில் அவளுடன் மாலை மாற்றிக் கொண்டானாம். பிறகு அவளை டில்லிக்குக் கூட்டிக் கொண்டு போய்விட்டான். பிற்பாடு தெரிந்தது, அந்த ஆசாமிக்கு வர்த்தமானில் ஒரு மனைவியும் மூன்று குழந்தைகளும் இருக்கிறார்களென்று! அந்த ஆள் பல்போன கிழவன்களுக்கு வீணாவைக் கொடுத்துப் பணம் சம்பாதித்தான். இவ்வாறு பல கைகள் மாறிக் கடைசியில் சிந்தாமணி பாபுவிடம் வந்து சேர்ந்தாள் அவள்... பேல்கரியாவில் அவளுடைய கிழட்டுத் தாய்தந்தையருக்கு அவள்தான் பண உதவி செய்து வருகிறாள்.

டாக்காவில் சாதனா நூர்ஜஹான் பேகம் ஆனாள்! 'கண்டெடுக்கப் பட்ட பெண்' என்ற படத்தில் கதாநாயகியாக நடித்துப் பெரும்புகழ் பெற்றாள். ஓரிரு ஆண்டுகளில் டாக்காவின் பிரபல திரைப்பட நட்சத்திரமாகிவிட்டாள். டாக்காவின் பெரிய மருத்துவமனைக்கருகில் பிரும்மாண்டமான வீடு கட்டியிருக்கிறாள். வீட்டுக்குப் பெயர் 'நூர் மகால்'. அவள் பிறந்தது நாராயண்கஞ்சில். பிறந்தது முதல் டாக்காவில் குதிரை வண்டியில் கூட சவாரி செய்ததில்லை. இப்போது அவள் மஞ்சள் நிற மோட்டாரில் பவனி வருகிறாள். அவளுக்குப் பணம் கிடைத்துவிட்டது. புருஷனாக இருக்க ஏங்கும் ஆண்கள் இருக்கிறார்கள். ஆனால் குழந்தை மட்டும் இல்லை. அவளைப் போன்றவர்களின் வாழ்க்கையில் குழந்தை களால் தொந்தரவுதான். ஆனால் குழந்தைக்காக ஏங்குகிறாள் அவள். அவளுக்குக் குழந்தை வேண்டுமாம்! ஆகையால் எட்டு வருடங்களுக்குப் பிறகு கல்கத்தா வந்திருக்கிறாள். தன் குழந்தையைத் தன்னுடன் அழைத்துப் போகவேண்டுமென்று.

இந்தக் கதையைக் கேட்டு என் நெஞ்சு படபடத்தது. எங்கள் குடும்பத் திலும் நாங்கள் மூன்று பெண்கள், ஒரு பிள்ளை. என் மூன்று அக்கா மாருக்கும் நல்ல இடங்களில் கல்யாணமாகிவிட்டது. நானும் நன்றாகத்

தானிருக்கிறேன். பொரிகடலை விற்கப் போய் ரயிலில் மோதிச் சாகவில்லை நான். நானும் கிழக்கு வங்காளத்திலிருந்து ஓடி வந்த ஓர் அகதிதான் என்று யாரும் சொல்ல மாட்டார்கள். நான் கல்கத்தாக் கூட்டத்தில் கலந்து போய்விட்டேன்.

"வீணா நமக்கு உதவியா இருக்கா, அதனால நாம அவ அக்காவுக்கு உதவி செய்யணும்" சேகர் சொன்னான்.

"நாம என்ன உதவீ செய்ய முடியும்" நான் கேட்டேன்.

"சாதனாகிட்ட பணத்துக்குக் குறைச்சலில்லே. திருட்டுத்தனமா நிறைய டாலர் கொண்டு வந்திருக்கா. அஜய்பாபுவுக்குப் பண ஆசைகாட்டி அவர் பையனை அவளுக்குக் கொடுத்துடச் சொல்லணும். இதுக்கு அவர் ஒப்புத்துக்கல்லேன்னா வேறே விதமா..."

"நீ இதிலே மாட்டிக்காதே, சேகர்! இது ரொம்ப ஆபத்தான சமாசாரம்..."

"ஆபத்தா? இதிலே என்ன ஆபத்து? ஒரு தாயார் தன் பிள்ளையைத் திரும்பிப் பெற ஆசைப்படறா. இதிலே என்ன பிசகு?"

அவிநாஷ் எங்கள் உரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்தானா இல்லையா, தெரியாது. அவன் திடீரென்று தலையைத் தூக்கி, "பயங் கொள்ளி...! நம்ம குரூப்பிலே இந்த சுநீல் ஒருத்தன் தான் கோழை... உனக்குப் பயமாயிருந்தாப் போயிடு!"

எனக்குக் கோபம் வந்துவிட்டது. "ஆமா நான் போகத்தான் போறேன்! இந்த விஷயத்திலே தலையிட எனக்குக் கொஞ்சங்கூட இஷ்டமில்லை... ஒருத்தன் தன் அம்மாகிட்டேயிருந்து ஓடிவந்துட்டு, இன்னொரு பிள்ளையை அவனோட அம்மாவோட சேர்த்து வைக்கத் துடிக்கறான்!"

முதலில் சேகருக்கு என் பேச்சு புரியவில்லை..என்னையே சற்று நேரம் பார்த்துக்கொண்டிருந்தான். பிறகு சிரித்துக் கொண்டு சொன்னான், "ஓ, நீ என்னைப்பத்திச் சொல்றியா? நான் ஒண்ணும் அம்மாகிட்டேயிருந்து ஓடி வந்துடலியே! முந்தாநாள் அம்மாகிட்டே போய் 'நான் கொஞ்ச நாளுக்குக் கல்கத்தாவுக்கு வெளியே போறேன்'னுதானே சொல்லிட்டு வந்திருக்கேன்...

"பொய்தானே சொன்னே?"

"பொய்யினு ஏன் சொல்லணும்? கொஞ்ச நாளைக்கு லீவு எடுத்துக்கிட்டிருக்கேன். ஆபீசிலேருந்து லீவு, வீட்டிலே அம்மாவோட பிள்ளை, தம்பி தங்கைகளோட அண்ணா என்கிற பதவியிலேருந்தும் லீவு. மிலிட்டரி ஆபீசர்கள் லீவு எடுத்துக்கிட்டு மீன்பிடிக்கப்போவாங்க, தெரியுமா? கண்மூடிக் கண்திறக்கறதுக்குள்ளே மனுஷனைக் கொன்னு தள்றவங்க ஒரு மீனைப்பிடிக்கறதுக்காக மணிக்கணக்கா உக்காந்துட்டிருப்பாங்க. ரொம்பச் சின்ன மீன் தூண்டில்லே சிக்கினா அதை மறுபடி தண்ணிலே எறிஞ்சுடுவாங்க. அவ்வளவு இரக்கம்! அதாவது அவங்க அந்த நேரத்திலே மாறுவேஷம் போட்டுக்கறாங்க. இந்த மாதிரி அவ்வப் போது மாறுவேஷம் போட்டுக்கறதைத் தவிர வேற வழியே இல்லே வாழ்க்கையை ரசிக்க. எனக்கு இங்கே இருக்கறது ரொம்ப மஜாவாயிருக்கு."

"நீ என்ன வேணும்னாலும் சொல்லு. எனக்கு சாதனாவைப்

பிடிக்கலே, அவளுக்கு அவளோட பிள்ளையைத் திருப்பிக் கொடுக் கறதிலே எனக்கு சம்மதமில்லே. மேலும், பையனுக்கு இப்போ பதினோரு வயசு. அவனுக்கும் ஒரு சொந்த அபிப்பிராயம் இருக்கலாமே! தன் அப்பாவை விட்டு இந்த மாதிரி ஓடுகாலி அம்மாகிட்டே போக அவனுக்கு இஷ்டமில்லாம இருக்கலாமே!"

"ஆமா, அதைத்தான் தெரிஞ்சுக்க எனக்கு ஆசை. ஒரு பதினொரு வயசுப் பையன் எட்டுவருஷமாப் பார்க்காமே இருந்த அம்மாவைப் பார்த்ததும் என்ன செய்யறான்னு தெரிஞ்சுக்க ஆசைப்படறேன் நான். பையன் சரியான பராமரிப்பு இல்லாமே வளர்ந்துக்கிட்டிருப்பான், அழுக்குச் சட்டையும் நிஜாரும் போட்டுக்கிட்டு அலைஞ்சுக்கிட்டிருப்பான். வெள்ளித் திரையிலேருந்து இறங்கி வந்திருக்கிற நட்சத்திரம்-ஜரிகைச் சேலையும் நகையுமா ஜொலிக்கற அம்மா-அவனைப் பார்த்து என்ன செய்யறான்னு தெரிஞ்சுக்க உனக்கு ஆசையா இல்லே?"

"இல்லே. இதிலே எல்லாம் எனக்கு அக்கறையில்லே. நான் மறுபக்கம் முகத்தைத் திருப்பிக்கட்டுப் பிழைச்சிருக்கப் பார்க்கறேன்."

"அப்படிப் பிழைச்சிருக்க முடியுமா?"

"பார்ப்போமே! நான் வரேன்... அவிநாஷ், எனக்கு ரெண்டு ரூவா கொடு."

"இன்னிக்கு ராத்திரி இங்கே இருந்துட்டுப் போயேன்!"

"முடியாது."

மாடியிலிருந்து கீழே இறங்கி வீணாவின் அறைக்குள் எட்டிப் பார்த்தேன். இரண்டு ஆண்களும் மௌனமாக சப்பாத்தியும் இறைச்சியும் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். வீணா அங்கே இல்லை. கட்டிலின்மேல் சாதனா கை கால்களைப் பரப்பிக் கொண்டு கோணலாகப் படுத்துக் கிடந்தாள். அவள் மயக்கமாயிருக்கிறாளா, ஆழ்ந்த தூக்கமா என்று தெரிய வில்லை. பிளவுசின் பொத்தான்கள் திறந்திருந்தன. உள்ளே கருப்புப் பிரேசியர் தெரிந்தது. அவளது ஒரு கை கீழேயிருக்க, இன்னொரு கை இடது மார்பின் மேல் கிடந்தது. அவள் படுத்துக்கிடந்த விதம் பரிதாப மாயிருந்தது. யாராவது அவளைச் சரியாகப் படுக்கப் போட்டிருக்கலாம். அவளது ஒரு கண்ணிலிருந்து விழுந்த கண்ணீர்ச் சுவடு இன்னும் காயவில்லை. அவள் மயக்கமாக விழுவதற்குமுன் உடல் உபாதையாலோ வேறு வேதனையாலோ அழுதிருக்க வேண்டும். அழட்டும்! அழுவதில் தவறில்லை. அழுதால் பெண்களின் உடல்நிலை நன்றாயிருக்கும் அவள் உதறிவிட்டுச் சென்ற பிள்ளையை மீண்டும் அடைய வேண்டுமானால் அழத்தான் வேண்டும்.



"யமுனா, இன்னிக்கு நீ பாட்டுக்கிளாசுக்குப் போக வேண்டாம்."

"அதெப்படி? இன்னிக்கு எங்களுக்குப் புதுப்பாட்டு கத்துக் கொடுக்கப் போறாங்களே!"

"கொடுக்கட்டுமே! நான் உனக்குக் கிராமபோன் ரிகார்டு

வாங்கித்தரேன்."

"சீ! 'ஆஜ் பொஹிச்சே வசந்த பவன்' பாட்டுக்கு ரிகார்டு இருக்கா?"

"இல்லேன்னாப் போகட்டுமே! அது ஒண்ணும் கஷ்டமான பாட்டு இல்லே. அடுத்த கிளாசிலே கத்துக்கலாம்."

"உங்களுக்கு அந்தப் பாட்டு தெரியுமா?"

"தெரியாது... உன்னோட பேசிக்கிட்டு இருக்கணும்போல இருக்கு எனக்கு. நீ கிளாசுக்கு டிமிக்கி அடிக்கக் கத்துக்கல்லியா இன்னும்?"

"கத்துக்காம என்ன? கொஞ்ச நாளைக்கு முன்னாலேதான் காலேஜிலே நாங்க மூணுநாலு பே - கிளாசுக்கு மட்டம் போட்டுட்டு சினிமாப் பார்க்கப் போனோம்..."

"சினிமா பார்க்கப் போனியா? என்ன தைரியம் உனக்கு!"

"ஆமா, சினிமா பார்க்கப் போக ரொம்ப தைரியம் வேணுமாக்கும்? தவிர, நான் தனியாப் போகலியே!"

"சரி சரி, வா, இந்த பஸ்ஸிலே ஏறிக்கலாம். இங்கேயே நின்னுக் கிட்டிருந்தா உன் பாட்டுக்கிளாஸ் சிநேகிதி யாராவது பார்த்துடுவா, எனக்கு வெக்கமாயிருக்கும்..."

"ஏன், நீங்க ஏன் வெக்கப்படணும்?"

"இந்தக் கிழவன் உன்னைக் கிளாசுக்குப் போக விடமாட்டேங்கறான்னு அவங்க நினைச்சுக்குவாங்க."

"சீ, நீங்க கிழவரா?"

"உன்னோடே ஒப்பிட்டுப் பார்த்தா நான் கிழவன் தான், வா, வா, பஸ் வந்துடுச்சு."

"எங்கே போகணும்?"

"வாயேன்!"

பாட்டு வகுப்புக்கு மிகவேகமாகப் போய்க் கொண்டிருந்த யமுனாவை நான் தடுத்து நிறுத்திவிட்டேன். காரணம், பாட்டு வகுப்பு எட்டு மணிக்கு முடியும்வரை காத்திருக்கப் பொறுமையில்லை எனக்கு. என் செய்கை அவளுக்குப் பிடித்திருந்ததா இல்லையா என்று நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை. பஸ்ஸில் நல்ல கூட்டம். நான் அவளை ஏற்றி விட்டு அவளுக்குப் பின்னால் படியில் நின்று கொண்டேன். அவளுடைய பின் கழுத்தைக் கூர்ந்து பார்த்தேன். அங்கே சிறிது கூட அழுக்கு இல்லை. பெண்களுக்கு வயது ஏற ஏற அவர்களுடைய கழுத்துப் பக்கம் அழுக்கு சேர்ந்து விடுகிறது... யமுனாவின் காதுக் குழலும் அழகாக வெள்ளரிப்பிஞ்சுபோல்... அதிலும் நிச்சயம் அழுக்கு இருக்காது...

சிறிது தூரம் சென்றதுமே நான் யமுனாவை மெதுவாகத் தொட்டு, "வா, இறங்கலாம்" என்று சொன்னேன். தண்ணீரில் படிந்துள்ள பாசியைக் கைகளால் விலக்குவதுபோல் கூட்டத்தை விலக்கி அவளுக்கு வழி செய்து கொடுத்தேன்.

இறங்கியதும் யமுனா கேட்டாள், "நீங்க டிக்கெட் வாங்கலியா?"

"இல்லே... ஒரு நாள் பஸ்ஸிலே கண்டக்டர்கிட்டே அஞ்சு ரூபா கொடுத்தேன். அவன் அதை விரலிடுக்கிலே மடிச்சு வச்சுக்கிட்டு, 'சில்லறை இல்லே, அப்பறந்தரேன்'னு சொன்னான். அப்பறம் நான் கேக்க மறந்

துட்டேன், அவனும் கொடுக்கலே. அயோக்கியன்...! அந்த நஷ்டத்தை ஈடுகட்டறதுக்காக இன்னும் இருபது நாள் டிக்கட் வாங்கப் போறதில்லே!"

இதைக் கேட்டுக் கலகலவென்று சிரிக்கத் தொடங்கினாள் யமுனா. ஒற்றை நாடி உடம்பு உள்ளவர்கள் சிரிப்பதுதான் பொருத்தமாயிருக்கிறது. குண்டாயிருப்பவர்கள் சிரித்தால் அந்தச் சிரிப்பொலி சுத்தியலால் அடிப்பது மாதிரி இருக்கிறது...

நான் அவளைக் கேட்டேன், "யமுனா, கிளாசுக்குப் போயிக்கிட்டிருந்தவளை நான் போகாம பண்ணிட்டேனேன்னு என்மேலே கோபமா உனக்கு? என்னோட இப்படி வர்றதுக்கு உனக்குப் பிடிக்குதா?"

யமுனா புருவத்தைச் சுறுக்கிச் சற்று யோசித்துவிட்டுப் பிறகு மலர்ந்த முகத்துடன் சொன்னாள், "ரொம்ப மஜாவாயிருக்கு... ஒரு கிளாஸ் போகலேன்னா என்ன மோசம்!"

இன்று யமுனா ஒரு சூரியகாந்தி நிறப் புடவை உடுத்திக் கொண்டிருக்கிறாள். புதிதாகத்தான் சேலையணியத் தொடங்கியிருக்கிறாள் என்றாலும் அந்தக் கலையை இதற்குள் நன்றாகக் கற்றுக் கொண்டு விட்டாள். அவளுடைய பிளவுசும் செருப்புங்கூட மேட்சிங் மஞ்சள். மஞ்சள் நிறப்புடவை அவளுக்கு மிகவும் பொருத்தமாயிருக்கிறது என்று சொல்ல வாயெடுத்தபோது, முதல்நாள் சிவப்புச் சேலையும் பொருத்தமாயிருந்தது என்பது நினைவுக்கு வந்தது. எல்லா வகைப்பூட்டுக்களையும் திறக்கக் கூடிய ஒரு வகைச் சாவி உண்டு. அதுபோல் ஒவ்வொரு உடம்புக்கு எல்லா நிற ஆடைகளும் பொருத்தமாயிருக்கும். உடம்பு மட்டுமின்றி, மனத்தையும் இவ்வாறு திறந்துவிடக் கூடிய சாவி தேவை. ஏனென்றால் மனதில் துன்பம் அல்லது வேறு சிக்கல் இருந்தால் அது எல்லா நிறங்களையும் பொறுத்துக் கொள்ளாது.

"உன்கிட்டே நிறையப் புடவை இருக்கா? தினம் ஒரு புதுப்புடவை கட்டிக்கிட்டு வரியே?"

"இதுவா? இது அக்காவோட புடவை. நான் அக்காவோட புடவையையும் கட்டிக்குவேன். பெண்களுக்கு ஒரு வசதி. யாரும் எந்தப் புடவையையும் கட்டிக்கலாம். ஆண்களுக்கு இந்த வசதி இல்லே."

"அக்கா உனக்கு அவளோட புடவையெல்லாம் கொடுப்பாளா? உன்கிட்டே அவளுக்கு ரொம்பப் பிரியமா?"

"ஏன் கொடுக்கமாட்டா? அவளுக்குத்தான் நிறையப் புடவை தேவையில்லையே! இப்பல்லாம் அம்மா அக்காவை அடிக்கடி வெளியே போக விடறதில்லே."

"ஏன்?"

"தெரியலே... அக்கா வெளியே போறது அப்பாவுக்குப் பிடிக்கலே... அக்காவுக்கு இன்னும் ஏன் கலியாணம் ஆகலே, தெரியுமா? அவளுக்கு யாரையும் பிடிக்கறதில்லை. அவ எவ்வளவோ தடவை தானே பையனைத் தேர்ந்தெடுத்துட்டுப் பிறகு மனசு மாறி வேண்டாம்னுட்டா."

"உன்னை மட்டும் தனியா வெளியே போயிட்டுவர விடறாங்களா?"

"ஆமா. அம்மா ஒண்ணும் சொல்றதில்லே... ஆனா சும்மா வெளியே சுத்த விடறதில்லே. என் கிளாஸ் சிநேகிதி ஷேபாலி அவளோட சிநேகிதனோட

எங்கெங்கேயோ சுத்தறா. நான் அவகிட்டே போய் 'எனக்கும் ஒரு சிநேகிதர் இருக்கார்'னு..."

நான் அவளை அதட்டினேன், "நான் என்ன உன்னோட பாய் ஃபிரண்டா? மட்டமான விஷயமெல்லாம் கத்துக்கிட்டிருக்கே நீ..."

யமுனா சிரித்துக் கொண்டு சொன்னாள், "பாய் ஃபிரண்டு இருந்தாத் தப்பா...? எனக்குக்கூட ஒரு பாய் ஃபிரண்டு இருக்கான்—தபன்..."

"தபன் யாரு?"

"டிவிஷனல் கமிஷனர் சென் குப்தாவோட பிள்ளை. நல்லவன்தான், ஆனா அவனுக்கு விளையாட்டிலேதான் அக்கறை."

"அது போகட்டும். நீ இனிமேல் என் முன்னால தபனைப் பத்திப் பேசாதே!"

"ஏன்?"

"என்ன அவசியம்? தபனோடே இருக்கறபோது அவனோட பேசு, என்னோட இருக்கறபோது..."

"அவனைப் பத்திப் பேசினா என்ன?"

"நீ அவனைப் பத்திப் பேசினா எனக்குப் பிடிக்கலே. நான் உன்னைக் காதலிக்கிறேனே, அதனாலதான்..."

கதீட்ரலுக்கு அருகிலுள்ள ஜனநடமாட்டமற்ற ரஸ்தாவில் திடுக்கிட்டு நின்று என் முகத்தைப் பார்த்தாள் யமுனா. அவள் கண்களில் ஒரு பரிதாபத் தோற்றம். அவள் பெண்தானே! காதலின் பொருள் புரிகிறதோ இல்லையோ, பெண் மனம் சிறுவயதிலிருந்தே 'காதல்' என்ற வார்த்தையைக் கேட்கத் தயாராயிருக்கிறது. கேட்டதும் புரிந்து கொள்கிறது– யமுனாவின் உடம்பு ஒரு முறை சிலிர்த்தது. கண் இமைகள் சற்று சிரமப்பட்டு மூடிச் சற்று நேரத்துக்குப்பிறகு திறந்தன. அவள் கலங்கிய குரலில் கேட்டாள். "நீங்க என்னைக் காதலிக்கிறீங்களா? நிசமாவா? எப்படி?"

நான் அவளது கண்களிலிருந்து என் பார்வையை அகற்றாமல் சொன்னேன், "இப்படித்தான்... ரொம்ப நாளைக்கு முன்னால கலியாண வீட்டிலே நீ மேலே நின்னுக்கிட்டிருக்கறதைப் பார்த்தபோதே உன்மேலே காதல் ஏற்பட்டுடுச்சு... ஆனா இவ்வளவு நாள் அதை மறந்து போயிருந்தேன். அதனால வாழ்க்கையிலே எவ்வளவோ நஷ்டம்...!"

"நீங்க அப்போ என்னோட பேசவேயில்லே. என்மேலே காதல் ஏற்பட்டுடுச்சாம்!"

"முதல்லேயே வேறே பேச்சைப் பேசத் தொடங்கினா அப்பறம் காதல் பேச்சை எடுக்க முடியாது. அதனால்தான் முதல்லேயே காதலைப் பத்திச் சொல்லிட்டேன். இனிமே நிறையப் பேசலாம்."

"சுநீல் அண்ணா, நீங்க என்னை ரொம்பச் சின்னப் பொண்ணு இதையெல்லாம் புரிஞ்சுக்க முடியாதவள்னு நினைக்கறீங்க. நான் ஒண்ணும் சின்னப் பொண்ணில்லே என் வயசு..."

"உன் வயசு பதினஞ்சரை..."

"இல்லே. பதினேழு வயசு. பார்க்கப்போனாப் பதினேழு வருஷம் மூணுமாசம் நிறைஞ்சாச்சு."

"இருக்கவே இருக்காது! உனக்குப் பதினேழு வயசுன்னா எனக்கு

முப்பத்து நாலு வயசாயிருக்கணும். ஆனா எனக்கு முப்பத்தோரு வயசுதான்..."

"இதென்ன கணக்கு? இதுக்கு ஒண்ணும் அர்த்தமேயில்லே. நீங்க என்னோட விளையாடறீங்க."

"இல்லவேயில்லை... எங்கே உன் கையைக் கொடு! உன் கை சூடாயிருக்கு, பறவைக்கூடு மாதிரி... எனக்குத் தெரியும்."

"என்ன தெரியும்?"

"உன் கை வியர்வையிலே நனைஞ்சிருக்காதுன்னு. இவ்வளவு சூடாயிருக்கும், தொட்டா சிலிர்க்கும்னு..."

யமுனாவின் முகத்தில் குழப்பம் தெரிந்தது. பலவகை உணர்ச்சிகள் அதில் தோன்றி மறைந்தன. சிவப்புநிறப் பாட்டு நோட்டை இலேசாகப் பிடித்திருந்தாள். அது எந்த நேரமும் கீழே விழுந்து விடும் போலிருந்தது. நான் அவளை விக்டோரியா மெமோரியல் பூங்காவில் ஒரு கல் மேடையில் உட்கார வைத்தேன். நான் அவள் காலடியில் தரையில் உட்கார்ந்து கொள்ள விரும்பினேன். இது அனாவசிய ஆர்ப்பாட்டமோ? ஒரு சின்னப் பெண் விஷயத்தில் இவ்வளவு ஆர்ப்பாட்டம் உசிதமில்லையோ? ஆனால் எனக்கு யமுனா விஷயத்தில் நிறைய ஆர்ப் பாட்டம் செய்யவேண்டும் போலத்தான் இருந்தது. அவளை முதன்முதலாக முத்தமிடும்போது பட்டப்பகலில் வெட்டவெளியில் சௌரிங்கி ரஸ்தாவின் நட்டநடுவே வாகனங்களை நிறகச் செய்துவிட்டு முத்தமிடப் போகிறேன்! ஆனால் இப்போது எனக்கு அந்தத் துணிவு வரவில்லை. சுற்றுமுற்றும் சிறிது பார்த்துவிட்டு அவளிடமிருந்து சற்று தூரத்தில் அந்த மேடையிலேயே உட்கார்ந்தேன். யமுனா மௌனமாயிருந்தாள். அவளது இதயம் படபட வென்று அடித்துக் கொண்டிருக்கலாம். நான் மடித்து வைக்கப்பட்டிருந்த என் சட்டைக் கையைப் பிரித்துக் கஃப் பொத்தான்களைப் போட்டுக் கொண்டேன். கழுத்துப் பக்கத்துப் பொத்தானையும் போட்டுக் கொண்டேன். இப்படித்தானே நீதிபதிக்கு முன்னால் உட்கார வேண்டும்! இனிமேல் நான் ஏதாவது கோவிலுக்குப் போனாலும் இதேமாதிரிதான் போகப் போகிறேன்.

நான் சொன்னேன், "யமுனா, உனக்கு ஆச்சரியமா இருக்கா?" யமுனா பரிதாபமாக என்னைப் பார்த்துக் கேட்டாள், "நீங்க நிசமாவே என்னைக் காதலிக்கிறீங்களா? நிசமாத்தான் சொல்றீங்களா?"

"இனிமே நான் நிசந்தான் பேசப் போறேன்... அன்னிக்கு நான் உன்னைப் பார்த்துட்டுப் பஸ்ஸிலேருந்து இறங்கினேன்னு சொன்னேனே, அது பொய். உண்மையிலே உன்னைப் பார்க்கறதுக்காகத் தான் நான் நின்னுக்கிட்டிருந்தேன்."

"பின்னே ஏன் பொய் சொன்னீங்க?"

"நடுநடுவிலே இந்தமாதிரி தப்பு பண்ணிடறேன். எல்லாரும் எனக்குப் பொய் சொல்லத்தான் கத்துக் கொடுத்திருக்காங்க... நீ பொய் சொல்லக் கத்துக்காதே!"

"ஒண்ணு ரெண்டு பொய் சொன்னாத் தப்பில்லே. எப்போதும் உண்மையே பேசறது ரொம்ப போர்!"

யமுனா சிரிப்பதைப் பார்த்து எனக்கும் சிரிப்பு வந்தது. "இப்போ சிரிக்கறியே, நல்லதாப் போச்சு! நீ சீரியஸா மூஞ்சியை வச்சுக்கிட்டா எனக்கு மனசு கஷ்டப்படுது. நீ ஒரு போதும் 'உம்'முனு இருக்காதே! சந்தோஷமா இருக்கறதுக்காகத்தான் காதல்..."

"நீங்க நிசமாவே என்னைக் காதலிப்பீங்களா?"

"நிச்சயமா! ஆனா நீ இப்பவே என்னைக் காதலிக்க ஆரம்பிக்க வேண்டாம். நீ சின்னப் பெண்ணு, கொஞ்சங் கொஞ்சமாக் காதலிக்கக் கத்துக்கோ."

"மறுபடி என்னைச் சின்னப் பொண்ணுங்கறீங்களே!"

"சரி சரி, நீ சின்னப் பொண்ணு இல்லே... ஆனா நீ இப்பவே காதலிக்க வேண்டாம். நீ காதல் பேச்சுப் பேசினா அதிகப் பிரசங்கித்தனமாத் தோணும்."

"ஏன், என்னால காதலிக்க முடியாதா? உங்களாலே மட்டுந்தான் முடியுமா?"

"இதுக்குப் பதில் அப்பறம் சொல்றேன். நீ ஒரு பாட்டுப்பாடு."

நான் ஒரு சிகரெட் பற்ற வைத்துக் கொண்டேன். யமுனா கண்களை மூடியவாறு அதன் புகையை முகர்ந்தாள். குழந்தை மாதிரி கால்களை ஆட்டிக்கொண்டே, "எனக்கு ஒரு சிகரெட் கொடுங்க" என்றாள்.

"ஊஹூம், நீ சிகரெட் குடிக்க வேண்டாம். என் சிகரெட் ரொம்ப ஸ்ட்ராங்."

அவள் உதட்டைப் பிதுக்கிக் கொண்டு அலட்சியமாகச் சொன்னாள், "நான் இந்த சிகரெட் எவ்வளவோ தடவை குடிச்சிருக்கேன். நான் பதினாலு வயசிலேருந்தே சிகரெட் குடிக்கறேனாக்கும்!"

நான் கண்களை உருட்டி அதட்டினேன், "ரொம்பப் போக்கிரி ஆயிட்டியே! யாரோட சேர்ந்து சிகரெட் குடிக்கறே?"

"காலேஜ் தோழிகளோடே... வீட்டிலே அப்பாவோட சிகரெட்டைத் திருடி நானும் அக்காவும் குடிப்போம். சிகரெட் குறையறதை அப்பா கவனிக்கறதில்லே... கொடுங்களேன் ஒரு சிகரெட்!"

"பார்க்கறவங்க என்ன நினைப்பாங்க?"

"என்ன வேணும்னாலும் நினைச்சுக்கட்டும்!"

அரைகுறையிருட்டில் நான் அவளுக்கு சிகரெட் பற்ற வைத்துக் கொடுத்தேன். அவள் தன் திறமையைக் காட்டுவதற்காகப் புகையை நிறைய இழுத்துவிட்டு இரண்டு தடவை இருமினாள். அவள் கண்களில் கண்ணீர் வந்துவிட்டது. அவள் சிரித்துக் கொண்டு சொன்னாள், "நிசமாவே சிகரெட் குடிச்சா இருமாது எனக்கு. என்னை நம்புங்க! இன்னிக்கு என்னவோ...!"

"புரியுது... இதோபாரு, இந்த மாதிரி சாம்பலைத் தட்டிவிடணும். கட்டை விரலாலே இப்படி அடிப்பக்கம் தட்டணும்..."

"அப்பாவோட சிநேகிதர் ஒருத்தர் இருக்கார். அவர் சிகரெட் சாம்பலைத் தட்டிவிடறபோது விரல் சொடுக்கற மாதிரி சத்தம் கேக்கும்."

யமுனாவின் ஒரு கை என் தொடைக்கு வெகு அருகில் இருந்தது. நான் ஜாக்கிரதையாகச் சற்றுத் தள்ளி நகர்ந்து கொண்டேன். என் உடம்பு

அவளுடைய உடம்பைத் தொடக்கூடாது. உடம்புகள் வெகு எளிதில் ஒன்றையொன்று ஈர்க்கின்றன என்பதை நான் நிறையப் பார்த்திருக்கிறேன். இனி இது கூடாது.

சிறிது நேரம் சிகரெட் குடித்தபிறகு ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது. நான் சொன்னேன், "முதல் நாள் உன்னைப் பாட்டுகிளாஸ் பக்கத்திலே பார்த்தபோது நீ சொன்னியே நான் இரைஞ்சு பேசறேன்னு, என் கண் ஏன் சேப்பாயிருக்குன்னு கேட்டியே-ஞாபகமிருக்கா? அன்னிக்கும் நான் பொய் சொன்னேன்... அன்னிக்கு நான் குடிச்சிருந்தேன்..."

அவள் சற்றும் அதிர்ச்சியடையாமல் கேட்டாள், "நீங்க குடிக்கறதுண்டா? ஏன் குடிக்கிறீங்க?"

"ஏன்னு தெரியல்லே... உன் அப்பா குடிப்பாரா?"

"ஊஹூம், கொஞ்சங்கூடக் குடிக்கறதில்லே. குடிக்கறவங்களை அவருக்குப் பிடிக்காது. அக்காவோட சிநேகிதர் ஒருத்தர்— அவர் பேரு அளகேந்து— குடிக்கிறார்னு கேள்விப்பட்டதும் அப்பா, அக்கா அவரோடே பழகறதைத் தடுத்துட்டார்."

"அப்போ நீயும் என்னோட பழகமாட்டே?"

காரணமில்லாமலே உரக்கச் சிரித்தாள் யமுனா. "நீங்க குடிச்சிருப்பீங் கன்னு எனக்குத் தோணலியே அன்னிக்கு...! ஆனா அன்னிக்கு உங்க பேச்சு எனக்கு ரொம்பப் பிடிச்சிருந்தது. நீங்க ஒவ்வொரு வார்த்தையையும் மனப்பூர்வமாப் பேசினீங்க. தெருவிலே யாராவது தெரிஞ்சவங்க பார்த்தா, 'என்ன, சௌக்கியமா?'ன்னு கேக்கறாங்க. அது சும்மா, ஒப்புக்குக் கேக்கறது. நீங்க அப்படியில்லே... ஆனா நீங்க குடிச்சிருக்கீங்கன்னு புரிஞ்சுக்க முடியலே என்னாலே."

"குழந்தே, நீ எப்படி புரிஞ்சுக்க முடியும்?" நான் சிரித்துக் கொண்டே சொன்னேன்.

"மறுபடி குழந்தைங்கறீங்களா!"

"இல்லே. குழந்தை இல்லே, இனிமே 'புல்புலி'ன்னு கூப்பிடறேன்".

வாய் மூடியிருந்தாலும் பலமாக மூச்சுவிட்டு ஒருவிதச் சிரிப்பு சிரிக்கலாம். யமுனா அந்த மாதிரி சிரித்துக் கொண்டு, "சீ, புல்புலி!" என்று சொன்னாள். அவள் தன் தோளை என் தோள்மேல் சாய்த்துச் சற்று அழுத்தினாள் வேண்டுமென்றே. அந்தக் கதகதப்பான உடம்பு எனக்கு இவ்வளவு அருகில் வருவது ஆபத்து— எனக்கு மட்டும்மல்ல, அவளுக்குந்தான். என் ஆசை சட்டென்று பீறிட்டெழுந்தால் நான் அவளுடைய உடம்பில் உப்பைத் தடவி ஒரே விழுங்காக விழுங்கி ஒரு டம்ளர் தண்ணீர் குடித்துவிடுவேன். அவளுக்குத் தன் உடம்பின் தன்மை தெரியாது. அது ஒரு வெடிமருந்துக் கிடங்கு என்பது தெரியாது. அவள் தான் அறியாமலேயே வெறிபிடித்துத் தன் உடம்பு தன்னையே அழித்துவிட அனுமதித்துவிடுவாள். உடம்பின் விளையாட்டு மிகச் சுலபம், நான் அதை நிறையவே உணர்ந்திருக்கிறேன். இந்தப் பெண்ணைக் காப்பாற்ற வேண்டும்...!

நான் ஷூ நாடாவைக் கட்டும் சாக்கில் அவளிடமிருந்து சற்று நகர்ந்து கொண்டேன். அதே நிலையில், குனிந்த முகத்துடன் கேட்டேன்,

"யமுனா என்னோட உக்காந்திருக்க உனக்குப் பிடிக்குதா?"

"ஆமா... ரொம்ம்ம்பப் பிடிக்குது. தினம் இங்கே வரலாம்..."

"ஊஹூம், அது கூடாது. உங்க வீட்டிலே தெரிஞ்சாத் திட்டுவாங்க. அது இருக்கட்டும், நான் குடிக்கறேங்கறதைக் கேட்டு நீ என்னை வெறுக்கல்லியே, யமுனா...? நான் இன்னும் எத்தனையோ கெட்டகாரியம் செஞ்சிருக்கேன். அல்லது கெட்ட காரியங்களிலே வேணும்னு சேர்ந்துக்கிட்டிருக்கேன். ஆனா நான் உண்மையிலே நல்ல மனுஷன்தான், அல்லது நல்ல மனுஷனா ஆகிக்கிட்டிருக்கேன்னு தோணுது... நான் எல்லாத்தையும் உன்கிட்டே சொல்றேன். எல்லாம் கேட்டப்பறம் நான் கெட்டவன்னு உனக்குத் தோணுதா சொல்லு."

"கெட்டகாரியம் என்ன செஞ்சீங்க? யாரையாவது அடிச்சீங்களா?"

நான் யாரையாவது அடித்தேனா என்று யோசித்துப் பார்த்தேன். அடித்ததாக நினைவில்லை. எவ்வளவோ பேரை அடிக்க விரும்பியிருக்கிறேன். சிலரை அடிப்பது, கொல்வதுகூட நியாயமாயிருந்திருக்கும். ஆனால் கடைசிவரை யாரையும் அடிக்கவில்லை. எனக்குள் தர்க்கம் செய்து அடிப்பதைத் தவிர்த்திருக்கிறேன். தர்க்கம் எழுந்தால் பிறரை அடிக்க இயலாது. எந்த வாதமும் பிறரை அடிப்பதை ஆதரிக்காது. நான் ஒருவனை அடிக்கப்போனால் அவனும் என்னை அடிக்க வருவான். இது ஒரு சங்கடம். நான் என்னைக் காப்பாற்றிக் கொள்வதில் கவனமாக இருப்பவன்...

திடீரென்று எனக்கு ரவியின் நினைவு வந்தது. வந்ததும் மனத்தில் சுமை...

நான் சொன்னேன், "எனக்கு ரவின்னு ஒரு சிநேகிதன் இருந்தான். அவன் செத்துப்போயிட்டான். அவன் சாவுக்கு நான்தான் பொறுப்புன்னு நினைக்கறேன்."

யமுனா அதிர்ச்சியடைந்து, "என்ன, என்ன?" என்றாள்.

"பூராக் கதையையும் கேளு!" நான் விவரிக்கத் தொடங்கினேன்.

அந்த சாயங்கால வேளை என் மனக்கண்ணில் விரிந்தது. இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால்... எரிச்சலடைந்த என் முகம்— ரவியின் கெஞ்சல் மீண்டும் மீண்டும் அவன் என் கையைப்பிடித்துக் கொள்வது— "என்னை விட்டுட்டுப் போறியா? இரு, நான் இதுக்குப் பழி வாங்குவேன் ஒருநாள்!" என்று ரவி சொன்னான். நான் அவனைத் தள்ளிவிட்டேன்...

ரவி என் கல்லூரி நண்பன். கல்லூரிப் படிப்பு முடிவதற்கு முன்னாலேயே அவன் சீரழியத் தொடங்கிவிட்டான். சீரழிந்தவன் ரவிதான், நானல்ல. மதுக்கடையிலும் வேறு சில இடங்களிலும் நான் அவனைச் சந்திப்பதுண்டு. இருந்தாலும் நான் என்னை ரவிக்கு சமமாக எண்ணியதில்லை. அவனுடைய முகத்தில், தோற்றத்தில் திருட்டுச் சாயல் படிந்து போயிருந்தது. எங்கிருந்தோ கறுப்புப் பணம் அவன் கைக்கு வந்து சேரத் தொடங்கியது. அவன் படிப்பை விட்டான். கறுப்புக் கண்ணாடி அணியத் தொடங்கினான். அவன் பார்க்க நன்றாயிருப்பான். ஆனால் சில மாத இடைவெளிகளுக்குப் பிறகு நான் அவனைப் பார்க்கும் போதெல்லாம் அவன் தோற்றம் மோசமாகி வருவதைப் பார்த்தேன். அவனுடைய

கண்களுக்குப் பக்கத்தில் சுருக்கங்கள் தோன்றியிருந்தன. கறைபட்ட பணத்தைத் தாங்கிக் கொள்ளும் சக்தி எல்லாருக்கும் இருப்பதில்லை. அந்தப் பணத்தின் சுமை சிலரைக் கீழே அமுக்கிக் கொண்டே போகும். ரவியின் விஷயத்திலும் இதுதான் நடந்தது... சிலபேர் இருக்கிறார்கள், அவர்களுடன் நமக்குத் தொடர்புமில்லை, நட்புமில்லை, அவர்களைப் பார்த்தால் நமக்கு மகிழ்ச்சியும் வராது. இருந்தாலும் அவ்வப்போது அவர்கள் கண்ணில்படுவார்கள். இந்த மாதிரிதான் ரவியையும் சில சமயம் பார்ப்பதுண்டு. அப்போதெல்லாம் அவன் தான் ஒரு ரகசிய ஏணியை கண்டுபிடித்திருப்பதாகச் சொல்லிக் கொள்வான். அதன் மேல் ஏறி உச்சிக்குப் போய்விடுவானாம்! எதன் உச்சிக்கு என்று புரியவில்லை...

ஒரு சமயம் இப்படித்தான் மௌலாலி முனையில் அவனைச் சந்தித்தேன். அப்போது நான் மெஸ்ஸில் தங்கியிருந்தேன். அவனது முகத்தில் கலவரம் தெரிந்தது. "நீ எங்கே இருக்கே?" என்று அவன் என்னைக் கேட்டான். நான் கையால் என் மெஸ்ஸைச் சுட்டிக் காட்டினேன். அவன் சட்டென்று தன் கோட்டின் பையிலிருந்து ஒரு கவரை எடுத்து என்னிடம் நீட்டி, "இதிலே ரெண்டாயிரம் ரூவா இருக்கு. இதை உன்கிட்டே வச்சுக்க. நான் அப்பறம் வந்து வாங்கிக்கறேன்." என்று சொன்னான்.

நான் எரிச்சலுடன் சற்று நகர்ந்து கொண்டேன்—"என்னாலே ரூவா கீவாயெல்லாம் வச்சுக்க முடியாது."

ரவி பரிதாபமாகக் கெஞ்சினான், "வச்சுக்கப்பா, ப்ளீஸ்...! நான் இப்போ ஒரு இடத்துக்குப் போயிக்கிட்டிருக்கேன். அங்கே இந்தப் பணத்தை கொண்டு போனா செலவாயிடும், அல்லது அங்கே இருக்கறவங்க பிடுங்கிக்குவாங்க... ப்ளீஸ்!"

"பின்னே அங்கே போகாம இருக்கலாமே! அல்லது வீட்டிலே பணத்தைக் கொண்டு போய் வச்சுட்டு அங்கே போயேன்."

"வீட்டுக்குப் போக நேரமில்லே. நீ என் பழைய சிநேகிதன். எனக்கு இந்த உதவி செய்யக் கூடாதா?"

நான் கடுமையாகச் சொன்னேன், "நான் ஒண்ணும் உன் சிநேகிதன் இல்லே. நீ உன் காரியத்தைப் பார்த்துக்கிட்டுப்போ."

ரவி கவரை என் கையில் திணித்துவிட்டு ரஸ்தாவைக் கடந்து போய்விட்டான்.

நான் மெஸ்ஸுக்கு வந்து பிரஜேஷ்வர் பாபுவிடம் எல்லா விஷயத்தையும் சொன்னேன். "பார்த்தீங்களா, பிரஜேஷ்வர் அண்ணா! எனக்கு ரவிமேலே எவ்வளவு கோபம் வருது தெரியுமா?"

அவர் சொன்னார், "முதல்லே கவரைப் பிரிச்சு உள்ளே ரெண்டாயிரம் ரூபா இருக்கான்னு பாரு. இருந்தா அது நல்ல நோட்டுதானான்னு பாரு. நல்ல நோட்டாயிருந்தா ரெண்டுபேரும் சேர்ந்து இதைச் செலவு செஞ்சுருவோம்..."

நான் திடுக்கிட்டுக் கேட்டேன், "இவ்வளவு பணத்தையுமா?"

"பின்னே என்ன செய்யறது...? இது என்ன அவன் கஷ்டப்பட்டு சம்பாதிச்ச பணமா? அப்படியிருந்தா அவன் இதைத் தன்கிட்டே வச்சுக்கப் பயப்படமாட்டான்."

"நானுந்தான் இந்தப் பணத்தை சம்பாதிக்கலே. இதைத் தொடக் கூடப் பிடிக்கலே எனக்கு. உங்களுக்கு இஷ்டமாயிருந்தா நீங்களே செலவு பண்ணிக்கங்க" என்று சொல்லி அவரிடம் கவரை எறிந்தேன்.

அவர் திடுக்கிட்டுச் சொன்னார், "வேண்டாம், வேண்டாம், எனக்கு வேண்டாம்ப்பா! நீ செலவு செய்யறதாயிருந்தா நானும் அதிலே பங்கு எடுத்துக்கத் தயார்."

நான் அந்தப் பணத்தைச் செலவு செய்யவில்லை. ரவி இரண்டு நாட்களுக்குப் பிறகு வந்தான். எனக்கு முன்னாலேயே பணத்தை எண்ணிப் பார்த்துவிட்டு ஆச்சரியத்தோடு என்னையே பார்த்துக் கொண்டு இருந்தான். நான் அந்தப் பணத்திலிருந்து ஐம்பது, நூறு ரூபாயாவது எடுத்துச் செலவு செய்திருப்பேன் என்று அவன் நினைத்திருந்தான். அப்படிச் செய்யாததால் நான் ஒரு மகாத்மா என்று தோன்றிவிட்டது அவனுக்கு. அவன் பேச்சைக் கேட்டு எனக்கு உடம்பெல்லாம் எரிச்சல். நான் அவனிடம் கடுமையாகச் சொன்னேன், "ரவி, இனிமே நீ ஒரு போதும் என்கிட்டே வராதே! மறுபடி இந்த மாதிரி என் கிட்டே நடந்துக்கிட்டா நல்லா மாட்டிக்குவே!"

ரவி சற்றும் பதட்டப்படவில்லை. "இந்தா, இந்தப் பேனாவை வச்சுக்க. அசல் ஜெர்மன் பேனா..." என்று ஒரு பேனாவை நீட்டினான்.

"எனக்குப் பேனா வேண்டாம். என்கிட்டே பேனா இருக்கு" என்று சொன்னேன்.

"வச்சுக்கயேன். என் பிரெசென்ட்டாயிருக்கட்டும்."

நான் பேனாவை வாங்கிக் கொண்டு சொன்னேன், "இதோ பார், பேனா வேண்டாம் எனக்கு. நீ இதைத்திருப்பி எடுத்துக்கிட்டுப் போ. இல்லாட்டி நான் அதை ஜன்னல் வழியே வெளியே எறிஞ்சுடுவேன்."

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு ரவி என்னைப் பார்த்தால் என்னிடம் ஆவலுடன் பேசு வருவான். நண்பர்கள் பக்கத்தில் இருந்தால் அவர்களை எனக்கு அறிமுகம் செய்து வைப்பான், ஒட்டலில் சாப்பிடவோ மது அருந்தவோ அழைப்பான். நான் அவனுக்கு இடங்கொடுப்பதில்லை. அவனைப் பார்க்கவே பிடிக்காது எனக்கு.

ஒருநாள் ஒரு பார்க்தெரு ஒட்டலில் ரவியைச் சந்தித்தேன். அப்போது அவன் நல்ல போதையில் இருந்தான். அன்று நான் நல்ல மூடில் இல்லை. அன்று வெகு நேரம் மனீஷாவின் வீட்டுக்கு முன்னால் ரஸ்தாவில் காத் திருந்தும் அவளுடைய தரிசனம் கிடைக்கவில்லை எனக்கு. அவளைப் புரிந்து கொள்ள முடியாமையால் மேலும் மேலும் துன்புற்று வந்தேன் நான். நான் பார்க் தெருவுக்குச் சென்றது என் நண்பர்களைத் தேடி. ஆனால் பார்த்தது ரவியைத்தான்.

அவனைப் பார்த்ததும் நான் அங்கிருந்து நழுவ முயற்சித்தேன். ஆனால் ரவி என்னைக் கட்டிப்பிடித்துக் கொண்டு, "இன்னிக்கு நீ எங்களோட சாப்பிடத்தான் வேணும்! என் சிநேகிதங்க மூணுபேர் வந்திருக்காங்க-கப்பல் கிளியரிங் ஏஜண்டுகள்—பெரிய ஆளுங்க. உனக்கு அறிமுகப்படுத்தி வைக்கறேன்" என்றான். நான் "இல்லே இல்லே, எனக்குப் போகணும்" என்று சொல்லி என்னை விடுவித்துக் கொள்ள முயன்றேன். அவன் என்னை விடவில்லை. "சும்மா வா! அவங்க ரொம்ப

நல்லவங்க– உனக்கு ஃபாரின் டிரான்சிஸ்டர் அல்லது சாமான் வேணும்னா இவங்க கிட்டேயிருந்து கிடைக்கும்–" என்று சொல்லிப் பிடித்து இழுத்தான்.

நான் அவனிடம் இதமாகச் சொன்னேன், "நீ இன்னும் குடிக்க வேண்டாம். ஏற்கனவே ரொம்பப் போதை ஆயிடுச்சு. வீட்டுக்குப் போ...!"

அவன் கண்களை உருட்டிக் கொண்டு சொன்னான். "இன்னிக்கு நீ கிடைச்சிருக்கே. உனக்கு ஒரு பெரிய பார்ட்டி கொடுக்கப்போறேன்... உனக்கு என்ன வேணும், எவ்வளவு வேணும்னு கேளு. கூச்சமில்லாமக் கேளு–"

நான் பொறுமையாக, "வீட்டுக்குப்போ" என்று சொன்னேன்.

அவன் என் கைகளைப் பிடித்துக் கொண்டு, "நீ என்னை வீட்டிலே கொண்டுபோய் விடறியா? என்கிட்டே நிறையப் பணம் இருக்கு. தனியா வீட்டுக்குப் போகப் பயமாயிருக்கு... எனக்கு இந்த ஆளுங்க மேலே நம்பிக்கையில்லே. நல்ல வேளையா நீ வந்திருக்கே... உன் காலிலே விழறேன்."

ரவியின் வேண்டுகோளை மறுக்க முடியாமல் நான் அவர்களோடு போய் உட்கார்ந்தேன். அந்த மூவரும் நடுவயதுக்காரர்கள், விலையுயர்ந்த உடையணிந்திருந்தார்கள். ஆனால் அவர்களைப் பார்த்தால் கொடூர மானவர்கள் என்று தோன்றியது. அவர்கள் மௌனமாயிருக்கும்போது அவர்களுடைய தாடை இறுகியிருந்தது. இந்த மாதிரி நிறையப் பேர்களை நான் பார்த்திருக்கிறேன். அவர்களை எனக்குப் பிடிக்காது. நான் ஒரு கிளாஸ் மது அருந்திவிட்டு அங்கிருந்து நழுவ முயற்சி செய்தேன். ஏனென்றால் அவர்களுடைய பேச்சுவார்த்தையே ஒரு மாதிரியாக இருந்தது. அவர்கள் கப்பலைப் பற்றிப் பேசினால் அவர்களது மனக் கண்ணில் தோன்றுவது முழுக் கப்பல் அல்ல, கப்பலின் ஒரு குறிப்பிட்ட பகுதிதான்.

ரவி என் கையைப் பிடித்து உட்கார வைத்தான். "நீ போகாதே...! இன்னிக்கு நாம மஜா பண்ணலாம். என்னை வீட்டுக்கு நீதான் கூட்டிக்கிட்டுப் போகணும்." அவன் பையிலிருந்து ஒரு கத்தை கரென்சி நோட்டை வெளியே எடுத்து மதுவகைகள் ஆர்டர் செய்தான். என் மனநிலை மோசமாயிருந்தது அப்போது. மனீஷாவின் நினைவு துன்புறச் செய்தது. அவமானப்படுத்தப்பட்ட உணர்வு ஏற்பட்டது. அங்கே உட்காரப் பிடிக்க வில்லை எனக்கு. நான் பாத்ரூமுக்குப் போகும் சாக்கில் அங்கிருந்து நழுவப் பார்த்தேன். ஆனால் ரவி கழுகுப்பார்வையோடு என்னைக் கவனித்துக் கொண்டிருந்தான், வாசல் கதவுக்கருகில் என்னைப் பிடித்துக் கொண்டான். அவன் நிற்க முடியாமல் தடுமாறிக் கொண்டிருந்தான். ஓட்டலில் இருந்த மற்றவர்கள் அவனைப் பார்த்துச் சிரித்தார்கள். அவனுடைய கண்கள் இரத்தமாகச் சிவந்திருந்தன. நெற்றி நரம்புகள் புடைத்திருந்தன, வாய் பைத்தியம்போல் என்னவோ முணுமுணுத்துக் கொண்டிருந்தது. அவனுக்கு அங்கே இருக்கவும் பயம், அங்கிருந்து போகவும் மனமில்லை. அவன் சொன்னான், "நீ என்னை இவங்ககிட்டே விட்டுட்டுப் போயிடாதே! இவங்க ரொம்ப ஆபத்தானவங்க... நாம ரெண்டு பேரும் ஒண்ணா வீட்டுக்குப் போவோம்... நீ ஒண்ணுமே சாப்பிடலியே! வா, நல்லா சாப்பிடலாம், குடிக்கலாம், கடைசிலே என்னை

வீட்டிலே கொண்டு போய்விட்டுடு."

நான் வறண்ட குரலில் சொன்னேன், "வரதுன்னா இப்பவே வா. உன்னை டாக்சியிலே கொண்டு போய் விட்டுடறேன்."

ரவிக்கு வர இஷ்டமில்லை. என்னையும் அவனுடன் நிறுத்தி வைத்துக் கொள்ள முயன்றான். அந்த ஆட்கள் ஆபத்தானவர்களென்று தெரிந்தும் அவர்களுடனிருக்க ஏன் விரும்புகிறான் என்று எனக்குப் புரியவில்லை.

"நீ உன் இஷ்டப்படி செஞ்சுக்க. நான் புறப்படறேன்" என்று சொன்னேன்.

ரவி என்னை இறுகப் பிடித்துக் கொண்டான்.

நான் பொறுமையிழந்து அவனைத் தள்ளினேன். அவன் தடுமாறிக் கீழே விழப்போனவன் சுவரைப்பிடித்துக் கொண்டு குழம்பும் கண்களுடன் என்னைப் பார்த்துக் கத்தினான், "என்னைத் தள்ளி விடறியா? என்னை விட்டுட்டுப் போறியா? இருக்கட்டும், இதுக்கு உன்னைப் பழிவாங்கப் போறேன் ஒரு நாள்...!

"யமுனா, ரெண்டு மூணு நாளுக்குப் பிறகு நான் மறுபடி அந்த ஓட்டலுக்குப்போனபோது ரவியோட மூணு சிநேகிதங்களும் அங்கே உக்காந்திருந்தாங்க. அவங்களிலே ஒருத்தன், 'உங்க சிநேகிதன் ரவியோட சேதி தெரியுமா?'ன்னு கேட்டான். நான் 'என்ன சேதி?' ன்னு கேட்டேன். அவன் சொன்னான், 'ரவி செத்துப்போயிட்டான்'. முதல்லே எனக்கு ஒண்ணும் புரியல்லே. அப்புறம் விவரம் தெரிஞ்சுக்கிட்டேன். அன்னிக்கு ரவி அளவுக்கு மிஞ்சிக் குடிச்சிருக்கான். அவனோட நண்பர்கள் அவனை வீட்டுக்குக் கூட்டிப் போறதாச் சொல்லியிருக்காங்க. அவன் அவங்களை நம்பாம வெளியிலே ஓடி ரஸ்தாவைக் கடக்கறபோது ஒரு கார் அவன் மேல மோதி உடம்பு கூழா நசுங்கிப் போச்சு... உண்மையைச் சொல்றேன், இதைக் கேட்டதும் முதல்லே எனக்கு 'நல்லதாப்பேச்சு. உலகத்திலே ஒரு பாவி குறைஞ்சான்'னுதான் தோணிச்சு. அப்போ அவனோட நண்பர்களைப் பார்த்தா அவங்க ஒண்ணும் அப்படிக் கொடூரமாத் தெரியல்லே. அவங்க தலையைக் குனிஞ்சுக்கிட்டு உக்காந்திருந்தாங்க. அவங்க பக்கத்திலே ஒரு நாற்காலி காலியா இருந்தது. ரவியோட ஆவி அதுலே உக்காந்திருக்கிற மாதிரி தோணிச்சு எனக்கு. ஆனா அப்பவும் வருத்தம் ஏற்படலே எனக்கு. நான் இன்னொரு மேஜையிலே என் சிநேகிதங்களோடே உக்காந்து பேசிக்கிட்டிருந்தேன். அப்புறம் பாத்ரூமுக்குப் போனேன். பாத்ரூம் சுவரிலே பெரிய எழுத்திலே பென்சிலாலே எழுதியிருந்தது 'ரவி இல்லை' என்று. அவனோட சிநேகிதங்க யாரோதான் எழுதியிருக்கணும். அந்த எழுத்துக்களைப் படிச்சதும் என் நெஞ்சிலே ஒரு அதிர்ச்சி. நான் என்னை சமாளிச்சுக்கலேன்னா தலை சுத்தி அங்கேயே விழுந்திருப்பேன். அவனோட சாவுக்கு நான்தான் காரணம்னு தோணிச்சு எனக்கு. நான் மட்டும் அவனை வீட்டிலே கொண்டு போய் விட்டிருந்தா அவன் செத்துப் போயிருக்க மாட்டான். அவன் அப்பறம் ஒருநாள் இதே மாதிரியே செத்திருக்கலாம். ஆனா அன்னிக்கு செத்துப் போயிருக்க மாட்டான். நான் விரும்பியிருந்தா அவனை இன்னும் கொஞ்ச நாள் வாழவச்சிருக்க முடியும். ரவி ஞாபகம்

வந்தாலே ரொம்பத் தவிக்குது மனசு. நான் இதை இதுவரை யார்கிட்டேயும் சொல்லலே. இதுக்காக நான் ஒருநாள் தண்டனை அனுபவிக்கணும்னு எனக்குத் தோணுது. நான் செஞ்சது குத்தந்தான். ஆனா தெரியாம செஞ்ச குத்தம். அன்னிக்கு அவனுக்குத்தான் சாகப்போறோம்னு தோணியிருக்கலாம். அதனால்தான் அவன் என் துணையை நாடியிருக்கான். அவனை உதறித் தள்ளினேனேன்னு நினைச்சா என் மனசுக்குக் கஷ்டமாயிருக்கு...

யமுனா தன் கைகளால் என் தோள்களைப் பற்றிக் கொண்டு சொன்னாள், "நீங்க ஏன் இப்படி வருத்தப்படறீங்க? போதும் போதும், மேலே சொல்ல வேண்டாம்!"

"நீயே சொல்லு, இது என் குத்தமா?" நான் கேட்டேன். "குத்தம் மனீஷாவோடதுதான். அவளைப் பத்தியே நினைச்சுக்கிட்டிருந்ததாலதானே நான் மத்தவங்களைப் பத்தி நினைக்கல்லே?"

யமுனா பதில் சொல்லவில்லை.

நான் விடவில்லை—"சொல்லு, யாரோட குத்தம்?"

யமுனா நடுங்கும் குரலில் சொன்னாள், "எனக்கு எப்படித் தெரியும்-? எனக்குத் தெரியல்லே..."

அவளுடைய குரலைக் கேட்டு எனக்கு என்னவோ மாதிரி இருந்தது நான் இருட்டில் ஒரு விரலால் அவளுடைய மோவாயைத் தொட்டேன். வாழைக்குருத்து போல் மிருதுவான, புனிதமான முகம் யமுனாவின் முகம். அதில் பனித்துளிகள் போல் கண்ணீர்!

நான் திடுக்கிட்டு, "நீ அழறியா?" என்று கேட்டேன்.

"இல்லையே! நீங்க சொன்னதைக்கேட்டு அந்த ஆளுக்காக என் மனசு கஷ்டப்பட்டது..."

"ஊஹூம், அழாதே...! வா, உன் மூஞ்சியைத் துடைச்சு விடறேன்... இல்லை, நீயே துடைச்சக்க நல்லா..."

ரவிக்காக நான் ஒரு போதும் அழவில்லை. நான் அழவே மறந்து விட்டேன் என்று சொல்லலாம். ரவிக்காக யமுனா அழுவதைப் பார்த்து என் நெஞ்சு லேசாகிவிட்டது. ரவியின் மரணம் முற்றிலும் அலட்சியப் படுத்தப்படவில்லை. இந்த அழுகை மூலம் அவன் இன்னும் ஒரு நாள் வாழ்ந்துவிட்டான். ரவிக்காக என் அனுதாபம் மறைந்து யமுனாவுக்காக மனது கஷ்டப்பட்டது. இந்தச் சிறுமியை ஏன் நான் அழவைத்தேன்! இல்லை, பார்க்கப்போனால் அழுகையில் துன்பமில்லை, இன்பந்தான் உண்டு.

யமுனா முகத்தைத் துடைத்துக் கொண்டு சொன்னாள், "சுநீல் அண்ணா, இனிமே நீங்க அங்கே போகாதீங்க!"

"எங்கே?"

"அந்த ஒட்டலுக்கு."

"போகல்லே, இனி போகவே மாட்டேன்... சரி, எழுந்திரு. உனக்கு வீடு திரும்பற நேரமாச்சு."

எழுந்திருந்து சில அடிகள் சென்ற பிறகு யமுனா கேட்டாள். "மனீஷா யாரு?"

"அவ ஒரு பொண்ணு. பெரிய மோசக்காரி. அப்பறம் ஒரு நாள் உனக்கு அவளைப்பத்திச் சொல்றேன்..."

நாங்கள் பேசிக் கொண்டிருக்கும்போதே பெரிதாக மழை வந்து விட்டது. நாங்கள் அப்போது வெட்ட வெளியில், "நீ ஓடுவியா? வா, ஓடலாம்" என்று சொல்லி அவளுடன் ஓடத் தொடங்கினேன். அவள் மான் மாதிரி விரைந்தோடினாள். அவளுடைய பாட்டுநோட்டு கையிலிருந்து விழுந்துவிட்டது. நான் அதை எடுத்துக் கொண்டேன். இருவரும் கையைப் பிடித்துக் கொண்டு ஓடிப்போய் ஒரு மரத்தடியில் நின்றோம். நாங்கள் அதிகம் நனையவில்லை. நான் கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக் கொண்டு, "இன்னிக்கு உன்னை வீட்டிலே திட்டப்போறாங்க" என்று சொன்னேன். ஆனால் மிகவும் குஷியாக இருந்தாள் யமுனா. அவளது பழைய சோகத் தோற்றம் மறைந்துவிட்டது. சிரித்துக் கொண்டே என்னோடு உரசியவாறு நின்றாள்—தன்னையறியாமல்தான். நான் நாசூக்காக அவளிட மிருந்து நகர்ந்து கொண்டேன். மழை வந்த மாதிரியே திடீரென்று நின்று விட்டது.

மரத்தடியிலிருந்து நாங்கள் நடக்கத் தொடங்கியபோது குழாய்ப் பேண்ட் அணிந்திருந்த சில வாலிபர்கள் எங்களைப் பார்த்து அசிங்கமாக ஏதோ சொன்னார்கள். நான் ஓரக்கண்ணால் பார்த்தேன். அவர்கள் ஐந்து பேர். நான் அவர்கள் பேச்சைக் கேட்காதவன் போல் முன்னே சென்றேன். "என்ன அசிங்கமாப் பேசறாங்க!" என்றாள் யமுனா. நான் திடுக்கிட்டு நின்று அவளைக் கேட்டேன், "அவங்க பேசின பேச்சுக்கெல்லாம் உனக்கு அர்த்தம் புரியுதா?" யமுனா பதில் சொல்லவில்லை. ஆனால் அவள் முகத்தைப் பார்த்தே அவளுக்கு எல்லாம் புரிந்திருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டேன். உடனே எனக்கு அந்த இளைஞர்கள்மேல் கடுமை யான கோபம் வந்துவிட்டது, அவர்களுடைய தலைகளை அறுத்துப் பந்து விளையாடலாம் போலிருந்தது. நான் அவர்களைத் தாக்கத் திரும்பினேன். அதற்குள் அவர்கள் வேறு ஏதோ பேசிக் கொண்டு எதிர்த் திசையில் நடக்கத் தொடங்கிவிட்டார்கள். அவர்களுடைய அசிங்கப் பேச்சை அவர்கள் இதற்குள் மறந்திருக்கலாம். தன் மறதி அவர்களுக்கு அதிகம். எங்கே என்ன நடக்கிறது என்ற நினைப்பே இல்லை. பைத்தியம் போல் தன்னிச்சையாக நடந்து கொள்கிறார்கள். ஆனால் அவர்கள் நிறையப் பேர். ஓரளவு துணி வின்மையாலும், ஓரளவு நாடக பாணியில் ஏதாவது செய்ய விரும்பாத தாலும் நான் அவர்களோடு தகராறு செய்யவில்லை.

மறுபடியும் மிக இயல்பாக அவளுடன் நடந்து போகும்போது அவளிடம் ஒரு விஷயம் தெரிந்து கொள்ள ஆர்வமேற்பட்டது எனக்கு. நான் கிசுகிசுத்தேன், "யமுனா, உனக்கு யாராவது எப்பவாவது முத்தங் கொடுத்திருக்காங்களா?"

"சீ!"

"சொல்லேன்! என்ன வெக்கம்?"

"சீ! நீங்க ரொம்ப மோசம்!"

நான் அவளருகில் போய், "சும்மாத்தான் கேக்கறேன், சொன்னா ஒரு தப்புமில்லே,"

அவளுடைய முகம் சிவந்தது. கொஞ்சும் குரலில், "இல்...லே" என்று சொன்னாள்.

"சும்மா சொல்லு! ஏன் வெக்கப்படறே?"

"இல்லே... ஆமா..."

"யாரு?"

"தபன் அண்ணா..."

"அவன் வேறே எதுவும்?"

"வேற என்ன,"

"இல்லே, ஒண்ணுமில்லே. இதிலே ஒண்ணும் குத்தமில்லே... நீ ரொம்ப நல்ல பொண்ணு?"

"நீங்க நினைக்கற மாதிரி நான் ஒண்ணும் அவ்வளவு நல்ல பொண்ணு இல்லே" யமுனா சிரித்துக் கொண்டே சொன்னாள்.

நான் அவளுடைய தோளை லேசாகத் தொட்டுச் சொன்னேன், "புல்புலி, நானும் உன்னை அந்த மாதிரி நல்ல பொண்ணா நினைக்கலே... நீ வேற மாதிரி நல்ல பொண்ணு!"



இசையில் எனக்கு ஒன்றும் பெரிய ஈடுபாடு இல்லை. யமுனா ரவீந்திர சங்கீதம் கற்றுக் கொள்ளாவிட்டால் உலகத்துக்குப் பெரிய நஷ்டம் எற்பட்டுவிடும் என்று நான் நினைக்கவில்லை. நான் யமுனா பாட்டு வகுப்புக்குச் செல்லும் வழியில் அவளைச் சந்தித்து அவளுடன் சுற்றத் தொடங்கிவிட்டேன். பகலில் கூட ஒரு நாள் அவளைக் கல்லூரியிலிருந்து கூட்டிக் கொண்டு பாரக்பூருக்கும் போய்ச் சுற்றிவிட்டு வந்தேன். சற்றும் பயம் கிடையாது யமுனாவுக்கு. வீட்டாருக்குத் தெரியாமல் சுற்றியலைவதில் ஓர் அலாதி மகிழ்ச்சி கொண்டாள் அவள். அவளுடைய கலகலப்பான நடத்தையும் கவிதையின் சந்தம் போன்ற பேச்சும் என்னைக் கிறங்கச் செய்தன. அவள் எதைப் பற்றியும் கேட்கப் பயப்படவில்லை, எதைப் பற்றியும் முன்னதாகவே விருப்பு அல்லது வெறுப்புக் கொள்ள வில்லை, இடையிடையே வியப்பு நிரம்பிய கண்களால் பார்த்து, "அப்படியா?" என்று கேட்டாள்.

நான் அவளுக்கு ஒருநாள் நூர்ஜஹான் பேகத்தைப் பற்றிச் சொன்னேன். நூர்ஜஹானின் நடத்தையைப் புரிந்து கொள்ள முடியவில்லை அவளால். "அவ ஏன் பிள்ளையைவிட்டுட்டு ஓடிப்போனா?" என்று கேட்டாள். "அதுதானே பிரச்னை!" என்றேன் நான். அவள் கேட்டாள், "ஒரு தடவை கலியாணம் பண்ணிக்கிட்டு அப்பறம் இன்னொரு கலியாணம் பண்ணிக்கலாமா...?" ஆமா ஆமா, கிருஸ்தவங்க பண்ணிக்குவாங்கன்னு கேள்விப்பட்டிருக்கேன்."

"இந்தக் காலத்திலே எல்லாரும் பண்ணிக்கறாங்க" நான் சொன்னேன்.

"கலியாணம் பண்ணிக்கிட்டாத்தான் குழந்தை பிறக்குமே! அவ மறு கலியாணம் பண்ணிக்கிட்டும் ஏன் பிறக்கலே,"

இதைப்பற்றியெல்லாம் யமுனா இப்போதே தெரிந்து கொள்ள வேண்டுமா என்று சற்று யோசித்தேன். வேண்டாம் என்று முடிவு செய்து விட்டுச் சொன்னேன், "என்னவோ, அவளுக்குப் பிறக்கலே."

"அவளுக்கு மறுபடி குழந்தை குட்டி பிறந்திருந்தா இந்தப்

பையனுக்காகத் திரும்பி வந்திருப்பாளா."

கடினமான கேள்வி! நான் "தெரியாது" என்று சொன்னேன்.

யமுனாவின் தொடர்பு பெற்ற பின் என் மனம் நாளுக்கு நாள் லேசாகிக் கொண்டு வந்தது. நீண்ட காலத்துக்குப் பிறகு நான் மிகவும் இயல்பாக மகிழ்ச்சியை அனுபவிக்கத் தொடங்கினேன். என் பேச்சில் யமுனா வியப் படைவதைப் பார்த்து எனக்குத் தோன்றியது, எனக்கும் வியப்பளிக்கக் கூடிய விஷயங்கள் உலகத்தில் இருக்கின்றன என்று. நான் மாடிப்படிகளில் இறங்கும்போது ஒருபடி விட்டுத் தாவிக் கொண்டு இறங்கினேன். டிராமிலும் பஸ்ஸிலும் கூட்டமாயிருந்தால் எரிச்சல்படவில்லை. நாட்டின் உணவுப் பிரச்சினை தீர்ந்துவிடும் என்றுகூட நம்பத் தொடங்கிவிட்டேன். மழை பெய்தால், "ஆகா, இன்றைக்கு எவ்வளவு நல்ல நாள்!" என்று மகிழத் தோன்றியது. படை பதைக்கும் வெயிலிலும் அதே மகிழ்ச்சி ஏற்பட்டது.

இதுவரை நான் யமுனாவின் கையை மட்டுமே தொட்டிருந்தேன். உடலின் வேறு எந்தப் பகுதியையும் தொடவில்லை. லோக்கல் ரயிலின் முதல் வகுப்புப் பெட்டியில் அவளுடன் பாரக்பூர் பிரயாணத்தில் பெட்டி காலியா யிருந்தும் அவளை முத்தமிடவில்லை. மாஜிக் கலைஞன் செய்வது போல் அவளுடைய மார்பகத்துக்கு மேல் கையை ஆட்டினேன். ஆனால் தொடவில்லை. அவளுடைய சிநேகிதன் தபன் அவளுக்கு முத்தம் கொடுக்கட்டும், நீந்தக் கற்றுக் கொடுப்பதாகச் சொல்லி நீச்சல் குளத்துக்குக் கூட்டிப் போய் இளம் பீட் கிழங்கு போன்ற அவளது மார்பகத்தைத் தொட்டுப் பார்க்கட்டும். இதெல்லாம் தேவையில்லை எனக்கு. சில சமயம் யமுனா தானறியாமலே, இயற்கையுணர்ச்சி களால் உந்தப் பெற்று என்னை நெருங்கியிருக்கிறாள். நான் அவளிடமிருந்து விலகிக் கொண்டிருக்கிறேன். ஆணின் உடம்பில் உணர்ச்சி வெறி இருக்கிறது, ஆனால் தன்னையே அழித்துக் கொள்ளும் வேகம் இல்லை. பெண்ணின் உடம்பு மிகவும் ஆபத்தானது. இந்த சந்தர்ப்பத்தில் பொருந்தா விட்டாலும் ராமகிருஷ்ணரின் கூற்று ஒன்று ஞாபகத்துக்கு வருகிறது. அவர் ஒரு சமயம் விவேகானந்தரைப் பற்றிச் சொன்னார், "அவன் யாருன்னு அவனுக்கே தெரியாது. தெரிஞ்சுடுத்துன்னா அதுக்கப்பறம் மனிதர்களோட இருக்க மாட்டான்." அதே மாதிரி எனக்குத் தோன்றுகிறது. பெண்களுக்கு முதலில் தங்கள் உடம்பு பற்றிய உணர்வு இருப்பதில்லை. அந்த உணர்வு வந்ததுமே அவர்கள் தங்கள் தெய்வத் தன்மையைத் துறந்து வெறும் பெண்களாகி விடுகிறார்கள்... நிறையப் பெண்களைப் பார்த்துவிட்டேன். இப்போது சிறிது காலம் தெய்வத்துடன் பழகலாமே— எவ்வளவு நாள் முடியுமோ அவ்வளவு நாள்!

ஆனால் வாழ்க்கை என்பது ஒரு சிக்கலான சமாசாரம். நான் எந்த வகையில் எந்த அளவில் எதை வேண்டுகிறேனோ அது என் எதிர்பார்ப்புப்படி கிடைக்கும் என்ற நிச்சயமில்லை. நான் வேறு எங்கோ வேறு சிலரின் உரிமைகளை மறுத்திருக்கலாம். நான் செய்த காரியங்கள் நல்லவையா கெட்டவையா என்று ஆராயப்படலாம். ஆனால் நான் ஒரு போதும் செய்யாத காரியங்கள்?

நாங்கள் ஒரு நாள் புல்லில் காலைப் பரப்பிக் கொண்டு உட்கார்ந்திருந்த போது யமுனா சொன்னாள், "சுநீல் அண்ணா, நீங்க என்னைக் காதலிக்கறதாச் சொன்னது பொய்!"

நான் திடுக்கிட்டுக் கேட்டேன், "ஏன் அப்படிச் சொல்றே?"

"நீங்க எனக்கு ஒரு லெட்டர் கூட எழுதல்லியே!"

"எதுக்கு லெட்டர் எழுதணும்? நான்தான் உன்னை ஒரு நாள்விட்டு ஒரு நாள் சந்திக்கிறேனே!"

"ஆனா, தபன் எனக்கு லெட்டர் எழுதியிருக்கானே! இதோ பாருங்க. ரெண்டு ஸ்பெல்லிங் மிஸ்டேக் இருக்கு. ரெண்டு மூணு இங்கிலீஷ் வார்த்தை உபயோகிச்சிருக்கான், இருந்தாலும் லெட்டர் நல்லாத்தான் எழுதியிருக்கான்"

கடிதம் உணர்ச்சி நிரம்பியிருந்தது. நான் அதைப் படித்துவிட்டு மலர்ந்த முகத்துடன் அவளிடம் திருப்பிக் கொடுத்தேன்.

யமுனாவின் புருவங்கள் கவலையில் சுருங்கின— "நான் என்ன பண்ணுவேன், சொல்லுங்க!"

அந்தப் பிஞ்சு முகத்தில் கவலையைக் கண்டு எனக்குச் சிரிப்பு வந்தது. நான் விரலால் அவளது புருவங்களை நீவிக் கொண்டே, "புல்புலி, இப்போ நீ எதுக்கும் கவலைப்பட வேண்டாம். உனக்கு நிறைய அன்பு தேவை. நான் ஒருத்தன் மட்டும் உனக்கு எவ்வளவு அன்பு தர முடியும்? இன்னும் நிறையப் பேர் உன்னைக் காதலிக்கட்டும். ஆனா எனக்கு நீ மட்டுந்தான் வேணும். நான் ஏற்கெனவே ரொம்ப இழந்துட்டேன்..."

யமுனா என் பேச்சுப் புரியாமல் சிரித்தாள். பிறகு தலையைக் குனிந்து கொண்டு, "நீங்களும் முன்னாலே ரொம்பப் பேரைக் காதலிச்சிருக்கீங்க, இல்லையா?"

"இல்லே, யாரையும் காதலிக்க முடியலே என்னால. யார்கிட்டேயும் என்னைப் பத்திச் சொல்லவே முடியலே— நான்தான் உனக்குச் சொல்றேனே, நீ காதலைப்பத்திக் கவலைப்பட்டுக்கிட்டு இருக்காதேன்னு...! இவ்வளவு சின்னப் பொண்ணு காதலைப் பத்திப் பேசினா அதிகப் பிரசங்கித்தனமாத் தெரியுது."

"மறுபடியும் என்னை 'சின்னப் பொண்ணு'ன்னு சொல்லாதீங்க, ஆமா!"

"அப்பா, பெரியவளாக எவ்வளவு ஆசை! ஆனா, நிசமாவே பெரியவளா யிட்டா, சின்னப் பொண்ணு மாதிரி காட்டிக்க அலங்காரம் பண்ணிக்குவே! உன் அக்கா மாதிரி!"

யமுனா கள்ளமில்லாமல் சிரித்துவிட்டுச் சொன்னாள், "ஆமா, அக்கா ரொம்ப மோசந்தான். அவளை வீட்டுக்கு வெளியிலே போக விடறதில்லே. அதுக்காக நாள் பூரா டெலிபோன்லே பேசிக்கிட்டு இருக்கா! என்ன மோசமான பேச்சு!"

"யாருக்கு டெலிபோன் பண்றா?"

"அவளோட சிநேகிதங்களுக்குத்தான்...! எனக்குப் பிடிக்கவே யில்லை...! அப்பறம் அப்பாகிட்டே என்னைப்பத்திக் கோள் சொல்றா..."

"என்ன சொல்றா?"

"தெரியாது... சுநீல் அண்ணா, நான் நிச்சயம் அக்கா மாதிரி ஆகமாட்டேன்!"

நான் கண்களாலேயே அவளை வருடிக் கொடுத்துச் சொன்னேன், "நீ இப்ப இருக்கற மாதிரியே எப்பவும் இரு"



நான் இவ்வளவு நாட்களாக என் நண்பர்களை மிகவும் தந்திரமாகத் தவிர்த்து வந்தேன். ஒவ்வொரு நாளும் காலையில் எழுந்ததும் அன்று சுவிமல், அவிநாஷ் ஆகியோரிடமிருந்து தப்புவதற்குப் புதிய புதிய திட்டங்கள் வகுப்பேன். நூர்ஜஹான் விவகாரத்தில் சேகர் எவ்வளவு தூரம் மாட்டிக் கொண்டிருக்கிறான் என்று தெரிந்து கொள்ளச் சிறிதும் ஆர்வமில்லை எனக்கு.

ஒருநாள் பரிதோஷைப் பார்த்தேன். தெருவில் ஓர் ஊர்வலம் போய்க் கொண்டிருந்தது. ஊர்வலத்திலிருந்த பரிதோஷ் என்னைப் பார்த்துவிட்டு என்னிடம் வந்தான். அவன் முகத்தில் வழக்கமான—எகனாமிக்ஸ் மாணவனுக் குரிய— அகம்பாவம். ஏதோ அவன் உயிரோடிருப்பது உலகத்துக்கும் இந்தியா வுக்கும் மிகவும் தேவை, எங்கள் போன்றவர்கள் இருப்பதும் இல்லாததும் ஒன்றுதான் என்ற பாவனை.

அவன் விரலால் தன் மூக்குக் கண்ணாடியைச் சரி செய்து கொண்டு, முன் போலவே ரோஷக் குரலில் சொன்னான், "சுநீல் அண்ணா, எங்க அண்ணனை ஒரு முகமூடி வாங்கிப் போட்டுக்கச் சொல்லுங்க!"

நான் வறண்ட சிரிப்பு ஒன்றை உதிர்த்துவிட்டு, "ஏன், சேகர் மறுபடி என்ன பண்ணிட்டான்?"

"அஸ்ஸாமிலே ஒரு வாரத்துக்குப் பயணம் போறதா வீட்டிலே சொன்னான். ஆனா நேத்திக்கு கணேஷ் அவின்யூ பக்கத்திலே ஒரு டாக்சியிலே ஏர்றதை நான் என் கண்ணாலே பார்த்தேன். அவன்கூட வேசி மாதிரி ஒருத்தி!"

நான் அவனை அதட்டினேன், "உன் அண்ணன் செய்யற காரியத்தையெல்லாம் என்கிட்டே ஏன் சொல்ல வர்றே? அவனுக்கு நானா பொறுப்பு?"

"அதுக்கில்லே, நீங்க அம்மா கிட்டே ஏதோ வாக்குக் கொடுத்துட்டு வந்தீங்களாம், கேள்விப்பட்டேன்..."

"நான் வாக்குக் கொடுத்தது என் விஷயம். நீ இதிலே தலையிட வேண்டிய தில்லே."

பரிதோஷ் வேறெதுவும் சொல்லாமல் அழுத்தமாகக் கால் வைத்து நடந்து போய் ஊர்வலத்தில் கலந்து கொண்டு கோஷம் போடத் தொடங்கினான்.

பரிதோஷின் பேச்சால் நேர்ந்த எரிச்சலை மறந்துவிட்டு யமுனாவைச் சந்திக்க ஓடினேன் நான். எரிச்சல், தொந்தரவு, சங்கடம், வேதனை— என்ன அவஸ்தை! நான் வாழவேண்டாமா?

பாட்டு வகுப்புக்கு முன்னாலிருந்து யமுனாவைக் கூட்டிக் கொண்டு

ஒரு டாக்சியில் ஏறி கங்கைக் கரைக்குப் போனேன். அங்கே அவளுடைய கையைப் பிடித்துக் கொண்டு வேகமாக நடந்து படகுத் துறையின் படிகளில் இறங்கியவாறே அவளிடம் சொன்னேன், "வா, யமுனா, கண்ணாமூச்சி விளை யாடலாம்-எல்லாரும் நம்மைத் தேடறாங்க, நாம் அவங்களுக்குத் தெரியாம ஒளிஞ்சுக்கறோம்."

"யாரு நம்மைத் தேடறாங்க?"

"ஊரிலே இருக்கற எல்லாருந்தான்!"

இந்த மாதிரி ஓடித் திரிவது யமுனாவுக்குப் பிடித்திருந்தது. அவள் கேட்டாள், "மனீஷாங்கறது யாரு...? நீங்க அப்பறம் சொல்றதாச் சொன்னீங்களே!"

நான் அவளுடைய பின்னலைப் பிடித்துப் பலமாக இழுத்து, "இதை யெல்லாம் ஏன் தெரிஞ்சுக்கணும் கொழந்தே? பெரியவளா ஆயிக்கிட்டிருக்கியா?" என்றுகேட்டேன்.

யமுனா கோபித்துக் கொண்டு, "ஐயோ, வலிக்குது! பின்னலை இழுக்கா தீங்க...! சொல்லுங்களேன், மனீஷா யாரு?"

"மனீஷாங்கறவ இந்த ஊரிலே ஒரு பொண்ணு. அவ கூட்டத்துக்கு நடுவிலே என்னோட நெருக்கமாப் பழகுவா. ஆனா தனியா இருக்கறபோது என்னை நெருங்க விடமாட்டா. இந்தக் கல்கத்தாவே இப்படித்தான். நல்ல வேளை, நான் உன்னை சந்திச்சேன்!"

யமுனா என் உள்ளங்கையைப் பிடித்துக் கொண்டிருந்தவள் இப்போது அதை விட்டுவிட்டு என் தோளைப் பற்றிக் கொண்டாள். அவளுடைய உடம்பு சூடாகிக் கொண்டிருந்தது. நான் அந்த சமயத்தில் சிகரெட் வாங்கும் சாக்கில் அவளிடமிருந்து விலகிப் போனேன். பிறகு சற்றுத் தொலைவிலிருந்து அவளுடைய முகத்தைக் கவனித்தேன். எளிதில் புரிந்து கொள்ள இயலாத உணர்ச்சிப் பெருக்கு அதில் நிழலாடியது. இது ஒரு பிரச்சினை. இதைச் சமாளிப்பது எப்படி? என் உடம்புந்தான் அவளுக்காக ஏங்குகிறது. இப்போதே அவளைக் கொண்டு என் ஏக்கத்தைத் தீர்த்துக் கொள்ளலாமா? மற்ற பெண் களிடம் உடலின் மொழியைப் பயன்படுத்திய பிறகு அவர்களுடன் வேறு மொழியில் உறவு கொள்ள இயலவில்லை. விளைவு, என்னையே நான் மறைத்துக் கொள்ளத் தோன்றும். யமுனாவுடனும் வேறு நிலையில் உறவு கொள்ளத் தொடங்குமுன் உடம்பால் உறவு கொள்வது சரியா?

இப்போது யமுனாவை வைத்துக் கொண்டு என்ன செய்வது? எனக்கு இப்போது கெட்ட பழக்கம் எதுவுமில்லை. நெஞ்சில் குற்ற உணர்வு இல்லை. யமுனா எனக்கு நிறைய மகிழ்ச்சி தந்திருக்கிறாள். அவளுக்குப் புரிந்தாலும் சரி, புரியாவிட்டாலும் சரி, நான் அவளுடைய அகல விழிகளுக்கு முன்னால் உட்கார்ந்து கொண்டு நிறையப்பேச இயலும். சில சமயம் என் பேச்சைக் கேட்டு அவள் கண்களில் நீர் நிரம்பிவிடும். சில சமயம் அவள் விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டு, "நீங்க நல்லா இட்டுக்கட்டிக் கதை விடறீங்க" என்று சொல்வாள். நான் சில சமயம் வேண்டுமென்றே அவளிடம் கதையளப்பது உண்மைதான். சில சமயம் என்னைப் பெரியவனாகக் காட்டிக் கொள்ள முயற்சிப்பதுண்டு. ஆனால்

கொஞ்சங் கொஞ்சமாகத் திருந்திவிடுவேன். நிச்சயம் நல்லவனாக ஆகிவிடுவேன். ஆனால் இந்த நிலை வெகு காலம் நீடித் திருக்காது என்பதையும் நான் அறிவேன். எப்படியாவது நீடித்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!



நான் ஒரு நாள் பாட்டு வகுப்புக்கு முன்னால் நின்று கொண்டிருந்தபோது பஸ்ஸிலிருந்து யமுனாவுடன் சரஸ்வதியும் இறங்கினாள். யமுனாவின் முகத்தில் பயம் படர்ந்திருந்தது. அங்கிருந்து ஓடிப்போகவும் வழியில்லை எனக்கு; காரணம், சரஸ்வதி என்னைப் பார்த்துவிட்டாள். அவள் என்னைக் கேட்டாள், "நீங்க எங்கே இந்தப் பக்கம்?"

''சும்மாத்தான் நின்னுக்கிட்டிருக்கேன்... எங்கேயாவது போகலாமான்னு யோசிச்சுக்கிட்டு...

"யமுனா, நீ கிளாசுக்குப் போ. நான் எட்டு மணிக்கு வந்து உன்னைக் கூட்டிக்கிட்டுப் போறேன்" சரஸ்வதி சொன்னாள்.

யமுனா சொன்னாள், "அம்மா உன்னைச் சின்ன மாமா வீட்டுக்குப் போயிட்டு வரச் சொன்னாளே, நிச்சயம் போயிட்டு வந்துடு."

"அது எனக்குத் தெரியும், நீ போ!" சரஸ்வதி அதட்டினாள்.

யமுனா போனதும் சரஸ்வதி என்னிடம், "வாங்க, போகலாம்" என்று சொன்னாள்.

சங்கடத்தோடு கேட்டேன், "எங்கே?"

"வாங்க, கொஞ்ச தூரம் போயிட்டு வரலாம். பார்க் தெருவுக்குப் போகலாமா? எக்ஸ்பிரஸோ காப்பி சாப்பிட்டு ரொம்ப நாளாச்சு. வாங்கித் தரீங்களா?"

எனக்கு என் கன்னத்தில் அறைந்து கொள்ளலாம் போலிருந்தது. நான் முதலிலேயே "எங்கேயாவது போகலாமான்னு யோசிக்கறேன்" என்று ஏன் சொன்னேன்? சொல்லாமலிருந்தால் இப்போது" எனக்கு முக்கியமான காரியம் இருக்கு. டாக்சிக்காகக் காத்துக்கிட்டிருக்கேன்" என்று சொல்லலாமே...! இந்த மாதிரி அடிக்கடி பிசகு செய்து விடுகிறேன் நான்.

சரஸ்வதியின் உடையலங்காரம் மிகையாக இருந்தது. உயர ஹீல் வைத்த ஷூ அணிந்திருந்தாள். இந்தப் பெண்ணை அழகி என்று கூற முடியுமா? வீதியில் போகும் கிழவர் முதல் குழந்தை வரை எல்லாரும் அவளைத் திரும்பித் திரும்பிப் பார்ப்பது மட்டும் அவளை அழகியாக்கிவிடாது. நானுந்தான் ராணி யிலிருந்து தெருக்கூட்டுபவள் வரை எந்தப் பெண்ணையும் பார்க்காமல் விடுவதில்லை. முதலில் முகம், கூடவே மார்பகம், பிறகு உடல் முழுவதும்... மறுபடியும் முகம்... இப்படிப் பார்த்துப் பிடித்திருந்தால் மறுமுறை பார்ப்பது—இது தான் பெண்களைப் பார்க்கும் முறை. சரஸ்வதியின் மார்பு துருத்திக் கொண்டிருந்தது. தோளின் தோரணையிலும் மோவாயிலும் அகம்பாவம் வெளிப்பட்டது. மெல்லிய பிளவுசுக்குக் கீழே பிரேஸியர் தெரிந்தது. அவள், நான்

அவளுடைய மார்பைப் பார்ப்பதைப் புரிந்து கொண்டு மறுபக்கம் திரும்பி இன்னொரு மார்பகத்தைக் காட்டினாள். இதே மாதிரிதான் ஒரு தடவை மெட்ரோ தியேட்டருக்கு முன்னால் ஒரு பெண் நடந்து கொண்டாள். சுவிமல் அவளுக்குச் சரியான பாடம் கற்பித்தான்...

தினம் ஒரு நல்ல காரியம் செய்வதென்று சபதம் செய்திருந்தான் சுவிமல். நானும் அவனும் ஒரு நாள் சௌரிங்கியில் நடந்து போய்க் கொண்டிருந்தோம். நாங்கள் மெட்ரோ தியேட்டருக்கு அருகில் வந்தபோது அவன், "நில்லு, நான் போய் என் நல்ல காரியத்தைச் செஞ்சட்டு வரேன்" என்று சொன்னான்.

நான் ஆச்சரியத்துடன், "இங்கே யாருக்குப் பரோபகாரம் செய்யப் போறே?" என்று கேட்டேன்.

"நீ கொஞ்சம் தள்ளி நின்னுக்கிட்டுப் பாரேன்?" என்று சொல்லிவிட்டு சுவிமல் தியேட்டர் வாசலைக் கூர்ந்து பார்த்தான். ஓர் ஓரத்தில் அழகான பெண் ஒருத்தி நின்று கொண்டிருந்தாள். யாருக்காகவோ காத்திருந்தாள் போலும். கண்ணில் அடிக்கிறாற்போல் நிறங்களில் உடையணிந்திருந்தாள்! 'தொழில்' செய்பவள் என்றுதான் தோன்றியது. உலகத்தையே அலட்சியப்படுத்தும் பார்வை... சுவிமல் அவளுடைய தோளைத் தொடும் அளவுக்கு அருகில் போய், "என்ன சேதி? இப்படி எங்கே?" என்று கேட்டான். அவளுக்கு சுவிமலைத் தெரியாது. அவள் திடுக்கிட்டாலும், புருவத்தைச் சுருக்கவில்லை. சுவிமல் மடிப்புக் கலையாத வேஷ்டியும் ஜிப்பாவும் அணிந்திருந்தாள். அவன் குரல் மென்மையாயிருந்தது. முருகக் கடவுள் மாதிரி அழகான முகம். கூடவே கண்ணியமான, பெரிய மனிதத் தோற்றம். அவன் சட்டைப் பையில் ஒரு பைசா கூட இல்லை. அவன் உண்மையில் மனித உடல் கொண்ட ஒரு அரக்கன் என்று யார்தான் ஊகிக்க முடியும்?

"எனக்குத் தெரியலியே..." அந்தப் பெண் சொன்னாள்.

சுவிமல் வருத்தக் குரலில் சொன்னான், "என்னைத் தெரியல்லியா? நீங்க பாலிகஞ்சிலேதானே இருக்கீங்க?"

"ஆமா... ஆனா.."

சுவிமல் ஒரு பெருமூச்சுவிட்டுப் பரிதாபமாக, "என்னை அடையாளந் தெரியலியா? நான் உங்க வீட்டுக்கு எவ்வளவு தடவை... உங்க அண்ணா அமல் எனக்கு ரொம்ப டியர் ஃபிரண்டு..."

பெண்ணின் முகத்தில் தெளிவு. அவள் சொன்னாள், "நீங்க ஏதோ மிஸ்டேக் பண்ணீட்டீங்க. என் அண்ணன் பேரு அமல் இல்லே..."

"அப்படியா? தவறு என்மேல்தான். மன்னிச்சுக்கங்க. அமலோட தங்கை இந்திராணி மாதிரியே இருந்தது உங்களைப் பார்த்தா..." என்று சொல்லிவிட்டுத் தன் ஜிப்பாப்பைகளில் கைகளைப்போட்டுக் கொண்டு ஓரக் கண்ணால் அவளைப் பார்த்தான் சுவிமல். பிறகு சிறிது குரலைத் தாழ்த்திக் கொண்டு சொன்னான். "ஆனா ஒரே ஒரு வித்தியாசம்... உங்க முகத்திலே அகம்பாவம் கூத்தாடுது. அதை மட்டும் விட்டுட்டீங்கன்னா இந்திராணி மாதிரியே அழகாயிருப்பீங்க.. என் பேச்சை நம்புங்க...! நான் வரேன்..."

இப்போது நான் சுவிமலின் கண்களுடன் சரஸ்வதியைப் பார்த்தேன். இன்று இனி யமுனாவைச் சந்திக்க வாய்ப்பில்லை. நான் சிறிது நம்பிக்கையோடு கேட்டேன், "உங்களுக்கு மாமா வீட்டுக்குப் போகவேண்டாமா?"

சரஸ்வதி உதட்டைப் பிதுக்கிக் கொண்டு சொன்னாள், "அதை அப்பறம் பார்த்துக்கலாம். வாங்க. வீட்டைவிட்டு வெளியே கிளம்பி ரொம்ப நேரமாச்சு..."

"நீங்க ஜாஸ்தி வீட்டை விட்டு வெளியே வரதில்லையா?"

"வெளியே போக விடமாட்டாங்க அம்மா. வீட்டிலே போஸீஸ் தர்பார் தான்..! நீங்க ஏன் என்னை 'நீங்க'ன்னு கூப்பிடுறீங்க? முந்தியெல்லாம் 'நீ'ன்னுதானே கூப்பிடுவீங்க!"

"ஆமா ஆமா. மறந்துபோயிட்டேன்..."

ஓர் உணவு விடுதியில் போய் உட்கார்ந்தோம். நான் அதிகம் பேசத் தேவை ஏற்படவில்லை. சரஸ்வதியே பேசிக்கொண்டிருந்தாள். நான் எங்கே வேலை பார்க்கிறேன், மாலை நேரங்களில் என்ன செய்கிறேன். எனக்குக் காதலி இருக்கிறாளா என்றெல்லாம். நான் பேசும்போது என் முகத்தை சற்று வலது பக்கம் திருப்பிக் கொள்வேன். அது என்னைப் போக்கிரியாகக் காட்டு கிறதாம். என் போன்ற கூச்ச சுபாவக்காரர்களால் பெண்களை வசப்படுத்த முடியாதாம். நான் ஏன் மீசை வைத்திருக்கிறேன் என்று கேட்டாள். இந்தக் காலத்தில் பெண்களுக்கு மீசை பிடிப்பதில்லையாம். ராத்திரி வேகுநேரம் கண் விழித்து நான் படிக்கக் கூடாதாம். படித்தால் கண்ணைச் சுற்றிக் கறுப்புப் படர்ந்து விடுமாம். நான் வாரத்திலே ஒரு நாள் ஷாம்பூ போட்டுத் தேய்த்துக் கொள்கிறேனா? என்னைப் பார்த்தால் கால் பந்து விளையாட்டுக்காரன் போல் சரஸ்வதிக்குத் தோன்றுகிறதாம். நான் கால்பந்து விளையாடுவேனா...?

வீட்டிலிருந்து வெளியே அடிக்கடி போகமுடியவில்லை என்பதால்தான் இவ்வளவு பேசுகிறாளா இவள்? கூண்டுப் பறவையை முதன்முதலாக வெளியேவிட்டால் அது உடனே நேராகப் பறந்து போகாது. முதலில் ஒரு பக்கம் சாய்ந்து பறக்கும். பிறகு மறுபக்கம் சாய்ந்து பறக்க முயலும். அதன் பிறகு தன்னைச் சமாளித்துக் கொண்டு பறந்து மறைந்து போய்விடும். சரஸ் வதியும் அதுபோல்தான் பறக்க முயற்சி செய்து கொண்டிருக்கிறாள்...

அவள் திடீரென்று, "நீங்க கிழக்கு வங்காளத்துக்காரர், இல்லையா?" என்று கேட்டாள்.

"ஆமா... ஏன் திடீர்னு...?"

சரஸ்வதி 'களுக்'கென்று சிரித்துவிட்டுச் சொன்னாள், "அதுதானே பார்த்தேன்! கிழக்கு வங்காளத்துக்காரங்க ரொம்பப் பிடிவாதக்காரங்க. அப்பறம்..."

"அப்பறம் என்ன?"

அவள் சிரித்துக் கொண்டே சொன்னாள், " தெரிஞ்சுக்கணுமா...? ரொம்ப உணர்ச்சியுள்ளவங்க..."

"கிழக்கு வங்காளத்துக்காரங்க நீக்ரோக்களா...? இந்த விஷயம் உனக்கு எப்படித் தெரிஞ்சுது?"

ஏதோ மர்மமாகப் பேசுவதுபோல், "எனக்குத் தெரியும்" என்றாள்.

எனக்குச் சிரிப்பு வந்தது. நாசமாப் போச்சு! இவள் பிள்ளை பிடிக்க ஆரம்பித்து விட்டாளே! அவளது மூக்கு நுனியில் வியர்வை. நிச்சயம் அக்குளில் வியர்வை படிந்திருக்கும். இப்படிப்பட்டவர்களை நன்றாகத் தெரியும் எனக்கு. இவளுடைய பெற்றோர் இவளுக்கு சீக்கிரம் கல்யாணம் செய்து வைத்து விடவேண்டும். இவ்வளவு அழகு இருக்கும்போது இப்போதே ஏன் கல்யாணச் சிறையில் மாட்டிக் கொள்ள வேண்டும் என்று இவள் நினைக்கிறாள் போலும்! கல்யாணத்துக்கு முன் கொஞ்சம் விளையாட ஆசை இவளுக்கு. அசட்டுப்பெண்! விளையாடத் தொடங்கினால் முகம் சிராய்த்துவிடும். கால்கூட உடைந்து போகலாம் என்பது தெரியுமா?

"சரி, கிளம்பலாம். எனக்கு வேலை இருக்கு" என்று சொன்னேன்.

அவள் கொஞ்சும் குரலில் சொன்னாள், "உங்களுக்கு என்ன வேலையிருந்தாலும் சரி. என்னை என் மாமா வீட்டிலே கொண்டு போய்விடுங்க..."

"உன் மாமா வீடு எங்கே?"

"காளிகாட்டிலே"

தெருவுக்கு வந்தபின் நான் டாக்சியைக் கூப்பிடவில்லை. இந்த மாதிரி பெண்களுடன் டாக்சியில் பிரயாணம் செய்வது ஆபத்து. இன்றைக்கு இருபத்து மூன்று நாட்கள் முன்னால் நான் யமுனாவைப் பார்த்து என் வாழ்க்கை முறையை மாற்றிக் கொண்டிராவிட்டால் இன்று உன்னை வைத்துக்கொண்டு என்ன செய்திருப்பேன் தெரியுமா? அதை உன்னால் கற்பனை செய்து கொள்ளவே முடியாது சரஸ்வதி!

பார்க் தெருவிலிருந்து சௌரிங்கிக்கு நடந்தோம் பஸ் பிடிக்க.

பேச்சை மாற்றுவதற்காக சரஸ்வதியைக் கேட்டேன், "வருண் நிசமாவே அமெரிக்காவிலே கலியாணம் பண்ணிக்கிட்டானா? "

சரஸ்வதி உதட்டைப் பிதுக்கி கொண்டு சொன்னாள், "யார் கண்டாங்க! ஏதாவது அசட்டுத் தனம் பண்ணியிருப்பான். கலியாணம் பண்ணிக்கறதைத் தவிர வேறே வழியில்லாமே போயிருக்கும்... இதிலே கவலைப்பட என்ன இருக்கு? அவனுக்குப் பிடிச்சுது, பண்ணிக்கிட்டான்! அம்மா ரொம்பத்தான் அலட்டிக்கிறா..."

நான் வருணின் தோற்றத்தை நினைத்துப் பார்த்தேன். எப்போதும் பரீட்சையில் முதலாக வருவான். பாலிஷ் செய்த பொம்மை மாதிரி முகம். அவன் கூடவா இந்த மாதிரி விளையாட்டில் இறங்கிவிட்டான்? முகத் தோற்றத்தைக் கொண்டு ஒன்றும் தெரிந்து கொள்ள முடிவதில்லை.

சிறிது தூரம் சென்றதுமே சரஸ்வதி, "சன்யால் அண்ணா!" என்று உரக்கக் கத்தினாள்.

ஒரு காக்கி நிற ஜீப் எங்கள் பக்கத்தில் வந்து நின்றது. போலீஸ் வண்டி. டக்ளஸ் மாதிரி மீசை வைத்த ஒரு இன்ஸ்பெக்டர் வண்டிக்கு வெளியே தலையை நீட்டி, "நீ இங்கே எங்கே வந்தே? அம்மா எப்படி இருக்காங்க?" என்று கேட்டான்.

"அம்மா இப்ப கொஞ்சம் தேவலை... நீங்க எங்களைக் கைது செய்யுங்க"

அவன் சிரித்துக் கொண்டே "எங்கே போகணும்?" என்று கேட்டான்.

"எங்களைக் கைது பண்ணிக் காளிகாட்டிலே கொண்டுபோய் விட்டுடுங்க" செல்லமாகச் சொன்னாள் சரஸ்வதி.

"அப்ப நான் வரவேண்டிய அவசியமில்லே" நான் சொன்னேன்.

"வாங்களேன். போலீஸ் வண்டியிலே வர வெக்கமாயிருக்கா? கைதி மாதிரி தோணுமா?"

நான் பதில் சொல்லாமல் ஜீப்பில் ஏறிக் கொண்டேன். சரஸ்வதி என்னை இன்ஸ்பெக்டருக்கு அறிமுகம் செய்து வைத்தாள். "சன்யால் அண்ணா, இவர்தான் என் சிநேகிதர்..."



கல்லூரிகளில் வேலை நிறுத்தம். ஆகையால் பகல் நேரங்களில் யமுனாவைச் சந்திக்க முடியாது. தொடர்ந்து இரண்டு பாட்டு வகுப்புகளுக்கு அவள் வரவில்லை. எனக்கோ வேறு வேலை இல்லை. நான் மாலை ஆறு மணி முதல் எட்டு மணி வரை பாட்டுப்பள்ளிக்கு முன்னால் நின்று கொண்டிருந்தேன். எவ்வளவோ பெண்கள் பள்ளிக்குள் போனார்கள் வெளியே வந்தார்கள். அவர்களில் பலர் அசப்பில் பார்த்தால் யமுனா போலத்தானிருந்தார்கள். ஆனால் யமுனா இல்லை. எல்லா ஆறுகளும் ஒரே மாதிரிதான் இருக்கின்றன. ஆனால் அவற்றில் ஸ்நானம் செய்தால் புண்ணியம் கிடைப்பதில்லை. தெருவில் இரும்புக்கிராதியின் மேல் சாய்ந்து கொண்டு இரண்டு மணி நேரம் நின்று கொண்டிருப்பது இவ்வளவு கஷ்டம் என்று இதற்கு முன் எனக்குத் தெரியவில்லை. இந்த நேரம் வெகு நீண்ட நேரமாகத் தோன்றியது எனக்கு. நீண்டநேரம் ஒரே இடத்தில் நிற்பதில் உலக ரிகார்டை சாதித்துவிட்டேன் என்று தோன்றியது. 'தண்டி' எனப்படும் துறவிகள் சூரியனை நோக்கி ஒரு கையைத் தூக்கியவாறு தவம் செய்வார்களாம். அவர்களையும் நான் பொறுமையில் விஞ்சி விட்டேன்! அந்தத் துறவிகளுக்கு இந்தத் தவத்தின் பயனாக ஏதாவது கிடைக்கிறதா? எனக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. நான் கிராதியின் மேல் சாய்ந்து கொண்டு ஒன்றுக்குப்பின் ஒன்றாக சிகரெட் குடித்துக் கொண் டிருந்தேன். தெருவில் ஜனங்கள் போய்க் கொண்டிருக்கிறார்கள். நான் மட்டும் நின்று கொண்டிருக்கிறேன். அவர்களில் சிலர் என்னைத் திரும்பிப் பார்க்கிறார்கள். நான் ஒரு வெட்டி மனிதன் என்று புரிந்து கொண்டிருப் பார்கள். யமுனாவைச் சந்திக்க முடியாமல் எனக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. முன்பெல்லாம் நான் பொழுது போக்கிய முறை எனக்கு மறந்தே போய்விட்டது. யமுனா வரவில்லை. எனக்கு முன்னால் நீண்ட மாலை நேரம், பிறகு அதைவிட நீளமான இரவு. இவற்றை வைத்துக் கொண்டு "நான் என்ன செய்வேன்? எங்கே போவேன், எங்கே போவேன்?" என்று பக்கத்திலிருந்த மரத்தைக் கேட்டேன். மரம் காற்றில் தலையை ஆட்டி "எனக்கென்ன தெரியும்? நான் எங்கும் போவதில்லை. ஒரே இடத்தில் நின்று கொண்டிருக்கிறேன். ஒரு நாள் நீயும் நானும் மயானத்துக்குப் போய்ச் சேருவோம்" என்றது.

நான் "தொலைஞ்சு போ" என்று அதைத் திட்டிவிட்டு என் சிகரெட்டை அதில் வைத்துத் தேய்த்தேன். "இப்போ புரிஞ்சுக்குவே, நெருப்பு சுட்டா எப்படி இருக்கும்னு!"

யமுனா இல்லாமல் என்னால் இருக்க முடியாது என்று தெரிகிறது. நான் யமுனாவுடன் இவ்வளவு நெருக்கமாகப் பின்னிப் பிணைந்துவிட்டேன் என்று இதற்கு முன் உணரவில்லை. அன்றொரு நாள் வேஷ்டியும் செருப்பும் அணிந்து கொண்டு வெளியே போயிருந்தேன். பஸ்ஸில் ஒருவன் காலை மிதித்துவிட்டான். நான் வலிதாங்காமல் பல்லைக் கடித்துக் கொண்டு, "இடியட்! கண் இல்லையா?" என்று கத்தினேன். "மன்னிச்சுக்கங்க... நான் பார்க்கலே" என்றான் அவன். அப்போதும் என் காலில் எரிச்சல். நான் அதட்டினேன், "நான்சென்ஸ்... ஏன் பார்க்கலே" அவன் திகைத்துப் போய் என்னைப் பார்த்தான். அப்பாவியாகத் தோற்ற மளிக்கும் நடுவயதுக்காரன். அவன் கையில் கனமான பை. வாத்தியார் கீத்தியாராயிருக்கலாம். பணிவாகச் சொன்னான், "நிசமாவே பார்க்கலே, நம்புங்க என்னை. இந்தக் கூட்டத்திலே... யாரும் வேணும்னு... " நான் பொறுமையிழந்து, "போதும் போதும், இன்னும் வளவளன்னு பேசாதே" அந்த மனிதனின் முகம் பரிதாபமாக ஆகிவிட்டது. அவன் எனக்குப் புரிய வைக்க முயலமுயல என் எரிச்சலும் வளர்ந்தது. இந்த சமயத்தில் என் உரத்த குரலைக் கேட்டுப் பலர் திரும்பிப் பார்த்தார்கள். அப்படி வியப்போடு பார்த்தவர்களில் ஒரு பெண்ணும் இருந்தாள். அந்தப் பெண் பார்ப்பதற்கு யமுனா மாதிரி இல்லை. அவள் கறுப்பு, முகமும் பெரிசு. இருந்தாலும் எனக்கு உடனே யமுனாவின் நினைவு வந்தது. யமுனாவே என்னிடம் தன் பார்வையால் சொல்வதுபோல் தோன்றியது. "சீ, ஏன் இப்படி அவர்கிட்டே மரியாதைக் குறைவா நடந்துக்கறீங்க? அவர் வேணும்னு உங்க காலை மிதிக்கலேன்னு உங்களுக்குத் தெரியாதா?" அந்தக் கூட்டத்தில் பலருக்கு என் நடத்தை பிடிக்கவில்லை. அப்படியும் நான் சற்றும் தணிந்து போகவில்லை. என் கண்களில் அப்போதும் எரிச்சல். நான் மானசீகமாக யமுனாவிடம் சொன்னேன். "ஆமா அப்படித் தான் நடந்துக்குவேன். யமுனா, நீ ஏன் என்னைச் சந்திக்கறதில்லே? நீ வரலேன்னா நான் எப்படி வேணும்னாலும் இருப்பேன். என்ன இஷ்டமோ அதைச் செய்வேன்! நான் இதுக்கு முன்னாலே டிராமிலே-பஸ்ஸிலே இந்தமாதிரி நடந்துக்கிட்டிருக்கேனா? வயசிலே பெரியவங்களை 'நீ'ன்னு கூப்பிட்டிருக்கேனா? அவமரியாதை செஞ்சிருக்கேனா? இப்ப செய்யறேன். அதுக்கு நீதான் காரணம்!"

ஒரு நாள் ஆபீசில் பெரிய மாப்பிள்ளை என்னைக் கூப்பிட்டுச் சொன்னார், "நீ வனமாலி பாபுவைக் கிழட்டுக் கழுகுன்னு சொன்னியாமே! சீ, சீ! பாவம், அந்த மனுஷர் எங்கிட்டே வந்து அழுதுட்டார். வயசானவர், ஏதோ ஒண்ணு ரெண்டு பிசகு பண்ணியிருக்கலாம். அதுக்காக அவரை இப்படி நடத்துறது சரியில்லே!"

நான் தலைகுனிந்தவாறு நின்றேன். என் உடம்பெங்கும் கோபம். மனதுக்குள் சொல்லிக் கொண்டேன். "சொல்லத்தான் சொல்லுவேன். கிழட்டுக் கழுகுன்னு சொல்லுவேன், பன்னிக்குட்டி, ஆட்டுவிட்டை, எச்சில் இலை, ஆஸ்துமா வியாதிக்காரனோட கோழை இப்படியெல்லாம் சொல்லித்

திட்டுவேன்! யமுனாவை மறுபடி பார்க்கற வரையிலே இப்படித்தான் நடந்துக்குவேன்! ஏன் யமுனா என்னைப் பார்க்க வரல்லே?"

யமுனாவின் வீட்டுக்கு வெளியில் அலைந்து திரிந்தேன். வேண்டுமென்றே வீட்டுக்குள் போகவில்லை. பக்கத்துச் சுவர்களில் ஒட்டப்பட்டிருந்த சுவரொட்டிகள் மனப்பாடமாகிவிட்டபின் ஒரு நாள் யமுனா வேறு இரண்டு பெண்களுடன் வீட்டிலிருந்து வெளியே வருவதைப் பார்த்தேன். ஆகா, எவ்வளவு மகிழ்ச்சியான மாலை நேரம் இன்று! அந்தச் சின்னப் பெண்ணைப் பார்த்ததுமே எனக்கு உற்சாகம் ஏற்பட்டுவிட்டது. ஆனால் அவளிடம் கெட்ட ஆசை எதுவுமில்லை எனக்கு. இன்னும் முற்றிலும் மலராத மலர் போன்ற அவளது உடலின்மேல் எனக்கு ஆசையில்லை. அதன் இனிமையை எட்ட இருந்து ரசித்தால் போதும் எனக்கு. ஆனால் எனக்கு யமுனா மட்டுந்தான் வேண்டும். அவளோடுகூட இருக்கும் அந்த உதவாக்கரைப் பெண்கள் யார்?

அவர்கள் என்னைப் பார்க்கவில்லை. பரபரப்போடு பஸ் ஸ்டாப்பை நோக்கிப் போய்க் கொண்டிருந்தார்கள். இப்போதே பஸ் வந்து விட்டால் அவர்கள் அதிலேறிப் போய்விடுவார்கள். நான் அவர்களுக்குப் பின்னால் வேகமாகப் போனேன். அவர்களை நெருங்கியதும் சற்று வேகத்தைக் குறைத்துக் கொண்டு அவர்களுக்கு முன் சென்று, பிறகு தற்செயலாகப் பார்ப்பதுபோல் யமுனா பக்கம் திரும்பி "எங்கே போறே?" என்று கேட்டேன்.

என் குரல் இயல்புக்கு மாறாக ஒலித்ததா என்று எனக்குத் தெரியாது. என் குரல் கேட்டு யமுனா திடுக்கிட்டு என்பக்கம் திரும்பிப் பார்த்தாள். உடனே நின்று, "எங்க வீட்டுக்குப் போறீங்களா?" என்று கேட்டாள்.

"போனாலும் உன்னைப் பார்த்திருக்கமுடியாது. முன்னால ஒருநாள் உன் வீட்டுக்குப் போனேன். நீ இல்லே. எங்கே போறே இப்போ? நாடக ஒத்திகையா?"

"இல்லே. சினிமா பார்க்க. டிக்கெட் வாங்கியாச்சு."

"இன்னிக்கு நீ சினிமா போகவேண்டாம்" என்று சொல்ல விரும்பினேன். ஆனால் எப்படிச் சொல்வது! ஆகையால் சொன்னேன், "எந்தத் தியேட்டர்? சௌரிங்கியிலேயா? அப்படீன்னா சீக்கிரம் பஸ்ஸைப் பிடிச்சுக்கிட்டுப் போ, நேரமாகுது."

"இன்னும் ரொம்பப் பேர் எங்களுக்காகக் காத்திருப்பாங்க தியேட்டர் வாசல்லே."

யமுனா தன் சிநேதிகளை விட்டு என்னிடம் நெருங்கி வந்து, "சுநீல் அண்ணா, நீங்களும் எங்களோட வாங்களேன்!" என்று சொன்னாள்.

"உன் சிநேகிதிகளோடே நான் வந்து என்ன செய்வேன்? நான் வந்தா உன் சிநேகிதிகளுக்கு சங்கடமாயிருக்கும்..."

"என்ன சங்கடம்? நான் அவங்களுக்கு உங்களை அறிமுகப்படுத்தி வைக்கறேன்... இவங்க ரெண்டு பேரும் என் கிளாஸ்மேட் அர்ச்சனா, நவநீதா... நவநீதா, நான் சுநீல் அண்ணாவைப் பத்திச் சொல்லியிருக்கேனே, அவர்தான் இவர்... வாங்க, எங்களோடே! உங்களோடே ஒரு நாள்கூட நான் சினிமா போனதில்லே...

"இல்லே, குழந்தே! இன்னிக்கு வேண்டாம். இன்னொரு நாள் பார்த்துக்கலாம்."

"மறுபடி 'குழந்தே'ங்கறீங்க!"

நவநீதா சொன்னாள், "அதோ பஸ் வருது. ஏறிக்கலாமா?"

யமுனா என் முகத்தைப் பார்த்தாள். "நானும் அந்தப் பக்கந்தான் போகணும். உங்களோட வரேன்" என்று சொல்ல வாயெடுத்தவன் கடைசியில் அப்படிச் சொல்லாமல், "யமுனா, உங்களோடே பஸ்ஸிலே கொஞ்ச தூரம் வரட்டுமா?" என்று கேட்டேன்.

"அந்தப் பக்கந்தான் நீங்களும் போறீங்களா?"

"எந்தப் பக்கம் வேணும்னாலும் போகலாம் எனக்கு."

பஸ்ஸின் மேல் தளத்தில் இரண்டு பெஞ்சுகளில் உட்கார்ந் திருந்தவர்கள் எழுந்து கொள்ள, நானும் யமுனாவும் ஒரு பெஞ்சியில் உட்கார்ந்து கொண்டோம். யமுனாவின் உடம்போடு உரசாமல் இருக்க முடியவில்லை. அவளது உடம்பின் கதகதப்பு எனக்கு மிகவும் இதமா யிருந்தது. மூச்சுக் காற்றுக்கு ஏற்ப அவளது மார்பகம் ஏறி இறங்கியது. அவளது உடம்பிலிருந்து நறுமணம் எழுந்தது.

"நிறைய சென்ட் பூசிக்கிட்டியா?" நான் கேட்டேன்.

யமுனா ஆச்சரியத்தோடு கேட்டாள், "சினிமாவுக்குப் போறபோது கொஞ்சம் சென்ட் பூசிக்க வேண்டாமா?"

நான் சிரித்துக் கொண்டே கேட்டேன், "ஓகோ! சினிமாவுக்குப் போறதுன்னா சென்ட் பூசிக்கணும்னு சட்டமா?"

"எல்லாரும் பூசிக்கறாங்க"

"நீ இப்பல்லாம் ஏன் பாட்டுக் கிளாசுக்கு வரதில்லே?"

"எனக்குக் காலேஜ் பரீட்சை நெருங்கிடுச்சு. ஒரு மாசம் பாட்டுக் கிளாசுக்குப் போக வேண்டாம்னு அம்மா சொன்னாங்க."

"சினிமாவுக்குப் போகலாம், பாட்டுக்கிளாசுக்குப் போனாத்தான் படிப்பு கெட்டுப் போகுமாக்கும்?"

"நீங்க என்னைத் திட்டறீங்களா? என்மேலே என்ன குத்தம்?"

நான் அவளைத் திட்ட நினைக்கவில்லை. நான் அவளது தலைமுடியை நீவிக் கொண்டு சொல்ல விரும்பினேன், "புல்புலி, நான் உன்னைத் திட்டலே. உன்னாலேதான் என் சுபாவம் முரடாயிட்டது..." ஆனால் டிராமிலும் பஸ்ஸிலும் இந்த மாதிரியெல்லாம் பேச முடியுமா? பக்கத்தி லிருக்கும் பிரயாணிகள் வாயைத்திறந்து கொண்டு எங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய கண்களும் காதுகளும் எங்கள் பக்கம். பார்க்கவும் கேட்கவும் அவர்களுக்கு வேறு எதுவும் கிடைக்கவில்லை. பக்கத்து பெஞ்சியில் இரண்டு அழகான இளம் பெண்கள் உட்கார்ந் திருக்கிறார்களே, அவர்களைச் சற்றுப் பார்க்கக் கூடாதா இந்த ஜனங்கள்? ஒரு ஜோடி பெண்களைவிடப் பெண்-ஆண் ஜோடியில்தான் இவர் களுக்கு ஆர்வம் அதிகம். ஆண்-பெண் ஜோடியைத் தனிமையில் இருக்க விடமாட்டார்கள். நான் கோபத்துடன் ஒரு பெருமூச்சு விட்டேன்.

பஸ் வெகு வேகமாகப் போய்க்கொண்டிருந்தது. வெகு விரைவில் தியேட்டர் வந்துவிடும். நேரம்இல்லை, இன்னும் அதிக நேரம் இல்லை!...

நான் முடிந்தவரை குரலைத் தணித்துக் கொண்டு சொன்னேன், "உன்னைத் தனியா சந்திக்க ஆசையாயிருக்கு, யமுனா!"

யமுனா ஜன்னலுக்கு வெளியே பார்த்தவாறே தணிந்த குரலில், "எனக்குந்தான்" என்று சொன்னாள்.

"அவசியம் நான் உன்னை சந்திச்சாகணும்!"

"அக்கா என்னை ரொம்பக் கண்காணிக்கிறாளே_! எனக்கு ஒண்ணும் பிடிக்கல்லே..."

"எனக்கு ரொம்ப அவசியமாச்சே!"

"இப்பல்லாம் என்னைத் தனியா வெளியே போகவிடறதில்லே."

இந்த சமயத்தில் மறுபக்கத்து சீட்டிலிருந்த அர்ச்சனா என்ற பெண் உரக்கச் சொன்னாள், "யமுனா, இதோ பாரு! டிகேபி நின்னுக்கிட்டிருக்கார். அவருக்குக் கலியாணம் ஆயிடுச்சுன்னு நான் சொன்னேன் இல்லையா? அவரோட மிஸஸூம் கூட நின்னுக்கிட்டிருக்கா!"

யமுனா ஆர்வத்தோடு, "எங்கே, எங்கே?" என்று கேட்டாள்.

நான்முழங்காலை நகர்த்திக் கொண்டு யமுனாவுக்கு வழிவிட, அவள் என்னைக் கடந்து மறுபக்கத்து ஜன்னலுக்கு ஓடினாள்.

"டி.கே.பி யாரு?" நான் கேட்டேன்.

"எங்க இங்கிலீஷ் புரொபசர்."

"என்னதான் சொல்லு, மிஸஸ் அவருக்குப் பொருத்தமில்லே. அவர் எவ்வளவு ஹேண்ட்சம்!"

"இல்லேயில்லே. அவர் மிஸஸூம் ஸ்மார்ட்டாகத்தான் இருக்கா."

"அவளும் புரொபசராம்-பெத்தூன் காலேஜிலே..."

"ரொம்பத் தலையை நீட்டாதே! அவர் நம்மளைப் பார்த்துடுவார்!"

"பார்க்கட்டுமே!"

மூன்று பெண்களும் கலகலவென்று பேசத் தொடங்கினார்கள். யாரோ ஒரு இங்கிலீஷ் புரொபசராம். அவர்கூட என் எரிச்சலைக் கொட்டிக்கொள்கிறார். அவருக்காக என் நேரம் வீணாகிறது. யமுனா பிராபோர்ன் காலேஜில் அல்லவா படிக்கிறாள்! அங்கேகூட ஆண் லெக்சரர்கள் உண்டா? இந்த ஆள் ஒரு பிரைவேட் டியூட்டோரியல் கிளாசில் வாத்தியாராக இருக்கலாம். இந்த சாதாரண ஆளுக்காக என்அருமையான நேரம் வீணாகிக்கொண்டிருக்கிறது. நான் நொந்து போய் உட்கார்ந்திருந்தேன். ஒவ்வொரு நிமிடமும் ஒரு மைல்போல் நீளமா யிருந்தது. அப்பறம் நானே என்னை சமாதானப் படுத்திக் கொண்டேன். இதெல்லாம் என் குற்றந்தான். காலேஜில் முதல் ஆண்டில் படிக்கும் பெண்கள் ஒன்று சேர்ந்து சினிமாவுக்குப் போகும்போது சிறு சிறு விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டு போவது, இளம் புரொபசரின் கலியாண விஷயத்தில் ஆர்வங்காட்டுவது. சைராபானுவையும் திலீப் குமாரையும் பற்றிப் பேசுவது இதெல்லாம் இயற்கைதான். அவர்களுக்கு நடுவில் நான் போய் முகத்தைப் பரிதாபமாக வைத்துக கொண்டு சீரியஸாப் பேசுவது இயற்கையல்ல. இது என் சுயநலந்தான்...! நான் யமுனாவைத் தனியாகத்தான் சந்திக்க வேண்டும். இப்படி நான் என்னைத் தேற்றிக்கொண்டவுடன் என் எரிச்சல் குறைந்தது. நான் சிரித்த முகத்துடன் அவர்களைப் பார்க்கத் தொடங்கினேன்.

அவர்கள் பஸ்ஸிலிருந்து இறங்கியபோது நானும் அவர்களுடன் இறங்கவில்லை. யமுனா மாடிப்படிக்கருகில் போய், சட்டென்று என் பக்கம் திரும்பி, சிரித்த முகத்துடன், "நான் வரேன்" என்றாள். அவள் பேசும்போது அவளது தலைமுடி ஆடுவது எவ்வளவு அழகு! அவள் தன் புடவைத் தலைப்பை இடது கையில் சுற்றிக் கொண்டிருந்தாள். நான் மலர்ந்த முகத்தோடு, "சீக்கிரம் இறங்கு, பஸ் கிளம்பிடும்" என்று சொன்னேன். அவள் ஓரிரண்டு வினாடிகள் என்னைப் பார்த்துக் கொண்டு நின்றாள். பிறகு சட்டென்று தன் குரலை மாற்றிக் கொண்டு சொல்லக் கோபத்தோடு, "சுநீல் அண்ணா, நீங்க எனக்கு லெட்டரே எழுதலே!" என்று சொல்லிவிட்டு இறங்கிப் போனாள்.

கடிதமா? இந்தப் பேச்சுக்கு என்ன பொருள்? கடிதம் எழுதி என்ன பிரயோசனம்? இந்த வயதில் காதல் கடிதம் எழுதிக் காதலிக்கத் தொடங்க வேண்டுமா? சீ! யமுனா கடிதத்தைப் பற்றிப் பேசியதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அனால் அவள் அப்போது பார்த்த பார்வை என்னை மயக்கிவிட்டது. என் நாடித் துடிப்பு அதிகரித்து விட்டது. ஆகா, என்ன சுகமான காற்று! மீண்டும் மீண்டும் காற்றை உறிஞ்சி நெஞ்சை நிரப்பிக் கொள்ளத் தோன்றுகிறது.

சிறிது தூரம் சென்றபின் பஸ் போக்குவரத்துச் சிக்கலில் மாட்டிக் கொண்டது. நல்லவேளை. இது முன்னால் நேரவில்லை. நேர்ந்திருந்தால் யமுனாவுக்கும் அவள் தோழிகளுக்கும் சினிமாவுக்கு நேரமாகியிருக்கும். அவர்கள் சந்தோஷமாகக் கலர்ப்படம் பார்க்கட்டும்.

ஜன்னலுக்கு வெளியே பார்த்தபோது எங்கள் ஆபீஸ் வனமாலிபாபு கண்ணில்பட்டார். கூட இரண்டு சிறுவர்கள். அவர் நடைபாதைக் கடையிலிருந்து சீட்டித் துணியில் சட்டை வாங்கிக் கொண்டிருந்தார். நான் அவரைக் கிழட்டுக்கழுகு என்று சொன்னது நினைவு வந்து எனக்குச் சிரிப்பு வந்தது. அவர் ஒரு காலத்தில் மிகவும் ஆரோக்கியமாக இருந்திருக்க வேண்டும். வயதாக ஆக இப்படி மெலிந்து போய்விட்டார். அவரது தோள்கள் இரண்டு பக்கமும் இறக்கைகள் போல் சற்று துருத்திக் கொண்டிருந்தன. சோடா பாட்டில் கண்ணாடி அவரை இன்னும் அவலட்சணமாகக் காட்டியது. பார்ப்பதற்குக் கழுகைப் போலத்தானிருந்தார். கண்பார்வை சரியில்லாததால் அவர் ஆபீஸ் வேலையில் அடிக்கடி பிசகு செய்து விடுகிறார். ஏதோ குற்றம் செய்துவிட்ட உணர்வு அவர் முகத்தில் எப்போதும் தெரிகிறது. ஆனால் இப்போது குழந்தைகளின் கையைப் பிடித்துக் கொண்டு போகும்போது அவர் வேறுமாதிரியாகத் தோற்றமளிக்கிறார். அவர் இப்போது இரண்டு குழந்தைகளின் பாதுகாப்பாளர், வழிகாட்டி. எவ்வளவு அழுத்தமாகக் கடைக்காரனை அதட்டுகிறார்! இப்போது அவர் முற்றிலும் வேறு மனிதர். உடனே பஸ்ஸிலிருந்து இறங்கி என் நடத்தைக்காக அவரிடம் மன்னிப்புக் கேட்கத் தோன்றியது. சீட்டிலிருந்து எழுந்துவிட்டேன். பிறகு சிறிது யோசித்து, மறுபடியும் உட்கார்ந்து கொண்டேன். நடுத்தெருவில் நான் அவரிடம் மன்னிப்புக் கேட்பது நாடகம் மாதிரி ஆகிவிடும். அவர் திடுக்கிட்டுப் போவார், மறுபடியும் அவரது முகம் பரிதாபமாக ஆகிவிடும். என் மன்னிப்பு வேண்டுதல் அவருக்குப்

பயமுண்டாக்கிவிடும். பெரிய மாப்பிள்ளை என்னைக் கடிந்து கொண்ட செய்தி அவருக்கு எட்டியிருக்கும். அதிலிருந்தே அவர் நிச்சயம் மகிழ்ச்சியடைந்திருப்பார். நான் மனத்தளவில் அவரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டால் அதுவே போதும். நான் ஜன்னல் வழியே அவரையே பார்த்துக் கொண்டிருந்தேன். மானசீகமாக அவருடன் பேசினேன், "வனமாலி பாபு, நான் ஒன்றும் ரொம்பக் கெட்டவனல்ல. கோபத்தில் ஏதோ சொல்லிவிட்டேன். கோபத்தில் தவறு செய்வது சகஜந்தானே! யமுனாவை என்னால் பார்க்க முடியாததால் என் 'மூடு' கெட்டுப் போயிருந்தது. இன்னும் சில நாள் அவளைப் பார்க்க முடிந்தால் நான் மறுபடியும் நல்லவனாக மாறிவிடுவேன்."

யமுனாவைத் தனிமையில் பார்ப்பது எப்படி? இப்போது அவள பாட்டு வகுப்புக்குப் போவதில்லை. கல்லூரியும் மூடியிருக்கிறது. அவளை எங்கே சந்திப்பேன்?

தொடர்ந்து சில நாட்கள் மறுபடி அவளைச் சந்திக்க இயலவில்லை. மறுபடி என் மனநிலை கெட்டுப் போய்விட்டது. யமுனாவுடன் நானிருக்கும் போது வெறுங்காலுடன் வெல்வெட் போன்ற புல்தரையில் நடப்பது போலத் தோன்றும். பசுமரங்களின் மூச்சுக்காற்று இதமாக இருக்கும். அவளைச் சந்திக்க முடியாவிட்டால் நான் முகரும் காற்று கூட்டத்தில் மனிதர்களிடமிருந்து வரும் சூட்டுக் காற்றாகத் தோன்றும். நைலான் சாக்ஸ் அணிந்த கால் மாதிரி நாறும். அவளை அடைவதற்கு நான் என்ன செய்ய வேண்டுமென்று எனக்குப் புரியவில்லை. ஒரு பதினாறு வயதுப் பெண் எனக்காக மட்டும் வேண்டும் என்றால் என் தேவையை ஜனங்கள் நம்ப மாட்டார்கள்.

ஒருநாள் சற்றும் யோசனையின்றி யமுனாவின் வீட்டுக்குப் போன்செய்தேன். இன்னொரு பிசகும் செய்துவிட்டேன்– என்ன செய்வது? யமுனாவைத்தவிர வேறு யாரிடமும் உண்மை சொல்ல இயலவில்லை என்னால். மற்றவர்கள் உண்மைப் பேச்சைக் கேட்டால் அதைத் தப்பாக எடுத்துக் கொள்கிறார்கள். டெலிபோன் ஒருமுறை ஒலித்ததுமே மறுபுறம் ரிசீவர் எடுக்கப்பட்டு ஒரு கனமான ஆண் குரல் கேட்டது-"எஸ்"... ஜகதீஸ் ராயின் குரல். சில வினாடிகள் யோசித்தேன்-"எனக்கு யமுனாவோட பேசணும். அவளைக் கூப்பிடுங்க" என்று சொல்லலாமா? சொல்ல முடியாது. நான் வேறொரு நம்பரைச் சொல்லி, "இந்த நம்பரா?" என்று கேட்டேன்.

"இல்லை" என்ற பதிலுடன் போன் வைக்கப்பட்டது.



மறுநாள் சனிக்கிழமை. பிற்பகலில் நான் ஜாதவ்பூரில சுவிமலின் வீட்டுக்குப் போனேன். சில நாட்களாகத் தனியாக இருந்து இருந்து தனிமை ஒரு சுமையாக ஆகிவிட்டது. நான் ரஸ்தாவின் ஓரத்தில் திறந்த சாக்கடையைக் கடந்து சுவிமலின் அறை ஜன்னல் வழியே எட்டிப் பார்த்து "என்னடா!" என்று கூப்பிடவும் அவன் கதவைத் திறந்து என்னைக் கூட்டிக் கொண்டு

போனான். நான் ஜன்னல் வழியே பார்த்தபோது அவன் படுத்தபடியே சிகரெட் பிடித்துக் கொண்டிருந்தான். அவனது தலைமாட்டில் காகிதங்கள் சிதறிக் கிடந்தன. ஏதோ எழுத முயற்சி செய்து கொண்டிருந்தான் போலும்.

நான் உள்ளே வந்ததும் கேட்டான், "என்னப்பா, நீயும் சேகரும் இப்படிக் காணாமப் போயிட்டீங்களே!"

"எங்கே காணாம போனேன்? சேகரும் காணாம போகலே."

சுவிமல் டிராயரை இன்னொரு சிகரெட்டுக்காகத் துழாவிக் கொண்டே, "தெரியும் தெரியும்...! நீ ஒரு சின்னப் பொண்ணு பின்னாலே சுத்திக்கிட்டிருக்கே, சேகர் ஒரு வேசி வீட்டிலே பழியாக்கிடக்கான்" என்று சொன்னான்.

"இதெல்லாம் உனக்கு யார் சொன்னாங்க?"

"அவிநாஷ்"

"அந்தப் போக்கிரியோட சேதி என்ன?"

"அவனும் சேகரோட பாட்டுக்குத் தாளம் போட்டுக்கிட்டு இருக்கான். தெரியுமா, சேகரோட நிலைமை ரொம்பப் பரிதாபம்! அவன் ஏதோ எல்எஸ்டி-கில்எஸ்டி சாப்பிட்டானாம். இப்போ தினமும் தலை கிறுகிறுத்து கீழே விழுந்துடறானாம்... அப்படியும் வீட்டுக்குத் திரும்பலியாம். அந்த வேசிகிட்டே மயங்கிக் கிடக்கானாம். அந்த பொம்பளை "புள்ளே, புள்ளே!"ன்னு பைத்தியம் மாதிரி புலம்பறாளாம்... நேத்திக்குப் பரிதோஷைப் பார்த்தேன். அவனோட அம்மா பூஜை ரூமிலே உக்காந்துக்கிட்டே தெரிஞ்சுக் கிட்டாளாம், சேகர் அவகிட்டே பொய் சொல்லியிருக்கான்னு. அழுது புலம்பறாளாம். வேடிக்கையா இருக்கு பார்த்தியா. சேகரோட அம்மா பிள்ளைக்காக அழுதுக்கிட்டிருக்கா. சேகர் இன்னொரு பொம்பளைக்கு அவளோட பிள்ளையைக் கொண்டுவந்து கொடுக்கத் தவிக்கறான்! இதை வச்சு ஒரு நாடகம் எழுதலாம்னு பார்க்கறேன்... அந்தப் பொம்பளையும் ஒரு அதிசயப் பிறவிதான்... நான்..."

"அது கிடக்கட்டும். அவ பேச்சு இப்ப வேண்டாம்."

"உனக்கு அந்த சமாசாரம் பூராத் தெரியுமா?"

"தெரியும்."

"நான் கொஞ்ச நாள் முன்னால வீணா வீட்டுக்குப் போயிருந்தேன். அவளோட அக்கா நூர்ஜஹான் பேகம் அழகிதான். ஆனா அவளோட உடையெல்லாம் அலங்கோலமா... அவளுக்கு மயக்கம் அடிக்கடி வருது– ஒரு சமயம் அழுறா, ஒரு சமயம் சிரிக்கறா...."

"நடிப்போ என்னவோ? சினிமாக்காரிதானே!"

சுவிமல் சிரித்துக் கொண்டு சொன்னான், "இல்லேயில்லே, எது நடிப்பு எது இயற்கைன்னு நல்லாப் புரிஞ்சுக்க முடியும் என்னால. புரிஞ்சுக்க முடியாம இருந்தா நல்லாயிருந்திருக்கும்."

"அவ புருஷன் என்ன சொல்றான்? பிள்ளையத் தர மாட்டானாமா?"

"மாட்டானாம்! அவன் பெரிய போக்கிரி. அவன் இன்னொரு கலியாணம் பண்ணிக்கிட்டிருக்கான். அவளையும் சினிமாவிலே சேர்த்துவிட முயற்சி பண்ணிக்கிட்டிருக்கான். பிள்ளையை நூர்ஜஹானோட அனுப்பாமே இருக்க அவன் சொல்ற காரணம் என்னன்னா—நூர்ஜஹான்

பிள்ளையை டாக்காவுக்குக் கூட்டிப் போனா பிள்ளையும் முஸ்லீமாயிடு வானாம். 'எனக்கும் பிள்ளையைப் பார்க்க ஆசையிருக்காதா?'ன்னு கேக்கறான். உள்ளூர அவனோட ஆசை நூர்ஜஹானையும் வச்சுக்கணும்னு-மனைவியா இல்லே, வைப்பாட்டியா. வச்சுக்கிட்டா அவ சினிமாவிலே சம்பாதிக்கற பணத்தையும் அவன் எடுத்துக்கலாமே!"

"நூர்ஜஹான் அவன் மேலே கேஸ் போடட்டுமே!"

"அதெப்படி முடியும்? அவ பாகிஸ்தான் நாட்டுக்காரி. அப்பனும் அம்மாவும் வெவ்வேறு நாட்டுக்காரங்களாயிருந்தா—அதுகளும் விரோதம் பாராட்டற நாடுகளாயிருந்தா—அவங்களோட குழந்தை நிலை அவந்தரை தான்!"

"நூர்ஜஹான்தான் குழந்தை மேலே உரிமையை விட்டுக் கொடுக்கணும். அவதானே பிள்ளையை விட்டுட்டு ஓடிப்போனா? அப்போ பிள்ளை ஞாபகம் வரலியா...? எனக்கு அந்தப் பொம்பளையக் கட்டோட பிடிக்கலே."

"உன்னோட வாதம் சரிதான். ஆனா இது வாதத்துக்கப்பாற்பட்ட விஷயம். நூர்ஜஹானோட தவிப்பு எந்த வாதத்துக்கும் பொருந்தும்... அந்தப் பொண்ணு எந்த ஒழுக்கத்துக்கும் கட்டுப்படறவ இல்லே. பணம்-தன் சுகம், இது ரெண்டுந்தான் பெரிசு அவளுக்கு. ரெண்டுமே அவளுக்கு நிறையக் கிடைச்சிருக்கு. கிழக்கு வங்காளத்திலே சினிமாவில அவளுக்கு நல்ல பேராம். அப்படியும் ஒரு பிள்ளைக்காக என்னமாத் தவிக்கறா!"

நான் சற்று எரிச்சலோடு சொன்னேன், "நீங்க விஷயத்தை ரொம்பப் பெரிசு படுத்திறீங்க. இது வெறும் மிருக உணர்ச்சி தவிர வேறில்லே. குட்டி தொலைஞ்சு போனா தாய் மிருகம் தவிக்கும். உலகத்திலே உள்ள பல துக்கங்களோட ஒப்பிடறபோது இந்தத் துக்கம் ஒண்ணுமேயில்லே."

"மிருகங்களோட தவிப்பு உடம்பு சம்பந்தப்பட்டது. அது கொஞ்ச நாளிலே இந்த துக்கத்தை மறந்துடும். ஆனா மனுஷன் மறக்கறதில்லே. இவ ஏழெட்டு வருஷத்துக்கப்பறம் மறக்க முடியாம ஓடிவந்திருக்கா... இதிலே ஒரு ட்ராஜெடி இருக்கு. இதை ஏன் புரிஞ்சுக்க மாட்டேங்கறே...?"

"எனக்கு இதையெல்லாம் யோசிச்சுக்கிட்டு இருக்கப் பிடிக்கல்லே. நான் வேறே ஏதோ கவலைப்பட்டுக்கிட்டிருக்கேன்..."

"எனக்குந்தான் ஒரு சொந்தக்கவலை இருக்கு. அதுக்காக என் கவலையிலேயே முழுகிப்போய் மத்தவங்களைப் பத்திக் கவலைப்படாதபடி அவ்வளவு சுயநலக்காரன் இல்லே நான். பார்க்கப்போனா, எனக்கு ஒரு பிரச்னை இருக்கறதாலே பிறரோட பிரச்னையும் பெரிசாத் தோணுது. சேகர் அந்தப் பொண்ணுக்காகத் தன் வேலை வெட்டியை மறந்துட்டான். ஈவிரக்கமேயில்லாத அவிநாஷ் கூட அங்கேயே இருக்கான். அது ஏன்? அந்தப் பொண்ணு நிசமாவே ரொம்பத் தவிக்கறா. பிள்ளை கிடைக்காட்டித் திரும்பிப் போக மாட்டாளாம். பிச்சையெடுக்க நேர்ந்தாலும் இங்கேயேதான் இருப்பாளாம்."

"அது முடியாது. அவ திரும்பித்தான் போகணும். நடந்து விட்ட நிகழ்ச்சியை மாத்த முடியாது. இந்தப் பிரிவு முடிவானது. பிள்ளையைக் கூட்டிக்கிட்டுப் போக இங்கே வந்திருக்கா அவ. நாம் விட்டுட்டு வந்த

கிழக்கு வங்காள மண்ணுக்காக நாம் ஏங்கல்லியா? நம்ம கிராமத்துத் துர்க்கா பூஜை மண்டபம். ஆல மரத்துப் பாம்போட குரல், இரவு வேளை யிலே வீட்டுக்குப் பக்கத்துக் குளத்திலே தண்ணியோட சலசலப்பு— இதையெல்லாம் நம்மாலயே மறக்க முடியுதா? இருந்தாலும் நம்மால அங்கே திரும்பிப் போக முடியுமா? அந்தப் பழைய உறவெல்லாம் முடிஞ்சு போச்சு... உடனே திரும்பிப் போகச் சொல்லு நூர்ஜஹானை! மதம் மாறி அந்த நாட்டுக்குப் போனப்பறம் மறுபடி இங்கே எதுக்கு வரணும்? தேவைப்பட்டா நானே அவளை விரட்டறேன்..."

"நீ ஏன் இப்படி ஈவிரக்கமில்லாமே பேசறே? அவ ஒரு அனாதைப் பொண்ணு. சாதி மதத்தையெல்லாம் அவ என்ன கண்டா? நூர்ஜஹான் தான் கிழக்கு வங்காளத்தோட ஆத்மான்னு எனக்குத் தோணுது. அந்த ஆத்மா ஒரு பிசகு செஞ்சுட்டு இப்போ பச்சாத்தாபப்படுது..."

"போதும் போதும். உன் கற்பனையை ஓடவிடவேண்டாம்!"

"ரெண்டு வங்காளமும் மறுபடியும் ஒண்ணு சேரும்னு நம்பிக்கை இல்லையா உனக்கு? எனக்கென்னவோ..."

"உனக்கு நம்பிக்கையிருந்தா நல்லதுதான். நான் எவ்வளவு காலம் உசிரோட இருக்கப்போறேன்? என் வாழ்வுக் காலத்திலே அது நடக்கும்னு எனக்குத் தோணல்லே."

"நீ ஒரு பெசிமிஸ்ட்... அங்கே இப்போ விடுதலைப்போர் தொடங்கி யிருக்கு. நாம அவங்களோடே சேரத் தயாராத்தான் இருக்கோம். அவங்களும் சம்மதிச்சுட்டா, நாம ஒண்ணு சேர்ரதை யாரு தடுக்க முடியும்? மேற்கே இருக்கற அந்த இத்னூண்டு நாடா?"

"உலகம் பூரா அதனோட சுயநலத்துக்காகத் தடுக்கும். நம்மளைப் பத்தி யார் கவலைப்படுவாங்க? தவிர, கிழக்கு வங்காளத்திலே நடக்கற இயக்கம் நம் நாட்டோட சேர்ந்துக்கறதுக்காக இல்லே... இந்தப் பேச்சை விட்டுத்தள்ளு! இதைப் பத்தியெல்லாம் பேசப்பிடிக்கல்லே எனக்கு. வெளியே போகலாமா?"

"எங்கே?"

"உன் வீட்டுலதான் வந்தவங்களுக்கு டீ கொடுக்கற வழக்கம் இல்லே. தெரு மூலைக் கடைக்குப் போய் டீ குடிக்கலாம்."

சுவிமல் சிரித்துக் கொண்டு சொன்னான், "எங்க வீட்டுல எனக்கு மதிப்பே இல்லே. டீ கொடுக்கச் சொன்னா முகத்தைச் சுளிப்பாங்க. சரி, வெளியிலேயே போகலாம், வா."

அவன் தன் வேஷ்டியைத் திருப்பிக் கட்டிக் கொண்டு ஜிப்பாவை அணிந்து கொண்டான். கண்ணாடிக்கு முன்னால் நின்றுகொண்டு அக்கறை யோடு தலைமுடியைச் சீவிக் கொண்டான். வெளியே வரும்போது கடிதப் பெட்டிக்குள் ஒரு தடவை எட்டிப் பார்த்தான். கடிதமொன்றும் இல்லை. சற்று தூரம் சென்றபின் கேட்டான், "திடீர்னு இவ்வளவு தூரம் வந்திருக்கியே என்ன விஷயம்?"

"எனக்கு மனசே சரியா இல்லே..."

"எனக்குந்தான்... நீ வரலேன்னா நான் வீட்டைவிட்டே கிளம்பியிருக்க மாட்டேன்."

"உனக்கு மனசு சரியில்லாமப் போவானேன்?"

சுவிமல் தெருமுனையில் ஒரு வீட்டைச் சுட்டிக்காட்டிவிட்டுச் சொன்னான், "அந்த வீட்டிலே ஒரு பொண்ணு இருக்கா. அந்தப் பொண்ணோட பரிதாபமான முகமே நினைவிலே வந்துக்கிட்டிருக்கு இன்னிக்குப்பூரா– அவளைக் கலியாணம் பண்ணிக்கலாம்னு பார்க்கறேன்."

"நான் திடுக்கிட்டுக் கேட்டேன், இன்னொரு பொண்ணா...? ஏன், அந்தப் பொண்ணு— டெலிபோன் ஆபரேட்டர் என்ன ஆனா?"

சுவிமல் ஆச்சரித்தோடு கேட்டான், "எந்த டெலிபோன் ஆபரேட்டர்?"

" அருணோட ஆபீஸ் டெலிபோன் ஆபரேட்டர்– ஒல்லியா, சிவப்பா– அவளைப் பார்த்ததுமே ஒரு வினாடியிலே உன் வாழ்க்கையே மாறிப் போச்சே...! காதல் வெறியோடே குதிச்சுக்கிட்டிருந்தியே!... இல்லே, எல்லாம் வெறும் வேஷமா?"

"ஓ! அந்தப் பொண்ணா? அவ ரொம்ப மோசம்! அவளுக்குப் பணத்திலேதான் குறி. அருண் கலியாணமானவன்னு தெரியாது அவளுக்கு. அதனாலே அவனுக்கு வலை போட்டுக்கிட்டிருந்தா... நான் ஒரு நாள் அவளோட பேச்சுக் கொடுத்தேன். என்னை அவ லட்சியமே பண்ணல்லே–"

"அவ உன்னை ஏன் லட்சியம் பண்ணணும்? அவளுக்கு முன்பின் தெரியாது உன்னை... உன் மாதிரி எத்தனையோ பேர் அவளோடே வலிஞ்சு பேச வருவாங்க..."

"இல்லே இல்லே, அருண் என்னை அவளுக்கு அறிமுகம் பண்ணி வச்சான். அப்படியும் அவ கண்டுக்கலே... ஒருநாள் பார்க்கறேன். ஆபீஸ் முடிஞ்சப்பறம் அருணோட பாஸும் அவளுமாக் காரிலே ஏறிக்கிட்டுப் போறாங்க! நான் என்ன செய்வேன்? அவளைக் காப்பாத்தத்தான் முயற்சி பண்ணினேன் நான்"

"அது போகட்டும், யார் இது புதுப் பொண்ணு?"

"ரொம்ப சாந்தமான, அழகான பொண்ணு இவ. பார்க்கப் பரிதாபமா யிருக்கும். பெரிய பெரிய கண்கள், ஆகா...!"

"வர்ணனையெல்லாம் வேண்டாம். விஷயம் என்ன, சொல்லு!"

"முன்னாலே அவளைக் கவனிக்கலே நான். நம்ம தெருப் பொண்ணையே யார் கவனிச்சுக்கிட்டிருப்பாங்க? கொஞ்ச நாளுக்கு முன்னாலதான் பார்த்தேன். அவங்க ரொம்ப ஏழைக் குடும்பம். முந்தா நாள் பொண்ணைப் பார்க்கப் பிள்ளை வீட்டுக்காரங்க நிறையப்பேர் வந்திருந்தாங்க. பொண்ணோட அப்பாவுக்குத் திக்குவாய். நல்லாப் பேச வராது. அதனாலே பிள்ளைவீட்டுக்காரங்களோட பேசறதுக்கு எங்க வீட்டிலேருந்து ஒருத்தரைக் கூப்பிட்டாங்க. நானே போனேன். என்ன கொடுமை தெரியுமா? நாலு முரட்டு ஆளுங்க வந்திருந்தாங்க. பூரி உருளைக் கிழங்கையும் சந்தேஷையும் ஒரு கைபார்த்தாங்க. பொண்ணை வந்து தலைமுடியை விரிச்சுக்காட்டு, நடந்து காமி, பாடத் தெரியுமா? கவுன் தைக்கத் தெரியுமான்னெல்லாம் கேட்டாங்க. பூதேவ் முகர்ஜியோட புஸ்தகத்திலேருந்து டிக்டேஷன் போட்டாங்க... நீயே சொல்லு, பூதேவ் முகர்ஜியோட புஸ்தகத்திலேருந்து டிக்டேஷன் எத்தனை வங்காளிப் பொண்களாலே எழுத முடியும்? இவ சின்னப் பொண்ணு. காலேஜிலே

ரெண்டாம் வருஷம் படிச்சுக்கிட்டிருக்கா. வெக்கத்திலேயும் அவமானத் திலேயும் அவ முகம் கருத்துப் போச்சு, பாவம்! அவளோட நிலையைப் பார்த்து என் நெஞ்சு வெடிக்கும்போல இருந்தது. நல்லவேளை அவங்க கோழி வாங்கறபோது செய்யறாப்பலே, பொண்ணோட வயத்தை அமுக்கிப் பார்க்கல்லே. ஆனா, அவளோட முகத்தைவிடக் கைகால் கருப்பாயிருக் குன்னு சொன்னாங்க. அப்பறம் பிள்ளையோட அப்பா பொண்ணுக்கு முன்னாலயே பொண்ணோட அப்பாகிட்டே சொல்றான், 'பொண்ணு நல்ல சிவப்பு இல்லே, அதனாலே தங்கம் கொஞ்சங்கூடக் குறையக்கூடாது! முப்பது பவுன் வேணும்!' பிள்ளையோட அப்பன் அப்படியொண்ணும் பெரியபுள்ளி இல்லே. ஒரு பள்ளிக்கூடத்து ஹெட்மாஸ்டர்! அவங்க மூஞ்சியைக் கடிச்சுக் குதறி, அவங்களைக் காலாலே உதைச்சுக் கைகாலை ஒடிச்சுக் கீசக வதம் பண்ணணும்போல இருந்தது எனக்கு. அப்பவே தீர்மானிச்சட்டேன். அந்தப் பொண்ணைக் கலியாணம் பண்ணிக்கறதுன்னு-"

"அவங்க உனக்கு ஏன் கலியாணம் பண்ணி வைக்கணும்?"

"ஒரே ஜாதிதான். எனக்கு ஒரு வேலைமட்டும் கிடைச்சுட்டா..."

"நீ வேலை தேடறியா?"

"கேலி பண்ணாதே! நான் ஒரு எம்.ஏ., மறந்துடாதே! வாத்தியார்வேல மோசடிக்கு சமானம்னுதான் இவ்வளவு நாள் வேலைக்குப் போகல்லே. ஹரலால்பாபுவோட கம்பெனிலே ஒரு சேல்ஸ்மேன் வேலை காலி யிருக்காம். அவர்கிட்டேபோய் நெடுஞ்சாண் கிடையா விழறேன். அவர் காலைப் பிடிச்சுக் கெஞ்சறேன். அவரோட குழந்தைக்குக் குண்டி துடைச்சு விடறேன். அவர் பொண்டாட்டி வாந்தியெடுத்ததை வேணும்னா முழுங்கறேன்... அப்படியும் வேலை கொடுக்க மாட்டாரா?"

"அப்போ, வேலை கிடைச்சதும் அந்தப் பொண்ணைக் கலியாணம் பண்ணிக்குவியாக்கும்! அவளோட பழகியிருக்கியா?"

"பழகவேண்டிய அவசியமில்லே. அவமானத்திலே அவளோட முகத்திலே தென்பட்ட வேதனையைப் பார்த்தே அவளைப் பத்தித் தெரிஞ்சுக்க வேண்டியதையெல்லாம் தெரிஞ்சுக்கிட்டேன். அவளுக்கு ஏற்பட்ட அவமானத்தைத் துடைக்கப் போறேன் நான்!"

"சரி, இவளைக் கலியாணம் பண்ணிக்கிட்ட பிறகு, இன்னொரு பெண்ணுக்கு இதே மாதிரி அவமானம் ஏற்படறதைப் பார்த்தா என்ன செய்வே? அவளையும் கலியாணம் பண்ணிக்கிட்டு அவமானத்திலேருந்து காப்பாத்த முடியாதே!"

சுவிமலுக்கு கோபம் வந்துவிட்டது. "நீ ஏன் எப்பப் பார்த்தாலும் இந்த மாதிரி விதண்டாவாதம் பண்றே? இது ரொம்பக் கெட்ட பழக்கம் உனக்கு!"

எனக்கு அவன் பேச்சைக்கேட்டு வருத்தம் ஏற்பட்டது. "நிசமாவே நான் எப்பவும் இந்த மாதிரி விதண்டாவாதம் பண்றேனா? எனக்கு அது தெரியலியே! என் சொந்த விஷயத்திலே ஒரு வாதமும் பலிக்கறதில்லே. ஒண்ணு நினைக்கிறேன். அது வேறே ஒண்ணாப் போயிடுது. சில நாளா நான் எவ்வளவு யோசிச்சுக்கிட்டிருக்கேன்..."

"உனக்கு என்ன ஆச்சு?"

நான் சுவிமலிடம் யமுனாவைப் பற்றிச் சொன்னேன். பேசும்போது என் கை நடுங்கியது. சில வார்த்தைகளைப் பேச முடியாமல் வாய் குழறியது.

எல்லாவற்றையும் கேட்டுவிட்டு சுவிமல் சொன்னான், "நீ பிழைச்சுட்டே. இப்பத்தான் நீ மனுஷனாயிருக்கே."

நான் சற்று வெட்கத்துடன் கேட்டேன், "ஏன்?"

"நிசமாத்தான் சொல்றேன்— நீ இவ்வளவு நாள் காட்டுமிராண்டியா இருந்தே. இப்போ அந்த முகமூடி கிழிஞ்சு உன்னைப் பார்த்தா மனுஷன் மாதிரி இருக்கு..."

"நீ என்னைக் கேலி பண்ணாதே!"

"கேலி இல்லே. நீ ஒருத்தர்கிட்டே போய் உன் மனசைத்திறந்து காட்டியிருக்கே. அது ஒரு பெரிய விஷயம் இல்லையா? அந்தப் பொண்ணு எங்கே? எனக்கும் ஒரு நாள் அவளைக் காட்டு."

"அவளை இப்போ நானே பார்க்க முடியல்லியே! என்ன செய்யறது சொல்லு!"

"அந்தப் பொண்ணை நழுவ விட்டுடாதே! அவ நீ சொல்ற மாதிரி அவ்வளவு அப்பாவியா இல்லாம இருக்கலாம். உண்மையிலே பிஞ்சிலே பழுத்த பழமாயிருக்கலாம். சாகசக்காரியாக்கூட இருக்கலாம். அதனாலே ஒண்ணும் கெட்டுப் போயிடலே. முக்கியமான விஷயம் என்னன்னா, ஒரு சின்ன வயசுப் பெண் உன் மனசுக்குத் தூய்மையானவளாத் தோணறா, அவகிட்டேப் போனா உன் மனசும் தூய்மையாயிடுது. அந்தப் பொண்ணு கிட்டேவே நீ இரு."

"எப்படி இருக்க முடியும்? அவ்வளவு சின்னப்பொண்ணைநான் தினம் சந்திக்க அவளோட அப்பா-அம்மா விடுவாங்களா?"

"அவளைக்கலியாணம் பண்ணிக்கோயேன்!"

"சீ, அத்தனூண்டுப் பொண்ணைக் கலியாணம் பண்ணிக்க முடியுமா?"

"அம்மா சம்மதிச்சாப் பண்ணிக்கலாம்... அவங்களைக் காக்கா பிடி... நீ ஒண்ணும் மோசமானவனில்லையே!"

"அப்படியேவச்சுக்க... கலியாணத்துக்கப்பறம் எனக்கு அவளைப் பிடிக்காமப் போயிட்டா?" தயக்கத்தோடும் வெட்கத்தோடும் சொன்னேன் நான்.

சுவிமல் என்னை அதட்டினான்—"கிழடுகளைப் போல ஏன் எதிர் காலத்தைப்பத்தி இப்பவே கவலைப்படறே? அஞ்சு வருஷம் பத்து வருஷத்திலே சாகப்போறவங்கதான் பிறத்தியாரோட எதிர்காலத்தைப் பத்திக் கவலைப்படுவாங்க. அப்பா அம்மாக்கள் குழந்தைகளோட எதிர் காலத்தைப்பத்தி ஏன் கவலைப்படறாங்க தெரியுமா? அவங்க ரொம்ப நாள் இருக்கப் போறதில்லேன்னு அவங்களுக்குத் தெரியும். அவங்க சாகிறதுக்கு முன்னால அவங்க குழந்தைகளோட நாப்பது அம்பது வருஷ எதிர்காலத்தை முன் கூட்டியே திட்டம்போட்டு அந்த சுகத்தைக் கற்பனையிலே அனுபவிக்க ஆசைப்படறாங்க. நமக்கு அந்தக் கவலையெல்லாம் கிடையாது. நாம இன்னும் நாப்பது வருஷம் உசிரோட இருக்கலாம், அல்லது நாளைக்கே பஸ்ஸிலே அடிபட்டுச் செத்துப்

போகலாம். 'நினைச்சா சாவு'ம்பாங்களே, அது மாதிரிதான். நாம எதிர் காலத்தைப்பத்திக் கவலைப்பட வேண்டிய அவசியமில்லே..."

"போதும் போதும், லெக்சர் போதும்!"

"நான் சொல்றதைக்கேளு. பின்னாலே என்ன ஆகுமோங்கறதுக்காக இப்போ உனக்கு ஏற்பட்ட காதலை இழந்துடாதே. இப்போ உன் சந்தோஷத்தைக் கை நழுவ விட்டப்பறம் எதிர்காலத்திலேயும் உனக்கு அமைதி கிடைக்கலேன்னா என்ன செய்வே? அந்தப் பொண்ணோட நட்பு உனக்குப் பிடிச்சிருக்குன்னா அவளை உன்கிட்டேயே வச்சுக்க. இது வங்காளம், கலியாணமாகாத பொண்ணோட தினம் சாயங்காலம் சுத்த முடியாது. ஆகையாலே அவளைக் கலியாணம் பண்ணிக்க."

"அவளுக்கு என்னைப் பிடிக்குமா?"

"போடா முட்டாள். இந்தக் கேள்வியை என்கிட்டே ஏன் கேக்கறே? அவளைக் கூப்பிட்டுக் கேளு. வெட்டு ஒண்ணு, துண்டு ரெண்டுன்னு நிச்சயமாத் தெரிஞ்சுக்க. அவளுக்குப் பிடிக்கலேன்னா விட்டுடு. எட்டாத பழத்துக்குக் கொட்டாவி விடாதே!– நீ ஏன் இவ்வளவு பயந்தாங்கொள்ளியா ஆயிட்டே?"

"இப்பல்லாம் அவளைப் பார்க்கவே முடியறதில்லே. அவ வீட்டுக்குப் போகவும் பிடிக்கல்லே எனக்கு..."

"பிடிக்கலேன்னா என்ன செய்யறது? வீட்டிலேதான் அவளைப் பார்க்க முடியும்னா வீட்டிலே போய்ப்பாரு. இன்னிக்கே போ! கிளம்பு!"

"இன்னிக்கேயா? கொஞ்சம் உக்காரேன்."

"வேண்டாம். எனக்கு மனசு சரியில்லே. உன் சமாசாரத்தைப் பத்தியே நினைச்சுக்கிட்டிருக்க முடியாது என்னால. உன்னோட உக்காந்துக் கிட்டிருந்தா உன் விஷயத்தைப்பத்தித்தான் பேசத் தோணும். நான் இப்போ என் விஷயத்தைப்பத்தி யோசிக்கணும்..."

நாங்கள் டீக்கடையிலிருந்து வெளியே வரும்போது ஓரிளைஞன் எதிரே வந்தான். ஒல்லியாக, உயரமாக, வெள்ளை பிரேம் போட்ட மூக்குக் கண்ணாடியணிந்து கொண்டு ஃபேஷனாகத் தோற்றமளித்தான். அவன் சுவிமலின் தோளைத் தட்டி, "வாங்க, இன்னொரு கப் சாப்பிடலாம்" என்றான்.

சுவிமல் அவனை எனக்கு அறிமுகம் செய்து வைத்தான், "இவர் பாஸ்கர் சாட்டர்ஜி."

நான் அவனுக்கு வணக்கம் தெரிவித்து, "உங்க பேரைக் கேள்விப்பட்டிருக்கேன்" என்று சொன்னேன்.

இதைக் கேட்டதும் இளைஞனின் முகத்தில் கர்வம் தோன்றியது. அற்பத்தனமான கர்வம்.

"தெரியுமா உனக்கு? இவர் வங்காளிக் கவிதையை மொழி பெயர்க்க அமெரிக்கா போயிருந்தார்."

"இருங்க, சிகரெட் வாங்கிக்கிட்டு வரேன்" என்று சொல்லிவிட்டு அவன் அங்கிருந்து நகர்ந்ததும் நான் சிடுசிடுப்போடு சொன்னேன், "அன்னிக்கு ஒரு பொண்ணைப்பத்திக் கேள்விப்பட்டேன். அவ கதகளி கத்துக்க செக்கோஸ்லாவகியா போனாளாம்! இது இப்போ ஒரு ஃபேஷன்

ஆயிடுச்சு."

சுவிமல் என் கையை அழுத்தி, "உஷ், காதிலே விழப்போகுது...! வா, மறுபடி டீ சாப்பிடலாம். இவனோட கொஞ்சம் நேரம் பேசிப்பாரு. மனுஷன் அப்படியொண்ணும் மோசமில்லே... தவிர இந்த மாதிரி ஆளுங்களோட பழக்கம் வச்சுக்கறது நல்லது..."

"இவனோடே பேசிக்கிட்டிருக்கறபோது அவனைப்பத்தித்தானே யோசிப்பே?"

"பார்ப்போமே!"

"எனக்குப் பிடிக்கலே. நான் வரேன்!"

பாஸ்கர் சாட்டர்ஜியிடம் சுவிமலை ஒப்படைத்துவிட்டு நான் போய் விட்டேன். பாவம், சுவிமலுக்குத் தன்னைப் பற்றி யோசிக்க நேரமே கிடைப்பதில்லை!



யமுனா வீட்டு வராந்தாவில் டேபிள் டென்னிஸ் மேஜை இருப்பதை நான் முன்பு கவனிக்கவில்லை. யமுனா வெளிர் நீல ஸ்கர்ட் அணிந்து மான்போல இங்குமங்கும் ஓடி டென்னிஸ் விளையாடிக் கொண்டிருந்தாள். மான் போலவா, காற்றிலசையும் மரக்கிளை போலவா, அல்லது எலி போலவா? உண்மையில் அவளது கவனத்தையும் படபடப்பையும் எலிக் குஞ்சின் படபடப்போடுதான் ஒப்பிடத்தகும். ஆனால் ஓர் அழகிய பெண்ணை எலியோடு ஒப்பிடலாமா? யமுனாவுடன் ஓர் இருபது- இருபத் தொரு வயது இளைஞன் விளையாடிக் கொண்டிருந்தான்-விளையாட்டுக் காரனுக்குரிய தோற்றம், தூய வெள்ளைப் பேண்ட், சட்டை அணிந் திருந்தான்.

யமுனா என்னைப் பார்த்து விளையாட்டை நிறுத்தவில்லை. வியப்பும் மகிழ்ச்சியுமாக "வாங்க சுநீல் அண்ணா, கொஞ்சம் இருங்க, இந்த கேமை முடிச்சுடறேன்."

நான் சிறிது நேரம் விளையாட்டைப் பார்த்துக் கொண்டு நின்றேன். இருவரும் விளையாடுவது அனாயாசமாக, அழகாக இருந்தது-என்னை வயதானவனாக உணரச் செய்தது.

நான் கேட்டேன், 'அம்மா எங்கே?"

"அம்மாவுக்கு உடம்பு சரியில்லே. அக்கா இருக்கா... அக்கா!"

கூப்பிடு முன்னே சரஸ்வதி ஆஜர். நல்ல வேளை அவள் ஸ்கர்ட் அணிவதில்லை.

அவள் முகத்தில் ஏதோ கிரீம் அப்பியிருந்தாள். சிரித்துக் கொண்டே சொன்னாள், "வந்துட்டீங்களா, கடைசியிலே! எனக்குத் தெரியும்..."

எனக்குப் பயமாயிருந்தது. நான் பலவீனமாகிவிட்டதாக உணர்ந்தேன். ஏனிப்படி?

தயங்கியவாறு சொன்னேன், "சித்திக்கு உடம்பு சரியில்லேன்னு..."

"உடம்பு சரியில்லேன்னு கேள்விப்பட்டுப் பார்க்க வந்தீங்களா?"

"அப்படியில்லே... வா, போய்ப் பார்த்துட்டு வரலாம்."

"அம்மா தூங்கறாங்க. அவங்களை அப்பறம் பார்க்கலாம். என் ரூமுக்கு வாங்க..."

"இந்த கேமைப் பாத்துட்டு வரேன். இந்த கேம் எப்படி?

"முன்னி, உனக்கு எவ்வளவு பாயின்ட்? இந்தத் தடவையும் நீ தபன் கிட்டே தோக்கத்தான் போறே... வாங்க, ரூமுக்குப் போகலாம்."

சரஸ்வதி என் கையைப் பிடித்தாள். நான் யமுனாவின் பார்வையைச் சந்திக்க முயற்சித்தேன். யமுனாவும் தபனும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். பிறகு தபன் சரஸ்வதியைப் பார்த்தான். யமுனா என் பக்கம் திரும்பிப் பார்த்தாள். அவள் கண்களில் நாணத்தின் சாயல். வெட்கம் எதற்காக? அவள் தலை குனிந்தாள். பிறகு மறுபடி தலைநிமிர்ந்து என்னைப் பார்த்தாள், நாணத்துடன் மெல்லச் சிரித்தாள். அவள் உடம்பு கொஞ்சங் கொஞ்சமாக வெட்கம் கற்றுக் கொள்கிறதா?

வெள்ளைப் பந்து நீல நிற பேட்டில் அடிபட்டு நெருப்புப் பொறியாகப் பறக்கிறது. யமுனாவின் மூக்குக்கும் உதட்டுக்கும் நடுவில், சில பெண்களுக்கு லேசாக மீசை தோன்றுமிடத்தில் சில வியர்வைத் துளிகள்; அவள் வேகமாக ஓடியாடுவதால் அவளுடைய ஸ்கர்ட் குடைபோல் சற்று விரிகிறது. அவளுடைய தொடையின் ஒரு பகுதி என் கண்ணுக்குத் தெரிகிறது. இவ்வளவு காலமாக எனக்கு யமுனாவின் உடம்பின் மேல் ஆசை தோன்றவில்லை. ஆனால் இப்போது விளையாட்டை நிறுத்தி யமுனாவை இறுகக் கட்டிக் கொள்ளத் தோன்றுகிறது. ஆசை வெறிக்கு ஆளாகாமல், நிதானமாக, மென்மையாக அவளுடைய உதட்டில் முத்தமிட, மெதுவாக அவளுடைய தொடையில் என் உதடுகளைத் தேய்த்துக் கொண்டே போக தெர்மா மீட்டரின் உறையைக் கழற்றுவது போல் மெதுவாக அவளுடைய பிளவுசை அகற்றி, "யமுனா, நீ எவ்வளவு அழகா யிருக்கே!" என்று அவளிடம் சொல்ல விரும்பினேன் நான். ஒரு கப் நிறைய டீயை எடுத்துக் கொண்டு ஓர் அறையிலிருந்து இன்னோர் அறைக்குச் செல்பவன் தன் கவனம் முழுவதையும் ஒருமுகப்படுத்திக் கொண்டு போவானே, அதே மாதிரி ஒருமுகப்படுத்திய கவனத்தோடு யமுனாவைக் கொஞ்சத் தவித்தது என் மனம். மெதுவாக நகரும் திரைப்படம் போல் யமுனாவைத் தூக்கிக் கொண்டு அங்கிருந்து நிதானமாக நடந்து போக ஆசை ஏற்பட்டது. இப்போதுதான் முதல் தடவையாக யமுனாவை ஓர் ஆணின் பக்கத்தில் பார்க்கிறேன். அவளது உடம்புக்காக இப்போது என் உடம்பு முழுதும் ஏங்கியது. இதையுணர்ந்தபோது என்னுள்ளே ஓர் இனம் புரியாத வேதனை தோன்றியது. திடீரென்று நெஞ்சில் ஒரு திருகல். அந்த நிமிஷத்திலிருந்து நான் எதையோ இழக்கத் தொடங்கிவிட்டதாகத் தோன்றியது எனக்கு. நான் இவ்வளவு பரிதாபத்துக்குரியவன் என்று உலகத்தில் வேறு யாருக்காவது தெரியுமா? நான் எனக்குள் வேண்டிக் கொண்டேன், "சரஸ்வதி, என்னை இன்னிக்கு விட்டுடு! நான் வெறுமே யமுனாவைப் பார்த்துக்கிட்டே இருக்கேன். எனக்கு வேற எதுவும் வேண்டாம்!"

சரஸ்வதி என் கையைச் சற்று பலமாக இழுத்தாள். நாங்கள் வராந்தா ஓரத்துக்கு வந்ததும், "அவங்க கொஞ்சம் காதல்-கீதல் பண்ணு

வாங்க. நீங்க அங்கே நின்னுகிட்டுப் பார்த்துக்கிட்டு இருக்கலாமா? வாங்க என் ரூமுக்கு!"

நான் மறுபடி யமுனாவைப் பார்த்தேன். அவள் என் பக்கம் திரும்ப வில்லை. பந்தையும் தபனின் முகத்தையும் மாறி மாறிப் பார்த்துக் கொண் டிருந்தாள். சட்டென்று எனக்குத் தோன்றியது— தபன் யமுனாவுக்குக் காதல் கடிதத்தைத் தவிர இன்னும் 'எதுவோ' கொடுத்திருக்கிறான் என்று. இத்தனைக்கும் ஒரு சில நாட்களாகத்தான் நான் அவளைச் சந்திக்கவில்லை.

"யமுனா, இன்னும் எவ்வளவு நேரம் விளையாடுவே?" நான் கேட்டேன்.

யமுனா மும்முரமாக விளையாடிக் கொண்டே, "நான் பதில் கேம் விளையாடிட்டு வரேன். நீங்க அதுவரை அக்காவோடே..."

சரஸ்வதி மறுபடி என் கையை இழுத்தாள்.

முதல் மாடிக்கும் இரண்டாம் மாடிக்கும் நடுவில் ஒரு சிறிய அறை சரஸ்வதியின் அறை. அறையின் கூரை தாழ்வாக என் தலையில் இடிக்கும் போலிருந்தது. இந்த மாதிரி அறைகளில் தலைக்கு மேலே விசிறி பொருத்த முடியாது. ஆகையால் அறையின் ஓரத்தில் ஒரு மேஜை விசிறி. அறையிலேயே தண்ணீர்க் குழாய், வாஷ் பேசின், சுவரில் கண்ணாடி.

"முன்னாலே இது அண்ணன் ரூமாயிருந்தது. இப்போ என்னோட ரூம்... நல்லாயில்லே?" சரஸ்வதி கேட்டாள்.

அவள் இப்போதும் முகத்திலிருந்த கிரீமைத் தேய்த்துக் கொண் டிருந்தாள். வீட்டில் ஆழ்ந்த அமைதி-பிங்பாங் பந்தின் டக் டக் ஒலியைத் தவிர வேறு ஒலியில்லை. சரஸ்வதி கிரீம் தேய்த்து முடித்துவிட்டு, ஒரு வெள்ளைத் துணியை எடுத்து முகத்தில் அழுத்தித் தேய்க்கத் தொடங்கினாள். அழுத்தின அழுத்தலில் தோலே பிய்ந்துவிடும் போலிருந்தது. பிறகு வாஷ் பேசினுக்குப் போய் சோப்புப் போட்டு முகத்தைக் கழுவினாள். பிறகு இன்னொரு துணியால் முகத்தைத் துடைத்துக் கொண்டே சொன்னாள், "நல்ல வேளை, இன்னிக்கு நீங்க வந்தீங்க. நாள்பூரா வீட்டுக்குள்ளே அடைஞ்சு கிடந்து கிடந்து..."

"ஏன் வெளியே போறதில்லே நீ?"

"நான் போகக்கூடாதுன்னு அப்பா உத்தரவு."

"ஏன்?"

"வீட்டுக்கு வெளியில போனேன்னா கண்ட பேரோடே சேர்ந்து ஏதாவது களேபரம் பண்ணிடறேனாம்."

அவள் கண்ணாடிக்கு முன்னால் நின்று கொண்டு தலைமுடியை வாரிக் கொள்ளத் தொடங்கினாள். அவளுடைய செய்கைகளெல்லாமே முரட்டுத்தனமாயிருந்தன. அவள் வாரிக் கொள்வதைப் பார்த்தால் தலை முடி சீப்போடு வந்துவிடும் போலிருந்தது. அவள் கைகளைத் தூக்கும்போது நான் அவளுடைய இரண்டு மார்பகங்களையும் பார்க்க முடிந்தது— ஒன்றை நேரில், மற்றதைக் கண்ணாடியில். அவள் கண்ணாடிக்கு எதிரில் நின்று கொண்டிருந்தாள்.

நான் அவளுடைய பேச்சைச் சரியாகக் கவனிக்கவில்லை. "என்ன களேபரம்," என்று கேட்டேன்.

அவள் கண்ணாடியில் பார்த்துக் கொண்டே இயல்பாகச் சிரித்தாள். "உங்களுக்கு ஒண்ணும் புரியலியாக்கும்...? உங்க விஷயமெல்லாம் எனக்குத் தெரியும்."

தலை சீவி முடித்தபிறகு அவள் மறுபடி முகத்தில் கிரீம் தடவிக் கொண்டாள்.

நான் வியப்போடு கேட்டேன், "இதென்ன? முதல்லே கிரீம் தடவிக் கிட்டு சோப்புப் போட்டுக் கழுவிக்கிட்டே. இப்போ மறுபடி கிரீம் தடவிக்கிறியே!"

"உங்களுக்கு ஒண்ணும் தெரியாது! இது கிரீம் இல்லே, ஃபவுண்டேஷன். இதுக்கு மேலேதான் பவுடர் பூசிக்கணும்" என்று சொல்லிவிட்டு அவள் மேஜை டிராயரிலிருந்து ரோஜா நிறப் பவுடரை எடுத்து முதலில் முகத்தில், பிறகு கழுத்தில், காதுக்குப் பின்னால் பூசிக் கொண்டாள். பிறகு எனக்கு முதுகைத் திருப்பிக் கொண்டு பவுடர் பஃபைப் பிளவுஸ் இடுக்கில் நுழைத்துக் கொண்டாள். ஆனால் நான் பின்னாலிருந்து கண்ணாடியில் அவளது ப்ரதி பிம்பத்தைப் பார்க்கிறே னென்று அவளுக்குத் தெரியும். பிறகு அவள் மறுபடி ஒரு துணியை எடுத்து முகத்தையும் கழுத்தையும் துடைத்துக் கொண்டாள். தன்னை ஒரு நடிகையாகவும் என்னைப் பார்வையாளனாகவும் கருதியவள் போல அல்லது அவள் என்னை ஒரு காமிராவாகக் கருதி யிருக்கலாம்.

"என்ன இவ்வளவு அலங்காரம்? எங்கியாவது போகப்போறியா?"

"இல்லையில்லே" என்று சொல்லிக் கொண்டே அவள் உதட்டுச்சாயம் தடவிக்கொண்டாள். பிறகு யு-டி-கொலோன் பாட்டிலைக் கையில் எடுத்துக் கொண்டு, "ஏன், வீட்டிலே இருந்தா அலங்காரம் பண்ணிக்கக் கூடாதா? மனசு சந்தோஷமாயிருக்கத்தான் அலங்காரம் செஞ்சுக்கறேன்" என்று சொன்னாள்.

நான் கண்ணாடியில் பார்த்தபோது வெகு தூரத்தில் உட்கார்ந்து கொண்டு சரஸ்வதியைப் பார்த்துக் கொண்டிருப்பதாகத் தோன்றியது. ஒன்று மட்டும் நிச்சயம். எனக்கு அங்கே உட்கார்ந்திருக்கப் பிடிக்கவில்லை. எனக்கு அவள் மேல் ஆசை-காம உணர்வு- ஏற்பட்டிருக்கலாம். ஆனால் அது வேறு; 'மனதுக்குப் பிடிப்பது' வேறு. நான் வேண்டுமென்றே ஒரு காலை இன்னொரு காலால் அழுத்தி மிதித்தேன். இடது கால் விண்ணென்று வலித்தது. சிகரெட்டைப் பற்றவிட்டு எரியும் தீக்குச்சி கையைச் சுடும் வரை அதை வைத்துக் கொண்டே இருந்தேன்.

ஒரு வழியாக அலங்காரத்தை முடித்துக் கொண்டு மணமணக்கும் உடம்புடன் சரஸ்வதி என்னருகே கட்டிலில் வந்து உட்கார்ந்தாள். கட்டில் ஸ்பிரிங் ஒலியெழுப்பியது.

"சொல்லுங்க"

"என்ன சொல்றது?" நான் கேட்டேன்.

"நல்லாயிருக்கே! என் ரூமுக்கு வந்திருக்கீங்க. இவ்வளவு நேரமா உக்காந்திருக்கீங்க... ஒண்ணும் பேசமாட்டீங்களா?"

'என் ரூம்', 'உக்காந்திருக்கறது' இந்த வார்த்தையெல்லாம் புரிந்தது எனக்கு. 'பேச்சு' என்ற வார்த்தைதான் புரியவில்லை. அவள் என் பேச்சைக்

கேட்க விரும்புகிறாளா?

நான் அசட்டுச் சிரிப்பு ஒன்றை உதிர்த்து, "என்ன பேசணும், சொல்லு!"

"ஏதாவது பேசுங்களேன்!"

"நல்லதா ஏதாவது சொல்லணும்னா கொஞ்சம் யோசிச்சுப் பார்க்கணும். 'பார்க்க ரொம்ப அழகாயிருக்கே இப்போ'ன்னு சொல்லிப் பிரயோசனமில்லே. ஏன்னா இது ரொம்பப் பழசாயிடுச்சு. தவிர, எவ்வளவோ பேர் இதைச் சொல்லிக் கேட்டிருப்பே..."

"பழசாப்போன பேச்சைக்கூட நடுநடுவிலே கேக்க நல்லாத்தான் இருக்கு. ஹூம், நீங்க ஒண்ணும் பிரயோசனமில்லே...! உங்களுக்குக் கைரேகை பார்க்கத் தெரியுமா? அப்படீன்னா என் கையைப் பாருங்க."

நான் சிரித்துக் கொண்டே சொன்னேன், "இதுவும் ரொம்பப் பழசாப்போன சமாசாரந்தான். இந்தக் காலத்துக்கு உபயோகப்படாது... சரஸ், சித்திக்கு என்ன ஆச்சு? ரொம்பக் கடுமையான வியாதியா?"

"அப்படியொண்ணுமில்லே. அம்மாவுக்கு ஆஸ்துமா உண்டு. சில சமயம் மூச்சுத்திணறும். கொஞ்ச நாள் மழை பெய்ஞ்சது இல்லையா? அதிலே ஜாஸ்தியாயிடுச்சு... "

"அவங்களைப் பார்த்தா ஆஸ்துமாக்காரி மாதிரி இல்லே."

"ஆளைப்பார்த்தா எல்லாம் புரிஞ்சுடுமா...? "நீங்க ஒரு வடிகட்டின போக்கிரின்னு உங்க மூஞ்சியைப் பார்த்தாத் தெரியுதா?"

நான் உண்மையிலேயே திகைத்துப் போய்ச் சொன்னேன், "என்ன விஷயம், சொல்லு! என்னைப் பத்தி ஏன் இப்படி நினைக்கறே? நான் என்ன போக்கிரித்தனம் பண்ணினேன்?"

"அது போகட்டும்! நீங்க ஒண்ணும் அப்பாவி வேஷம் போட வேண்டாம். ஆம்பிளை அப்பாவி வேஷம் போடறது எனக்குக் கட்டோடு பிடிக்காது... எனக்கு ஒரு சிகரெட் கொடுங்க."

"ஊஹூம், பொம்பளைங்க சிகரெட் பிடிக்கறது எனக்குப் பிடிக்காது."

சரஸ்வதி ஹி-ஹி என்று உரக்கச் சிரித்தாள். இந்த மாதிரி சிரிப்பை நான் கேட்டதில்லை. எல்லாரும் ஹா-ஹா அல்லது ஹோ-ஹோவென்று சிரிப்பார்கள். சரஸ்வதியின் சிரிப்பு ஹி-ஹி— மரங்கொத்திப் பறவையின் கத்தல் போல் காதுக்குக் கொடூரமாக ஒலித்தது. குரல் மட்டும் கீச்சுக்குரல். அவள் எனக்கு வெகு அருகில் உட்கார்ந்திருப்பதால் அவளுடைய உடம்புச் சூட்டை என்னால் உணர முடிகிறது. வீடு முழுதும் அரவமே இல்லை. ரஸ்தாவிலிருந்தும் ஒலி இல்லை, பிங்பாங் விளையாட்டின் ஒலிகளும் நின்று போய்விட்டன... அப்படியானால் யமுனா இங்கு வரமாட்டாளா? யமுனாவைப் பெயர் சொல்லி உரக்கக் கூப்பிட விரும்பினேன் நான். பெரிய மைதானத்தில் நின்று கொண்டு உழவன் தன் காணாமற்போன மாட்டைக் கூப்பிடுவானே, அதுபோல. ஆனால் நான் இப்போது எழுந்திருந்து வெளியே போக முயற்சித்தால் சரஸ்வதி பெண்புலிபோல் என்மேல் பாய்ந்து, என் குரல்வளையைக் கிழித்து ரத்தத்தைக் குடித்து விடுவாள். அவளுடைய மிருதுவான முகத்துக்கும் உல்லாசமான கண் களுக்கும் பின்னால் ஒரு புலி இருப்பது எனக்குத் தெரியும். நான்

என்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அவளுடைய வளையணியாத கையை என் கையால் பிடித்துக் கொண்டு, "எனக்குக் கை பார்க்கத் தெரியாது. ஆனால் கையைப் பிடித்துக் கொள்ளப் பிடிக்கும்" என்று சொன்னேன். பிறகு திடீரென்று கேட்டேன், "நீ யாரையாவது காதலிச்சிருக்கியா?"

உற்சாகமில்லாமல் அவள் பதில் சொன்னாள், "இல்லே. காதலிக்க லாயக்கா யாராவது கிடைச்சாத்தானே!"

"நீ இப்பத்தானே சொன்னே, ரொம்பப் பேரோட உனக்கு சிநேகிதம்னு...?"

"ஆனா அவங்களிலே ஒருத்தருக்கும் காதலிக்கத் தெரியாது."

"அவங்களுக்குத் தெரியாமே இருக்கலாம். ஆனா நீ யாரையாவது காதலிச்சிருக்கலாமே! ஒருதலைக் காதல்தான் உண்மையான காதல்."

"என்னால யாரையும் காதலிக்க முடியாதுன்னு தோணுது. யாராவது என்னை நிசமாவே காதலிச்சா நானும் அவனைக் காதலிக்க முயற்சி பண்ணுவேன். அந்த மாதிரி யாரும் கிடைக்கலியே! அதனால இன்னும் காதல்ன்னா என்னன்னு தெரியல்லே எனக்கு. பசங்க் என்னைக் காதலிக்கிறதுக்கு முன்னாலேயே..."

நான் கிசுகிசுத்தேன், "உடம்பே, உடம்பே, உனக்கு மனசே இல்லையா."

என் பேச்சு அவளுக்குப் புரியவில்லை. "இதுக்கு என்ன அர்த்தம்?" என்று சாதாரணமாகக் கேட்டாள்.

"ஒண்ணுமில்லே. இது ஒரு மேற்கோள்..."

சரஸ்வதி படுக்கையில் சாய்ந்து கொண்டாள். அவளது கழுத் துக்குக்கீழே ஒரு தழும்பு கண்ணில் பட்டது. சூரிய காந்திப் பூப்போல் பரந்த மார்பகம். பிளவுசுக்கும் புடவைக்குமிடையே வெண்மையான வயிறு திறந்து கிடந்தது. அப்போதுதான் திறக்கப்பட்ட டின்னிலுள்ள வெண்ணெய் மாதிரி. தொப்புள்கூடச் சற்றுத் தெரிகிறது.

இந்தப் பெண்ணுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா? அவளைப் பார்க்க இரக்கமாயிருந்தது எனக்கு. இரண்டு மாதங்களுக்கு முன்னால் இவள் இந்த மாதிரி என்னை அழைத்திருந்தால் என்னிடமிருந்து தப்பியிருப் பாளா? நல்ல வேளை, தப்பிவிட்டாள்! இப்போது இவள் என்னிடம் பயப் படத் தேவையில்லை. எனக்குத்தான் இவளிடம் பயமாயிருக்கிறது. என் நெஞ்சில் இவளுக்காக வேதனை ஏற்படுகிறது. இது இவளுக்குப் புரியாது.

அவளது கை இன்னும் என் கையில் இருந்தது. நான் அதைச் சற்று அழுத்திவிட்டு, "சரஸ்வதி, என்னை மன்னிச்சுடு!" என்று சொன்னேன்.

அவள் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்து கொண்டு கேட்டாள், "நீங்க என்ன பண்ணிட்டீங்க, நான் மன்னிக்கறதுக்கு?"

"நிசமாத்தான் சொல்றேன், என்னை மன்னிச்சுடு!"

"ஏன் பைத்தியம் மாதிரி பேசறீங்க? நீங்க என்ன தப்பு பண்ணினீங்க?"

நான் என்னுள் பொங்கி வந்த அழுகையை அடக்கிக் கொண்டு கரகரத்தக் குரலில் சொன்னேன், "நான் உன்கிட்டே ஒரு தப்பும் பண்ணாம இருக்கலாம். இருந்தாலும் நான் மத்தவங்ககிட்ட செஞ்ச தப்புக்கெல்லாம் என்னை நீ மன்னிப்பியா?"

"நீங்க பைத்தியமா? மன்னிப்பைப் பத்திய பேச்சு எப்படி வந்தது இப்போ?"

"நான் எப்படி வேணும்னாலும் இருந்துட்டுப் போறேன். நீ என்னை மன்னிச்சதா சத்தியம் பண்ணு.'"

அவள் மென்மையாகச் சொன்னாள், "நல்லவேடிக்கை இது...! சரி, மன்னிச்சுட்டேன்."

"சரி, அப்ப நான் வரேன்."

"எங்கே போறீங்க...? கொஞ்சம் இருங்க!"

"என்னைப் போகவிடு...! சமர்த்துப் பொண்ணு!"

"சீ! உக்காந்திருங்க!"

எழுந்திருந்த என்கையைப் பிடித்து உட்கார வைத்தாள் அவள். பிறகு என் தலைமுடியைக் கோதிக் கொண்டே, "சின்னப்புள்ளே!" என்று கொஞ்சலாகச் சொன்னாள்.

நான் கெஞ்சும் குரலில் சொன்னேன், "சரஸ்வதி, இப்போ எனக்குப் போகணும்..."

"போகணும்னாப் போங்களேன்! நான் உங்களை இழுத்து வச்சுக்கிட்டிருக்கேனா,"

"சரி, வரவா?"

"நீங்க முன்னியோடே... ஒண்ணும் பண்ணலியே?"

நான் திடுக்கிட்டேன்— "என்ன உளர்றே?"

அவள் என் பேச்சைப் பொருட்படுத்தாமல் தொடர்ந்தாள்— "அவகிட்டே விஷமம் பண்ணாதீங்க. அவ ஒரு அசடு. தவிர, அவளுக்குத் தடினோடே கலியாணம் நிச்சயம் ஆயிடுச்சு."

"சீசீ! ஏன் என்னை இப்படியெல்லாம் சொல்றே?"

"ஏன் கோவிச்சுக்கிறீங்க? சும்மாத்தான் சொன்னேன்... முன்னி திடீர்னு எனக்குப் போட்டியா வந்துட்டா..."

"யமுனாவை எனக்கு ரொம்பப் பிடிக்கும்."

"அதோட வச்சுக்கங்க. அதுக்கு மேலே போயிடாதீங்க."

"நான் இப்போ கிளம்பியாகணும்."

"உக்காருங்களேன்! என்ன பிரமாத அலுவல் உங்களுக்கு? எனக்குத் தனியா இருக்கப் பிடிக்கலே. கொஞ்ச நேரம் பேசிக்கிட்டிருக்கலாம்."

"யமுனாவைக் கூப்பிடேன்! அவளைப் பார்க்கணும்போல இருக்கு."

சரஸ்வதி என்னைக் கூர்ந்து பார்த்தாள். பிறகு சொன்னாள், "அவ தடினோடே இருக்கா. இப்போ அவளைக் கூப்பிட்டா அவன் என்ன நினைச்சுக்குவான்?"

"அவளையும் கூப்பிடு. எல்லாரும் சேர்ந்து பேசிக்கிட்டிருக்கலாம்."

"ஊஹூம்... என்னோட பேச உங்களுக்குப் பிடிக்கலியாக்கும்?"

"உன்னோடே பேசத்தான் நிறையப்பேர் இருக்காங்களே!"

"இல்லே, யாரும் இல்லே."

நான் கட்டையாக உட்கார்ந்திருந்தேன். சரஸ்வதி என் தொடையில் பேண்டுக்கு மேலே தன் நகத்தால் கீறத்தொடங்கினாள். பிறகு என் ஒரு கையைத் தன் கையில் எடுத்துக் வைத்துக் கொண்டு, "ஆகா, எவ்வளவு

முரட்டுக் கை!" என்றாள். பிறகு திடீரென்று என் ஒரு விரலைத் தன் வாயில் வைத்துக் கடித்துவிட்டாள். நான் அசையாமல் இதையெல்லாம் பொறுத்துக் கொண்டிருந்தேன்.

அவள் சொன்னாள், "ஏன் பேசாமே இருக்கீங்க...? இதுவரை நான் பார்த்த ஆட்களெல்லாம் சின்னப்பிள்ளைங்க."

பிறகு அவள் என் மடியில் தலைவைத்துக் கொண்டு படுத்துவிட்டாள். நான் உடனே அவள் தலையைத் தூக்கி, "ஏன் இப்படி அசிங்கமா நடந்துக்கறே?" என்று சொன்னதும், அவள் ஆச்சரியத்தோடு என் பக்கம் திரும்பி, "என்ன ஆயிடுச்சு?" என்று கேட்டாள்.

நான் எழுந்து நின்று, "ஊஹூம், இதெல்லாம் வேண்டாம்... நான் வரேன்..." என்று சொன்னேன்.

அவள் முன்போல் ஆச்சரியத்தை வெளிப்படுத்திக் கொண்டு, "இப்போ என்ன அசிங்கம் நடந்துடுச்சு?" என்றாள்.

இதுவரையில் என் மனம் இளகியிருந்தது. இப்போது சட்டென்று எரிச்சல் தோன்றியது. நான் சொன்னேன், "இதெல்லாம் எனக்குத் தெரியும்! என்கிட்டே நடக்காது. ஆமா...! வரேன்."

"நீங்க மட்டமானவர்!"

"இருந்துட்டுப் போறேன். ஆனா நீ என்னை மன்னிக்கறதாச் சொல்லி யிருக்கே..."

"உங்களுக்கு மனசிலே அசிங்கம். அதனால்தான் எல்லாம் அசிங்கமாத் தெரியுது உங்களுக்கு.

"நான் எப்படி இருந்தாலும் சரி, நீ என்னை மன்னிக்கறதாச் சொல்லிட்டே."

"நீங்க ஒரு அல்பம்."

நான் அவளைக் கடுமையாகப் பார்த்தேன். என் உடல் ஒரு முறை சிலிர்த்தது. என் மூளை சிறிது நேரத்தில் குழம்பிவிட்டது. நான் சற்றுக் குனிந்தேன். அவளை என் இரு கைகளாலும் பிடித்து என் நெஞ்சோடு சேர்த்துக் கசக்கி, அவளது உதடுகளைக் கடித்து, "உடம்பே, உடம்பாலே எவ்வளவு விளையாட்டு விளையாட முடியும்னு காட்டறேன் பாரு!" என்று சொல்லத் தோன்றியது எனக்கு. ஆனால் ஓரிரு நிமிடங்களில் இந்த எண்ணம் மறைந்துவிட்டது. நான் என்னைச் சமாளித்துக் கொண்டு நிமிர்ந்து வறண்ட குரலில் சொன்னேன், "நான் அல்பமாயிருக்கறதே நல்லது. கண்ணியம் எனக்குத் தேவையில்லை."

நான் சட்டென்று கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தேன். சரஸ்வதியும் பின்னாலேயே வந்தாள். நான் மாடிப்படிகளில் இறங்கிக் கொண்டிருந்தபோது ஜகதீஷ்ராய் வீட்டுக்குள் நுழைந்தார். அவர் மழைக் கோட்டு அணிந்திருந்தார். அவர் ஒரு வினாடி என் பக்கம் பார்த்துவிட்டுப் பிறகு சரஸ்வதியின் பக்கம் திரும்பி, "சதி, டாக்டர் வந்தாரா?" என்று கேட்டார்.

என் பின்னாலிருந்து சரஸ்வதி பதில் சொன்னாள், "ஆமா அம்மா வுக்குத் தூக்க மருந்து கொடுத்துட்டுப் போனார்."

"மருந்துச் சீட்டைக் கொடு, பார்ப்போம்."

வராந்தாவில் யமுனா, தபன் இல்லை. பிங்பாங் மேஜையின் மேல் மட்டைகள்; வெள்ளைப் பந்து மேஜைமேல் காற்றில் அசைந்து கொண்டிருந்தது. நான் சோர்ந்த உடம்புடன் வெளியே வந்தேன்...



"என்ன, பைத்தியம் பிடிச்சுடுச்சா?"

என் கேள்விக்கு யாரும் பதில் சொல்லவில்லை. அவளைப் பார்த்தால் யாரும் பைத்தியமென்று தான் நினைப்பார்கள். அறையில் சாமான்கள் இறைந்து கிடக்கின்றன. நூர்ஜஹான் நீல சம்கி வைத்துத் தைத்த சேலையணிந்திருக்கிறாள்; பிளவுஸ் இல்லை. பிரா மட்டுந்தான் போட்டிருக்கிறாள். தலைமுடி கலைந்து கிடக்கிறது. முகத்தில் கண்மையும் கண்ணீரும் அப்பிக்கிடக்கின்றன. அவள் சுவரில் தலையை மோதிக் கொண்டு, நெஞ்சைப்பிழியும் குரலில் புலம்புகிறாள்—"என்னை அடையாளந் தெரியலே, அடையாளந் தெரியலே!"

சேகரும் அவிநாஷும் கால்களைத் தொங்கப்போட்டுக்கொண்டு கட்டிலில் மௌனமாக உட்கார்ந்திருக்கிறார்கள். கட்டிலின் நடுவில் சிந்தாமணி பாபு. அப்துல் ஹாலிம் அவள் பக்கம் கையை நீட்டி, "சாதனா, கேளு..." என்று ஆறுதல் சொல்ல முயல்கிறான். அவள் முரட்டுத்தனமாக அவனை ஒதுக்கித் தள்ளுகிறாள்.

அப்போது தான் கவனித்தேன்—கட்டிலின் சட்டத்தைப் பிடித்துக் கொண்டு ஒரு பத்து-பதினொரு வயதுப் பையன் வெளிறிய முகத்துடன் நின்று கொண்டிருப்பதை.

நூர்ஜஹான் சுவரில் மடார் மடார் என்று முட்டிக்கொள்ளும்ஒலி உரக்கக் கேட்டது. அவள் சட்டென்று திரும்பி அழுது கொண்டே கேட்டாள், "என்னை உனக்குத் தெரியல்லியா, ஜிதூ?"

பையன் பதில் சொல்லவில்லை.

அவள் ஓலமிட்டாள்—"ஜிதூ..."

வரலாற்று நாடகத்தில் சோகக் காட்சியில் நூர்ஜஹான் இத்தகைய குரலைத்தான் பயன்படுத்துவாள் சோகத்தை வெளிப்படுத்த. இப்போது அவளது சோகம் உண்மையானதாக, நெஞ்சையுருக்குவதாக இருந்தது. அறையில் வெகுநேரம் அந்த ஓலம் ஒலித்தது.

சிந்தாமணி பாபு எரிச்சலோடு சொன்னார்—"எது முடியும், எது முடியாதுங்கறதுக்கு ஒரு கணக்கு இல்லையா? இவன் ஏழெட்டு வருஷத்துக் கப்பறம் உன்னைப் பார்க்கறான். நீ போனபோது இவனுக்கு வயசு ரெண்டோ மூணோ!"

"எனக்கு அடையாளந் தெரியுதே! நான்..."

"அது வேறே விஷயம்... பையனை இங்கே கூட்டிக்கிட்டு வந்ததே தப்பு. இந்த மாதிரி சூழ்நிலையிலே ஒரு சின்னப் பையனை..."

"நீங்க சும்மா இருங்க...! ஜிதூ, என்னைத் தெரியலியா உனக்கு? ஜிதூ... என்னாலே தாங்க முடியல்லியே! எனக்கு ஏன் சாவு வரல்லே...!"

"ஏன் பையனை இப்படி அமுக்கறே? அவனுக்கு மூச்சுத் திணறும்!"

"நீங்க சும்மா இருங்க! இந்த ஆளை வாயை மூடச் சொல்லுங்களேன்! ஐயோ, என்ன வேதனை...!"

"சாதனா, அந்த மருந்தை சாப்பிடு" என்றான் அப்துல்ஹாலிம்.

சிந்தாமணி பாபு அலட்சியமாகச் சொன்னார், "மருந்து சாப்பிட்டு என்ன பிரயோசனம்?"

நூர்ஜஹான் அவரை அதட்டினாள், "உஸ், வாயை மூடுங்க! ஏன் அனத்தறீங்க...! ஐயோ, நான் சாகக் கூடாதா!"

சிந்தாமணி பாபுவுக்குக் கோபம் வந்துவிட்டது. அவர் கத்தினார், "இது என் ரூம்! இதையெல்லாம் நான் பொறுத்துக்க மாட்டேன்! வீணா, வீணா...!"

வீணா வெளியே இருந்தாள் அழுது கொண்டு. இப்போது உள்ளே வந்தாள். சிந்தாமணிபாபு அவளிடம் சொன்னார், "இவங்களை வெளியிலே அனுப்பு! எனக்கு இதெல்லாம் பிடிக்காது. நான் நாளைக் காலையிலே வரபோது இவங்க யாரும் இங்கே இருக்கக்கூடாது! ஆமா"

பிறகு அவர் எங்கள் பக்கம் திரும்பிச் சொன்னார், "நீங்க எல்லாரும் கண்ணியமான குடும்பத்தைச் சேர்ந்தவங்க. நீங்க இதிலே சம்பந்தப்படறது சரியில்லே. ஏதோ கொஞ்ச நேரம் சந்தோஷமாயிருக்கறதுக்காகத்தான் இங்கே வரோம். அதுக்குப் பதிலா இவ்வளவு அழுகை, ஒப்பாரி..."

நூர்ஜஹான் மூச்சிறைக்கச் சொன்னாள், "ஏன் அனத்தறாரு இவரு? சும்மா இருக்கச் சொல்லுங்களேன்!"

"சீ, நீ வாயை மூடு, சிறுக்கி!"

நூர்ஜஹான் அழுகையை நிறுத்தித் தலை நிமிர்ந்தாள். இப்போது அவளிடம் ராணியின் தோரணை. அமைதியான குரலில் அழுத்தமாகச் சொன்னாள், "நீங்க இந்த ரூமுக்காகச் செலவு செஞ்கிருக்கற பணத்தையெல்லாம் இப்பவே உங்களுக்குத் தந்துடறேன். நீங்க வெளியே போங்க! அப்துல், இந்த ஆளுக்குப் பணத்தைக் கொடுத்து அனுப்பு!

சிந்தாமணி பாபுவின் முகம் அவமானத்தால் சிவந்து விட்டது. அவர் திக்கித் திக்கிச் சொன்னார், "இவ தன்னோட பணத்திமிரைக் காட்டறாளா என்கிட்டே...! என்கிட்டே! நீங்க எல்லாரும் இதைக் கேட்டுக்கிட்டு சும்மா இருக்கீங்களே!"

எங்களில் எவரும் அவருக்குப் பதில் சொல்வது அவசியம் என்று நினைக்கவில்லை. அவர் வெற்றிலைப் பெட்டியைப் பட்டென்று மூடிக் கொண்டு எழுந்து நின்றார். பிறகு ஒன்றும் பேசாமல் அங்கிருந்து வெளியேறினார்.

அப்துல் ஹாலிமின் முகத்தில் பயம் தோன்றியது. வீணாவின் முகத்திலும் பையனின் முகத்தில் பயம். அவிநாஷின் முகத்தில் மட்டும் உணர்ச்சியே இல்லை. தொடர்ந்து அலறிக் கொண்டிருந்தாள் நூர்ஜஹான். அவளுக்குப் பைத்தியம் பிடிக்கும் அடையாளங்கள் தெளிவாகத் தெரிந்தன. பிரேசியர் அணிந்த அவளது பருத்த மார்பு ஒவ்வொரு மூச்சுக்கும் ஏறி இறங்கியது. அவளுக்கு மூச்சு விடக் கஷ்டமாயிருந்தது போலும். அவளுடைய விரிந்த கண்கள் இரத்தச் சிவப்பாயிருந்தன. அவள் கைகளை ஆட்டும்போது வளையல்கள் பலமாக ஒலித்தன. அப்துல் ஹாலிம் அவளை இரு கை

களாலும் இறுகப் பிடித்துக் கொண்டிருந்தான். அவள் அவன் பிடியிலிருந்து திமிறிப் பையனைக் கட்டிக் கொள்ள முயன்றாள். பயந்து போன பையன் மற்றவர்களின் உதவியை எதிர்பார்த்து அவர்களை மாறிமாறிப் பார்த்துக் கொண்டிருந்தான். நூர்ஜஹான் அசாதாரண பயத்தோடு பையனைப் பிடித்திழுத்து அவனது முகத்தைப் பலவந்தாக நிமிர்த்த முயல, அப்துல் ஹாலிம் அவனை அவளது பிடியிலிருந்து விடுவித்தான். அவளை மறுபடி பிடித்துக் கொள்ள முயன்ற நூர்ஜஹான் நிதானம் தவறித் தரையில் விழுந்தாள். அப்போது அவளுடைய தலை 'ணங்'கென்று தரையில் மோதியது கண்டு அதிர்ச்சியடைந்தேன் நான். வீணாவும் சேகரும் ஓடி வந்து அவளைத் தூக்கி மடியில் வைத்துக் கொண்டார்கள்.

அப்துல் ஹாலிம் பித்துப்பிடித்தவன் போல், "மண்டை உடைஞ்சு போச்சா? ரத்தம் வருதே!" என்று அலறினான்.

சேகர் அவனை சமாதானம் செய்தான். "அதெல்லாம் ஒண்ணுமில்லே. இப்போ என்ன செய்யறது? ஏதாவது மருந்து கொடுங்க"

"இப்போ மருந்து கொடுக்கமுடியாது. பல்லோட பல்லைக் கிட்டிச்சிக் கிட்டிருக்கா..."

"பின்னே என்ன செய்யணும்?"

"மூஞ்சியிலே கொஞ்சம் தண்ணி தெளிங்க. கொஞ்ச நேரத்திலே நினைவு வந்துடும்."

பையன் அசையாமல் அங்கேயே நின்று கொண்டிருந்தான். ஒல்லியான உடம்பு, அழகான முகம்- தாயன்பு கிடைக்காத பையன்கள் சாதாரணமாகச் சிறு வயதிலேயே கெட்டுப்போய் விடுவார்கள். ஆனால் இந்தப் பையனிடம் கெட்டுப்போன அறிகுறி எதுவுமில்லை.

நான் தணிந்த குரலில் அவிநாஷைக் கேட்டேன், "பையன் இங்கே எப்படி வந்தான்?"

"திருட்டுத்தனமாக் கூட்டிக்கிட்டு வந்திருக்கோம்" அலட்சியமாகச் சொன்னான் அவிநாஷ்.

நான் திடுக்கிட்டேன்—"திருட்டுத்தனமாவா?"

அவன் தோளைக் குலுக்கிக்கொண்டு சொன்னான், "வேற வழி இல்லாமே போச்சு. அந்த அஜய் ஒரு போக்கிரி. நூர்ஜஹான் கிட்டேயிருந்து பணம் பிடுங்கறதிலேயே குறி அவனுக்கு. ஆனா பையனைக் கொடுக்க இஷ்டமில்லே. பையன் மேலே ரொம்பப் பாசமாம்! அவனோட மூஞ்சியைப் பார்த்தா உடம்பிலே பாசம்னு ஒரு பொருள் இருக்கும்னே தோணலே. இங்கே நூர்ஜஹானோட நிலைமை ரொம்பப் பரிதாபம். தினம் நாலஞ்சு தடவை வலிப்பு வருது, மயக்கம் வருது, அலறியழுது ரகளை பண்றா..."

"பையனைக் கூட்டிக்கிட்டு வந்தது யாரு?" நான் கேட்டேன்.

"நான்தான்... ஆனா கூட்டிக்கிட்டு வந்தது சரியில்லேன்னு இப்போ தோணுது. பையனைப் பார்த்தாப் பாவமாயிருக்கு எனக்கு..."

எனக்கு ஒரே ஆச்சரியம். காரணம், அவிநாஷ் இதுவரை தான் தவறு செய்ததாக ஒப்புக்கொண்டதில்லை.

நான் திரும்பிப் பையனின் தோளை இலேசாகத் தொட்டேன். அவன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். நான்சொன்னேன், "பையா, பயப்படாதே!

வா, கட்டில்லே வந்து உக்காந்துக்கோ. உன்பேரு என்ன?"

"ஸ்ரீ இந்திரஜித்சென் குப்தா, அப்பா பேரு ஸ்ரீ அஜய்சென் குப்தா" உலர்ந்த குரலில் பதில் சொன்னான் சிறுவன்.

"என்ன கிளாஸ் படிக்கறே?"

"ஏழாங்கிளாஸ்."

"உன்னோட அம்மாவை உனக்கு அடையாளந் தெரியலே?"

"இது என் அம்மா இல்லே... என் அம்மா வீட்டிலே இருக்கா."

"வீட்டிலே இருக்கிறது உன் சின்னம்மா. இல்லேயில்லே, சின்னம்மா இல்லே, அவளும் ஒரு அம்மா... அந்த அம்மா உன் கிட்டே பிரியமா யிருக்காளா?"

"ஆமா"

"உன் அப்பா உன்கிட்டே பிரியமாயிருக்காரா?"

"ஆமா"

"இவ உன்னோட அம்மான்னு சொல்றா. இவளை உனக்குப் பிடிக்கலியா?"

"இல்லே. நான் வீட்டுக்குப் போறேன்."

"சரி, வீட்டுக்குப் போகலாம். பயப்படாதே. கேளு. நீ இப்போ பெரியவனாயிட்டே. நல்ல யோசிச்சுப்பாரு. வீட்டிலே உனக்கு ஒரு அம்மா இருக்கா, இங்கே இன்னொரு அம்மா இருக்கா. நீ ரொம்ப நாளாப் பார்க்காததாலே உனக்கு இவளை அடையாளந் தெரியல்லே. உன்னோட இந்த அம்மா டாக்காவிலே இருக்கா. அங்கே இவளுக்கு ஒரு பெரிய பங்களா இருக்கு. நீ இவளோட போனா உன்னை ரொம்பப் பிரியமா வச்சுக்குவா, நல்ல நல்ல திண்பண்டம் திங்கக் கொடுப்பா, நல்ல துணி மணியெல்லாம் வாங்கிக் கொடுப்பா... நீ இந்த அம்மாவோட போறியா,"

"ஊஹூம், எனக்கு வீட்டுக்குப் போகணும்."

"உன்னை வீட்டிலே கொண்டு போய் விடறோம், பயப்படாதே...! இந்த அம்மாகிட்டே இருக்க உனக்குக் கொஞ்சங்கூட ஆசையில்லையா? இவ உனக்காக எவ்வளவு கஷ்டப்படறா பாரு!"

சிறுவன் பேசவில்லை. நான் அவன் உடம்பைத் தடவிக்கொடுத்து, "இவ உன்னை நினைச்சு மயக்கமாயிட்டா பாரு. நீ என்ன சொல்றே?"

சிறுவனுக்கு அழுகை வரும் போலிருந்தது—"என்னை வீட்டிலே கொண்டுபோய் விடுங்க."

"போகலாம், இப்பவே போகலாம். உனக்குப் பசிக்குதா?"

"இல்லே."

நான் என் முகத்தைச் சிறுவனிடமிருந்து திருப்பிக் கொண்டு அவன் புரிந்து கொள்ளாமலிருப்பதற்காக ஆங்கிலத்தில் அவிநாஷிடம் சொன்னேன்,"பிரச்னை என்ன தெரியுமா? நூர்ஜஹான் மூஞ்சியிலே ஒரு அம்மாவுக்குரிய களையே இல்லே, அதனாலதான் பையனுக்கு இவளைத் தெரியல்லே. நீயே பாரு, இவளை யாராவது ஒரு அம்மாவா நினைக்க முடியுமா? இவளோட உடம்பு ஆம்பிளைங்களுக்காகத்தான், குழந்தை களுக்காக இல்லே."

அவிநாஷ் சொன்னான், "ஆனா பிள்ளைக்காக இவ தவிக்கற

தவிப்பு நிசந்தான், போலியில்லே... இந்த அழுகையை என்னாலே பொறுக்க முடியலே..."

"இவ என்னதான் கஷ்டப்படட்டும். பையனோட நிலைமையையும் பார்க்கணுமே! இவனாலே இவளை அம்மாவா ஏத்துக்க முடியல்லே... தவிர மாற்றாந்தாய்களைப்பத்தி நாம என்னதான் நினைச்சுக்கிட்டாலும் இவனோட சின்னம்மா இவன் கிட்டே பிரியமாத்தான் இருக்கா போலிருக்கு. பையனோட மூஞ்சியைப் பார்த்தாப் பாசத்துக்கு ஏங்கறதாத் தெரியல்லே..."

தரையிலிருந்த சேகர் சொன்னான், "நூர்ஜஹானோட கொஞ்ச நாள் இருந்தான்னா அவளைப் புரிஞ்சுக்குவான். இருவது இருவத்தஞ்சு வருஷத்துக்கப்பறங்கூட அம்மாவை அடையாளங் கண்டுக்க முடியும்..."

அவிநாஷ் அவனை அதட்டினான். "சீ, உளறாதே! அதெல்லாம் நாவல்-நாடகத்திலேதான் நடக்கும். பையன் அம்மாவுக்காக ஏங்காதபோது அவன் இங்கே இருக்கவேண்டிய அவசியமென்ன? அதைத் தவிர, ஒரு பையனை ஒளிச்சு வைக்கறது சுலபமா?"

நூர்ஜஹானுக்கு நினைவு திரும்பிக் கொண்டிருந்தது. வீணா ஸ்பூனில் மருந்தை எடுத்து அவள் வாயில் ஊற்றினாள். நூர்ஜஹான் கண்களைத் திறந்து மலங்க மலங்க விழித்துக்கொண்டு பெருமூச்சு விட்டாள்.

அப்துல் ஹாலிம் எங்களிடம் வந்து "இப்போ என்ன செய்யறது, சொல்லுங்க!" என்று கேட்டான்.

அவனைப் பார்க்கப் பாவமாயிருந்தது எனக்கு. அவன் நிலை உண்மையிலேயே பரிதாபந்தான். வெளிநாட்டிலிருப்பதால் அவன் தளர்ந்து போயிருந்தான். அவனுக்கு இந்த நாடகத்தில் தன் பங்கு என்ன என்று தெளிவாகப்புரியவில்லை. அவனுக்கு ஆறுதலாக அவன் தோளைத் தொடத் தோன்றியது எனக்கு.

அவிநாஷ் புருவத்தைச் சுளித்துக் கொண்டு அவனைக் கேட்டான், "நீங்க ஏன் இவளைக் கல்கத்தாவுக்குக் கூட்டிக்கிட்டு வந்தீங்க?"

"கூட்டிக்கிட்டு வராம வேறே வழியில்லாமே போச்சு. இங்கே வர்றதுக்கு நாங்க பட்ட கஷ்டத்தை உங்களாலே நினைச்சுக் கூடப் பார்க்க முடியாது. கூட்டிக்கிட்டு வரல்லேன்னா சாதனா அங்கேயே செத்துப் போயிருப்பா."

"சரிதான், நீங்கதான் பார்த்தீங்களே, அவ ஆசைப்படி நடக்காது. பிள்ளையைக் கண்ணால பார்த்த திருப்தியோடே ஊருக்குத் திரும்பிப் போகட்டும்."

"ஆனா திரும்பி வரமாட்டேங்கறாளே! பிள்ளை கிடைக்கலேன்னா இங்கேயே இருப்பாளாமே!"

நான் சொன்னேன், "அது நடக்காது! இங்கே இருக்க முடியாது. இவ திரும்பிப் போகத்தான் வேணும்!"

அவிநாஷ் ஆச்சரியத்தோடு என்னைக் கேட்டான், "ஏன் இப்படிச் சொல்றே?"

"சாதனா இங்கே இருக்கறது சரியில்லேன்னு எனக்குத் தோணுது. அவ ஒரு தடவை இங்கேயிருந்து ஓடிப்போயிட்டா, மறுபடி திரும்பிவந்து தங்க முடியாது. பணத்துக்கும் சுகத்துக்கும் ஆசைப்பட்டுக் குடும்பத்தை

விட்டுட்டு ஓடிப்போனா. இவ விரும்பினது கிடைச்சது. இப்போ குழந்தையும் வேணும்னா என்ன அர்த்தம்? உலகத்திலே எல்லா நன்மையும் ஒருத்தருக்குக் கிடைச்சாகணுமா?"

"நீங்க என்னை வெறுக்கறீங்க, இல்லையா? அன்னிக்கும் உங்க பேச்சைக் கேட்டு அப்படித்தான் தோணிச்சு." அப்துல் ஹாலிம் சொன்னான்.

"நான் ஒரு பொண்ணோட மூணாவது புருஷனை—அவன் பம்பாயிலே இருக்கற ஒரு தொந்திக்காரனா இருந்தாலும்-வெறுக்கத்தான் செய்வேன்!.. நீங்க இவளைக் கூட்டிக்கிட்டுப் போயிடுங்க..."

"நீங்க ஒருவேளை நம்பமாட்டீங்க, நான் நெசமாவே இவளை நேசிக்கறேன். இவ திரும்பிப் போக மாட்டேங்கறா, இவளை இங்கே விட்டுட்டு நான் போகமாட்டேன்! இப்போ இவளோட நிலைமையைப் பார்த்து எனக்கு இன்னும்... என்னை நம்புங்க, இவளை நெசமாவே நேசிக்கறேன்."

அவிநாஷ் எரிச்சலோடு சொன்னான், "நீங்களும் உங்க நேசமும்...! இப்போ இந்தச் சிக்கலை எப்படித் தீர்க்கப்போறீங்க?"

"நூர்ஜஹான் மெதுவாகக் கேட்டாள், "அவன் போயிட்டானா...? வீணா, அவன் போயிட்டானா? ஜிதூ...! ஐயோ, நான் ஏன் சாகல்லே?"

சேகரின் மார்பில் சாய்ந்து கொண்டு விம்மத் தொடங்கினாள் அவள்.

சேகர் சொன்னான், "வீணா, இவளைப் பிடிச்சுக்கோ... எனக்கு மறுபடி தலைசுத்துது..."

நான் சிறுவனின் தோளைத் தொட்டுச் சொன்னேன். "நீ நல்ல பையன். ஒரு தடவை இவகிட்டே போ. உன்அம்மான்னு நினைச்சுக்க வேண்டாம். யாரோ ஒரு பொம்பளைகிட்டே போற மாதிரி போ. போய் இவகிட்டே கொஞ்சம் உக்காரு."

நூர்ஜஹானின் புடவை அலங்கோலமாயிருந்தது. அவளுடைய வெளுப்பான தொடை திறந்து கிடந்தது. ஒரு சிறுவன் பார்க்கத்தக்க காட்சியல்ல அது. நான் சேகருக்கு ஜாடை செய்தேன். அவளுடைய உடையைச் சரி செய்யும்படி.

சிறுவன் பயந்திருந்தான், குழம்பியிருந்தான், அசையவில்லை.

"வா, என்னோடே வந்து இவகிட்டே உக்காரு" என்றான்அவிநாஷ்.

அவன் சிறுவனைக் கட்டிலிலிருந்து இறக்கியதுமே நூர்ஜஹான் சிறுவன் மேல் விழுந்து அரற்ற ஆரம்பித்தாள்— "ஜிதூ, ஜிதூ... அவர், உன் அப்பா, உன்னை அடிக்கறதில்லையே? நீ என்னோட வரமாட்டியா என் தங்கமே! நான் உனக்காக எவ்வளவு பெரிய வீடு கட்டியிருக்கேன்! ஐயோ, எனக்கு நெஞ்சு வலிக்குதே! இன்னும் ரொம்ப நாள் பிழைச்சிருக்க மாட்டேன் நான்...! நீ என்னோட வந்து இருக்கியா?"

இவ்வளவு நேரம் பேசாமலிருந்த சிறுவன் இப்போது உரக்க அழத் தொடங்கிவிட்டான். அந்த அழுகையில் அறை முழுதும் ஸ்தம்பித்துவிட்டது. பையன் கடைசியில் தன் தாயை அடையாளங் கண்டுகொண்டுவிட்டான் என்றுதான் நாங்கள் எல்லாரும் நினைத்தோம். தாயின் கர்ப்பத்திலிருந்து வெளிவரும் போது அழும் குழந்தை இப்போது இரண்டாம் முறையாகத்

தாயைப்பெற்று அழுகிறது போலும்! எங்கள் கண்களும் பனித்தன.

சிறுவன் அவிநாஷைக் கட்டிக்கொண்டு விம்மினான். "என்னை வீட்டுக்குக் கூட்டிக்கிட்டுப் போங்க...!. நான் இங்கே இருக்கமாட்டேன்!"

அவிநாஷ் சொன்னான், "எனக்கு இந்த அழுகையெல்லாம் பிடிக்கலே. பையா, உனக்கு இங்க இருக்கப் பிடிக்கல்லியா?"

"இல்லே..."

"சரி வா, உன்னை வீட்டிலே கொண்டுபோய் விட்டுடறேன்"

நூர்ஜஹான் மண்டியிட்டு உட்கார்ந்து, சிறுவனின் இடுப்பைக் கட்டிக்கொண்டு, "போகாதே, போகாதே!" என்றாள்.

அவிநாஷ் அவளிடம் மென்மையாகச் சொன்னான், "நூர்ஜஹான், நீ இவனை ஒரு தடவை கண்ணால பார்த்தியே, அதுவே பெரிசு. இப்ப விட்டுடு இவனை... இவனுக்கு இங்கே இருக்க இஷ்டமில்லே..."

"இலலே, இல்லே, விடமாட்டேன்!"

அவிநாஷ் சிறுவனைப் பலவந்தமாக நூர்ஜஹானின் பிடியிலிருந்து விடுவித்து, "பையா வா..." என்றான்.

சேகர் வேகமாக எழுந்து வந்து, "இப்போ கூட்டிக்கிட்டுப் போகாதே. இன்னுங் கொஞ்ச நேரம் பையன் இங்கே இருக்கட்டும்" என்று சொன்னான்.

அவிநாஷ் சொன்னான், "இனிமேலும் இவனை இங்கே நிறுத்தி வைக்கறதிலே அர்த்தமில்லே. இவனை இங்கே கூட்டிக்கிட்டு வந்து மூணு மணி நேரமாச்சு. ஒண்ணும் சாப்பிடலே இவன். 'வீட்டுக்குப்போறேன், வீட்டுக்குப்போறேன்'னு புலம்பறான். இவனைப் பொருத்தவரையிலே நூர்ஜஹான் இவனோட அம்மா இல்லே, வீட்டிலே இருக்கறவதான் அம்மா!"

"இவன் இப்போதைக்கு இங்கேதான் இருக்கணும்!" சேகர் உறுதியாகச் சொன்னான், "நூர்ஜஹானோட நிலையைப் பார்த்தியா?"

"நூர்ஜஹானோட நிலைமைக்குப் பரிகாரம் சிகிச்சைதான், இந்தப் பையன் இல்லே."

அவிநாஷை இறுகப்பிடித்துக் கொண்டிருந்த சிறுவனைப் பலவந்தமாக இழுக்க முற்பட்டான் சேகர்.

அவிநாஷ் அவனிடம் கடுமையாகச் சொன்னான், "சேகர், நீ அசட்டுத் தனம் பண்ணினா உன்னையும் உதைப்பேன். நான்தான் பையனைக் கூட்டிக்கிட்டு வந்தேன், நானே வீட்டிலே கொண்டுபோய்ச் சேர்த்துடறேன். நீ விட்டுடு..."

அப்படியும் சேகரும் நூர்ஜஹானும் சிறுவனை அவிநாஷிடமிருந்து பிடுங்கிக் கொள்ள முயற்சி செய்தார்கள். அவிநாஷ் அவர்களை முரட்டுத் தனமாக உதறித் தள்ளிவிட்டு என்னிடம் சொன்னான், "சுநீல், இவங்களைத் தடுத்துவை."

நான் வேகமாகப்போய் சேகரையும் நூர்ஜஹானையும் மறித்து நின்று கொண்டு அப்துல் ஹாலிமிடம் அமைதியாகச் சொன்னேன், "நீங்க இதிலே தலையிடாதீங்க!"

"நான் செய்யறதுக்கு ஒண்ணுமில்லே" என்று சொல்லி நகர்ந்து கொண்டான் அப்துல்.

அப்படியும் நூர்ஜஹான், "அப்துல், இவனைப் பிடிச்சுக்க! எனக்கு ஜிதூ வேணும்! என்று கத்தினாள்.

சிறிது நேரம் இழுபறிப் போராட்டம். அவளுடைய இரும்புப் பிடியில் சிறுவனுடைய கை சுளுக்கிக் கொண்டு விட்டது. நான் ஒரே இழுப்பில் நூர்ஜஹானை என் பக்கம் இழுத்துக் கொண்டேன். அவிநாஷ் சிறுவனை அவளிடமிருந்து விடுவித்துத் தோளில் போட்டுக் கொண்டு கதவைத் திறந்து வெளியேறினான். நூர்ஜஹான் கதவுவரை ஓடிப்போய்க் கீழே விழுந்துவிட்டாள். அவிநாஷ் தள்ளிய தள்ளலில் தலைகுப்புற விழப் போன சேகர் தன்னைச் சமாளித்துக் கொண்டு அங்கேயே நின்றுவிட்டான்.

நான் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு அப்துலிடம் "சிகரெட் இருந்தாக் கொடுங்க" என்று சொன்னேன்.

பிறகு மௌனமாக சிகரெட் பிடிக்கத் தொடங்கினேன். வீணா கீழே விழுந்துகிடந்த நூர்ஜஹானுக்குப் பக்கத்தில் போய் உட்கார்ந்தாள். அவள் வாய் திறக்கவில்லை. அந்த வீட்டில் எல்லா ஃப்ளாட்டுக்களிலுமே வீணா போன்றவர்களே வசித்து வந்ததால் இந்தக் கலாட்டா சத்தத்தைக் கேட்டு யாரும் அங்கு வந்து எட்டிப் பார்க்கவில்லை. இந்த மாதிரி நிகழ்ச்சிகள் அங்கே சகஜந்தான்.

சேகரைப் பார்க்கப் பாவமாயிருநதது. அவன் கண்கள் குழி விழுந் திருந்தன. தலைமுடி சடையாகப் போயிருந்தது. அவன் விரும்பி வந்த 'விடுமுறை' இதுதானா? நான் மனதுக்குள் முடிவு செய்தேன்—இன்று எப்படியாவது சேகரை அவனுடைய வீட்டில் கொண்டு போய்ச்சேர்க்க வேண்டும். நான் அவனுடைய அம்மாவுக்கு வாக்குக் கொடுத்திருக்கிறேன். எனக்குத்தான் திரும்பிப்போக வழிஇல்லை. சட்டென்று யமுனா நினைவு வந்து நெஞ்சு வலித்தது.

நான் யமுனாவின் வீட்டிலிருந்து வந்த பிறகு இரண்டு நாட்கள் வேறெங்கும் போகவில்லை. மாலை நேரத்தில் அறையில் படுத்துக் கிடந்தேன். நான் நினைப்பதெல்லாம் எதிர்மாறாக நடந்துவிடுகிறது. யமுனாவை அடைந்ததில் நான் பிழைத்துப்போனேன். திருந்திவிட்டேன். இதில் என்ன தவறு? கடைசியில் யமுனா எனக்குக் கிடைக்கவில்லை. அவள் வீட்டுக்கு இரண்டு முறை போன் செய்தேன். இருமுறையும் சரஸ்வதிதான் போனை எடுத்தாள். நான் சலித்துப்போய் போனை வைத்துவிட்டேன். யமுனா எனக்குக் கிடைக்க மாட்டாள் என்று எனக்குப் புரிந்துவிட்டது. ஆனால் மாலை வேளைகளில் அறைக்குள் முடங்கிக் கிடப்பது என் இயற்கையல்ல.

நான் ஒரு பெருமூச்சு விட்டுவிட்டுச் சொன்னேன், "சேகர், வா வீட்டுக்குப் போகலாம்."

அவிநாஷ் போய்ப் பத்து நிமிடங்கூட ஆகியிருக்காது. கீழ்த்தளத்தில் ஏதோ சத்தம். பிறகு பலபேர் மாடிப்படிகளில் ஏறி வரும் அரவம் கேட்டது. வீணாவின் அறைக்கதவைத் தட்ட அவசியம் ஏற்படவில்லை. கதவு திறந்தேயிருந்தது. போலீஸ் அறைக்குள் நுழைந்தது.

போலீசாருடன் வந்த ஒரு ஒல்லி மனிதன் நூர்ஜஹானைக்காட்டி ஆத்திரத்தோடு சொன்னான், "இந்தப் பொம்பளைதான்!"

நூர்ஜஹான் திடுக்கிட்டு அந்த மனிதனைப் பார்த்தாள். அவளுடைய பார்வையிலிருந்தே புரிந்தது. அவன்தான் அவளுடைய முதல் புருஷன் அஜய் என்று.

அறைக்குள் ரிவால்வர் சகிதம் இரண்டு போலீஸ் இன்ஸ்பெக்டர்கள், வெளியிலும் சில போலீஸ்காரர்கள். ஒரு இன்ஸ்பெக்டரை-டக்ளஸ் போல் மீசை வைத்திருந்தவனை—எனக்குத் தெரியும். அவனைத்தான் "சன்யால் அண்ணா" என்று அழைத்தாள் சரஸ்வதி. அவனுடைய ஜீப்பில்தான் ஒரு நாள் நானும் சரஸ்வதியும் போனோம். நான் அவனைப் பார்த்துச் சிரித்தேன். அவன் என்னைத் தெரிந்து கொண்டதாகக் காட்டிக் கொள்ள வில்லை. கடுமையான குரலில் பொதுவாகக் கேட்டான், "பையன் எங்கே?"

யாரும் பதில் சொல்லவில்லை. நூர்ஜஹான் மட்டும் பைத்தியச் சிரிப்பு சிரித்துக் கொண்டு, "பையன் இல்லே... ஒரு பையனும் இல்லே... யாருக்கும் பையன் கிடைக்க மாட்டான்..." என்றாள்.

வீணா இப்போது பேசினாள், "யாரைப்பத்திப் பேசறீங்க? இங்கே பையன் யாரும் இல்லே."

ஒரு இன்ஸ்பெக்டர் அவளை அதட்டினான்.

ஒல்லி ஆள், "ஜிதூ... ஜிதூ! வெளியே வா!" என்று கத்தினான்.

சன்யால் சட்டென்று அப்துல் ஹாலிமின் சட்டைக்காலரைப் பிடித்துக் கொண்டு, "பையனை எங்கே ஒளிச்சு வச்சிருக்கே? கொண்டு வா அவனை!" என்றான்.

அப்துல் அலட்சியமாக அவனுடைய கையைப் பிடித்துக்கொண்டு உறுதியான குரலில் சொன்னான், "என்மேல் கை வைக்காதீங்க! வேணும்னா என்னை ஸ்டேஷனுக்குக் கூட்டிப்போங்க. அங்கே நான் சொல்ல வேண்டியதைச் சொல்றேன்."

நானும் சேகரும் அப்துலுக்கு அருகில் போய் நின்று கொண்டோம். "மரியாதையாப் பேசுங்க!" சேகர் சன்யாலிடம் உறுமினான்.

சமையலறை உட்பட வீணாவின் ஃபிளாட்டும் வீட்டில் மற்ற ஃபிளாட்டுகளும் சோதனை போடப்பட்டன. அப்புறம் இன்ஸ்பெக்டர் எல்லாரையும் பார்த்துச் சொன்னான், "அஞ்சு நிமிஷத்திலே தயாராயிடுங்க. எல்லாரும் ஸ்டேஷனுக்கு வரணும்!"

கம்பி வலை போட்ட போலீஸ் வண்டியில் எற்றப்பட்டு ஜோடா பாகான் போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்தோம். தூறிக்கொண்டிருந்தது அப்போது. சேகர் வீணாவின் தோளில் சாய்ந்தவாறு வண்டியிலிருந்து இறங்கினான். அவனுக்கு இன்னும் தலைசுற்றல் நிற்கவில்லை. அப்துல் நூர்ஜஹானைக் கீழே இறக்கினான். அவள் இன்னும் அரை மயக்க நிலையில் இருந்தாள். எங்களை நேரே லாக்-அப் அறைக்குக் கொண்டு போகாமல் ஸ்டேஷன் ஆபீசரின் அறையில் ஒரு பெஞ்சியில் உட்கார வைத்தார்கள்.

ஆபீசர் எங்களை எச்சரித்தார். "இப்போ நீங்க ஒருத்தருக்கொருத்தர் பேசிக்கக் கூடாது!"

சேகர் சாதாரணமாகக் கேட்டான், "எங்க மேல என்ன குற்றச்சாட்டு சொல்றீங்களா?"

ஆபீசர் தலைநிமிர்ந்து அவனைப் பார்த்தார். ஆனால் பதில் சொல்ல வில்லை. மறுபடி பைல்களில் மூழ்கிவிட்டார். நாங்கள் பேசாமல் உட்கார்ந் திருந்தோம். சிகரெட் பிடிப்பது உசிதமில்லை என்ற நினைத்ததால் .சிகரெட்டும் பற்ற வைத்துக் கொள்ளவில்லை.

யார் யாரோ வந்து போய்க்கொண்டிருந்தார்கள் அங்கே. போலீஸ் காரர்களிடையேயும் வம்புப் பேச்சு. யாரோ ஒரு விசாரணைக் கைதியைப் பற்றிப் பேச்சு வந்தது. அவன் தினம் பஜனைப் பாட்டுப் பாடி மற்ற கைதிகளை எழுப்பி விடுவானாம். அந்தக் கதையைக்கேட்டு எனக்கும் சிரிப்பு வந்தது. ஆனால் கைது செய்யப்பட்டவன் போலீஸ்காரனின் பேச்சைக் கேட்டுச் சிரிப்பது உசிதமில்லை என்று நினைத்துச் சிரிப்பை அடக்கிக் கொண்டேன்.

ஒரு கான்ஸ்டபிள் எங்களைச் சுட்டிக்காட்டி ஆபீசரிடம் கேட்டான், "சார், இவங்களுக்கு ராத்திரிச் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்யணுமா?"

ஆபீசர் எங்கள் பக்கம் ஒரு பார்வையை வீசிவிட்டு, "ஆமா, ஆமா... விருந்துக்கு ஏற்பாடு பண்ணு... இன்னும் ஹெட் ஆபீசிலேருந்து உத்தரவு வரல்லே..." என்று சொன்னார்.

டெலிபோனில் பேச்சு வார்த்தைகள் நிகழ்ந்தன. எனக்குத் தூக்கம் வரும் போலிருந்தது. எங்களை மறுபடி வண்டியிலேற்றி லால்பஜார் போலீஸ் தலைமையகத்துக்குக் கூட்டி வந்தார்கள். கேட்டைத் தாண்டி உள்ளே நுழைந்ததும் வண்டி நின்றுவிட்டது. நான் முன்பு இரண்டு மூன்று போலீஸ் ஸ்டேஷன்களுக்குப் போயிருக்கிறேன், லால்பஜாருக்கு வந்த தில்லை. லால்பஜாரில் வெகுதூரம் உள்ளே போனால்தான் லாக்-அப் அறை என்று நினைத்திருந்தேன். ஆனால் எங்களை ஒரு சாதாரண அறையில் உட்கார வைத்தார்கள். அது லாக்-அப் அறையாகத் தோன்ற வில்லை. அதன் கதவு மட்டும் இரும்புக் கம்பிகளால் ஆனது. அங்கு வெகு நேரம் உட்கார்ந்திருந்தோம். என் சிகரெட்டுகளும் தீர்ந்து போய்விட்டன.

முதலில் சிறிது நேரம் பேசாமலே இருந்தோம். பிறகு சேகர் சொன்னான், "நல்லாத்தான் இருக்கு இங்கே. இந்த ரூமிலே காத்தும் இருக்கு, வெளிச்சமும் இருக்கு... சுநீல், நாம் ஜெயிலுக்குப்போகணுமா?"

"எனக்கெப்படித் தெரியும்!"

"ஜெயிலுக்கு அனுப்பினா என் வேலை போயிடும். ஒரு நாள் ஜெயில்லே இருந்தாலும் வேலை போயிடும்னு கேள்விப்பட்டிருக்கேன்... உனக்குக் கவலையில்லே, அக்கா புருஷனோடே ஆபீஸ்!"

நான் சிரித்துக் கொண்டு சொன்னேன், "ஜெயில் தண்டனை யாருக்காவது கிடைக்கறதுன்னா, வீணாவுக்குத்தான் கிடைக்கும்."

"ஏன்? அவ என்ன குத்தஞ் செஞ்சா?"

"அவமேல ஒரு குத்தமும் இல்லே, அதனாலதான்! ஒருத்தன் செஞ்ச குத்தத்துக்கு இன்னொருத்தன் தண்டனை அனுபவிக்கறதுதான் உலக நியதி."

"குத்தம் என்னன்னு சொல்லு!"

"அது தெரியாது."

"நல்லவேளை, அவிநாஷ் சரியான சமயத்திலே பையனைக் கூட்டிக்

கிட்டுப் போயிட்டான்."

"என்ன இருந்தாலும் வீணாவுக்கு ரெண்டு மூணு வருஷம் ஜெயில் வாசம் நிச்சயம்."

முயற்சி செய்தும் சிரிக்க முடியவில்லை வீணாவால்.

சேகர் அப்துலைப் பார்த்துச் சொன்னான், "பாவம், நீங்க இவ்வளவு தூரம் வந்து அனாவசியமா மாட்டிக்கிட்டீங்க. டாக்காவிலே சௌக்கியமா இருந்தீங்களே!

வசமாக மாட்டிக் கொண்ட ஒரு பூனை போலக் காட்சியளித்தான் அப்துல். சிரிக்க முயற்சித்தவாறு சொன்னான், "என்ன இருந்தாலும் இது என் வீட்டுக்காரியோட விவகாரம், எனக்கும் இதிலே பொறுப்பு இருக்கு. நீங்கதான், பாவம், அனாவசியமா இந்தச் சிக்கல்லே மாட்டிக்கிட்டிருக் கீங்க! இப்போ ஆபத்தாயிடுச்சு."

சேகர் சோகமாகச் சொன்னான், "ஜெயில் தண்டனையிலே என்ன ஆபத்து இருக்கு? சுநீல், நீ என்ன சொல்றே?"

"நீ என்ன வேணும்னாலும் சொல்லு, எனக்குப் பயமாத்தான் இருக்கு. நான் ஒப்புத்துக்கறேன். மானம், கௌரவம்னு ஒண்ணு இருக்கு, இல்லையா?"

நூர்ஜஹான் பேயறைந்தவள் போல் வெளிறிய முகத்துடன் அப்துலுடன் ஒட்டிக்கொண்டிருந்தாள். அப்துலிடம் ஏதோ கிசுகிசுத்தாள். அப்துல் தயக்கத்தோடு சேகரிடம் ஏதோ ரகசியமாகச் சொன்னான். சேகர் காவலாளியைக் கூப்பிட்டுத் தணிந்த குரலில் ஏதோ சொன்னான்.

காவலாளி அலட்சியமாக உரத்த குரலில் பதில் சொன்னான். "இப்போ சும்மா இருக்கச் சொல்லுங்க! இங்கே பொம்பிளைங்களுக்கு பாத்ரூம் இல்லே"

பாத்ரூம்களுக்கு வெளியே 'ஆண்கள்', 'பெண்கள்' என்று எழுதி வைத்திருப்பதைப் பார்த்திருக்கிறேன். அவற்றுக்கு உள்ளே என்ன வித்தியாசம்? பெண்களின் பாத்ரூமின் உள்ளே பார்த்திராததால் எனக்குப் புரியவில்லை.

சிறிது நேரத்துக்குப் பிறகு அறைக்கு வெளியே வராந்தாவில் லாட மடித்த ஷூக்களின் ஓசை கேட்டது. யாரோ வெகு தூரத்திலிருந்து நடந்து வருவது போல. பிறகு ஒரு காவலாளி எங்கள் அறைவாசலுக்கு வந்து, "சுநீல் கங்கூலி யாரு?" என்று கேட்டு, "என்னோட வாங்க!" என்றான்.

எனக்கு ஒரே வியப்பு. எதற்கு என் பெயரை முதலில் கூப்பிடு கிறார்கள்? மற்றவர்களும் ஆச்சரியத்தோடு என்னைப் பார்த்தார்கள்.

சேகர் என்னைக் கேட்டான், "என்ன விஷயம்?"

"தெரியல்லே. போய்ப்பார்க்கலாம்" என்று சொல்லிவிட்டுப் புறப் பட்டேன். காவலாளி என் கையை இறுகப் பிடித்துக் கொண்டான்.

"கையை விடு! உன்னோடதான் வரேனே" என்று சொன்னேன்.

அவன் என் பக்கம் திரும்பிப் பார்த்தான், ஆனால் கைப்பிடியை விடவில்லை.

மாடிப்படிகளில் ஏறிப் பல அறைகளைக் கடந்து ஓர் அறைக்குள் கொண்டு போகப்பட்டேன். அங்கே மேஜையின்முன் அமர்ந்திருந்தவரைப்

பார்த்து நான் திடுக்கிட்டிருக்கக்கூடாது. யமுனாவின் அப்பா லால்பஜாரில் வேலை பார்க்கிறார் என்பதை மறந்தே போய்விட்டேன் நான்.

ஜகதீஷ்ராய் ஒரு நாற்காலியைக் காட்டி "உக்காரு!" என்று சொன்னார். பிறகு பேசாமல் ஒரு தடிமனான பைலின் பக்கங்களைப் புரட்டத் தொடங்கினார். மேஜைக்கருகில் ஒருவர் குனிந்தவாறு ஏதோ எழுதிக் கொண்டிருந்தார். என்னைக் கூட்டி வந்த காவலாளி மௌனமாக என் பின்னால் நின்று கொண்டிருந்தான். அறையில் கடிகாரத்தின் 'டிக்டிக்' தவிர ஒலியேதும் இல்லை. எனக்க சங்கடமாயிருந்தது. பொறுமையிழந்து ஒரிரு முறை 'உஸ்... உஸ்' என்று ஒலியெழுப்பினேன். எதுவும் கண்டு கொள்ளவில்லை.

ஜகதீஷ்ராய் தலையை நிமிர்த்தாமலேயே காவலாளியிடம், "ஃபாரினர்ஸ் என்ட்ரி ஃபைல் எடுத்துக்கிட்டு வா" என்று சொல்ல, அவன் எங்கேயோ போய்ச் சிறிது நேரத்தில் ஒரு ஃபைலை எடுத்து வந்தான். அவன் ஃபைலை மெதுவாக மெஜை மேல் வைத்ததும் ஜததீஷ்ராய் தலையை நிமிர்த்தாமல், "வெளியே போய் நில்லு" என்றார்.

இரவு மணி பதினொன்றரை இருக்கும். இன்றிரவு வீடு திரும்ப முடியுமோ இல்லையோ தெரியவில்லை. ஒரு டெலிபோன் செய்தால் தேவலை. நான் சற்று அசைந்து உட்கார்ந்து கொண்டு தயக்கத்தை மீறிக் கொண்டு, "சித்தப்பா, ஒரு டெலிபோன் பண்ணி வீட்டுக்குத் தகவல் சொல்லலாமா" என்று கேட்டேன்.

ஜததீஷ்ராய் ஒன்றும் பேசாமல் தன் பார்வையை உயர்த்தி ஒரு முறை என்னைப் பார்த்தார். பக்கத்தில் எழுதிக் கொண்டிருந்தவர் வியப்புடன் தலைநிமிர்ந்து என்னை ஒரு முறை பார்த்துவிட்டு மறுபடி எழுதத் தொடங்கினார். ஏதாவது கேள்வி கேட்டால் பதில் சொல்லாமல் உற்றுப் பார்ப்பது போலீஸ்காரர்களின் வழக்கம் என்பதைக் கவனித்திருக்கிறேன்... டெலிபோன் செய்யத் துணிவு வரவில்லை. மறுபடி கடிகாரத்தின் 'டிக்டிக்' இசையைக் கேட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தேன்.

சிறிது நேரத்துக்குப்பின், பக்கத்திலிருந்தவர் "ஆயிடுச்சு, சார்" என்று சொன்னார். ஜததீஷ்ராய் அவரிடமிருந்து ஃபைலை வாங்கிக் கொண்டு கவனமாகப் படிக்கத் தொடங்கினார். என்னை வெகு நேரம் காக்க வைத்து என் பொறுமையைச் சோதிக்கத்தான் இந்த ஏற்பாடு என்று எனக்குப் புரிந்தது. இவ்வளவு ஏற்பாடு செய்யும்படி அப்படி என்ன நடந்து விட்டது? இவர்களுடைய ஆர்ப்பாட்டத்தைப் பார்த்தால் உலகம் நிலைத் திருப்பதே இவர்களால்தான் என்று நினைக்கிறார்களென்று தோன்றுகிறது.

"சரி, நீங்க போகலாம்" ஜததீஷ்ராய் பக்கத்திலிருந்த மனிதரிடம் சொல்ல, அவர் எழுந்து, காகிதங்களை அடுக்கி வைத்துவிட்டு, பேனாவைப் பையில் வைத்துக் கொண்டு புறப்பட்டார். அப்போது ஜததீஷ்ராய் அவரிடம், "மிஸ்டர் சோம், போறபோது வாசல் கதவைச் சாத்திட்டுப் போங்க" என்று சொன்னார்.

இப்போது நாங்களிருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டிருந்தோம். நான் குற்றமொன்றும் செய்யவில்லை என்று எனக்குத் தெரியும். இருந்தாலும்... ஜததீஷ்ராய் போன்றவர்களைத் தெருவில்

சந்தித்தால் குறிப்பாக எதுவும் தோன்றாது; ஆனால் போலீஸ் இலாகா மேஜையின் மறுபுறத்தில் அவர்களைப் பார்த்தால் பயம் ஏற்படத்தான் செய்யும்...

அவர் எதுவும் பேசாமல் அறையில் இங்குமங்கும் உலாவினார். பிறகு எனக்கு வெகு அருகில் வந்து நின்றார். நான் தலையை நிமிர்த்தி அவரைப் பார்த்தேன். அவர் முகம் ஜிவ்வென்று இருந்தது.

அவர் மேகம் முழங்குவது போல் என்னைக் கேட்டார், "நீ அங்கே என்ன பண்ணிக்கிட்டிருந்தே?"

அவருடைய குரலைக் கேட்டு நான் பயந்து போய்ச் சொன்னேன், "உண்மையைச் சொல்றேன். முதல்லேருந்து..."

"நான் உன் கதையைக் கேட்க விரும்பவில்லை. நீ அங்கே என்ன பண்ணிக்கிட்டிருந்தே?"

"எல்லாம் சொல்லலேன்னா எப்படிப் புரியும் உங்களுக்கு...? நான்..."

"நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லு...!அந்த மோசமான இடத்துக்கு நீ எப்படிப் போனே...? இல்லே, அடிக்கடி அங்கே போறதுண்டா?"

"பூரா விஷயத்தையும் கேளுங்க... நான்..."

"ஒரே வார்த்தையிலே பதில் சொல்லு-நீ எப்படி அந்த மோசமான இடத்துக்குப் போனே?" ஜதீஷ்ராய் அதட்டினார்.

நான் அதட்டுக்கேட்டு வெகு காலமாகி விட்டது. மேலும் இது எனக்கு ஒரு அலர்ஜி. யாராவது அதட்டினால் நானறியாமலேயே என் நாடி நரம்புகளில் முறுக்கேறிவிடும். நான் உறுதியான குரலில் சொன்னேன், "ஒரு இடத்தையும் மோசம்னு சொல்ல முடியாது."

"ராஸ்கல்! உன்னை ஜெயில்லே தள்ளிடறேன்!" என்று சொல்லிக் கொண்டே ஜதீஷ்ராய் என்னைப் பளாரென்று அறைந்தார். அந்த அதிர்ச்சியில் என் தலை ஒரு பக்கம் திரும்பிவிட்டது. நான் நாற்காலியிலிருந்து எழுந்து கேட்டேன், "நான் ஒரு குத்தமும் செய்யாதபோதே ஏன் என்னை அடிக்கறீங்க?"

"குத்தஞ் செய்யாமயா? ஹூம், உன் மூஞ்சியிலேருந்து இப்பவும் குப்குப்புனு நெடி வருது. எல்லாப் பழக்கமும் இருக்குன்னு தெரியுது..."

இதைக்கேட்டு எனக்குச் சிரிப்பு வந்திருக்க வேண்டும். கடந்த ஒரு வாரத்தில் ஒரு சொட்டு மதுகூட அருந்தவில்லை நான். இவர் என் வாயிலிருந்து சாராய நெடியை மோப்பம் பிடித்துவிட்டாராம்! இதைத்தான் விதி என்பது! அவர் அறைந்த அறையில் என் முகம் முழுதும் எரிச்சல். எனினும் நான் பணிவாகவே சொன்னேன், "சித்தப்பா, நீங்க என்னைப் பத்தித் தவறுதலா..."

"ராஸ்கல், ஸ்கொண்ட்ரெல், அயோக்கியன்! உனக்கு என்ன தைரியம் இருந்தா என் வீட்டுக்குள்ளேயே நுழைஞ்சிருப்பே!" என்று சொல்லிக் கொண்டே அவர் மேஜையிலிருந்த ஒரு ரூல் தடியை எடுத்து என்னை அடிக்க வந்தார். இந்தக் காட்சியை நம்ப முடியாமல் நான் திகைத்து நின்றேன். என்னைக் காப்பாற்றிக் கொள்ள முயற்சி செய்யக்கூட எனக்கு நேரம் கிடைக்கவில்லை. அவர் என் சட்டைக் காலரைப் பிடித்துக் கொண்டு என்னை அடிக்கத் தொடங்கினார்.

கோபத்தாலும் வேதனையாலும் என் உடம்பு நெளிந்தது. என் கண்கள் இருண்டன. நான் அவருடைய கையிலிருந்து ரூல்தடியைப் பிடுங்கிக் கொள்ள முயற்சித்தேன், முடியவில்லை. நான் மேஜையின் மறு பக்கம் போய்ச் சட்டென்று ஒரு கனமான பேப்பர் வெயிட்டை எடுத்துக் கொண்டு ஒவ்வொரு வார்த்தையையும் அழுத்திச் சொன்னேன், "இன்னொரு தடவை அடிக்க வந்தீங்கன்னா, உங்களைக் கொலை பண்ணிடுவேன். என்னை உங்களுக்குத் தெரியாது. நான் கிழக்கு வங்காளத்துக்காரன்- கொலை செஞ்சுட்டுத் தூக்கிலே தொங்கவும் நான் தயார்."

நாங்கள் ஒருவரையொருவர் முறைத்துப் பார்த்துக் கொண்டு நின்றோம். ஜதீஷ்ராயின் முகத்தில் கோபத்தோடு சோகத்தின் சாயலும் தெரிந்தது. அவர் சற்று என் பக்கம் நெருங்கினால் அவர் மேல் பேப்பர் வெயிட்டை எறியத் தயாராயிருந்தேன் நான்.

அவர் உடைந்த குரலில் கத்தினார், "உனக்கு என்ன தைரியம்! என் வீட்டுக்குள்ளே வந்து என் குடும்பத்தை நாசம் பண்ண வந்தியே! உறவுக் காரன்னு சொல்லிக்கிட்டு..."

"என்ன நாசம் பண்ண வந்தேன் நான்? நான் பிழைச்சிருக்கத்தானே ஆசைப்பட்டேன்..."

நான் அவரைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தேன். அவரது நெற்றியில் இரண்டு நரம்புகள் புடைத்திருந்தன. அவரது முகத்தில் கோபம், ஏமாற்றம்—ஏதோ ஒரு பெரிய விபத்து நேர்ந்தாற் போல...

யமுனாவின் அம்மாவுக்கு உடம்பு மோசமாயிருக்குமோ? அப்படி யிருந்தால் இவர் இவ்வளவு நேரம் ஆபீசில் உட்கார்ந்திருக்க மாட்டாரே!

"நீ என் பொண்ணை அவமானப்படுத்த முயற்சி செஞ்சே! போக்கிரி, குலத்துரோகி... நான் உன்னைப்பத்தி எவ்வளவு உயர்வா நினைச்சுக்கிட் டிருந்தேன்! நீ என்னடான்னா போக்கிரிகள், வேசிகள், ஒற்றர்கள் இவங் களோடே சேர்ந்து குட்டிச்சுவராப் போயிட்டே! நீ என் பொண்ணோட அசட்டுத் தனத்தைப் பயன்படுத்திக்கிட்டு..."

"நான் என்ன பண்ணிட்டேன் உங்க பொண்ணை?"

"நீ யமுனாவைக் கெடுக்கப் பார்த்தே!"

"பொய் அபாண்டம்!"

"ஒரு சின்னப் பொண்ணு பூ மாதிரி. அவளை நீ..."

"பொய்! பொய்!" என்று கத்தினேன். என் மூச்சு அடைத்துக் கொண்டது. இருந்தாலும் வாழ்க்கையிலே ஒரு தடவை எதிர்த்து நிற்க வேண்டும் என்ற வெறி பிடித்துக் கொண்டது என்னை.

"சரஸ்வதி உன்னைப்பத்திச் சொன்னது மட்டும் உண்மையா இருந்தா நான் உன்னை உன் வாழ்நாள் முழுதும் ஜெயில்லே அடைச்சு வைப்பேன்!"

சரஸ்வதியின் பெயரைக் கேட்டு நான் திகைத்துப் போய்விட்டேன். நான் அவளை மறந்தே போயிருந்தேன். அவளது பெயரைக் கேட்டதும் என் உடம்பு தளர்ந்து போய்விட்டது. நான் அயர்வோடு பேப்பர் வெயிட்டை மேஜை மேலே எறிந்து விட்டுச் சொன்னேன், "என்னை ஜெயில்லேயே போடுங்க. என்னால இனி பொறுக்க முடியாது!"



செய்தி கேட்டு என் அக்கா புருஷன் வந்து என்னை அன்றிரவே ஜாமீனில் விடுவித்துக்கொண்டு போனார். சேகருக்கும் ஜாமீனில் விடுதலை கிடைத்தது. ஆனால் இறுதியில் எங்கள் மேல் வழக்குப் பதிவாகவில்லை. அவிநாஷின் புத்திசாலித்தனத்தால் பிரச்சினை சுமுகமாகத் தீர்ந்துவிட்டது. அவன் அஜய் பாபுவை சமாதானப்படுத்தினான். அவருடைய பிள்ளையும் தன்னை யாரும் பலவந்தமாகக் கொண்டு போனதாக ஒப்புக் கொள்ளவில்லை. அவன் தான் அவிநாஷுடன் சிறிது நேரம் உலாவப் போயிருந்த தாகச் சொல்லிவிட்டான். அவன் அவிநாஷின் பக்தனாகிவிட்டான். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகும் சில நாட்கள் அவிநாஷ் அவனை வெளியே கூட்டிப் போய்வந்தான். ஆகவே 'பிள்ளைத்திருட்டு வழக்கு' பதிவாக வாய்ப்பே ஏற்படவில்லை.

அப்துல் ஹாலிம், நூர்ஜஹான் இருவரிடமும் பாகிஸ்தான் பாஸ் போர்ட் இருந்தது. விசா விஷயத்தில் மட்டும் ஏதோ சிக்கல். இதன் விளை வாக அவர்கள் சில நாட்கள் காவலில் வைக்கப்பட்டிருந்தார்கள். இந்த சமயத்தில் ஒரு நாள் நூர்ஜஹான் தற்கொலை செய்து கொள்ள முயன்று தோல்வியுற்றாள். பிறகு அவர்கள் விடுதலையாகி டாக்காவுக்குத் திரும்பிப் போய்விட்டார்கள். வீணா தன் பழைய வீட்டை விட்டுவிட்டு வேறெங்கோ போய்விட்டாள்.

பல நாட்களுக்குப் பின் அருணின் பிள்ளையின் சோறூட்டு விழாவில் என் நண்பர்கள் எல்லாரையும் சந்தித்தேன். என் உடல் தளர்ச்சி மறைந்து போய்விட்டது. சேகரின் உடல் நிலை திருந்திவிட்டது. சுவிமல் எழுதிய நாவலொன்றை ஒரு வெளியீட்டாளர் வெளியிட இணங் கியதில் அவனுக்குப் பரம சந்தோஷம். நாங்களெல்லாரும் முகம் மழித்துக்கொண்டு நல்ல உடை அணிந்துகொண்டு மகிழ்ச்சியாயிருந்தோம். உலகத்தில் எங்கும் துக்கமில்லை, துன்பமில்லை. இடையே ஒரு சமயம் எனக்கும் என் அக்கா புருஷனுக்கும் சண்டை நேர்ந்து அவர் என்னை வேலையைவிட்டு நீக்குவதாகப் பயமுறுத்தினார். நான் அக்காவை காக்கா பிடித்து ஒரு மாத அவகாசம் வாங்கிக் கொண்டேன். அந்த ஒரு மாதமும் உயிரைக் கொடுத்து வேலை பார்த்ததில் அக்கா புருஷன் மனமிளகிவிட்டார். என் வேலை நிலைத்தது.

இதற்கு முன் தாபஸின் வேலை போய்விட்டது. அவன் என்னிடம் பணம் கடன் கேட்க வந்தான். வேலை இல்லாவிட்டால் என்னநேரும் என்பதை இந்த நிகழ்ச்சியின் மூலம் உணர்ந்து கொண்டதால்தான் நான் என் வேலையை இழக்கத் துணியவில்லை.

இப்போது உலகத்தில் துன்பமே இல்லை. விழாப் பந்தலில் விருந் துண்ண உட்கார்ந்த நாங்கள் கட்லெட்டுக்கும் சோன்பப்டிக்கும் போட்டி போட்டோம். கூட்டத்தில் மனீஷாவையும் பார்த்தேன். என் மனதில் எவ்வித சலனமும் ஏற்படவில்லை. அவள் என்மேல் அத்தர் தெளிக்க வந்தபோது நானும் வெகு சாதாரணமாக அவளுடைய கொண்டையிலிருந்து ஒரு பூவைப் பறித்துக்கொண்டேன். அவளை இனி தனிமையில் சந்திக்க முடியாது என்று எனக்குத்தெரியும். யாரோடும் இனி தனிமையில் சந்திப்பு நேராது.

விழாவில் உறவினர் கூட்டம் அதிகமாயிருந்ததால் நாங்கள் சற்று முன்னதாகவே அருணின் வீட்டிலிருந்து புறப்பட்டுவிட்டோம். தெருமுனைக் கடையில் சிகரெட் வாங்கிப் புகைத்துக் கொண்டே அரட்டைக் கச்சேரி செய்தோம். கல்யாணமான நண்பர்கள் முதலில் நழுவினார்கள். நான் சுவிமலோடு அவனுடைய நாவலைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தபோது ஒரு பிச்சைக்காரி இரண்டு மூன்று குழந்தைகளுடன் வந்து நின்று கொண்டு பிச்சை கேட்டாள். சுவிமல் தன் சட்டைப்பையைக் கவிழ்த்து அதிலிருந்த் சில்லறையையெல்லாம் அவளுக்குக் கொடுத்துவிட்டான். இதைக் கவனித்துவிட்டு அவிநாஷ் கேட்டான், "என்ன விஷயம்! நீ இப்படித் திடீர்னு கர்ண மகாராஜா ஆயிட்டியே!"

சுவிமல் சிரித்துக் கொண்டு சொன்னான், "பாரு, நானே பிச்சைக் காரன். என்கிட்டே வந்து யாராவது பிச்சை கேட்டா ரொம்ப சந்தோஷமா இருக்கு எனக்கு. சாதாரணமா என்னோட இரண்டு மூணு பேர் இருந்தா, பிச்சைக்காரங்க என்கிட்டே வந்து பிச்சை கேக்க மாட்டாங்க. அவங்களுக்கு என்னைத் தெரிஞ்சுடும்- அதைத்தவிர, இன்னிக்கு நான் செய்ய வேண்டிய நல்ல காரியத்தை இப்பத்தான் செய்யறேன்."

"பிச்சை போடறது நல்ல காரியமா?"

"கெடுதலாத் தோணல்லே எனக்கு."

"எனக்குப் பிடிக்கல்லே. அன்னிக்கு ராத்திரி..."

"பாவம், பிச்சைக்காரங்க... விட்டுத் தள்ளு! அவங்க அவங்களாலே முடிஞ்சபடி பிழைக்கறாங்க."

"கேளேன், அன்னிக்குப் பார்க் சர்க்கஸ் வழியாப் போயிக்கிட் டிருந்தேன். பார்க்குக்குப் பக்கத்திலே ஒரு பூதத்தைப் பார்த்தேன். உயிருள்ள பூதம்! ஒரு அட்டைக்கறுப்பு, அரைக்கிழட்டுப் பிச்சைக்காரன் பிளஸ் பைத்தியம்-நடக்கக்கூடத் திராணியில்லே— உக்காந்துக்கிட்டே தொடையைத் தேய்ச்சுக்கிட்டு நகர்ந்து வரான்- அவன் உசிரோட இருந்து என்ன பிரயோசனம்னு தோணிச்சு எனக்கு. ஒவ்வொரு நாளும் கொஞ்சங் கொஞ்சமாச் செத்துப்போயிக்கிட்டிருக்கான்... என் கையிலே ரெண்டு படத்தோட பிளாக் இருந்தது. நல்ல கனமான பிளாக். அதை அவன் தலையிலே எறிஞ்சாச் செத்துப்போயிடுவான். ஆனா நான் ஆம்பட்டுக்கிட்டா எனக்குத் தூக்குத் தண்டனை கிடைக்கும். யோசிச்சுப் பாரு! 'மெர்ஸி கில்லிங்'கை சட்டப்பூர்வமா அனுமதிக்கணும். அவனைக் கொன்னா அது ஒரு உபகாரமில்லையா?"

"அது அவனுக்கு உபகாரமாயிருக்கலாம். ஆனா உன் வாழ்க்கை பூரா இந்த நிகழ்ச்சியை உன்னாலே மறக்க முடியாது. அது உனக்குக் கெடுதல் தானே!"

"எனக்கு அந்த மாதிரி அசட்டு உணர்ச்சியெல்லாம் கிடையாது. தெரு நிறையப் பிச்சைக்காரங்களைப் பார்த்தா எனக்குப் படு கோபம் வருது. இப்படியாவது பிழைச்சிருக்கணுமா? என்கிட்ட மட்டும் அதிகாரம் இருந்தா நான் கல்கத்தாவிலே இருக்கற எல்லாப் பிச்சைக்காரிகளையும் பிடிச்சு அவங்களுக்கு 'லூப்' போட்டு விட்டுடுவேன். இந்தப்பிச்சைக் காரியோட குழந்தைகளைப்பாரு. அதுகளும் பிச்சைக்காரங்களாத்தான் ஆகும்." சுவிமல்

சொன்னான், "நீ ஏன் இப்படி இரக்கமில்லாமப் பேசறே? இன்னொரு தலைமுறை பிச்சைக்காரங்க பிறக்காமலிருந்தா நல்லதுதான், ஆனா பிறந்துட்டவங்க இருந்துட்டுப் போகட்டுமே! பாவம்!"

"இருந்தாலும் அவிநாஷுக்கு ஈவிரக்கமே இல்லே...! பிச்சைக் காரங்களோ இல்லையோ. அந்தச் சின்னப்பெண் குழந்தைகள் எவ்வளவு அப்பாவியா, கபடமில்லாமே இருக்கு! அதுகளைக் கொல்லத் தோணுதா உனக்கு?"

அவிநாஷ் குறும்பாகச் சிரித்துக் கொண்டு சொன்னான், "பெண் குழந்தைகளைக் கண்டாலே பரிவு பொங்கி வரும் சுநீலுக்கு... ஏம்பா, அந்தக் குட்டி விஷயம் என்ன ஆச்சு? ரொம்ப நல்ல சரக்கு!"

ஒரு நிமிடத்தில் என் 'மூடு' கெட்டுப்போய் விட்டது. நான் அவனைக் கோபத்தோடு பார்த்து, "அவிநாஷ், நீ அந்தப் பொண்ணைப் பத்தி அந்த மாதிரி பேசாதே, ஆமா!" என்றேன்.

அவிநாஷ் திகைத்தான். அவனுடைய முகம் வெளிறிப் போய்விட்டது. பிறகு சமாதானமாகச் சொன்னான், "ஏன் கோவிச்சுக்கறே? நான் என்ன தப்பாச் சொல்லிட்டேன்?... ஹௌரா பாலத்துக்குக் கீழே பூ மார்க்கெட் டுக்குப் போய்ப்பாரு. அங்கே பூவையும் சரக்குன்னுதான் சொல்றாங்க. ரஜனிகந்தாப் பூக்குவியலைக்காட்டி இந்தச் சரக்கு டஜன் என்ன விலைன்னுதான் கேக்கறாங்க... பூவையே இப்படிச் சொல்றபோது..."

"போதும், நிறுத்திக்க!" என்று அவிநாஷிடம் சொல்லிவிட்டு சுவிமலைக் கேட்டேன், "நீ உங்க தெருப் பொண்ணைக் கலியாணம் பண்ணிக்கப் போறதாச் சொன்னியே, அது என்ன ஆச்சு?

"நான் கலியாணம் பண்ணிக்கத் தயாராத்தான் இருந்தேன். பொண்ணோட அப்பாவுக்கு ஜாதகம் பார்க்கணுமாம். சாதியைப்பத்தி ஏதோ தகராறு பண்ணிக்கிட்டிருந்தார். கடைசிலே என்ன ஆச்சு தெரியுமா? அந்தப் பொண்ணு அவளோட பாட்டு ஸ்கூல் வாத்தியாரை ரிஜிஸ்தர் கலியாணம் பண்ணிக்கிட்டா!"

"நல்லவேளை, பிழைச்சுப் போனா!"

'எனக்கு அடுத்த மாசம் ஒரு வேலை கிடைக்கப் போகுது."

"அப்படியா? அப்படீன்னா நம்ம குரூப்பிலே பாலன்ஸ் சரியாத்தான் இருக்கு. உனக்கு வேலை கிடைக்குது. தாபஸுக்கு வேலை போச்சு!"

அவிநாஷ் ஆர்வத்தோடு சொன்னான், "உனக்கு வேலை கிடைச் சிருக்கா? அப்போ இதைக் கொண்டாட வேண்டியதுதான்...! வா, எங்கே யாவது போகலாம்!"

"நான் இன்னும் வேலையிலே சேரவேயில்லையே! யாராவது கடன் கொடுங்க."

"விமலேந்துகிட்டே போயேன்!"

விமலேந்துவும் சேகரும் சற்றுத் தூரத்தில் பேசிக் கொண்டிருந்தார்கள். சுவிமல் விமலேந்துவிடம் போய்ப் பணம் கடன் கேட்டதும் விமலேந்து ஆச்சரியத்தோடு கேட்டான், "மறுபடியும் விருந்தா? இப்போதான விருந்து சாப்பிட்டு வந்திருக்கோம்!"

அவிநாஷ் சொன்னான்,"இந்தக் காலத்திலே விருந்து சாப்பிடப்

போனா வயிறு ரொம்பிடுதா என்ன?– தவிர நாம இப்ப சாப்பாடா சாப்பிடப் போறோம்?"

விமலேந்து முகத்தை சீரியஸாக வைத்துக் கொண்டு சொன்னான், "ஆமா, நீங்க கண்டதைக் குடிக்கறதுக்கு நான் பணம் தரணுமாக்கும்! நான் மாட்டேன். எனக்கு இதிலே எல்லாம் நம்பிக்கை இல்லே."

அவிநாஷ் சிரித்துக்கொண்டு, "உன் நம்பிக்கை, அவநம்பிக்கையைப் பத்தி யாரு கேட்டாங்க? உன்கிட்டப் பணம் இருந்தாக் கொடு, இல்லேன்னா கொடுக்க வேண்டாம். அவ்வளவுதானே!" என்று சொன்னான்.

"இருந்தாலும் கொடுக்கமாட்டேன்! இந்த மாதிரி ஊதாரிச் செலவுக்கெல்லாம் காசு கொடுக்க எனக்குப் பிடிக்காது. என்னைப் பாருங்களேன். நானுந்தான் படிச்சிருக்கேன், வேலை பார்க்கறேன், கலியாணம் பண்ணிக்கிட்டுக் குடித்தனம் நடத்தறேன், இலக்கியம் கலை இதெல்லாம் கொஞ்சம் ரசிக்கறேன், வாழ்க்கையைப் பத்தி எனக்குள்ள அனுபவம் உங்க அனுபவத்தைவிடக் குறைச்சலில்லே. எனக்கொண்ணும் சாராயம் குடிக்க வேண்டிய அவசியம் ஏற்படல்லியே!"

சுவிமல் அவனைக் கட்டிக்கொண்டு சொன்னான், "விமலேந்து, நீ ரொம்ப நல்ல பையன், இலட்சிய மனிதன்– ஆனா எல்லாருமே உன் மாதிரி இருக்க முடியுமா, சொல்லு!"

உண்மையில் சுவிமல் விமலேந்துவைக் கட்டிக்கொண்டது அவனுடைய பையிலிருந்து பணம் எடுக்கத்தான். இதைப் புரிந்து கொண்ட, கட்டுமஸ்தான உடல் வாய்ந்த விமலேந்து ஒரே தள்ளில் தன்னை சுவிமலிடமிருந்து விலக்கிக் கொண்டு, "ஏய், என்ன செய்யறே? நீங்க இவ்வளவு கெட்டுப்போயிட்டீங்களா?" என்றான்.

சுவிமல் பரிதாபமாகக் கெஞ்சினான், "ஆமா, ரொம்பத்தான் கெட்டுப் போயிட்டோம். ஒரு முப்பது ரூபா கொடேன். நிறையப்பணம் சேர்க்கிறியே! சால்ட் லேக்கிலே வீட்டு மனை வாங்கப்போறதாக் கேள்விப்பட்டேன்..."

"நல்லா வாங்குவேன்! உங்களுக்குப் பணங்கொடுத்து ஏன் வீண் செலவு செய்யணும்? சரியான குடிகாரங்க...!."

"சரிதான் போ...! வர்றவங்க வாங்க..." என்று சொல்லிக் கொண்டே அவிநாஷ் ஒரு பஸ்ஸில் ஏறிக்கொண்டான். எங்களில் சிலர் ஓடும் பஸ்ஸில் தொத்திக்கொண்டோம்.

பஸ்ஸில் நாங்கள் ஆறுபேர் ஏறியிருந்தோம். பஸ் எஸ்பிளனேடு வந்தது. தாபஸுக்கு இறங்க இஷ்டமில்லை. நாங்கள் அவனைப் பலவந்தமாக இறக்கிவிட்டு ஒரு மதுக்கடைக்குப் போனோம். ஒரு ரவுண்டு மதுவுக்கு ஆர்டர் கொடுத்தபிறகு சேகர் மலர்ந்த முகத்தோடு சொன்னான், "ரொம்ப நாள் கழிச்சு வந்திருக்கோம். ரொம்ப ஜாலியா இருக்கு. வாங்க, கோரஸா எல்லாரும் பாடுவோம்!"

"கொஞ்சம் இரு. முதல்லே கொஞ்சம் சரக்கு வயித்துக்குள்ளே போகட்டும்." சுவிமல் சொன்னான்

நூருல் சொன்னான், "வேண்டாம், பாட்டு வேண்டாம். நாம பாட ஆரமபிச்சா அடுத்த மேஜையிலே இருக்கறவங்களும் பாடத் தொடங்குவாங்க. நமக்கு அது பிடிக்காது. நாம செய்யறதையே மத்தவங்களும்

செஞ்சா நமக்குப் பொறுக்காது..."

நான் நூருலைக் கேட்டேன், "நீ ஏன் எப்பவும் உன்னை மத்தவங்க கிட்டேயிருந்து வேறுபடுத்திப் பார்க்கறே?"

"இந்த ஒரு தப்பான எண்ணத்தால தானே பிழைச்சிருக்க முடியுது!"

சுவிமல் நூருலைக் கை விரலால் குத்தி அவனுக்குப் பக்கத்து மேஜையிலிருந்த ஒருவரைக் காட்டி, "இந்த ஆள் பாட்டுப் பாடுவான்னு நீ நினைக்கிறியா?" என்ற கேட்டான்.

நாங்கள் அந்த மனிதரை ஓரக் கண்ணால் பார்த்தோம். நல்ல பருமன் அவர். பார்த்தால் சிரிப்புதான் வரும். பெரிய உடம்பு, கோட்டில் இங்குமங்கும் தூப்பு கொட்டியிருக்கிறது. தலைமுடி நெற்றியின் மேல்விழுந்து கிடக்கிறது. அதிக போதையால் முகம் குங்குமமாய்ச் சிவந்திருக்கிறது. மேஜை முன்னால் அவர் மட்டுந்தான் உட்கார்ந்திருக்கிறார். மேஜை மேல் உணவுத் தட்டுகளும் சோடா பாட்டில்களும் இறைந்து கிடக்கின்றன. அவர் கொஞ்சங் கொஞ்சமாக மதுவைச் சுவைத்து அருந்திக் கொண்டிருக்கிறார். ஒரு காலி டம்ளரில் ஒரு கட்டு பில்கள்...

"பாவம், இந்த மனுஷர் ரொம்ப சோகமாயிருக்கார். இல்லாட்டி யாராவது தனியாக் குடிக்க வருவாங்களா?" சேகர் சொன்னான்.

நூருல் அவரைப் பார்த்துச் சொன்னான், "அண்ணே, ஒரு பாட்டுப் பாடறீங்களா?"

அந்த மனிதர் கண்களை அகலத் திறந்து பார்த்தார். அவையிரண்டும் பழுத்த லிச்சிப் பழம்போல் சிவந்திருந்தன. அவர் சொன்னார், "உம் உம், வா கண்ணே, பாட்டு உண்டு, ஆட்டம் உண்டு, உல்லாசம் உண்டு!"

நூருல் சொன்னான், "அப்ப வாங்க. இன்னிக்கு ஜாலியா இருப்போம்!"

அந்த மனிதர் தலையையாட்டி, வாயைத் திறந்து கொண்டு 'ப்ரூ... ப்ரூ' என்று ஒலியெழுப்பினார்.

"தள்ளி வா, தள்ளிவா! இந்த ஆள் வாந்தியெடுக்கப் போறார்!" என்று நூருலிடம் சொன்னேன்.

மூன்று ரவுண்டு விஸ்கி சாப்பிட்ட பிறகுதான் பில்லுக்குப் பணம் கொடுக்க எங்களிடம் காசு இருக்கிறதா என்று பார்க்கத் தோன்றியது சுவிமலுக்கு. யாரிடமும் அதிகப் பணமில்லை. சுவிமலிடமும் தாபஸிடமும் காசே இல்லை. மற்றவர்களில் ஒவ்வொருவரிடமும் நாலைந்து ரூபாய்க்கு மேல் இல்லை. இப்போதுதான் 'மூடு' பிறந்திருந்தது. ஆனால் இதுவரை சாப்பிட்ட விஸ்கிக்கே கொடுக்கக் காசு இல்லை.

"இருங்க, எனக்குத் தெரிஞ்ச இடந்தான் இது. மானேஜரைப் பார்த்துக் கடனுக்கு ஏற்பாடு செஞ்சுட்டு வரேன்" என்று சொல்லி விட்டுப்போன அவிநாஷ் சற்று நேரத்தில் அவமானப்பட்டுத் திரும்பி வந்து சொன்னான், "ராஸ்கல்! என்னைத் தெரிஞ்சதாவே காட்டிக்கலே. இவங்கள்ளாம் சுடுகாட்டுக்குப் பக்கத்திலே கடை வச்சிருக்கணும், சௌரிங்கிலே கடை வைக்க வந்துட்டான்! இருக்கட்டும், இவனை ஒரு கை பார்த்துக்கறேன் ஒருநாள்!"

"அதுசரி, இப்போ பில்லுக்குப் பணம்?" என்று கேட்டான் சுவிமல்.

அவிநாஷ் சொன்னான், "வேறென்ன செய்யறது? பணங் கொடுக்காம

போக வேண்டியதுதான்! நம்ம ரெண்டு பேரையும் எதுத்து நிக்கக் கல்கத்தாவிலே எவன் இருக்கான்?"

"அப்படீன்னா நாம ஏன் எல்லாரையும் எதுத்துக்கிட்டு நிக்கறதில்லே?" தாப்ஸ் கேட்டான்.

"ஒரு காரியம் செய்யலாமே!" என்று சொல்லிப் பக்கத்து மேஜையை ஜாடை காட்டினேன் நான்.

அவிநாஷ் சிரித்தான். இந்தக் காரியம் நாங்கள் இதற்கு முன்னும் சில தடவை வெற்றிகரமாகச் செய்திருக்கிறோம். பக்கத்து மேஜையில் குடித்துக் கொண்டிருந்தவர் சற்றுமுன்தான் தள்ளாடித் தள்ளாடிக் கொண்டு பாத்ரூம் போனார். அவிநாஷ் இங்குமங்கும் பார்த்து விட்டுச் சட்டென்று ஒரு பில்லை அவருடைய மேஜை மேலிருந்த பில்களோடு சேர்த்துவிட்டான். பிறகு நாங்கள் காதுகளைத் தீட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தோம்.

அந்த மனிதர் பாத்ரூமிலிருந்து வந்தார். டம்ளரில் செருகப்பட்டிருந்த பில்களையெல்லாம் எடுத்து, சீட்டு விளையாட்டில் சீட்டுகளை வைத்துக் கொள்வது போல் கையில் பிரித்து வைத்துக்கொண்டு ஏதோ முணு முணுத்தார். பிறகு வெயிட்டரை உரக்கக் கூப்பிட்டார். அவன் வந்ததும் அவனிடம் பில்களைக் கொடுத்து, "கூட்டிச் சொல்லு, எத்தனை ஆச்சு?" என்று கேட்டார்.

பில்களைக் கூட்டிக்கொண்டு வந்த வெயிட்டர் சடடென்று திடுக் கிட்டு எங்கள் பக்கம் திரும்பிப் பார்த்தான். ஆறு ஜோடிக்கண்கள் அவனைச் சுட்டெரித்துக் கொண்டிருந்தன. அவன் அந்த மனிதர் பக்கம் திரும்பி, "எழுத்தெட்டு ரூபா" என்றான்.

அந்த மனிதர் சிரித்துக் கொண்டு, "சரிதான், எழுபத்தெட்டுதானே? என் கணக்கு சரிதான். எட்டுப்பத்து எம்பது. சரி..." என்று சொல்லித் தன் சட்டைப்பையிலிருந்து ஒரு கட்டு பத்து ரூபாய் நோட்டுக்களை எடுத்தார். எட்டு நோட்டுக்களை வெயிட்டரிடம் கொடுத்துவிட்டு, "ஜல்தி டாக்சி கூப்பிடு" என்றார்.

நாங்கள் நிம்மதியாக மூச்சு விட்டோம். வெயிட்டர் நிச்சயம் பில் தொகையை இன்னும் கூட்டிச் சொல்லியிருப்பான். அவனுக்கும் லாபம், எங்களுக்கும் லாபம்.

அந்த் மனிதரின் கையிலிருந்த நோட்டுக் கட்டை ஆசையாகப் பார்த்துக் கொண்டே அவிநாஷ் சொன்னான், "இன்னும் ரெண்டு பில்லை இவன்கிட்டே தள்ளியிருக்கலாம்."

"பேராசைப்படாதே! கிடைச்சது போதும்" என்றான் சுவிமல்.

அவிநாஷ் சொன்னான், "இவனுக்கு இதிலே என்ன நஷ்டம்? பார்த்தாலே தெரியுது கறுப்புப் பணம்னு. எப்படியாவது செலவு பண்றதுதான் இவனோட பிரச்னை...!

வெளியே வந்தோம். அவிநாஷுக்கு அதிருப்தி—"சீ, இப்பதான் மணி பத்து. அதுக்குள்ளே ஆட்டம் க்ளோஸ்! இன்னுங் கொஞ்சங் குடிக்க ஆசையா இல்லே உங்களுக்கு?"

எங்களுக்கும் ஆசைதான். ஆனால் வேறு வழி? எங்களிடம்

மிஞ்சியிருந்த பணத்தில் ஒரு பாட்டில் விஸ்கிகூட வாங்க முடியாது.

"கடன் எங்கே கிடைக்கும், சொல்லு!" என்றான் சுவிமல்.

ஒருவருக்கும் தெரியவில்லை. அப்போதுதான் உடம்பில் விறுவிறுப்பு ஏற்பட்டிருந்தது. அப்போதே கலைந்து போக யாருக்கும் விருப்பமில்லை. ஜான்பஜாரில் ஒரு வெற்றிலைக்கடையில் நின்று கொண்டு இரண்டு பாட்டில் உள்ளூர்ச் சரக்கு வாங்கிக் குடித்தோம். அப்படியும் எங்கள் தாகம் தணியவில்லை. வெகு நாட்களுக்குப் பிறகு நண்பர்கள் ஒன்று சேர்ந்திருக்கிறோம். மகிழ்ச்சியாயிருக்கிறது.

சுவிமல் சொன்னான், "பார்க் தெரு ஓட்டலுக்குப் போவோமே! அங்கே யாராவது நமக்கு தெரிஞ்சவங்க வந்திருந்தா..."

"நம்ம ஆறுபேருக்கு டிரிங்க் வாங்கித் தரக்கூடிய யாரு அங்கே இருப்பான்?"

"போய்ப் பார்ப்போமே! எனக்குத் தெரிஞ்சவங்க ஒருத்தன் ரெண்டு பேர் இருக்காங்க. அவங்க யாராவது அங்கே வந்திருக்கலாம்."

நடந்து வந்தோம் பார்க் தெருவுக்கு. ஓட்டலில் தெரிந்தவர்கள் யாரும் தென்படவில்லை. மறுபடி தெருமுனைக்குத் திரும்பி வந்தோம். வீட்டுக்குத் திரும்பி விடலாம் என்று சொல்லத் துணிவில்லை யாருக்கும். அப்படிச் சொல்பவனுக்குக் 'கோழை' என்ற பட்டம் கிடைத்துவிடும்.

அவிநாஷுக்கு ஒரே எரிச்சல்— "கடன் கிடைக்கக் கூடிய ஒரு இடத்தைச் சொல்ல முடியலியா உங்களாலே? ஹோப்லெஸ்!"

"என் வாட்சை அடகு வச்சு..." சேகரின் யோசனை.

சுவிமல் சொன்னான், "அந்தத் தொந்தரவெல்லாம் வேண்டாம்... பிச்சையெடுப்போமே!"

அவிநாஷ் அவனுக்கு அழகு காட்டினான், "இவன் ஒரு பிறவிப் பிச்சைக்காரன்...! பிச்சையெடுத்தாக் கஞ்சாவுக்குக் காசு கிடைக்கும், விஸ்கி குடிக்கக் காசு சேருமா?"

"முயற்சி பண்ணித்தான் பார்ப்போமே!"

டிராஃபிக் சிக்னலில் சிவப்பு விளக்கு எரிந்து கொண்டிருந்தது. நிறையக் கார்கள் வரிசையாக நின்று கொண்டிருந்தன. சுவிமல் முன்னேறி ஒரு காரில் இருப்பவர்களிடம் ஏதோ சொன்னான். பிறகு சிரித்துக் கொண்டு திரும்பி வந்தான். அவனது தூக்கிய கையில் கொடி மாதிரி ஒரு ஐந்து ரூபாய் நோட்டு!

நாங்கள் இரண்டு மூன்று பேர் ஒரே சமயத்தில் கேட்டோம், "எப்படிக் கிடைச்சுது? உனக்குத் தெரிஞ்சவங்களா?"

"அதெல்லாம் ஒண்ணுமில்லே. சும்மா பிச்சை கேட்டேன். இங்கிலீஷிலே சொன்னேன்— 'நான் கண்ணியமான குடும்பத்துப் பையன். பர்ஸ் தொலைஞ்சு போச்சு. டயமண்ட் ஹார்பருக்குப் போக டிக்கட்டுக்குக் காசு வேணும்'னு கொடுத்துட்டாங்க!"

நாங்கள் ஹோஹோவென்று சிரித்தோம்.

"சரி, நான் ட்ரை பண்றேன்" என்று சொல்லிக் கொண்டு அவிநாஷ் ஒரு காரை நோக்கி ஓடினான். பிறகு திரும்பி வந்தான். அரை மகிழ்ச்சியோடு. அவன் கையில் மூன்று ரூபாய்.

சுவிமல் சொன்னான், "பார்த்தீங்களா? இந்த நாட்டிலே உள்ள ஒரே நல்ல தொழில் பிச்சைதான்!"

நாங்கள் உடனே தீர்மானித்தோம். அந்தப் பார்க் தெருமுனையில் டிராஃபிக் சிக்னலில் கார்கள் வெகு நேரம் நிற்கும். சிவப்பு சிக்னல் வந்ததும் ஒரு தடவைக்கு ஒருவராகப் போய்ப் பிச்சையெடுக்க வேண்டும். எல்லாரும் ஒரே சமயத்தில் போனால் சந்தேகப்படுவார்கள். இங்கிலீஷில் தான் பேச வேண்டும். காரணம் இப்போதெல்லாம் கார் சவாரி செய்பவர் களுக்கு இங்கிலீஷில் பிச்சை கேட்காவிட்டால் பிடிப்பதில்லை.

"எல்லாரும் பார்ப்பாங்க..." தாபஸ் ஆட்சேபித்தான்.

அவிநாஷ் அவனை அதட்டினான், "பார்க்கட்டுமே!... கேக்கறது பிச்சை, இதிலே மான அவமானம் வேறேயா? உனக்கு வேலைகூட இல்லை. உனக்கு என்ன வெக்கம்?"

சேகர் சொன்னான், "நான் பெரிய குடும்பத்துப் பையன். என்னால பிச்சை எடுக்க முடியாது. நான் என் வாட்சை விக்கத்தயார்."

சுவிமல் சொன்னான், "போடா போ! என்னைவிட உசந்த குடும் பத்தைச் சேர்ந்தவன் இங்கே யாரும் இல்லே. அவிநாஷைக் கேட்டுப்பாரு, மைமன் சிங்கிலே நாங்க எவ்வளவு பெரிய ஜமீந்தாருன்னு! அவிநாஷ் குடும்பமெல்லாம் எங்களோட குடிகள்!

அவிநாஷ் சுவிமலின் மோவாயைப் பிடித்துக்கொண்டு கொஞ்சினான், "ஜமீந்தாரியா இல்ல ராஜ்ஜியமா, ஆகா என் ராஜகுமாரா!..."

கடைசி வரையில் சேகர் சம்மதிக்கவில்லை. நாங்கள் அவனை எங்கள் கேஷியராக நியமித்துக் கொண்டோம். அவரவர் சம்பாதித்ததை அவனிடம் கொண்டு வந்து கொடுத்தோம்.

முதல் தடவை நான் அணுகிய காரில் இருந்தவர்கள் ஆங்கிலோ இந்தியர்கள். அவர்கள் என்னைக் கண்டு கொள்ளவேயில்லை. நான் அடுத்த காருக்குப்போய் முயற்சி செய்வதற்குள் சிவப்பு மாறிப் பச்சை சிக்னல் வந்துவிடவே நான் வெறுங்கையோடு திரும்ப நேர்ந்தது. அடுத்த தடவை நான் அணுகிய காரில் ஓர் ஆணும் பெண்ணும் மிக நெருக்கமாக உட்கார்ந்திருந்தார்கள். அவர்களைப் பார்க்கவே எனக்குக் கூச்சமாயிருந்தது. இருந்தாலும் முகத்தை மிகவும் பரிதாகமாக வைத்துக் கொண்டு சொன்னான், "பிலீவ்மி, சார்... கம்ப்ளீட்லி ஸ்ட்ரேண்டட்... வில் கோ டு டயமண்ட் ஹார்பர்... ஃபைவ் ருபீஸ் ப்ளீஸ்..." அந்தப்பெண் கையை ஆட்டி, "இல்லே, போ" என்று சொன்னாள். ஆண் வேண்டா வெறுப்பாகப் பையிலிருந்து இரண்டு ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்துக் கொடுத்தான்.

ஆனால் மற்றவர்கள் நன்றாகவே சம்பாதித்தார்கள். சுவிமலும் நூருலும் போனார்கள். சட்சட்டென்று பணம் வாங்கி வந்தார்கள். அவிநாஷ் விடாக்கொண்டனாக ஓடும் கார்களோடு தானும் ஓடினான். பிறகு திரும்பி வந்து எரிச்சலோடு சொன்னான், "ராஸ்கல்கள்! என்ன கோபம் வருது தெரியுமா! இவ்வளவு நல்ல இங்கிலீஷிலே பேசறேன், அப்படியும் நாலணா, ரெண்டணா கொடுக்க வராங்க! மூஞ்சியிலே ஒரு ஸ்கொயர்கட் கொடுக்கலாமான்னு தோணுது!"

சுவிமல் சொன்னான், "ஊஹூம், அப்படியெல்லாம் செய்யாதே!

யோக்கியமாப் பிச்சையெடுக்க வந்த இடத்திலே ரவுடித்தனம் எதுக்கு?"

"நீ ஒண்ணுக்கும் லாயக்கில்ல! நீ சுத்த உதவாக்கரை!" என்று அவர்கள் என்னை ஏசினார்கள். நான் மார்வாரிகளின் கார் ஒன்றையணுகி, "ஏதாவது கொடுங்க, மெகர்பானி!" என்று கெஞ்சியும் எனக்கு ஒன்றும் கிடைக்கவில்லை.

யார் பிச்சையெடுப்பதில் கெட்டிக்காரன் என்று போட்டியே ஏற்பட்டு விட்டது எங்களிடையே. எனக்குத் தொடர்ந்தாற்போல் தோல்விதான். இன்று எனக்கு அதிர்ஷ்டமில்லை. எவ்வளவு முயற்சித்தும் பலனில்லை. அப்படியும் சேகரின் பை நிரம்பிவிட்டது.

மூன்று அசல் பிச்சைக்காரர்கள் எங்கள் நடவடிக்கைகளை ஆச்சரியத் தோடு பார்த்துக் கொண்டிருந்தார்கள். சேகர் சந்தோஷமாக அவர்களுக்கு எங்கள் நிதியிலிருந்து ஆளுக்கு ஒரு ரூபாய் கொடுத்தான்.

சுவிமல் சொன்னான், "சில கார்களிலே நான் பார்க்கற காட்சி! பிச்சை கேக்க மறந்து வாயை 'ஆ'ன்னு பார்த்துக்கிட்டிருக்கத் தோணுது. நாம இதையெல்லாம் பார்த்துட்டோமேன்னுதான் ரொம்பப்பேர் காசு கொடுத்துடறாங்க."

தாபஸ் சொன்னான், "நான் ஜன்னல் வழியாத் தலையை உள்ளே நுழைச்சேன்னு ஒரு பஞ்சாபிப் பய அடிக்க வந்துட்டான். அந்தப் பெண்ணோட..."

அவிநாஷ் ஒரு காரை நோக்கி ஓடத் தொடங்கியவன் திடீரென்று திரும்பி வந்து, "சுநீல், நீ போ! இது உன் முறை. அதோ அந்த நீலக்கார்..."

அவன் என்னைத் தள்ளிவிட நான் முடிந்தவரை என் முகத்தைப் பரிதாபமாக வைத்துக்கொண்டு ஓடினேன். நீலக்காருக்கு அருகில் வந்து பேசத் தொடங்கும்போது பார்த்தேன்—ஜன்னலோரத்தில் யமுனா! நான் சட்டென்று திரும்பி வந்தேன். அவிநாஷ் யமதூதன் மாதிரி நின்று கொண் டிருந்தான். "என்ன, முயற்சி பண்ணாமேயே திரும்பி வந்துட்டே? போ!"

"இல்லே, நான் போகமாட்டேன்!"

"போகத்தான் வேணும்!" என்று என்னைக் கார்ப் பக்கம் தள்ளிவிட்டான் அவிநாஷ்.

நான் காரின் மேல் கையை வைத்துக் கீழே விழாமல் சமாளித்துக் கொண்டேன். யமுனா இதற்குள் என்னைப் பார்த்து, "சுநீல் அண்ணா!" என்று கூவினாள்.

நான் சிரித்த முகத்தோடு சொன்னேன், "யமுனா, உன்னைப் பார்த்து எவ்வளவு நாளாச்சு...! சௌக்கியமா?"

காருக்குள், யமுனா, சரஸ்வதி, எனக்கு அறிமுகமில்லாத ஒரு திருமணமான பெண், ஒரு ஆண். யமுனா சிவப்புப் புடவை அணிந்திருந்தாள், அந்தச் சிவப்பு அவளுடைய உடம்பிலும் நிழலாடியது.

ஆண் கேட்டான், "காரிலே ஏறிக்கிறீங்களா?"

"குடிச்சிருக்கான்...! முன்னி கண்ணாடி ஷட்டரைப்போடு!" சரஸ்வதி சொன்னாள்.

யமுனா சொன்னாள், "சுநீல் அண்ணா, வரீங்களா? ஏறுங்களேன்!"

நான் யமுனாவைப் பரிவோடு பார்த்துக் கொண்டு, சிரித்த

முகத்தோடு, "யமுனா, என் பணம் தொலைஞ்சு போச்சு. அஞ்சு ரூபா கொடேன்!... நான் வண்டியிலே ஏறிக்கல்லே.."

"அஞ்சு ரூபா இல்லே. ஒரு ரூபாதான் இருக்கு.."

"முன்னி! ஷட்டரைப்போடு!"

"எனக்கு அஞ்சு ரூபாதான் வேணும்."

"முன்னி! ஷட்டரைப் போடுங்கறேன்!"

நேரம் இல்லை, நேரம் இல்லை, இதோ சிவப்பு மாறிப் பச்சை வந்து விடும்...! சரஸ்வதி பச்சைச்சேலை உடுத்தியிருந்தாள். பச்சை சிக்னலுக்குப் பொருத்தந்தான்! நான் பொறுமையிழந்து சொன்னேன், "சரி, அந்த ஒரு ரூபாயைத்தான் கொடு. அது போதும்!"

ஆனால் இதற்குள் வண்டி கிளம்பி விட்டது. பின்னாலிருந்த வண்டிகளிலிருந்து ஹார்ன் ஒலிகள். நான் காரில் அரைபடாமலிருக்க நடைபாதைக்கு ஓடி வந்தேன்.

மனதுக்கு மிகவும் கஷ்டமாயிருந்தது. பிச்சையெடுக்கக்கூடத் தெரியாதவனென்று நண்பர்களிடம் கெட்டபெயர்... சீ!

"என்னடா, இப்பவும் கிடைக்கல்லியா?" சுவிமல் கேட்டான்.

அவிநாஷ் ஏளனமாகச் சொன்னான், "எனக்குத் தெரியும் கிடைக்காதுன்னு!"



இப்படித்தான் காலம் கழிகிறது. மற்ற மனிதர்களை மலர்ந்த முகத்துடன் பார்த்து அவர்களும் அவ்வாறே என்னைப் பார்க்க வேண்டும் என்று நினைக்கிறேன். ஆனால் பெரும்பாலோரின் முகத்தில் உணர்ச்சியே இல்லை. வானம் நிர்மலமாக இருக்கும்போது எல்லா மனிதர்களின் முகத்திலும் நீல நிழல் படிகிறது. அப்போது அறிமுகமில்லாதவர்களைக்கூட "நீங்க எப்படி இருக்கீங்க?" என்று கேட்கத் தோன்றுகிறது. ஆனால் எல்லாரும் கேள்வி கேட்கத் தயார், பதில் சொல்லத் தயாரில்லை. இதுவரை எத்தனையோ பேர் என்னை "எப்படி இருக்கீங்க?" என்று கேட்டிருக்கிறார்கள். ஆனால் என் பதிலுக்காக யாரும் ஒரு நிமிடங்கூடக் காத்திருந்ததில்லை. நான் சொல்ல விரும்புகிறேன். "நீங்க நல்லாயிருந்தா, நானும் நல்லாயிருக்கேன்."

நான் என் தவறுகளைத் திருத்திக் கொள்ளும் முயற்சியில் புதிய புதிய தவறுகள் செய்துவிடுகிறேன். அதுவும் மகிழ்ச்சியாகத்தானிருக்கிறது. இப்போதெல்லாம் பிழைத்திருப்பதிலேயே கொஞ்சங் கொஞ்சமாக இன்பம் தெரிகிறது. ஓர் ஆரஞ்சை அல்லது வேர்க்கடலையை உரித்துத் தின்னும்போது தோன்றுகிறது—இவற்றுக்கும் உயிர் இருக்கிறது. இவை கிசுகிசுக் குரலில் சொல்கின்றன. "நாங்க எங்க உசிரைக் கொடுத்து உன்னைப் பிழைக்க வைக்கறோம். நன்றி கெட்டுப்போகாதே!" இல்லை, நான் நன்றி கெடவில்லை. நான் நடக்கும்போது தரைக்கு அதிர்ச்சி ஏற்படாதபடி மெதுவாகக் கால் வைக்கிறேன்.

அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு இரண்டு தடவை யமுனாவைச் சந்தித்தேன்.

ஒரு தடவை சம்ஸ்கிருதி சம்மேளன விழாவில் நடனமாட வந்திருந்தாள். தூரத்திலிருந்து பார்த்தேன். உடம்பெல்லாம் பூக்களால் அலங்கரித்துக் கொண்டு அப்சரஸாக வேடம் பூண்டிருந்தாள். அவளது உடலில் குறும்புத் தனம் தோன்றியிருந்தது. அவள் கண்களில் கிளியின் பார்வை. உலகத்தின் ரகசியத்தைச் சற்றுத் தெரிந்து கொண்டு அவள் இப்போது தன் ரகசியத்தையும் உலகத்துக்குக் காட்ட விரும்புகிறாள். அவளைப் பார்த்து என் நெஞ்சில் எதோ செய்தது.

இரண்டாம் தடவை ஏர்போர்ட்டில் பார்த்தேன். அவள் தபனுடன் பம்பாய் போய்க் கொண்டிருந்தாள். என் சிறிய அக்காவும் அவள் புருஷனும் இங்கிலாந்து போய்க் கொண்டிருந்ததால் நான் தம்தம் போயிருந்தேன். அங்கே யமுனாவின் அப்பாவும் இருந்தார். ஆனால் நான் அவரைச் சற்றும் பொருட்படுத்தாமல் நேரே யமுனாவிடம் போய் அவளுடைய தோளை லேசாகத் தொட்டு, "எப்படி இருக்கே?" என்று கேட்டேன். யமுனா சட்டென்று திரும்பி, "நீங்களா?" என்றாள்.

நான் மென்மையான குரலில் அவளைக் கேட்டேன், "உன் கலியாணத்துக்கு என்னைக் கூப்பிடவே இல்லையே?"

தபன் சொன்னான், "ஆமா, திடீர்னு நடந்துடுச்சு... ஒண்ணா நடந்ததில்லியா?"

'ஒண்ணான்னா?" எனக்குப் புரியவில்லை.

யமுனா விளக்கினாள், "அம்மா உடம்பு ரொம்ப மோசமாயிருந்ததாலே அப்பா எனக்கும் அக்காவும் ஒரே நாளிலே கலியாணம் பண்ணிட்டார். நீங்க பம்பாய் வந்தா நிச்சயம் எங்களை வந்து பார்க்கணும்!"

யமுனாவின் சிரிப்பு வேறு விதமாக அழகாயிருந்தது. நானும் அழகாகச் சிரித்தேன். அதே மலர்ந்த முகத்துடன் கேட்டேன், "யமுனா, நான் எப்படி இருக்கேன்னு நீ கேக்கல்லியே!"

"உங்களைப் பார்த்தாலே தெரியுது, நீங்க நல்லா இருக்கீங்கன்னு" பதில் சொன்னாள் அவள்.

அப்புறம் ஒருநாள் பரிதோஷ் மறுபடி வந்தான். முன்போலவே சீரியஸ் முகத்தோற்றம். அப்போது நான் இன்னும் நியூஸ் பேப்பர் படித்து முடிக்கவில்லை. மூன்றாவது கப் டீ குடிக்கவில்லை.

அவன் கோபக் குரலில் கேட்டான், "நேத்திக்கு நீங்க எங்கே இருந்தீங்க?"

நான் சிரித்துக் கொண்டே கேட்டேன், "ஏன், சேகர் மறுபடி நேத்திக்கு ராத்திரி வீட்டுக்கு வரல்லியா?"

"அதுக்கில்லே- நேத்திக்கு உங்களைத் தேடினேன்- உங்க டெலிபோன் ஒர்க் பண்ணலே போலிருக்கு..."

"ஆமா... ஏன் தேடினே?"

"அண்ணன் வேறொரு பைத்தியக்காரத்தனம் ஆரம்பிச்சிருக்கான், யாரோ அவன்கிட்டே சொல்லியிருக்காங்க, ஏழுநாள் பட்டினி இருந்து பிராணாயாமம் செஞ்சா அதிசய அனுபவங்கள் உண்டாகும்னு. அதைக் கேட்டுட்டு அண்ணன் மூணு நாளா சாப்பிடாம தியானம் பண்ணிக்கிட்டு உக்காந்திருக்கான். நேத்தி ராத்திரிலேருந்து மயங்கி மயங்கி விழறான்.

நினைவு இல்லே... இதெல்லாம் என்ன செய்யறீங்க நீங்க...? அம்மா உங்களுக்குச் சொல்லியனுப்பினாங்க."

"மூணு நாளா எப்படி சாப்பிடாமே இருக்கான்?

"அதானே-! எல்லாம் பைத்தியக்காரத்தனம்-! நீங்க போய்ச் சொன்னீங் கன்னா சாப்பிடுவான்னு அம்மா நினைக்கறாங்க."

"நீ டாக்டரைக் கூப்பிட்டிருக்கலாமே! நான் வந்து என்ன செய்யப் போறேன்? கிடக்கறான் விடு, அவன் ஒண்ணும் சின்னப்பாப்பா இல்ல. ரொம்பப் பசிச்சதுன்னா தானே சாப்பிடுவான். அவனுக்கு முன்னால நாலஞ்சு சந்தேஷும் ஒரு டம்ளர் சர்பத்தும் கொண்டு போய் வை. கொஞ்ச நேரத்திலே எடுத்துச் சாப்பிட்டுடுவான்."

"அப்ப நீங்க வரமாட்டீங்களா?"

"மத்தியானம் ஆபீசிலேருந்து டெலிபோன் பண்ணி விசாரிச்சுக்கறேன். அப்பவும் சாப்பிடல்லேன்னு தெரிஞ்சா, சாயங்காலம் வரேன். பயப்பட வேண்டாம்னு அம்மாகிட்டே சொல்லு. எல்லாம் சரியாப்போயிடும்..."

